# சித்தர்களின் சித்தாந்தம்

முனைவர் பழ. சம்பத்து
எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ் விரிவுரையாளர்,
மாவட்ட ஆசிரியர் கல்வி, பயிற்சி நிறுவனம்,
கீழப்பெண்ணாத்தூர்,
திருவண்ணாமலை மாவட்டம்.

இளம்பிறை பதிப்பகம்
18ஏ, இந்திரா நகர், மயிலம் சாலை,
திண்டிவனம்.

# நூல் விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூல் தலைப்பு | சித்தர்களின் சித்தாந்தம் |
| ஆசிரியர் | முனைவர் பழ. சம்பத்து |
| மொழி | தமிழ் |
| பதிப்பு விவரம் | முதற் பதிப்பு செப்டம்பர் - 2008 |
| உரிமை | ஆசிரியருக்கே |
| தாளின் தன்மை | 13.7 கி.கி. வெள்ளைத் தாள் |
| நூலின் அளவு | 110 X 180 மி மீ டெம்மி |
| எழுத்தின் அளவு | 12 புள்ளி |
| பிரதிகள் | 1000 |
| விலை | ரூபாய் 125 |
| வெளியீட்டாளர் | இளம்பிறை பதிப்பகம்<br>18ஏ, இந்திரா நகர்,<br>மயிலம் சாலை,<br>திண்டிவனம். |
| அச்சிட்டோர் : | மூவேந்தர் அச்சகம்<br>75, சீனிவாசபெருமாள் சன்னதி தெரு,<br>இராயப்பேட்டை, சென்னை-14.<br>தொலைபேசி : 28351189 |



*This Book is Printed and Published*
*with the Financial Assistance*
*of TIRUMALA - TIRUPATI DEVASTHANAMS*

Thanks and Hail to
# LORD VENKATESWARA

# அன்புப்படையல்



தெய்வத்திரு. வை. பழனிவேல்
ஆசிரியர்,
அம்மாகுளம், செஞ்சிவட்டம்,
விழுப்புரம் மாவட்டம்

என்னைச் சான்றோன் ஆக்கிய தந்தை
தன்னின் தகுதி ஆசானாய் உயர்ந்தார்
எந்தன் ஊர்தம் பிள்ளை கட்குத்
தந்த கல்வி தகைமிகு சான்றோர்
செம்மொழித் தமிழை மகன்யான் கற்கத்
தம்மின் உயிரை உடலைத் தந்தார்;
வாழும் அறநெறி வளமை இன்பம்
சூழ்ந்து விளங்கும் சுடரை ஈந்தார்
முனைவர் ஆக்கியெனை மகிழ்வில் திளைத்தார்
நினைவில் வணங்கும் தெய்வம் ஆனார்
சித்தர் சித்தாந்தம் ஆய்வாம் இந்நூல்
தத்துவத் தந்தைக்கு அன்புப் படையல்
இணையாம் திருவடி மலர்மேல் வைத்தேன்
துணையாய் இருந்து தூயவர் காக்க! !

# பொருளடக்கம்

# சுருக்க விளக்கம்

| சுருக்கம் | ... | விளக்கம் |
|---|---|---|
| அகம். | ... | அகநானூறு |
| உ.ஆ. | ... | உரையாசிரியர் |
| உ.வே.சா. | ... | உ.வே.சாமிநாத ஐயர் |
| கழகம் | ... | திருநெல்வேலித் தென்னியந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| சித்தர் பாடல்கள் | ... | பெரிய ஞானக்கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள் |
| செ. | ... | செய்யுள் |
| திரு. | ... | திருமந்திரம் |
| ப | ... | பக்கம் |
| ப.,ஆ. | ... | பதிப்பாசிரியர் |
| பக். | ... | பக்கங்கள் |
| பா. | ... | பாடல் |
| புறம். | ... | புறநானூறு |
| ம.ப. | ... | மறு பதிப்பு |
| மேற்படி | ... | மேற்குறிப்பிட்ட நூல் |

# நூன்முகம்

**"சித்தர்களின் சித்தாந்தம்"** என்னும் இந்நூல் 1984-1989 ஆம் ஆண்டுகளில் பிஎச்.டி. ஆய்வு நிகழ்த்தி எழுதப்பட்ட ஆய்வேடாகும். இவ் ஆய்வேடு உடனே வெளியிட்டுச் சமுதாயத்திற்குப் பயனளிக்கவேண்டும் எனும் எண்ணம் பல்லாண்டுகளாக என்னுள்ளத்தில் கருவாக இருந்துகொண்டே இருந்தது. இருப்பினும் பழுக்கும் காலமன்றிப் பழா எனுங் கூற்றுக்கிணங்கத் தற்போதுதான் வெளியிடுஞ் சூழல் உருவாயிற்று.

என்னை ஈன்றெடுத்த தாயையும் சான்றோனாக்கிய தந்தையையும் கல்வி என்னுங் கலையை நல்கிய ஆசான்களையும் உற்ற தோழர்களையும் நன்னெஞ்சங்களையும் எண்ணுந்தோறும் எத்துணைபேர் என் முன்னேற்றத்தில் உறுதுணையாய் ஊன்று கோலாயிருந்து உற்றுழி உதவியும் உறுபொருளீந்தும் வழிகாட்டியும் இருந்திருக்கின்றனரென நினைக்கும்போது வியப்படைகின்றேன். அவர்களுக்கெல்லாம் நன்றி மறவா நன்னெஞ்சம் என்றுமுளதாக வேண்டுமென இறைவனை இறைஞ்சுகிறேன்.

பார்போற்றும் பைந்தமிழ்ப் பச்சையப்பன் கல்லூரி என்னைச் செம்மையாக்கிச் சமுதாயத்திற்கு அளித்தது. சிந்தாந்தச் செம்மல் பரம்பரைச் சித்தர் எவ்வுயிர்க்குந் தீங்கெண்ணா ஏந்தல் அன்பும் பண்பும் ஒருசேர வாய்க்கப்பெற்ற என் ஆசான் **முனைவர் இரா. மாணிக்கவாசகம்** அவர்களின் தலைமையில் பிஎச்.டி. ஆய்வு நிகழ்த்தியது யான்பெற்ற பெரும்பேறாகும். அவரின் வழிகாட்டு தலும் அறிவுரையும் இல்லையேல் இந்நூல் இன்று உங்கள் கரங்களில் தவழ்ந்திருக்காது. இந்நூலுக்கு வாழ்த்துரையும் வழங்கிப் பெருமைப்படுத்திய அன்னாருக்கு என்றும் எப்பொழுதும் நன்றிக்கடப்பாடுடையேன்.

என் கல்வி சிறக்க நற்பேராசிரியர்களாகத் திகழ்ந்த பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியர்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றி என்றுமுரியது. அவர்தம் அறிவூட்டத்தினா லேயே இன்று என் பணி சிறக்கிறது எனில் மிகையில்லை.

இந்நூலுக்குச் சிறப்புரை வழங்கிய சென்னைப் பல்கலைக்கழக முன்னைத் துணைவேந்தர், இலக்கிய இலக்கண அறிஞர், நாடறிந்த தமிழ்ச்செம்மல் **முனைவர் பொற்கோ** அவர்கள் ஆவார். அன்னார் இந்நூலுக்குச் சிறப்புரை நல்கியது யான்பெற்ற பெரும்பேறாகும்.

பல்துறை அறிஞர், சைதைக் கல்வியியல் மேம்பாட்டு நிறுவனத்தின் தமிழ்த்துறைத் தலைவர், தமிழ்ப்பேராசிரியர் **முனைவர் பி. இரத்தினசபாபதி அவர்கள்**, இவ்வாய்வேட்டை முழுவதும் படித்தறிந்து இந்நூலுக்குச் சிறந்ததொரு ஆய்வுரை வழங்கியுள்ளார். அப்பெருந்தகையாளர் பல பணிகளுக்கிடையே இப்பேருதவி புரிந்ததை என்றும் போற்றி மகிழ்வேன்.

மயிலம் தமிழ்க்கல்லூரிமுதல் பச்சையப்பன் கல்லூரிவரை என்னுடன் பயின்றவர் **முனைவர் பா. கிருட்டிணமூர்த்தி** அவர்களாவார். இவரே இந்நூலைப் பதிப்பிக்கப் பதிப்பகத்தாரிடம் அறிமுகஞ்செய்ததோடு பல பணிகளுக்கிடையில் நூல் வெளிவரவும் உதவினார். மேலும் இவர்தம் வழிகாட்டுதலால் சான்றோர் பலரின் அறிமுகம் எனக்குக் கிடைத்தது. இவர் **ஊட்டிய** ஆக்கமும் **ஊக்கமுமே** இந்நூல் வெளிவரத் துணைபுரிந்தது.

முதுகலை, எம்.ஃபில்., பிஎச்.டி., பயிலும்போது என்னுடன ஒருசாலை மாணாக்கராகப் பயின்றதோடு ஆய்வு நிகழ்த்த வற்புறுத்தியும் ஐயங்களைப் போக்கியும் வழிகாட்டியும் இன்றளவும் உற்ற நண்பராய்த் திகழ்பவர் **திரு. எ. முத்துக்கிருஷ்ணன் அவர்கள்.** அவர்தம் **ஊக்கமும்** நட்புமே இந்நூல் செம்மையாக வெளிவரத் தூண்டுகோலாய் அமைந்தது. நூல் பிழையின்றி வரவேண்டு மென்பதில் அவர் கண்ணுங் கருத்துமாய் இருந்ததோடு இந்நூலைக் கணனியில் தட்டச்சிட்டுச் செம்மைப்படுத்தி வெளிவர உதவினார். அவர்தம் நட்பு என்றும் நினைத்தற்பாலது.

இலக்கியச் சுடர், பதிப்பகச் செம்மல், உழைப்பாலுயர்ந்த உயர்குணத்தார், **டாக்டர் மூவேந்த முத்து, டி.லிட்.**, அவர்கள் தம் மூவேந்தர் அச்சகத்தில் அச்சிட்டு உதவியதை மறக்கவியலாது. மேலும் இந்நூல் வெளிவருவதற்கும் உறுதுணைபுரிந்த பதிப்பகச் செம்மலின் அன்பும் வழிகாட்டுதலும் என்னுள்ளம் என்றும் நன்றியுடன் நினைத்துப் போற்றும்.

இந்நூல் பயில்வோர் தமிழ்ச் சமுதாயத்தில் சாதி, மத, இன வேறுபாடின்றி நன்னெஞ்சங்களாக உருவாவர் என்பது திண்ணம். சித்தர்கள் சமுதாய நோக்குடனேயே தமிழ்மொழியின்பால் பற்றுக்கொண்டு, கிராமியப் பாங்கில் பல்கலைகளையும் யாத்துச் சென்றனர். மறைபொருளாகக் கூறிச் சென்றதால் அனைவர் மனத்திற்கும் எட்டாமற் போனதற்குக் காரணம் சமுதாயச் சீரழிவு எண்ணங்கொண்டோர் கையில் அவை கிடைத்துவிடக் கூடாது எனும் நல்லெண்ணமேயன்றி வேறில்லை. அவற்றுள் பல கால வெள்ளத்தில் காணாமற் போயின. சீரழிவெண்ணத்தினரால் சிதைக்கப்பட்டும் எரிக்கப்பட்டும் மறைக்கப்பட்டும் நம் கைகளுக்குக் கிட்டாமற் போயின. கிடைத்தவற்றுள் பலவற்றில் இடைச்செருகல்கள் முரண்பட்ட பொருண்மைகளோடு அச்சேற்றப்பட்டுள்ளன. பதினெண் சித்தர்களின் கொள்கைகளும் கோட்பாடுகளும் இத்தமிழ்ச் சமுதாயத்தைச் சீர்திருத்த போதுமென்பதே என் கருத்து. அவர்தம் சித்த மருத்துவம், சோதிடம், வர்மக்கலை, வானியல், இறைக்கொள்கை, சமுதாயக் கொள்கை, வேதியியல் நுட்பங்களான இரசவாதம், யோகக்கலை, ஞானம் முதலியன இன்றைய அறிவியலுக்கும் அறிவுக்கும் அப்பாற்பட்டன. அவர்தம் ஓலைச்சுவடிகளை அச்சேற்றுவோர் தமிழ்ச் சமுதாயத்திற்குத் தொண்டாற்றுவோராவர்.

இவ்வாய்வேட்டில் சித்தர்களின் முற்ற முடிபான கருத்துகளாக ஆய்ந்தெடுக்கப்பட்ட கருத்துகளாகக் கூறப் பட்டுள்ளவை: சைவ சித்தாந்த விளக்கம், பதினெண் சித்தர்கள், அவர்தம் வரலாறு, பதி, பசு, பாசம், சரியை, கிரியை, யோகம், ஞானம், மருத்துவம், சித்தி, புராண இதிகாசக் கருத்துகள், மந்திரங்கள், இலக்கியச் சுவைகளான உவமை, யாப்பு, கும்மி, நாடோடி இலக்கியம் முதலியனவாகும்.

தமிழ்ச் சமுதாயம் இந்நூலைக் கற்றுப் பயன்பெற வேண்டுமெனவும் சித்தர்களின்பால் நாட்டமுள்ளோர் சித்தர்கள் மறைபொருளாகக் கூறிய செய்திகளைவெளிக்கொணர வேண்டுமெனவும் சைவ சித்தாந்தத்தின்பாற் பற்றுக்கொண்ட அனைவரையும் அன்போடு கேட்டுக்கொள்கிறேன். தமிழ்ச் சமுதாயஞ் செழிக்கச் சித்தர்நெறியைப் பின்பற்றவேண்டும். ஏனெனில், சித்தர் நெறியே செந்நெறியும் நன்னெறியுமாகும்.

வாழ்க தமிழ்ச் சமுதாயம்! வளர்க சித்தர் செந்நெறி!

அன்பன்,பழ. சம்பத்து.

**டாக்டர் இரா.மாணிக்கவாசகம்,எம்.ஏ.,எம்.லிட்., பிச்.டி.,**
தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு),
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை-600 030.

## வாழ்த்துரை

முனைவர் பழ. சம்பத்து அவர்களை இருபது ஆண்டுகளாக அறிவேன். கல்விப்பணியில் ஈடுபட்டுள்ள இவரின் அறிவு வேட்கைக்கும் உழைக்கும் திறனுக்கும் இவரது பெயருக்குப் பின் இணைந்துள்ள பட்டங்களே சான்றாகும்.

"சித்தர்களின் சித்தாந்தம்" எனும் இப்புத்தகம் எனது மேற்பார்வையில் இவர் மேற்கொண்ட முனைவர் பட்டத்திற்கான ஆய்வேடு ஆகும்.

உலகப் புகழ்பெற்ற இறைக்கோட்பாடுகளின் மிகப்பழமை யானதாகவும் குறிப்பிடத்தக்கதாகவும் விளங்கும் சைவ சித்தாந்தித்திற்கு வித்திட்டு விளைவித்தவர்கள் தமிழகத்துச் சித்தர்களே எனும் கருத்தை இதில் நிறுவ முயன்றுள்ளார்.

பண்டாரப்பாட்டு அல்லது பாமரர் பாட்டு என்று ஒரு காலத்தில் ஒதுக்கப்பட்ட ஒரு துறையான சித்தர்களின் பாடல்களை ஆதாரமாகக்கொண்டு மேற்கொண்ட இவ்வாய்வு மிகவும் துணிச்சலான முனைவு ஆகும். காரணம் சித்தர்கள் சாதி, மத, சடங்கு, சம்பிரதாயங்களுக்கு அப்பாற்பட்டவர்கள் என்பதையும் அவற்றைச் சாடுபவர்கள் என்பதையும் அறிவோம். மேலும் சித்தர்கள் பெயரில் பலர் பாடல்களைப் புனைந்து, இடைச்செருகல் செய்து மிகக் கொடுமையான இலக்கியக் கலப்படம் நிகழ்ந்துள்ளது என்பதைச் சித்தர் பாடல் ஆய்வாளர்கள் அறிவர்.

மந்திரம், வைத்தியம், இரசவாதம், யோகம், ஞானம், சோதிடம் முதலிய பல துறைகளிலும் அரிய கருத்துகளைத் தெரிவித்து அமைதியான சமுதாயத் தொண்டாற்றியவர்கள் சித்தர்கள். இனிய தமிழில் எளியமுறையில் அவற்றைக் கூறியவர்கள், என்றாலும் சில பல செய்திகளைக் குறிப்பாகவும் குழூஉக்குறியாகவும் கூறி யுள்ளனர். அதாவது, மேற்போக்கான நோக்கில் ஒருபொருளும் உள்நோக்கு முறையில் வேறொரு பொருளும் தோற்றுவிக்கும் தகையன.

பழ. சம்பத்து அவர்கள் மிகத் துணிவுடன் இத்தலைப்பைத் தேர்ந்து, சீரியமுறையில் ஆராய்ந்து முனைவர் பட்டம் பெற்றதோடு இவ்வாய்வேட்டைப் பலரும் படித்துப் பயன் அடைதல்வேண்டும் எனும் நோக்கில் வெளியிடவும் முனைந்துள்ளார்.

எனது மேற்பார்வையில் பயின்றவர் என்பதால், இப்பாராட்டு இல்லை. இந்நூலைப் படிப்பவர்கள் அனைவரும் இவரது ஆய்வு அணுகுமுறையையும் அறிவுத்திறனையும் பாராட்டுவர்.

சைவ சித்தாந்த சாத்திரங்களையும் சித்தர்களின் கருத்துகளையும் தனித்தனியே காட்டிப் பின் இணைத்துக் கூறியிருப்பது பாராட்டுக்குரியது.

சாத்திர நூல்களுக்குக் காலத்தால் முற்பட்ட இச்சித்தர்களின் சித்தாந்தம் என்றும் சாத்திர நூல்களுக்குக் காலத்தால் பிறபட்ட சித்தர்களின் சித்தாந்தம் என்றும் வகுத்திருப்பதும் கருத்துகளைத் தொகுத்திருப்பதும் இவரது உழைப்பை உணர்த்துவன.

முனைவர் பழ. சம்பத்து அவர்கள் இன்னமும் இதுபோன்ற பயனுடைய நூல்கள் பலவற்றைப் படைத்துத் தருதல்வேண்டும் என விழைந்து வாழ்த்துகிறேன். மிகத் தவறான பாதையில் போய்க் கொண்டிருக்கும் இன்றைய சமுதாயத்திற்கு இத்தகைய நூல்கள் நல்ல வழிகாட்டிகளெனத் துணிந்து கூறலாம்.

வளர்க! வாழ்க!!

அன்புடன்,

இரா. மாணிக்கவாசகம்.

19/9, செல்லம்மாள் தெரு,
ஷெனாய் நகர்,
சென்னை-600 030.

28.09.2007

டாக்டர் பொற்கோ,
முன்னைத் துணைவேந்தர்,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை-600 005.

## சிறப்புரை

**"சித்தர்களின் சித்தாந்தம்"** என்ற தலைப்பில் முனைவர் பழ. சம்பத்து அவர்கள் அரும்பாடுபட்டு ஆய்வு நிகழ்த்தி இந்த நூலை உருவாக்கி இருக்கிறார். இந்த நூலில் முதலாவது இயலில் சைவ சித்தாந்தக் கொள்கையை ஆசிரியர் விரிவாக ஆராய்ந்து விளக்கியிருக்கிறார். இரண்டாவது இயலில் சித்தர் என்ற சொல்லை ஆராய்ந்து விளக்கம் தருகிறார். அதோடு பதினெண் சித்தர்களைப் பற்றிய வரலாற்றையும் ஆராய்ந்து பேசியிருக்கிறார். பதினெண் சித்தர் என்ற தொடரையும் ஆராய்ந்து மரபுவழி விளக்கம் தந்திருக்கிறார்.

சித்தாந்த நூல்களுக்கு முன்தோன்றிய சித்தர்களின் சித்தாந்தத்தை இந்த நூலில் உள்ள மூன்றாவது இயல் நுட்பமாக ஆராய்கிறது. அதேபோலச் சித்தாந்த நூல்களுக்குப் பின்தோன்றிய சித்தர்களின் சித்தாந்தத்தையும் இந்த நூலாசிரியர் இந்த நூலின் நான்காவது இயலில் விரிவாக ஆராய்ந்து பேசியிருக்கிறார்.

சித்தர்கள், சமயம் கடந்த நிலையில் வாழ்ந்தவர்கள்; சமயம் கடந்து சிந்தித்தவர்கள். சமயங்களுக்கு முந்தைய வழிபாட்டு நெறி சித்தர் சிந்தனைகளுக்கு நெருக்கமானது என்று கூறலாம். தமிழகச் சமுதாய-பண்பாட்டு வரலாற்று நோக்கில் சித்தர்களைப் பற்றிய ஆய்வு தனித்தன்மை வாய்ந்தது. இது மேலும்மேலும் விரிவாக ஆராயத் தகுந்தது. சித்தர்களின் தத்துவங்களும் வாழ்வியல் கோட்பாடுகளும் அவர்களுடைய மொழிநடையும் செய்யுள்களில் அவர்கள் பயன்படுத்தியுள்ள குறியீடுகளும் மேலும்மேலும் விரிவாக ஆராயத் தக்கனவாகவே தோன்றுகின்றன.

மருத்துவம், யோகம், அறநெறி, வழிபாடு ஆகிய புலங்களில் சித்தர்களின் பங்களிப்புத் தனித்தன்மை வாய்ந்தது. இவை பற்றியெல்லாம் இந்த நூலாசிரியர் நுட்பமாக ஆராய்ந்து ஆங்காங்கே பேசியிருப்பது பாராட்டத் தகுந்தது.

முனைவர் பழ. சம்பத்து அவர்கள் பெற்றிருக்கும் மரபுசார் தமிழியல் அறிவும் தத்துவ நாட்டமும் சைவ சித்தாந்தப் பயிற்சியும் சைவமும் தமிழும் அறிந்த நல்லறிஞர்களின் தொடர்பும் இந்த ஆராய்ச்சி நூலைச் செழுமைப்படுத்தியிருக்கிறது. அரிதாக வெளிப்படும் இத்தகைய நூல்கள் போற்றிக் காக்கத் தக்கன. இத்தகைய நூலின் ஆசிரியர்கள் போற்றுதலுக்கும் பாராட்டு தலுக்கும் உரியவர்கள். இந்த நூலை வழங்கியள்ள முனைவர் பழ. சம்பத்து அவர்கள் மேலும் இத்தகைய நூல்களை வழங்கத்தக்க வகையில் தமிழகம் அவருக்கு ஊக்கமும் ஆக்கமும் அளிக்க வேண்டும்.

சென்னை,

25.10.2007 **பொற்கோ**

**முனைவர் பி. இரத்தினசபாபதி**
தமிழ்க் கல்விப் பேராசிரியர்,
மேனாள் துறைத்தலைவர், தமிழ்க் கல்வித்துறை,
கல்வியியல் மேம்பாட்டு நிறுவனம்,
சென்னை- 600 015. 14.11.07

## அணிந்துரை

அரிய தமிழில் ஆன்றோர் படைத்த இலக்கியங்கள் பல. அவற்றுள் சித்தர்களின் படைப்புகள் சிந்தனைக்கு விருந்தாக மட்டுமன்றி மருந்தாகவும் விளங்குவன. எண்ணப் போக்கில் புதுமை, இயம்பும் முறையில் எளிமை, கருத்தளவில் ஆழ்மையென இவையெல்லாம் சித்தர் பாடல்களின் வளமை.

எவ்வித இடர்களுக்கும் உட்படாமல் தகவல்களைத் தொகுத்தளிக்கும் நீர்மையதாய் ஆய்வுகள் பெருகிவரும் இந்நாளில், கருத்துக் குவையாய் விளங்கும் சித்தர்களின் படைப்புகளைத் துணிந்தெடுத்துள்ளார் தம்மாய்வுக்கு முனைவர் பழ. சம்பத்து.

பொதுவாக, ஆய்வாளர்கள் 'அகலாது அணுகாது தீக்காய்வார்போலச்' சித்தர் சித்தாந்தத்தைத் தொட்டும் தொடாமலும் செல்வர். ஆனால், முனைவர் பழ. சம்பத்து அவர்கள் மிகத் துணிவாகச் சித்தர்கள் சிந்தனையில் மலர்ந்த சித்தாந்தத்தைத் தெளிவுபடுத்த முயன்றுள்ளார். துணிச்சலுக்கும் அணிமிகு அழகிய தமிழில் வெளிப்படுத்திய புலமைக்கும் பாராட்டுகள்.

இவ்வாய்வு, எண்ணிக்கை அளவால் நான்கு இயல்களைக் கொண்டுள்ளது. எனினும் இயல்கள் ஒவ்வொன்றும் ஆய்வு நோக்காலும் அலசும் பாங்காலும் விரிவடைந்துள்ளன.

தமிழிலக்கிய வரலாற்றை மிகச் சுருக்கமாகத் தரும் முதலியல், 'சைவ சித்தாந்தக் கொளகை'. இதனுள் இலக்கிய வரலாற்றில் சித்தர் பெறுமிடத்தைக் கோடிட்டுக் காட்டியுள்ளார் முனைவர் பழ. சம்பத்து. இவ்வியலைத் தொடக்கமாய் அமைந்த இந்நூல், கருத்துவளம், மொழிவளம், ஆய்வுவளம் ஆகியன வற்றைக்கொண்டு ஒளிர்ந்தும் உயர்ந்தும் காணப்படுகிறது.

## கருத்து வளம்

சித்தர் பாடல்கள், அவற்றைத் தொடர்ந்து பிற்காலத்தில் எழுந்த சைவ சித்தாந்த நூல்கள் ஒவ்வொன்றும அளவால் சிறிதாக இருக்கலாம். ஆனால், ஆழ்ந்த கல்லக்கல்ல வெளிப்படும் கருத்தூற்றுக்கு அளவேயில்லை. 'அறிதொறும் அறியாமை கண்டற்றால்' என்னும் உவமை பொதிந்த திருமொழி. சித்தர் பாடல்களுக்கு நூற்றுக்கு நூறு பொருந்துவதாகும். அச்செழுமை யினை முனைவர் பழ. சம்பத்து எளிமையுடன் விளக்க முயன்றுள்ளார். ஆகமம், வேதம், வேதாந்தம் என்பன தெளிவின்மையும் முரண்தன்மையும்கொண்ட பொருண்மைகள் (Concepts). முனைவர் பழ. சம்பத்து, இவற்றை விளக்கும்போக்கில் கருத்துவளம் கனிகிறது. முன்சென்ற ஆய்வாளர்களின் அடி யொற்றி, அவர்கள் கருத்துவழி தம் கருத்தினை வளப்படுத்துகிறார். ஆகமம்பற்றி முனைவர் தரும் வரையறை:

> **தெய்வ உண்மைகளைக் கொண்டதும் வேதத்திற்கு முன் தோன்றியதும் வழிபாட்டுமுறையைக் கொண்டதும் ஆகமம் என்பதாகும். (பக்.12)**

இவ்வாறே வேதம், வேதாந்தம் என்பனவும் இவர்தம் கருத்து வளத்தால் தெளிவுறுகிறது.

> **திருவள்ளுவர் ஆதித் தமிழர் வேதத்தையும் திருமூலர் ஆதித் தமிழ் ஆகமத்தையும் ஒத்த அரிய நூல்களை இயற்றினர். (பக்.11)**

என்பதுள் பொதிந்துள்ள குறிப்பு, மேலாய்வுக்கு வழிகாட்டும் வளம் கொண்டதாகும்.

இறை, உயிர், தளை என்பன சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள். வரிசைமுறையில் இறை முதலாவதாக இருப்பினும் தோற்ற நிலையில் மூன்றுமே நிகர் தளத்தன. இதனைப்,

> **பதி பசு பாசம் என்பகர் மூன்றில்**
> **பதியினைப் போற் பசுபாசம் அநாதி (பக்.25)**

எனும் திருமூலர் மொழிகொண்டு விளக்குகிறார் முனைவர் பழ. சம்பத்து.

மறைந்த குன்றக்குடி மடத்தலைவர் அருணாசல தேசிகர் அவர்கள் இறை, உயிர், தளை என்னும் முப்பொருளின்

தன்மையினை எடுத்துக்காட்டி நாத்திகர்களையும் தம் பக்கம் இழுக்க முனைந்தவர். கருத்து வளமிக்க அப்பெருந்தகையரின் கொள்கைக்கு உடன்படாவிட்டாலும் விளக்கும் போக்கினைக் கண்டு வியந்தவர் பெரியார் ஈ.வெ.ரா.. அருணாசல தேசிகரின் விளக்கும் போக்கினை இவ்வாய்வில் பல இடங்களில் சாமி. சிதம்பரனார், கவியோகி சுத்தானந்த பாரதி ஆகியோர் வழிகாட்டல் அடிப்படையில் காண முடிகிறது.

## மொழிவளம்

தமிழ் மொழியில் தரப்படும் எந்த ஆய்விற்கும் மொழிவளம் இன்றியமையாதது. தமிழால் எதுவும் இயலும் என்பதை நிறுவும் நோக்கில்தான், இடர்கள் பல எதிர்ப்பட்டாலும் தூய தமிழ்ச் சொல்லாட்சியைத் தங்கள் ஆய்வேட்டில் மேற்கொள்ளலாயினர். மேலும் ஒருவருடைய மொழியாட்சி, ஆய்வுநெறியின் முறைமையினையும் ஆழ்மையினையும் வெளிப்படுத்தும் ஊடகம்.

சமயச் சார்பான தகவல்களும் தரவுகளும் சமத்கிருதச் சொல்லாட்சியின்றி இல்லை. எனவே, இவ்வாய்வில் அம்மொழிச் சொற்களைத் தவிர்க்க இயலவில்லை. இதனைத் திருமூலரும் அறிந்துள்ளார். எனினும் அவர்தம் ஆழ்ந்த தமிழ்ப்பற்று:

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே

எனும் அடிகளில் வெளிப்படுகிறது. பழ. சம்பத்து அவர்களின் மொழியாட்சியில், தரவுகளைத் தரும்போது சமத்கிருதச் சொல்லாட்சியுள்ளது. ஆனால், தம் கருத்தை நிலை நாட்டும்போது தூய தமிழாட்சியைக் காணமுடிகிறது.

## ஆய்வு வளம்

இந்நூலுள், எதிர்க்கருத்துகளை மறுத்துரைக்கும்போக்கு எங்குமே இல்லை. தரவுகளைத் தருதல், அவற்றை விரித்துரைத்தல், விரித்தனவற்றுள் பொருள் நுணுக்கம் காணுதல், முடிவு கூறுதல் எனும் அமைப்பில் இடர்ப்பாடின்றி இவ்வாய்வின் போக்குக் காணப்படுகிறது.

இந்நூலிலுள்ள நான்கு இயல்களின் தொகுப்புரைகள், ஆய்வுச் சாற்றினையும் முடிவுகளையும் சுருங்கச்சொல்லித்

தெளிவுபடுத்துவனவாக உள்ளன. ஒவ்வோர் இயலும் அதன் தலைப்புக் கொண்டுள்ள பொருளடிப்படையில் நிறைவு பெறுகிறது.

இந்நூலின் ஆய்வு வளத்தினை வெளிப்படுத்தும் கூறுகள் பலவற்றுள், நிறைவுரைத் தொகுப்பு மேலோங்கி நிற்கிறது.

**தமிழ் இலக்கிய வரலாற்றில் சித்தர் இலக்கியம் ஒரு கலங்கரை விளக்கமாகத் திகழ்கிறது.**

... ... ...

**தமிழ் இலக்கியத்தின் பெருமையும் மேலும் உயர்ந்திருக்கும் என்பதில் ஐயமில்லை.**

என்பது நிறைவுரை இயலின் தொடக்கப் பகுதி.

**பிற்காலத்தில் கற்பனை, சமய, மத, ஆசார, சங்கற்பங்கள் முதலியன... ... ... ...**
**என்பது இவ்வாய்வின்வழித் தெள்ளிதின் உணர்த்தப் பட்டது.**

என்பது நிறைவுரையின் நிறைவு. இவ்விரு பகுதிகளும் ஆய்வின் ஆழத்தையும் அகலத்தையும் வெளிப்படுத்துகிறது.

இந்த ஆய்வு நூல் இலக்கியத் திறனாய்வு நெறிகளைப் பின்பற்றுவதில் சிறந்து விளங்குவதோடு, சித்தர் பாடல்களின் சித்தாந்தச் செழுமையும் கொண்டுள்ளது. அரிய ஆய்வினை வழங்கிய முனைவர் பழ. சம்பத்து, பாராட்டுக்கும் போற்றுதலுக்கும் உரிய ஆய்வாளர்.

பி. இரத்தினசபாபதி

# சித்தர்களின்
# சித்தாந்தம்




சித்த புருஷர்களும் மகா யோகிகளும் தவச் சாலைகள்
அமைத்து நிஷ்டையில் திளைக்கும் சதுரகிரி

# 1. சைவ சித்தாந்தக் கொள்கைகள்

**சைவ சித்தாந்தம் மூன்று உண்மைப் பொருள்களைக் கூறும்.** அவை: கடவுள் - பதி; உயிர் - பசு; உயிர்களைப்பற்றிய பந்தங்கள் - பாசம் ஆகியவையாகும். இவற்றைப் பதினான்கு சாத்திரங்கள் தெள்ளிதின் விளக்கும். '**சைவ சித்தாந்தக் கொள்கைகள்**' என்னும் இவ்வியல் பதினான்கு சாத்திரங்களின் சுருக்கங்களையும் அச் சாத்திரங்களின் வரலாறு, ஆசிரியர் வரலாறு, பதி, பசு, பாசம் ஆகிய வற்றைப்பற்றியும் நன்கு ஆராய்கின்றது.

## சமயங்கள்

**சமயம்** என்பது மனிதர்களின் அறிவு விளக்கம் பெற்று உறுதி யெய்தி இன்ப வாழ்வு அடைவதற்குச் சாதகமாயுள்ள ஞானக் கோயிலாகும். 'சமயம் மனிதர்களுடைய மேலான நிலைக்கு இன்றி யமையாத முறைகள் எல்லாவற்றையும் அவர்களுக்குக் குறைவறக் கொடுக்கும் சுத்த பிரம வடிவாய் உள்ள கற்பகத்தரு என்றே கூறலாம். இன்பப் பொருளாம் இறைவனை அடைவதற்கு உயிர்கள் கடைப் பிடித் தொழுகும் ஓர் அறவழியே சமயம்'.[1]

இறைவனோடு தொடர்பு கொள்ளுவதன்மூலம் உடல், அறிவு, **ஆன்மா** அனைத்தையும் மனம் பக்குவப்படுத்துகின்றது.[2] **சமயம்** என்னும் இச்சொல் **சமையல்** என்று மருவிச் சமைக்கப்பட்டது அல்லது வகுக்கப்பட்டது என்னும் பொருள் தருவதாகும்.[3]

ஆங்கிலத்தில் சமயத்தைக் குறிக்க **ரிலிஜன் (Religion)** என்னும் சொல் வழங்கப்படுகின்றது. அச்சொல் **லத்தீன்** மொழியிலிருந்து **(Rel-igion)** அமைக்கப்பட்டதாகும். மனிதனுக்கும் மனிதனின் உயர்ந்த இறைவனுக்கும் இடையேயுள்ள ஒப்புறவைக் காட்டுவது என்பதே அந்தச் சொல்லின் பொருளாகும்.[4]

பிற்காலத்தில் ஆகம வடிவில் அமைந்த தமிழ் நூல் **திருமூலர் திருமந்திரம்** ஆகும். **திருவள்ளுவர்** ஆதித்தமிழர் வேதத்தையும் **திருமூலர்** ஆதித்தமிழ் ஆகமத்தையும் ஒத்த அரிய நூல்களை இயற்றினர். அவை விரிந்த நோக்கத்தையும் உயர்ந்த சமயத்தையும் அருளொழுக்கத்தையும் போதித்தன. அவற்றிற்குப் பின்தான் சைவர்களுக்குத் **தேவாரம், திருவாசகம்** முதலிய பன்னிரு திருமுறைகளும், வைணவர்களுக்கு **நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களும்** சமய உண்மையை அனுபவப் பயனாய்த் துதி வடிவிற் போதிக்குஞ் சிறந்த நூல்களாயின.[5] இங்ஙனம், சமயப் பொது நூலாகவும் சிறப்பு நூலாகவும் திருக்குறளும் திருமந்திரமும் தோன்றிச் சாதி மத வேறுபாடு கருதாது எல்லா உயிர்களிடத்தும் ஒரேவித அன்பு செலுத்தவேண்டும்; எல்லா உயிர்களிடத்தும் இறைவன் இருக்கின்றான் என்ற ஓர் இறைக்கொள்கையை உண்டாக்கின. பிறகு, அறிவர் நூல்களின் கருத்துகளும் சித்தர் நூற்கொள்கைகளும் வடமொழியில் **ஆகமம் - தந்திரம்** என்னும் நூல்களில் தழுவப்பட்டு இயற்றப்பட்டன.

உலகிலுள்ள எல்லாச் சமயங்களும் ஒரு கடவுளையே பல பெயரால் பல வடிவங்களாகப் போற்றிப் புகழ்கின்றன. எச்சமயம் எல்லாச் சமயங்களையும் சகோதர சமயங்களாகத் தழுவுகிறதோ, அதுவே சமரச நோக்குடைய சன்மார்க்க சமயமென்று போற்றப் படும்.[6] ஒரு தெய்வ வழிபாடே சித்தாந்தத்துக்கு உடன்பாடு. அஃது உலகில் நாலாப் பக்கங்களிலும் தோன்றிய பெரியோர் பலராலும் அறிவுறுத்தப்பட்டது. நம் நாட்டுப் பெரியோர்களும் ஒரு தெய்வ வழிபாட்டையே அறிவுறுத்தினார்கள். பிறகு இந்நிலை மாறி, ஆயிரந் தெய்வங்கள் உண்டு எனக் கூறும் நிலையை ஏழை மக்கள் கல்வித் தெளிவின்றி ஏற்றுக்கொண்ட பொய்க்கொள்கையைத் தங்கள் நலங்கருதி, வாதப் போர்களாலும் பிறவற்றாலும் நிலைநிறுத்தி விட்டார்கள். இவ்வாறு பல தெய்வ வழிபாடு உலகிடையே வேர் விட்டுப் பரவியது.[7]

பழந்தமிழரின் சமயம் சிவ வழிபாடாக இருந்ததெனப் **போப்பையர்** போன்ற அறிஞர் கருதினர்.[8] பூவும் புகையும் கொண்டு வழிபடுதல் பழைய தமிழரின் வழிபாட்டுமுறை. பூ தெய்வத்தையும், புகை அஃது உருகுவதையும் குறிப்பிடுகின்றன.[9] சரித்திரக் கண்ணோட்டத்துடன் திருமந்திரத்தின் மொத்தப் போக்கையும் ஆகமச் சார்பையும் வைத்துச் சிந்தனை செய்தால், திருமூலர் காலத்தில் சைவத்தில் நிலவியிருந்த

**பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம், சைவம்** அல்லது **ஐக்கிய சைவம்** என்று ஆறு பிரிவுகளையே '**அறு சமயம்**' என்று கருதியிருக்கின்றார் என்று தோன்றுகிறது. இப்பிரிவுகளை '**உட்சமயம்**' அல்லது '**அகச்சமயம்**' என்று வகுத்த பாகுபாடு மிகப் பிற் காலத்தைச் சேர்ந்தது.[10]

**மொகஞ்சதரோ**விற காணப்பட்ட திருவுருவம் ஒன்று கடவுள், பசு, பதி என்னும் கருத்தை விளக்கி நிற்கின்றது. அவ்வுருவம் யோகத்திலமர்ந்திருக்கும் திருக்கோலத்துடன் உள்ளது..[11] இதனால், அக்கால மக்கள் முப்பொருள் உண்மைகளையும் சிந்தையை அடக்கிச் சும்மா இருக்கின்ற யோகமுறைகளையும் நன்கு அறிந்திருந்தார்களென்பது தெற்றெனப் புலப்படும்.

## ஆகமம்

'**ஆ**' என்றால் அண்மை; **கமம்** என்றால் போதல். **ஆகமம்** என்றால் இறைவனை அணுகுதல் என்பது பொருளாகும்.[12] ஆன்மாக் களைத் தாய்போன்று வழி நடத்துவது ஆகமமேயாகும்.[12அ] தமிழ் மூவாயிரத்துள்ளே ஒன்பது தந்திரங்களும் ஒன்பது ஆகமங்களின் சாரங்களாக முறையே அமைந்துள்ளன. இவ்வொன்பது ஆகமங் களையும் பின்னர் விரித்து 28 ஆகமங்களாகக் கொண்டனர்; ஒன்பது ஆகமங்களின் விரிவே இருபத்தெட்டு ஆகமங்களாகிச் சைவ உலகில் வழங்கி வரலாயின எனவும் திருமூலர் கூறியுள்ளார்.[13]

'ஆகமங்கள் தமிழ்த் தொடக்கமுடையன. அவை சைவ சித்தாந்த ஞானத்திற்கு ஆதாரமாகவுள்ளன. அவை தமிழரின் முதிர்ந்த அறிவிற் பிறந்தவை. அவை மகேந்திர மலையிலிருந்த சிவனால் வெளியிடப்பட்டவை'.[14] 'ஆகம நூல்கள் ஆலயம் அமைக்கும் முறைகளையும், அங்கு நடக்கவேண்டிய கிரியை வகை களையும், மக்கள் ஆலயங்களில் கடவுள் வழிபாடு செய்ய வேண்டிய முறைகளையும் கூறுகின்றன.'[15] இங்ஙனம், ஆகமம் இறைவனால் அருளப்பட்டதும், முதன்முதலில் தோன்றிச் சமயத்தைப் பற்றிய தெய்வ உண்மைகளைக் கொண்டதும் வேதத்திற்கு முன் தோன்றியதும் வழிபாட்டு முறைகளைக் கொண்டதும் என்பதை அறியலாம்.

## வேதம்

வடமொழியில் உள்ள நூல்களில் வேதமே முதல் நூல். மனிதனின் அறிவிற்கு எட்டாத உண்மைகளை உணர்த்துவதால் **வேதம்** என்று இதற்குப் பெயர். உயர்ந்த தத்துவங்களை மறைமுகமாக விளக்குவதால் '**சந்தஸ் மறை**' என்று வழங்கப்படுகிறது. **இது மந்திரம், பிரமாணம்** என்று இருவகைப் படும். சாதிப் பிரிவினையை வேதம் சொன்னாலும் எல்லாரும் நன்மையை அடையவேண்டும் என்பதே வேதத்தின் நோக்க மாகும்.[15அ] இவ்வேதம் தமிழரிடையே முதன்முதல் கொண்டுவரப் பட்ட அயல் நாட்டவர் செல்வாக்காகும். வேறுபட்ட பல சமயங்கள் எதிர்ப்பட்டுக் கலக்கும் நிலையில் சொந்த வழிபாடும், தத்துவ ஞானம் உடையவர்களாக இருந்த தமிழரிடையே **ஆரியர்** தமது மதத்தையும், தத்துவ ஞானத்தைநுயம் பரப்ப முயன்றனர். ஆனால், வழக்கம்போல் உள்நாட்டுப் பழக்க வழக்கங்களையும் சமயக் கொள்கைகளையும் வேத மதம் தழுவிக்கொண்டது. தமிழரின் வீர தெய்வங்களும் பிற தெய்வங்களும் பிராமணரின் தெய்வங்களாக்கப்பட்டன.[16] பிற் காலத்துத் தோன்றிய உபநிடதங்களிற் காணப்படுவனபோன்ற **உயிர், உலகம், கடவு**ளென்னும் முப்பொருள்களைப்பற்றிய ஆராய்ச்சியும் வேதங்கள் அறியாதது.[17] சித்தாந்தக் கருத்துகளைத் தெளிவாக உபநிடதங்களும் ஆகமங்களும் எடுத்துரைக் கின்றன. வேதங்களில் சிவ வழிபாட்டைப்பற்றிய குறிப்புக் காணப்பட வில்லை; வேதப் பாடல்களிற் சொல்லப்படும் **உருத்திரன்** சிவனல்லன். அவன் புயற் கடவுள். பிற்காலத்தில் உருத்திரன் சிவனுக்குரிய தன்மைகளை ஏற்றுக்கொண்டு, உருத்திர சிவனாக மாற்றப்பட்டார் என்பனபோன்ற கருத்துகள் வேதங்களின்வழிப் புலனாகிறது.[18]

## வேதாந்தம்

வேதாந்தம் என்பது வேதத்தின் முடிந்த முடிவு எனப் பொருள் கொள்ளலாம். ஈண்டு, வேதாந்தமென்பது வேதத்தின் முடிவு களாகிய உபநிடதங்களைக் குறிப்பதாகும். வேதாந்த மதம் என்பது இந்து மதத்தின் மறு பெயரே. அது மிகப் பழமையான மதமா வதுமன்றி, உலகப் பொதுவான பரந்த முழு மதமாகும்; அதன் இயல்பே **சமரச சமயம்**.[19] தன்னையே சிவமாக எண்ணுகிறவன் **சீவன் முக்தன்**

ஆவான். அவன் தன்னம்பிக்கை உள்ளவனும் ஆவான். எதையும் நம்பிக்கையுடன் செய்து வெற்றி பெறுவான். இந்த உண்மையை உணர்த்துவதே வேதாந்தத் தத்துவமாகும்.[20] 'அன்புடைமையும் ஐம்புல ஆசையை விட்டொழித்தலுமே வேதாந்தம் போதிக்கும் உண்மையாகும். அன்புள்ளவர்களும் ஆசையைவிட்டவர்களுமே முக்தி நெறியை அடைந்தவர்கள்; இதுவே வேதாந்த முடிவாகும்'.[21] **'நானே பிரம்மம்'** என்பது வேதாந்தக் கொள்கையாகும்.[22]

## பலவகை மதங்கள்

பலப்பல கிளைகளாகப் பரந்து விரிந்து கிடக்கும் வேதாந்த மென்னும் பெருங்கடலில் **வியாசர்** என்னும் பேரறிஞர் தமது அறி வென்னுங் கோல் நாட்டிக் கடைந்து, **வேதாந்த சூத்திரம் (பிரம்ம சூத்திரம்)** என்னும் அமுதை உலகிற்கு ஈந்தார். பின்னர், அவ் வேதாந்த சூத்திரத்திற்கு **நீலகண்டர், சங்கரர், இராமாநுசர், மத்துவர்** முதலியோர் உரைகள் கண்டனர். நமது நாட்டில் உரைகள் மதங்களாகிச் சமய வாதங்களைக் கிளப்பிக் கொண்டிருக்கின்றன.[23] இவ்வாறு மதங்கள் தோன்றி வளர்ந்தன. அவையே **இந்து மதம், புத்த மதம், சமண மதம், தருக்க மதம், யோக மதம், சாங்கிய மதம், கிருத்துவ மதம்.**

**இந்து** என்பது **சிந்து** என்பதன் திரிபு ஆகும். இச்சொல்லுக்குக் கடல் என்பது பொருள். ஆறுகள் கடலிற் சேர்வதுபோல, எல்லாச் சமயங்களும் சேரும் தூய சமரசக்கடலே இந்து சமயம். சமயம் என்பது உயிரைக் கடவுள் தன்மையுடன் சமப்படுத்துவது.[24] வேத மதம் மறைந்ததும் யாகங்கள் நடத்தும் வழக்கம் மறைந்தது. ஆகம சம்பந்தமான சிவ வழிபாடு, திருமால் வழிபாடுகளோடு வைதிகக் கொள்கைகள் கலந்த மதமே இன்றைய இந்து சமயமாக இருந்து வருகின்றது.[25] இங்ஙனம் இந்து மதம் சமரச சன்மார்க்க சமயமாக மாறிச் சிறந்தோங்கி வளர்ந்தது.

சமண சமயம் **சந்திரகுப்தன்** காலத்தில்தான் தென்னாட்டில் நுழைந்தது என்பது அறிஞர் கருத்து.[26] பட்டினப்பாலை,[27] மதுரைக் காஞ்சி,[28] சிலப்பதிகாரம்,[29] முதலியவற்றின் சமணப் பள்ளிகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

உபநிடத ஞானம் வளர்ச்சியுள்ள காலத்தில் **புத்தர்** தோன்றினார். இவர் திராவிட மரபினர். இவரது ஞானமும் உபநிடத ஞானங்களை அடிப்படையாகக் கொண்டது. இவர் வேத மதத்திற்கு மாறான

புரட்சியைக்கொண்டு வந்தார்.[30] **பௌத்த சமயம்** ஏறத்தாழ **அசோகன்** காலத்தில் தென்னாட்டில் வேரூன்றி இருக்கலாம். பௌத்தப் பள்ளிகளைப்பற்றி **மணிமேகலை** குறிப்பிடுகிறது.[31]

கி.பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் **சைவம்** மீண்டும் தழைக்கத் தொடங்கியது. **திருஞானசம்பந்தர்**தான் பாண்டிய நாட்டில் சைவ சமயத்தை நிலைநாட்டினார். **திருநாவுக்கரசர்** பல்லவர் ஆட்சியில் சைவம் பரவ வழி செய்தார். 13, 14ஆம் நூற்றாண்டு களில் சைவம் தழைக்கத் தொடங்கிற்று. சித்தாந்தங்களும் தோன்றின. இதன் பிறகு **இஸ்லாமிய சமயமும் கிருத்துவ சமயமும்** வெவ்வேறு காலத்தில் தமிழகத்தில் நுழையத் தலைப்பட்டன.[32]

உபநிடதங்களுக்குப்பின் தோன்றியது **கபிலரின்** சாங்கிய நூல். இந்நூல் வினை, வினையின் பயன்கள் ஆகியவற்றை வலி யுறுத்துகிறது. சாங்கிய மதத்திற்குச் சாங்கிய நூலே அடிப்படையாகும். சாங்கிய மதத்திற்குரிய இந்நூல் கி.பி. 760இல் செய்யப்பட்டதெனக் கருதப்படுகிறது.[33] யோக மதமாவது இறைவன் ஒன்றானவன். அவன் ஆன்மாக்களினின்று வேறுபட்டவன் அல்லன் என்பனபோன்ற கருத்துகளை உணர்த்துகின்றது. இக்கருத்துகளை முதலில் **பதஞ்சலி முனிவர்** தம் யோக நூலில் குறிப்பிடுகிறார்.[34] இங்ஙனம் அறுவகை மதங்கள் தோன்றி வளர்ந்தன.

## சைவ சமயம்

கடவுளைச் **சிவம்** என்ற பெயரால் அழைத்து வணங்கியது சைவ சமயமாகும். அச்சமயம் **இருக்குவேத** காலத்திற்கும் முற்பட்ட தாகும்.[35] குறிப்பாக, **மலாய்** மொழியில் காய்கறி கீரை வகைகளை, '**சாயோர்**' என்று கூறுகின்றனர். இது சைவம் என்ற சொல்லி லிருந்துதான் திரிபுற்றிருக்கவேண்டும். சைவம் - சைவர் - 'சாயோர்' ஆகியிருக்கவேண்டும் என்பதே துணிவான முடிவு என்று ஓர் அறிஞர் கூறுகின்றார்.[36] சைவம், தென்னிந்தியாவின் மிகப் பழைய வரலாற்றுக்கு முற்பட்ட சமயமாகும். அஃது ஆரியருக்கு முற்பட்ட காலத்திலிருந்தே வழக்கில் இருந்து வருகிறது என்று **ஜி.யூ.போப் குறிப்பிடுகிறார்.**[37]

சைவ சமயம் உலகப் பழைய சமயங்களுள் ஒன்று. அஃது இந்தியாவில் சிந்துவெளி நாகரிகத்துக்கும் ஏறத்தாழ 6000 ஆண்டு களுக்கு முற்பட்ட பழைமையுடையது என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்து.[38]

தென்தமிழ் நாட்டில் சமண சமயத்தினர் வருவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே சைவ ஒழுக்கத்தில் தலை சிறந்தவர் வேளாளர்களே என்பதை **மறைமலையடிகள்** குறிப்பிடு கிறார்.[39] **சைவம்** என்பதற்குத் **தூய்மை** எனப் பொருள் கொள்வர்.[40] **சைவம்** என்பதும் **சிவன்** என்னும் பெயருடையவரால் தோற்று விக்கப்பட்டிருக்கலாம் என்று **இரா. மாணிக்கவாசகம்** கருது கின்றார்.[41] சைவம் என்ற சொல்லுக்கும் இந்து மதத்திற்கும் **'அன்பு மதம்'** என்று நம் முன்னோர்கள் குறித்து வந்தனர்.[42] சைவ சமயம் என்பது ஒரு மதத்தினருக்கு உரிய சமயம் எனக் கருதாது. இச்சைவம் வேறுபாடின்றி நேர்கொண்டு நோக்குவோருக்கு உண்மை விளங்கச் செய்யும். ஆனாலும் சைவத்தின் உண்மை நிலை முன்னழிந்து, இப்பொழுது வளர்ந்துகொண்டிருக்கிறது. ஆனால், உண்மையான சைவம் தழைத்த காலம் மூன்றாவது நூற்றாண்டின் பிற்பகுதி முதல் நான்காவது நூற்றாண்டின் முற்பகுதி முடிய எனலாம்.[43]

**ஆரியர்** வருவதற்கு முன்னமே **பஞ்சாப் மாகாணத்தில்** சிறந் துயிர் வாழ்ந்த பண்டைத் தமிழ் மக்களின் அழிந்துபட்ட நகரங்களாகிய **'அரப்பா', 'மொகஞ்சதரோ'** ஆகியவற்றை அகழ்ந்தெடுத்த ஆங்கில ஆசிரியர்கள், அகழ்ந்தெடுத்த அரும்பொருட்களுள் **சிவபிரான் திருக்கைகளும், சிவலிங்கத் திருவுருக்களும்** மிகுதியா யிருந்ததைக் குறிப்பிட்டுள்ளனர். அதனால், சிவபிரானை வழிபடும் சவ சமயமானது பண்டைத் தமிழ் மக்கட்கே உரியதாதலுடன், அதுவே உலகத்திலுள்ள எல்லாச் சமயங்களிலும் மிகப் பழைமை டையதாகவும் காணப்படுகின்றது.[44] **பல்லவர்** பட்டயங்களிலும் முத்திரைகளிலும் **நந்திச் சின்னமே** காணப்படுவதால் பல்லவரது சமயம் சைவம் என்றும் கூறலாம்.[45]

கிருத்துவ மறையின் பழைய ஏற்பாடு கி.மு. 5ஆம் நூற்றாண் டுக்கும் கி.பி. 3ஆம் நூற்றாண்டுக்கும் இடையில் எழுதப்பட்டது. இதில் **மோசே** என்பவர் **யேகோவா** அருளிய பத்துக் கட்டளைகளைச் சினாய் மலைமீது நின்று சிவன் மாதத்தின் ஆறாவது நாள் மக்களுக்கு வெளியிட்டார் என்று கூறப்படுகின்றது. இதனால், சிவன் என்னும் திங்களின் பெயர் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலும் வழங்கிற்று என்பது ஊகித்தறியப்படும். கிருத்துவ முறையில் **சிவன்** எனக் கூறப்படும் கடவுள் சிவனே என்பதை மேல்நாட்டறிஞர்களே ஆராய்ந்து கூறுகின்றனர்.[46] இங்ஙனம் கிருத்துவுக்கு முன்னதாகவே தமிழகத்தின் சைவ சமயமும் சமயக் கொள்கைகளும் வழக்கிலிருந்தன.வரலாற்றுப்

போக்கில் நோக்கும்போதும், சமய தத்துவ நூல்களாகிய சிவாகமங்கள் **பல்லவ, சோழ, பாண்டியர்களின்** ஆட்சிக் காலத்தில் வழக்கி லிருந்தன என்பது தெரிகிறது.

கடல் வாணிகத்தின் தொடர்பால் **எகிப்து, சுமேரியா** முதலிய நாடுகளின் கதைகள் நம் நாட்டிலும், நம் நாட்டுக் கதைகள் அந்நாடுகளிலும் பரவின. அக்கதைகள் நம் இதிகாசங்களிலும் புராணங்களிலும் இடம்பெற்றுவிட்டன. இவற்றால், '**அன்பே சிவம்**' என்பதை அடிப்படையாகக் கொண்ட சைவ சமயம் **பௌராணிகச்** சமயமாக மாறிவிட்டது. இம்மாறுதல் **நாயன்மார்கள்** காலத்தில் தொடங்கியது. பாமர மக்கள் மிகுந்துள்ள இந்நாட்டில் இக் கதைகளே சமயத்தின் உயிர்நாடியாகக் கருதப்பட்டு வந்தன. இவற்றைச் சொல்லிப் பிழைப்பவரும் பலராகிவிட்டனர். இதனால், '**அன்பே சிவம்**' என்னும் கொள்கை பாதாளத்தில் புதைக்கப்பட்டது.[47] ஆனாலும், சைவ சமயம் மீண்டும் கதிரொளியெனத் திகழ்ந்தது.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த **பதஞ்சலி** என்பவர், பிற்காலப் புராணங்களிலே சிவனைப்பற்றி இடம்பெறும் கதைகளில் தோற்றத்தையும் வேதத்திலேயே காண முடிகிறது எனக் குறிப்பிடு கின்றார்.[48] கி.பி. 4. 5. 6ஆம் நூற்றாண்டுகளில் **திருமூலர், காரைக்காலம்மையார்** போன்ற நாயன்மார்கள் இருந்து சைவ சமயத்தை வளர்த்து வந்தனர். **சம்பந்தரும்** அப்பரும் கி.பி. 7ஆம் நூற்றாண்டினர். ஆதலால், முதல் ஆறு திருமுறைகள் கி.பி. 7ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. **சுந்தரரும் மாணிக்கவாசகரும்** கி.பி. 9ஆம் நூற்றாண்டில் ஏழாம் திருமுறையையும், எட்டாம் திருமுறை யையும் இயற்றினர். **திருமாளிகைத்தேவர்** முதலிய ஒன்பதின்மர் ஒன்பதாம் திருமுறையை இயற்றினர். கி.பி. 4. 5. 6ஆகிய மூன்று நூற்றாண்டுகளில் வாழ்ந்த **திருமூலர்** பத்தாம் திருமுறையாகிய திருமந்திரத்தை இயற்றினார். பதினோராம் திருமுறையைக் **காரைக்காலம்மையார், சேரமான் பெருமாள் நாயனார், நம்பியாண்டார்நம்பி** முதலியோர் இயற்றினர். **சேக்கிழார்** இயற்றிய **பெரியபுராணம்** பன்னிரண்டாம் திருமுறை என்றும் சைவ சமய உலகில் கருதப்படுகின்றது. இவ்வாறு சைவ சமயம் ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி உலகில் ஒப்பற்ற சமயமாகத் தோன்றி வளர்ந்தோங்கியதை அறிய முடிகிறது.

## 1 அ) சித்தாந்த சாத்திரம் பதினான்கும் - ஆசிரியர் வரலாறும்

சைவ சித்தாந்த சாத்திரங்கள் மொத்தம் பதினான்கு. அவை முறையே **திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞான போதம், சிவஞானசித்தியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சு விடுதூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம்** என வழங்கப்பெறும். சமயாசாரியர்கள் மக்களிடையே பக்தி மார்க்கத்தைப் பரப்பினார்கள். சந்தானாசிரியர்கள் தத்துவ ஞானத்தைப் பரப்பினார்கள். **மெய் கண்ட தேவர், அருணந்தி சிவாசாரியர், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாசாரியர்** என்னும் நால்வரும் சந்தானாசிரியர்கள் எனப்படுவர். அவர்களின் வாழ்க்கைக் குறிப்புகளையும், அவர்கள் இயற்றிய சித்தாந்த சாத்திரங்களையும்பற்றி இங்குக் காணலாம்.

### திருவுந்தியார்

திருவுந்தியாரின் ஆசிரியர் **திருவியலூர் உய்யவந்ததேவ நாயனார்** ஆவார். இவர் வடவேங்கடம் தென்குமரி எல்லைக்குள்ளே வாழ்ந்துகொண்டிருந்தார். இவர் வாயிலாகத் தொன்மைத் தமிழர் நன்னெறியின் பொருளுண்மையுணர்த்தும் மெய்ந்நூல்கள் உலகுக்குதவியருள விழுமிய சிவபெருமான்திருவுள்ளங் கொண்டருளினான். அங்கு **ஆளுடைய தேவநாயனார்** என்னும் நல்லார் ஒருவர் இவர்தம் திருவடிகளை வணங்கினார். ஆளுடைய தேவ நாயனாரின் சிறப்பு நோக்கி, நம் நாயனார் ஆட்கொண் டருளினார். சிவபெருமான் தீக்கை செய்து பொருளுண்மையினைச் செவியறிவுறுத்த **திருவுந்தியார்** என்னும் நூலை இவர் இயற்றினார்.

இந்நூல் 45 கலித்தாழிசைகளால் ஆகியது. முதல்வனே ஞானாசிரிய னாக வந்து ஞானம் அளிப்பான், அருள் ஞானம், சிந்தனை, தெளிவு என்பவற்றால் சிவபோகப் பெரும்பயனை அளிக்கும் என்று இந்நூல் கூறும். இத்துடன் **ஆதார, நிராதார யோகங்களையும்** கேள்வி ஞானமே பின்னர் அனுபவ ஞானமாய் விளங்குவதற்கு உதவி செய்யுமென்பதையும் அதன் இன்றியமையாமையையும் விளக்கு கின்றது. இந்நூலாசிரியர் இந்நூலை அருளிய காலம் கி.பி. 1148 என்று கூறலாம்.[49] உந்தியென்னும் மகளிர் விளையாட்டையொட்டிச் சாத்திரவுண்மைகளைக் கூறுவதால் அது நேரே சாத்திர மாதலுமில்லை. தோத்திர கிரந்தமாகிய **திருவாசகத்தில்** உந்தியார் ஒன்று காணப்படுதலுமுண்டு. ஆயினும், அது தோத்திரத் தன்மை குறைந்து சாத்திரத்தன்மை மிக வாய்ந்த நூலென்று சாதிக்கலாம்.[50]

## திருக்களிற்றுப்படியார்

திருவுந்தியாரின் உட்கருத்தை மரபுவழியில் விளக்குவதாக இந்நூல் அமைந்துள்ளது. இந்நூலாசிரியர் **திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார்** ஆவார். இந்நூல் நூறு வெண்பாக்களால் ஆனது. உய்யவந்த நாயானார் திருவுந்தியாரின் செவ்விய விளக்கமாகத் திருப் பாட்டுகளை அடியொற்றி நூறு வெண்பாக்களை இயற்றி அருளினார். இந்நல்லார் ஆட்டு வாணியக் குலத்தில் தோன்றியவர். அக்காரணம்பற்றி இவர்தம் மெய்யுணர்வு நூலை ஏற்றுக் கொள்வதற்குச் சிலர் ஐயுற்றனர்.

அதற்குமேல் இவ்வருட் பெருநூலின் உயர்வினை உலகம் உணர்ந்து ஓதி உய்யும்பொருட்டு, அம்மெய்ப்பொருள் நூலினைத் தில்லைத் திருச்சிற்றம்பலத்தின்கண் அம்மை அம்பலவாணர் திருமுன் காணப்படும் திருக்களிற்றுப்படியார் என்னும் திருப்படியின் அடியில் வைத்தனர். அம்பலவாணர் திருவருளால் கல்லாலமைந்த களிற்றுக்கை நிமிர்ந்து அதனை வாங்கி நடராசப் பெருமானது திருவடியில் வைத்தமையால் இந்நூல் திருக்களிற்றுப்படியார் என்று பெயர் பெற்றது.

இந்நூலில் திருக்குறள், திருமுறைகள் போன்றவற்றினின்றும் மேற்கோள் காட்டிச் சிவானுபவப பயன் விளக்கப்பட்டுள்ளது. இறைவனடி சேர்வதற்குரிய சாதனங்களாகச் **சிவதர்மம், சிவயோகம், சிவஞானம்** ஆகிய மூன்றும் கூறப்பட்டுள்ளன. திருமுறைகளின் உயர்வை உணர இந்நூல் ஒரு கருவி எனலாம்.

## சிவஞானபோதம்

மெய்கண்டார் சடையப்ப வள்ளல் மகளின் மகன் என்னும் ஐதீக முள்ளது. சிவஞானபோதம் மெய்கண்டாரால் 13ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் செய்யப்பட்டது.[51] சிவஞானபோதம் என்னும் சைவ சமய முழுமுதல் நூலை இயற்றியவர் மெய்கண்ட தேவராவார். இவர் வேளாண்குடியில் பிறந்தவர். இந்நூலை வடமொழியிலுள்ள பௌராகவாகமத்தின் 73ஆவது பகுதியான பாப விமோசனப் படலத்தின் பன்னிரண்டாம் அத்தியாயத்தின் மொழிபெயர்ப்பு என்பர்.[52] இந்நூல் பன்னிரண்டு சூத்திரங்களைக் கொண்டது. பன்னிரண்டு சூத்திரங்களில் பல அறிவு நூல்களின் முடிவுகளையும் தன்னகத்தே உடையது. **பதி, பசு, பாசம்** ஆகிய முப்பொருள் களைப்பற்றி எடுத்துரைக்கின்றது. பொது, உண்மையென இரண்டு அதிகாரங்களையும் **பிரமண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயனியல்** என நான்கு இயல்களையும் முப்பத்தொன்பது அதிகரணங்களையும் எண்பத்திரண்டு வெண்பாக்களையும் கொண்டுள்ளது. ஒவ்வோர் இயலிலும் மும்மூன்று சூத்திரங்களை யுடையது. இதுவே சித்தாந்தத்தின் முடிமணி நூலாகும்.

## சிவஞானசித்தியார்

மெய்கண்டாரின் மாணவரான **அருணந்தி சிவாசாரியார்** இயற்றிய இந்நூல் சிவஞானபோதத்தின் வழிநூலாகும். இந்நூல் **பரபக்கம், சுபக்கம்** என இரு பகுதிகளைக் கொண்டது. புறச் சமயங்களின் நிலையை விளக்குவதற்குப் பரபக்கம் என்றும், சித்தாந்த சைவ நிலையைக் காட்டுவதற்குச் சுபக்கம் என்றும் பெயர். பரபக்கத்துள் மதமும், மறுப்புமாக வைத்து உலகாயதம், சவுத்தி ராந்திகம், யோகாசாரம், மாத்யபாகம், வைபாடிகம் எனும் நால்வகைப் பௌத்தம், நிகண்டவாதம், ஆசிவதம் என்னும் இருவகை சமணம், பட்டாசார்யம், பிரபாகரம் எனப்படும் இருவகை மீமாம்சை, சுத்தப் பிரமவாதம், கிரீடாப்பிரமவாதம், பாஸ்கரியவாதம், சாங்கியம், பாஞ்ச ராத்திரம் ஆகிய மதங்கள் விளக்கப்பெறுகின்றன.

பரபக்கம் மொத்தம் 311 பாக்களையுடையது. சுபக்கம் 328 பாக்களை உடையது. சிவபோக சார நூலார், '**பார் விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலேயோர் விருத்தப்பா போதும்**' என்று குறிப்பிடுகின்றார்.[53] உருவத்தாற் செய்யுள் நூலாயினும் அது வசன நூலைவிடத் தெளிவான நடையில் எழுதப்பட்டுள்ளது. அந்நூல் நவில்தொறும் இன்பம் தரும் இனிய வாக்கியங்களைக் கொண்டது.

## இருபாவிருபஃது

இந்நூலை **அருணந்தி சிவாசாரியார்** இயற்றினார். இது வெண்பா, ஆசிரியப்பா என்னும் இரண்டு பாவானுமாகிய ஒரு சாத்திர சிறு நூலாகும். இருபது செய்யுள்களால் அந்தாதி முறையில் அமைந்துள்ளது. அருணந்தியார் பாக்கள்தோறும் மெய்கண்டாரின் பெயர்வரப் பதி, பசு, பாச விலக்கணங்களையுணர்த்தி, அவரை முன்னிலைப்படுத்தி வினாவுவதுபோன்று சைவ சித்தாந்த உண்மை களையும் உணர்த்தியுள்ளார்.

## உண்மை விளக்கம்

திருவதிகை மனவாசகங்கடந்தார் செய்த உண்மை விளக்கம் காப்புச் செய்யுளோடு ஐம்பத்துநான்கு வெண்பாக்களைக்கொண்டு அமைக்கப்பட்டது. முப்பத்தாறு தத்துவம், ஆணவம், இருவினை, ஆன்மா, இறைவன், திருவைந்தெழுத்து ஆகியவற்றை இந்நூல் தெளிவாக விளக்குகிறது. இந்நூலாசிரியரும் தம்முடைய ஆசிரிய ராகிய மெய்கண்டாரை வினவ, அவர் விடை பகர்ந்ததுபோன்று அமைந்துள்ளது இந்நூலாகும். இனிக் குறிப்பிடும் எட்டு நூல்களை யும் இயற்றியருளியவர் கொற்றவன்குடி உமாபதி சிவநாயனா ராவார். இவர் தில்லைவாழ் அந்தணர் மரபைச் சேர்ந்தவர். இவருடைய காலம் கி.பி. 14ஆம் நூற்றாண்டாகும்.

## சிவப்பிரகாசர்

இந்நூல் நூறு விருத்தப் பாக்களால் அமைந்தது. பொது, உண்மையென அதிகாரங்களைக்கொண்டு திகழ்கின்றது. இது சிவ ஞானபோதத்தின் சார்பு நூலாகும்.

## திருவருட்பயன்

இந்நூல் குறள் வெண்பாக்களால் ஆகியது. 100 குறட்பாக்கள் பத்து அதிகாரங்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை பதிமுதுநிலை, உயிரவை நிலை, இருண்மலநிலை, அருளுருநிலை, அறியுநெறி, உயிர்விளக்கம்,இன்புறுநிலை,அருளது நிலை, ஐந்தெழுத்தருள் நிலை, அணைந்தோர் தன்மை என்பனவாகும். இந்நூல் சித்தாந்தக் கருத்துகளை மாணவர்கள் எளிதில் உணர்ந்து மனத்திற்கொள்ளும் பொருட்டு அமைந்துள்ளது..

## வினாவெண்பா

இஃது இருபாவிருபஃதைப்போல உமாபதியார் தம் குரவரை நோக்கி வினாக்கள் நிகழ்ததித் தத்துவங்களைச் செய்த பதின்மூன்று வெண்பாக்களாலான ஒரு சாத்திர நூலாகும். இதற்குத் திருவாவடுதுறை ஆதினத்து நமச்சிவாயத் தம்பிரான் சுவாமிகள் உரை எழுதி யுள்ளார்.

## போற்றிப்பஃறொடை

திருவாசகத்துப் போற்றித் திருவகவல்போல முதலாசிரியர் தமக்குப் போதித்தவுண்மையை உணர்த்தக் கருதி உமாபதியார் சாத்திரப் பொருள்களைத் தழுவிப் பஃறொடை வெண்பாவினால் இச் சாத்திர நூலை இயற்றினார். இந்நூலில் முப்பொருள் உண்மை, மூவுயிர் இயல்பு, பிறப்பு இறப்பின் தன்மை, துறக்க நீக்கம், ஐந்தவத்தை, இறைவன் குருவுமாய் வெளிப்பட்டு ஆண்டருளல், சிவ தீக்கைமுறை, இரண்டறக் கலக்கும் இயல்பு, இறவா இன்பப் பெருவாழ்வின் ஏற்றம் ஆகியன எடுத்தோதப்பட்டுக் குருவாகிய மறைஞான சம்பந்தர் திருவடியைப் போற்றும் முறையில் அமைந்துள்ளது.

## கொடிக்கவி

இந்நூல் தில்லை நடராசப் பெருமானது கோயிலில் கொடியேறும்பொருட்டுப் பாடியது; ஒரு கட்டளைக் கலித்துறையையும் நான்கு வெண்பாக்களையும் கொண்டது; ஞானதீட்சையின் பயனையும், ஐந்தெழுத்தின் பெருமையையும் இனிது எடுத்துரைக்கிறது. இதன்கண் கொடிச்சிறப்பு, கொடியில் பொறிக்கப்படும் ஆனேறு, திருவிழாவின் பெருநோக்கம், திருவருளால் ஆருயிர்கள் மும்மலப் பிணிப்பு நீங்கி இறைவனின் திருவடியை அடையும் முறைமை ஆகியன எடுத்துரைக்கப்படுகின்றன.

## நெஞ்சுவிடு தூது

இந்நூல் நாயகி ஒருத்தி, தன் நாயகனிடத்து நெஞ்சைத் தூதனுப்பும் பாவனையில் அமைந்தது. மறைஞானசம்பந்த நாயகரிடத்துத் தம் மனத்தைத் தூது விடுக்கும் உமாபதியார் கடவுள், ஆன்மா, பாசமென்ற இவற்றின் இலக்கணங்களை விளக்குவதோடு, தம் ஆசிரியனின் பெருமையையும், அருள்தன்மையின் இயல்பையும் எடுத்துரைக்கின்றார். இந்நூலைக் கலிவெண்பாவால் அமைத்துள்ளார்.

இதன்கண் சிவபெருமானின் முழுமுதல் தன்மையையும், அளவிலாற்றலையும், ஆருயிர்கள் உய்யப் புரிந்தருளும் அருள்முறையையும், மும்மலத்தையும் அவற்றால் ஏற்படும் பிறப்பு இறப்புத் துன்பத்தையும் உலகவியல்பையும் உலக மயக்கத்தையும் அவற்றினின்றும் விடுபடுவதற்கான வழியையும் உள்ளத்திற்கு நிரல்பட உரைக்கின்றார்.

## உண்மைநெறி விளக்கம்

இந்நூல் தத்துவ உருவம், தத்துவக் காட்சி, தத்துவ சுத்தி, ஆன்ம உருவம், ஆன்மக் காட்சி, ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவ யோகம், சிவபோகம் என்னும் பத்துச் செயல்களால் ஆன்மா இறைவன் திருவடியைச் சேர முடியும் என்று கூறுகிறது. இது சித்தாந்தத்தின் சிறப்பையுணர்த்தும். சிலர் இந்நூலைச் சீர்காழி தத்துவநாதர் என்பவர் இயற்றினார் என்றும் கூறுவர்.[54]

## சங்கற்ப நிராகரணம்

இஃது இருபது அகவற்பாக்களால் ஆனது. சிவஞான சித்தியார் பரபக்கம்போலப் பிற மதங்களைக் கூறிக் கண்டிக்கவெழுந்தது. சாலிவாகன சகம் 1235இல் நடந்த ஆனித் திருவிழாவில் மாயாவாதி முதலிய மதத்தினர்க்கும், மெய்கண்டார்வழிப்பட்ட சிவனடியார்க்கும் வாதம் நிகழ, மதவாதியர் சங்கற்பித்தலும், சைவ சித்தாந்தியர் நிராகரித்தலும் நிகழ்ந்தன. இவற்றை வைத்துக்கொண்டு இந்நூல் செய்யப்பட்டதாகும்.[55]

இந்நூலுள் **மாயாவாதி, ஐக்கியவாதி, பாடாணவாதி, பேதவாதி, சிவசமவாதி, சங்கிராந்தவாதி, ஈசுவரஅவிகாரவாதி, நிமித்தகாரண பரிணாமவாதி, சைவவாதி** என்னும் ஒன்பதின்மர் மதங்கள் கூறி மறுக்கப்பட்டன. இதன்கண் அகச்சமய உண்மைகள் அமைவுற ஓதப்பட்டுள்ளன.

இங்ஙனம் பதினான்கு சாத்திரங்களின் வரலாற்றையும் ஆசிரியர் குறிப்பையும் நன்கு அறியலாம்.

*****

# 1 ஆ) சைவ சித்தாந்தத்தின் கடவுட் கொள்கை

## சைவ சித்தாந்தம்

மனித சமுதாயம் முழுவதுமே நன்கமைந்த ஒரு பெருங்குடும்பமாக இருக்கவேண்டும் என்பதையே சைவ சித்தாந்தம் நமக்கு உணர்த்துகின்றது. **சித்தாந்தம் என்பதற்குச் சித் - அந்தம்;** சித்தத்தின் முடிவு அல்லது சித்தர்களின் முடிவு என்றும் பொருள் கொள்ளலாம். சைவ சித்தாந்தம் சைவத்தின் முடிந்த முடிபை விளக்குவது. தத்துவம் என்பது உண்மை எனப் பொருள்படும். எனவே, சைவ சித்தாந்த தத்துவமாவது சிவ சம்பந்தமான சைவத்தின் முடிந்த முடிபாகிய உண்மைகளை ஆராய்ந்து நிறுவுதல் எனப்படும்.[56]

சைவத்தில் காணப்படும் பலவிதத் தத்துவக் கொள்கைகளில் மிகவும் வளர்ச்சியடைந்து உயர்ந்த கருத்துகளின் முடிந்த முடிபாகக் காணப்படுவதே சைவ சித்தாந்தமாகும். இக் கொள்கை சைவத்தில் காணப்படும் ஏனைய கொள்கைகளுடன் கொண்ட தொடர்பையும், தான் அவற்றினின்றும் வேறுபட்டிருப்பதையும் சைவ சித்தாந்தம் என்ற தொடரே நன்கு விளக்கும்.

கி.பி. 13ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த மெய்கண்டார், சைவ சித்தாந்தத்திற்கு ஒரு புதிய எழுச்சியைத் தந்தார். சைவ சித்தாந்தக் கொள்கை, சித்தாந்த சமயம் ஆகியவை பற்றிய தெளிவான அமைப்பை அவரது நூல் சிறப்பாக எடுத்துரைக்கின்றது. அந்நூல் தரும் சைவ சித்தாந்தக் கொள்கைகள் இங்குத் தெளிவுபடுத்தப்படுகின்றன.

## சித்தாந்தப் பொருள்வகை

பிரமாணம் என்பதற்கு '**அளத்தற் கருவி**' என்பது பொருள். இது தமிழில் '**அளவை**' எனப்படும். அவற்றுள் சிறப்புடைய அளவை காட்சி, கருதல், உரை என்ற மூன்றே சைவ சித்தாந்தத்தின் கொள்கையாகும். காட்சியளவை என்பது பொருள்களை ஐம்பொறிகளால் நேரே கண்டுணர்வது. கருதலளவை காட்சிக்கு வராத பொருளை அதனோடு உடன்நிகழ்வாகிய பொருளை ஏதுவாகக் கொண்டு உய்த்துணர்வது. இஃது அநுமானப்பிரமாணம் எனப்படும். உரையளவையாவது காட்சியளவையாலும், கருதலளவையாலும் உணர முடியாதவற்றை உண்மை நூல்கள்பற்றி உணர்வது. சிவஞான சித்தியார் சுபக்கம் பிரமாணம்பற்றிய விளக்கங்களைத் தெளிவாக எடுத்துரைக்கின்றது. [57]

சைவ சித்தாந்தம் மூன்று உண்மைகளை நித்தியப் பொருள்களெனக் கூறும். அவை கடவுள் (பதி), உயிர் (பசு), உயிரைப்பற்றிய பந்தங்கள் (பாசம்) என்பனவாகும். இந்த மூன்று பொருள்களுக்கும் தோற்றமும் இல்லை; முடிவும் இல்லை. இவை என்றும் **அநாதி** எனப்படும். திருமூலர் இக்கருத்தை,

> "பதி பசுபாசம் எனப்பகர் மூன்றில்
> பதியினைப் போற்பசு பாசம் அநாதி"[58]

பதியாகிய கடவுள் என்று உண்டோ, அன்றே பசுவாகிய உயிரும் உண்டு; அன்றே அவ்வுயிர்களைப் பிணித்துள்ள பாசமும் உண்டு என்று சைவ சித்தாந்தத்தின் கொள்கையால் அறியலாம். கடல் - பதி, நீர் - பசு, உப்பு - பாசம் கடவுளைப் பற்றாது; நீரையே பற்றும். பசு பாசம் இறைவனைப் பற்றாது.[59] இறைவனின் அநாதி நிலையையும் தொன்மையையும்பற்றி **மாணிக்கவாசகர்** பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

> **"கூறும்நாவே முதலாகக் கூறுங்கரண மெல்லாநீ
> தேறும் வகைநீ திகைப்புநீ தீமைநன்மை முழுதுநீ
> வேறோர் பரிசிங் கொன்றில்லை மெய்ம்மை யுன்னை
> விரித்துரைக்கில்
> தேறும்வகைஎன் சிவலோகா திகைத்தாற் றேற்ற
> வேண்டாவோ."[60]**

## பதி உண்மை

பதி என்பதற்குக் காக்கின்றவன் என்று பொருள் கொள்ளலாம். கடவுள் உளர் என்ற கோட்பாட்டினைச் சைவ சித்தாந்தம் சில கருத்துகள்மூலம் நிறுவுகிறது. மட்பாண்டம் ஒன்றைக் காணும பொழுது அதனைச் செய்த குயவன் ஒருவன் உளன் என்பதை ஊகித்தறிகின்றோம். அதுபோன்றே கண்ணாற் காணப்படும் உலகத்தைப் படைத்தவரும் ஒருவர் உளர்; அவரே கடவுள்.

பதி உண்மையைப் பற்றிச் சிவப்பிரகாசம், "அவன்" படைத்த வற்றை அரி காப்பான்; அவற்றை எமது தலைவனே முடிவாக ஒடுக்குவன்; ஆதலால் அவனே அயன் அரி முதலியோரை அவ்வவர் அதிகார நிலையில நிறுத்துவான்" என்று கூறுகிறது.[61]

கடவுள் என்பதற்கு எல்லாவற்றையும் கடந்தவன் என்று பொருள் கொள்ளலாம். எல்லாவற்றையும் இயக்குவது என்னும் கருத்தில் '**இயவுள்**' என்றும், எக்காலத்தும் நிலைத்திருப்பது என்னும் கருத்தில் இறைவன் என்றும் பெயரிட்டு வழங்கினர்.[62] உலகினுள்ளும் உயிர்களுள்ளும் நிறைந்து நிற்கும் நிலையை '**உள்**' என்ற சொல்லும் அவற்றைக் கடந்து நிற்கும் நிலையைக் '**கட**' என்ற சொல்லும் குறிக்கும் எனச் **சுப்பு ரெட்டியார்** குறிப்பிடுகிறார்.[63] சற்காரியவாதம் என்பது '**சத்**' உள்ளது; **காரியம்** -ஆக்கப்பட்டது; **வாதம்** - பேச்சு. ஒரு பொருள் ஆக்கப்படுவதற்கு முன்னும், அதன் காரணத்தில் ஆற்றல் உருவில் உள்ளது என்னும் பேச்சு **சற்காரியவாதம்** எனப்படும். அஃதாவது, உள்ளதே தோன்றும்; இல்லது தோன்றாது என்பது.

உள்ளதே தோன்றும் என்பதற்குப் பொருள் முன் சூக்குமமாய், நுட்பமாய் விளங்காது உள்ள பொருளே, பின் தூலமாய், பருமையாய் விளங்கி நிற்கும் என்பதே.[64] இந்தச் சற்காரிய வாத அடிப்படையில்தான், சைவ சித்தாந்தம் அமைந்துள்ளது.

சைவம் ஓரிறைக் கொள்கை படைத்ததொரு சமயம் ஆகும். '**ஒன்றே குலம்; ஒருவனே தேவன்**' என்ற முழக்கம் சைவ நூல்களுள் பழையதான திருமந்திரத்தில் எழுகின்றது. '**சிவன்**' என்னும் பெயரை முழுமுதற் செம்பொருளான இறைவனே பெறுகின்றான். முதலில் இறைவன் ஒருவனே என்ற நிலை இருந்து வந்தது. பிறகு சமய வேறுபாட்டால் மக்கள் வெவ்வேறு கடவுளரை வணங்கலாயினர்.

## பதி பசு பாசங்களின் தொடர்பு

இறைவன் பசு பாசங்களோடு அத்துவிதமாய்க் கலந்து நின்று அவற்றை நடத்துகின்றான்.

"உலகெலா மாகி வேறாயுடனுமா யொளியா யோங்கி
அலகிலா வுயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத்
தலைவனா யிவற்றின் றன்மை தனக்கெய் தலின்றித் தானே
நிலவுசீ ரமலனாகி நின்றனன்நீங்கா தெங்கும்"[65]

என இறைவனின் அத்துவித நிலையைச் சிவஞான சித்தியார் எடுத்துரைக்கின்றது.

உடலும் உயிரும் போலவே, கடவுளும் ஆன்மாவும் கலந்துள்ளன. இரண்டும் பேதமறக் கலந்தாலும் உடல் வேறு; உயிர் வேறு; கடவுள் வேறு; ஆன்மா வேறுதான். இந்தக் கலப்பினைத்தான் பேத - அபேதக் கலப்பு என்பர்.[66] பதி, பசு. பாசங்களின் தொடர்பு கலப்பினால் ஒன்றாயும், பொருள் தன்மையால் வேறாயும், உயிர்க்கு உயிராம் தன்மையால் உடனாயும் இறைவன் இருப்பான் என்று கூறுவர். இதுதான் அத்துவிதத் தொடர்பு எனப்படும். அத்துவிதமாவது, இரண்டல்லாதது; அஃதாவது, பிரிவின்மை என்று கூறலாம்.

இறைவன் பொன்னும் பூணும்போலச் சக்தியுடன் கலந்திருப்பான் என்று திருக்களிற்றுப்படியார் கூறுகிறது.[67] சுத்த நிலையில் உயிர் வேறாகக் காணப்படாது இறைவனோடு கூடி இறைவனேயாய் நிற்கும். அதுவே இறைவனோடு ஏகனாகி நிற்கும் என உணரலாம் என்பதையும் வினாவெண்பா எடுத்துரைக்கும்.[68]

பாசத்திற்கு அறிவே இல்லை. பசுக்களுக்குச் சிற்றறிவு உண்டு; பதி அறிவே வடிவமானது; எல்லாம்வல்ல பேராற்றல் உடையது; எல்லாப் பொருள்களையும் தன் இச்சைப்படியே நடத்துவது; பதி என்பது தலைவர் என்று பொருள்படும். அனைத்துலகிற்கும் அனைத்துயிர்கட்கும் தலைவரானதால் சிவபெருமான் பதியாயினர். அவர் தமது சிந்தனைக்கும் சொல்லுக்கும் அப்பாலானவர். இறைவன் எண் குணங்களை உடையவன். அவை தன் வயத்தராதல், தூய உடம்பினராதல், இயற்கை உணர்வினராதல், இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை, முற்றுணர்தல் என்பனவாகும்.

அறச்செயல்களின் குறைவு, நிறைவு பார்த்து அவற்றின் பயனைச் செய்வானுக்குத் தருபவன் இறைவன் என்பதைச் சிவஞான சித்தியார்

வலியுறுத்துகிறது.[69] பதி, ஏகன்; நித்தன்; நின்மலன்; அசலன்; ஆதி யந்தமில்லான்; அளவிடற்கரியன் என்றும், உருவம், அருவம், அரு வுருவம் என்னும் மூன்று கூற்றாலும் இறைவன் இயல்பைச் சித்தாந்தக் கட்டளை குறிப்பிடுகின்றது.[70]

சித்தாந்திகள் இறைவனைத் தாயாகவும், தந்தையாகவும் குருவாகவும் கருதினர். கு + ர் + உ = குரு. குகரத்திற்குச் சித்தியைக் கொடுப்பவன் எனவும், ரகரத்திற்குப் பாவத்தைத் தவிர்க்கும் தீயெனவும், உகரத்திற்குச் சிவன் எனவும் பொருள் கொள்ளலாம். இம்மூன்றும் நிறைந்தவனே குருவாவான். குரு மலத்தை நீக்குபவர். **கு - மலம், ரு - நீக்குபவர்** என்று பொருள் படும்.[71] இங்ஙனம் இறைவன் குருவாகவும் வந்து குற்றங்களைக் களையும் இயல்புடையவனாக இருக்கக் கூடியவன் என்பதை அறியலாம். இறைவன் இயல்புபற்றி மாணிக்கவாசகர்,

"வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி உண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே"[72]

என்று பரவுகின்றார். இறைவனை அன்புகொண்டு வழிபட்டால், அவன் நம்முள் கலப்பான். **கண்ணப்பனின்** அன்புச்செயலையும், **சாக்கிய நாயனார்** அன்புகொண்டு கல்லால் எறிந்த செயலையும் சிவன் அன்புகொண்டு ஏற்றுக்கொண்டார்.

## அத்துவிதம்

சிவனடியார்கள் உண்மையான அன்புகொண்டு இறைவனை அடைந்துள்ளனர். அதனால், இறைவனும் அன்பும் வேறல்ல என்பதைத் திருமூலர் எடுத்துரைக்கின்றார்.

**"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந் திருந்தாரே"[73]**

**"அப்பன்நீ அம்மைநீ ஐயனுநீ
அன்புடைய மாமனு மாமியுநீ"[74]**

**"அன்பைப் பெருக்கி எனதா ருயிரைக் காக்கவந்த
இன்பப் பெருக்கே இறையே பராபரமே"[75]**

இவ்வாறு தொன்மைச் சிறப்புடன் அன்புநெறியை வலியுறுத்தும் மாண்பும் சைவத்தின்கண் காணப்படுகின்றது. சைவத்தை அன்புச் சமயம் என்பர். சிவம் என்னும் சொல்லால் குறிக்கப்பெறும் முழுமுதற் பொருளாகிய இறைவன் அன்பினின்றும் மாறுபட்டவனல்லன் என்று சைவ சித்தாந்தம் தெளிவுபடுத்தும்.

இறைவன் ஒருவாற்றான் அறியப்படாமையாவது, பாச ஞான, பசு ஞானங்களால் அறியப்படாமையும், ஒருவாற்றான் அறியப் படுதலாவது பதி ஞானத்தால் அறியப்படுதலுமாகும். இறைவன் ஒன்றாயும், வேறாயும், உடனாயும் முறையே அபேதம், பேதம், பேதாபேதமாகவும் விளங்குகின்றான் என்று சிவஞான சித்தியார் குறிப்பிடுகிறது.[76] இறைவன் அன்புள்ளவர்களுக்குப் பிரகாசமாய், தயிரில் நெய்போல் இனிது விளங்குவான். அன்பில்லாதவர்களுக்குப் பாலில் நெய்போல் விளங்காது நிற்பான்.[77]

மேலும், இறைவன் அருக்கன்போலக் குணகுணிபோல் நிற்கும் அத்துவிதத் தன்மைகொண்டவன் என்பதைச் சிவஞானபோதம் குறிப்பிடும்.[78]

## சக்தியின் தன்மை

கதிரவனும், கதிரும் இரண்டுபோலக் காணப்பட்டாலும், இரண்டும் ஒன்றேயாதல்போலச் சிவமும் சக்தியும் இரண்டுபோலச் சொல்லப்பட்டாலும் இரண்டும் ஒன்றே. இவ்வாறு ஒரு பொருள் இரு கூறாகக் காணப்பட்டு இயைந்து நிற்றலை, **தாதான்மிய சம்பந்தம்** என்பர். கதிரவன் நீண்ட தூரத்தில் இருப்பினும், அவனது கதிர் எங்கும் பரவி நிற்கின்றது. ஆயினும், அக்கதிர் இன்றிக் கதிரவன் இல்லை; கதிரவன் இன்றிக் கதிர் இல்லை. அதுபோலவே, சிவம் எல்லாப் பொருளையும் கடந்து நிற்பினும், அதன் சக்தி எல்லாப் பொருளிலும் நீக்கமற நிறைந்து நிற்கின்றது. இறைவன் தன் நிலையில் நிற்கும்போது, '**சிவம்**' என்றும், தம் ஆற்றல் பெறும்போது '**சக்தி**' என்றும் பெயர் பெறும்.

சக்தியின் ஏழு வடிவங்கள் ஒரே சிவசக்தியின் திருமேனிகளாகும். அதாவது அருள், வட்டம் என்பன சக்தித் தன்மையன. இவற்றோடு **அருட்சிவ முதல்வி, பெருமுதல்வி, உமை, திரு, வாணி** ஆகியவையாகும்.[80] சக்தியின் சொரூபம் என்பதற்கு உண்மைநிலை என்று பெயர். **ஞானசக்தி, இச்சாசக்தி, கிரியாசக்தி** என்பனவாகிய **அறிதல், விரும்புதல், செய்தல்** என்பன கொண்டே இறைவன்

தனது தொழில்கள் அனைத்தையும் செய்கின்றான். மேலும், சக்தியானது **திரோதான சக்தி** (மறைப்பாற்றல்), **அனுக்கிரகசக்தி** (அருளாற்றல்) முதலாகப் பலவகையாக வழங்கப்படுகின்றது. சக்தியின் பேதங்களையும் அவற்றின் தொழில்களையும் பின்வருமாறு சிவஞான சித்தியார் எடுத்துரைக்கின்றது.

**"ஒன்றதா யிச்சா ஞானக் கிரியையென் றொருமூன் றாகி**
**நின்றிடுஞ் சக்தி யிச்சை யுயிர்க்கரு ணேச மாகு**
**நன்றெலா ஞான சக்தி யாயைந் தறிவ னாத**
**னன்றருட் கிரியை தன்னா லாக்குவ னகில மெல்லாம்"** [81]

இறைவன் ஞானசக்தி, இச்சாசக்தி, கிரியா சக்தி, திரோதானசக்தி, அனுக்கிரக சக்தி ஆகிய ஐந்து ஆற்றலைக்கொண்டு படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் செய்கின்றான்.

இறைவன் செய்யும் ஐந்தொழில்களும் அருட்செயலின் பாற்படும் என்று சிவஞான சித்தியார் எடுத்துரைக்கும்.[82] உலகத்தைப் படைத்துக் காத்து அழிக்கும் முதற்கடவுள் சிவனேயாவான். **அயன், அரி, அரன்** என்னும் மூவரும் அவன் கட்டளைப்படி தொழிலைச் செய்யும் கடவுளரே. பிற தேவர்களும் அவ்வாறே தன் பணியைச் செய்பவர் என்று கடவுளரின் தொழில்பற்றிச் சித்தாந்தம் இயம்புகிறது.

## ஐந்தொழில்

படைத்தல் என்பது சிவபெருமான் மாயையின்வாயிலாக ஆன்மாக்களுக்கு வேண்டிய உடல்களையும் **மனம், புத்தி, சித்தம்,** அகங்காரமாகிய கரணங்களையும் வாழ்வதற்குரிய உலகங்களையும் இன்ப துன்பங்களையும் தோற்றுவித்தலாகும்.

காத்தலாவது ஆன்மாக்கள் நல்வினை, தீவினைகளை அனுபவித்துப் பக்குவம் அடையும்வரை அவற்றிற்குரிய **தனு, கரண, புவன, போகங்களை** வைத்திருத்தலாகும். இது **திதி** எனவும் வழங்கப்படும்.

அழித்தலாவது ஆன்மாக்கள் புதிய பிறப்பெடுக்காது சற்றே ஓய்வு அளித்தல். இது **சங்காரம்** எனப்படும். இறைவன் ஒறுப்பதும் கருணையே. முறை தவறாகச் செய்தவற்றின்பொருட்டுச் செய்தாரைத் தண்டித்து, அச்சம் விளைத்து, அறம் செய்யும் முறையை

இறைவன் அவர்க்குணர்த்துவன். இறைவனின் ஒடுக்கம், மறைப்பு ஆகிய தொழில்களும் அருள்மயமே என்று சித்தியார் குறிப்பிடுகிறது.[83]

மறைத்தலாவது உலகப் பொருள்களின் உண்மையை மறைத்து, மலத்தின் சத்தியை ஊக்குதல். இதனைத் **திரோதானம்** என்பர். ஆணவத்தின் சக்தி மெலிவடைய மெலிவடைய உயிர்களின் அறிவு, மறைப்பு நீங்கி விளக்கம் பெற்று, இறைவனை அறிதற்கு உரியதாகும். ஆகவே, அந்நன்மை கருதியே மறைத்தல் தொழிலை இறைவன் செய்கின்றான். ஆதலால், அதுவும் உயிர்களின் நன்மையின் பொருட்டே ஆகின்றது என்று சித்தாந்தத் தெளிவியல் விளக்கம் தருகிறது.[84]

அருளலாவது, ஆன்மாவைத் தளைகளினின்றும் நீக்கித் தமது திருவடிக்கண்ணே பேரானந்த நித்தியப் பெருவாழ்விலே திளைக்க வைத்தலாகும். படிகம் தன்னுடைய பிரகாசத்தையும், பஞ்ச வன்னங்களினுடைய விளக்கத்தையும், இவ்விரண்டையும் கூட்டிக் காரியப்படுத்தப்பட்ட ஆதித்த பிரகாசத்தைப்போலக் கருத்தாவி னுடைய திருவருளும் சித்திக்கு அறிவும் சடத்துப் பிரேரகமாய் இருக்கிறதும் இத்தன்மை என்றும் இறைவனின் அருள்பற்றித் திருவருட்பயன் இயம்புகிறது.[85]

இறைவன்உயிர்களை இடர்க்கடலினின் றெடுத்துச் சிறந்த அருள் புரிதலே அவன் தொழிற் புரிதற்குரிய காரணமாகும். அதாவது அருளல் உயிர்களுக்குப் பிறவியறுத்துப் பேரின்பம் நல்குதலே யாகும். இவ்வைந்தொழிலும் இறைவன் திருவருட் செயலே. எல்லாம் அருளே யொழியப் பிறிதில்லை எனச் சிவப்பிரகாசம் எடுத்துரைக்கின்றது.[86]

## இறைவனது தடத்த நிலைகள்

இறைவன் தன் சக்தியோடு உயிர்களின்பொருட்டுப் படைத்தல் முதலிய தொழில்களைச் செய்து கருத்தாவாய் நிற்றல் தடத்த நிலையாகும். **சிவன், சக்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், மால், அயன்** என்னும் ஒன்பது வடிவ வேறுபாடுகளுடன் ஒன்றாயுள்ள இறைவனே ஐந்தொழில்களையும் செய்வான்.

இறைவன் ஒன்றானவனாக இருந்தாலும் ஒன்பது வடிவ வேறுபாட்டினைக் கொண்டுள்ளான். சிவன் என்ற சொல் முழுமுதற் கடவுளைக் குறிக்கப் பயன்பட்டபோது எங்கும் நிறைந்திலங்கும் கடவுளின் ஆற்றல் சக்தி எனப்பட்டது. கடவுள் தன் ஆற்றலினால் எல்லாம் செய்வது உயிர்கள்மேல் வைத்த அருள்காரணமாம் என்ற கொள்கை எழுந்தபோது **சிவசக்தி** அருளெனவும் தாயெனவும் வழங்கப்பட்டது.[87] **சிவம்** என்றால் அன்பு, இன்பம் எனப் பொருள்படும்.[88] சிவத்திற்குமேல் இல்லை **தெய்வம்; சிவஞான சித்திக்குமேல் இல்லை நூல்'** என்பது முதுமொழி. பவன், பசுபதி, மஹாதேவன், ஈசானன், மங்கல இயல்பு எனவும், உருத்திரன், சர்வன், உக்ரன் (பீமன்), அசனிஅழிக்கும் இயல்பு எனவும் சிவனின் பல்வேறு உருவங்களைப்பற்றிச் சைவ சித்தாந்த அடிப்படை இயம்பும்.[89] உருத்திரன், சிவன் ஆகிய இரு சொற்களுக்கும் பாவம் அல்லது துன்பத்தைத் துடைப்பவர் என்பதே பொருளாகிறது.[90]

சிவம் என்னும் சொல்லுக்குப் '**பெருஞ்சுகம்**' என்பது பொருள் எனக் கிருத்துவ நூலாகிய **தேம்பாவணி**யிலும் கூறப்படுகின்றது. இன்னும் 'மங்கலம்', 'நன்மை' எனவும் பொருள் உண்டு.[91]

மேற்குறிப்பிட்டபடி சிவன் பல்வேறு பெயர்களில் வழங்கப்படுகிறான் என்றும், நன்மையும் மங்கலமும் பொருந்திய செயல்களையே அவன் மேற்கொண்டுள்ளான் என்றும், சிவனே முழுமுதற்கடவுள் என்பதனையும் அறியலாம்.

## சக்தி

சிவன் தனது எந்தக் கிரியையும் சக்தியில்லாமல் செய்யமாட்டான். இருந்தும் அஃது ஒரு வெளிச்சக்தி அன்று. அஃது அவனது சொந்த சக்தியே. இறைவன் இச்சா சக்தியைப் பயன்படுத்தும்போது ஆன்மாக்களை விடுதலை செய்யும் எண்ணங்கொண்டு அவர்கள், தமது திருவடியை அடையவேண்டும் என விழைகின்றான். ஞானசக்தியின்மூலம் அவர்களுடைய நல்ல, தீய செயல்களை ஆய்ந்து அதற்கேற்பத் தன் கருணையை அளிக்கின்றான். கிரியா சக்தி படைப்பிற்குக் கொண்டு செல்லும். சிவம் சக்தியைப் பெற்றும், சக்தி சிவனைப் பெற்றும் இருவரும் கலந்து உலகுமுயிருமாகிய எல்லாவற்றையும் பெற்று விளங்கும் என்று சிவஞானசித்தியார் குறிப்பிடுகிறது.[92]

சக்திக்கும் சிவத்துக்கும் உள்ள உறவைச் சூரியனுக்கும் அவனின் வேறாகாத ஒளிக்கிரணங்களுக்குமுள்ள உறவுடனே ஒப்பிடுவர். ஒளிக்கிரணங்கள் சூரியன் இன்றித் தோன்றா; இருப்பினும் அவை சூரியனாகமாட்டா. சிவனும் அருளின்றித் தோன்றமாட்டான்; அருளும் சிவனையன்றித் தோன்றாது.[93]

## இறைவனின் மூவகைத் திருமேனிகள்

இறைவன் வடிவங்கள் **உருவம், அருவம், அருவுருவம்** என்று மூன்று வகைப்படும். இறைவனுக்கு உருவம் உண்டு என்றும் இல்லையென்றும் வாதிடுவர். இறைவன் உருவத் திருமேனி கொள்ளுதற்குக் காரணத்தைப்பற்றிச் சிவஞான சித்தியார் பின்வருமாறு குறிப்பிடுகிறது:

"போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரித லோரார்
யோகியா யோக முத்தி யுதவுத லதுவு மோரார்
வேதியா னாற்போற் செய்த வினையினை வீட்ட லோரா
ரூகியா மூட ரால்லா மும்பரி னொருவ னென்பர்"[94]

இங்ஙனம் போக வடிவாகவும், யோக வடிவாகவும், கோர வடிவாகவும் இறைவனிருந்து உயிர்களைக் காக்கின்றான். இறைவனின் மேனி அருள்திருமேனி ஆகும். அவனது உறுப்பு களெல்லாம் அருள் மயமே. செயல்களும் குணங்களும் அருளே. துணை உறுப்புகள் முதலியவெல்லாம் அருளேயாகும்.

ஐந்தெழுத்துமே இறைவனின் திருமேனியாகும் என்பதை உண்மை விளக்கம் உணர்த்துகின்றது.

" ஓங்கார மேநல்திரு வாசி உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறைசுடராம் - ஆங்காரம்
அற்றார் அறிவர் அணி அம்பலத்தான் ஆடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின்."[95]

இறைவன் உருவங்கொள்ளுதல் தன் பொருட்டன்றி உயிர்களின் பொருட்டே எனக் கூறியிருத்தலின் காரணம். அஃதாவது, எச்செயலையும் தான் உருவம் இன்றியே செய்யவல்லலனாயினும், உருவங்கொள்ளாவிடின், உயிர்கள் தன்னை அறியமாட்டா என்பது பற்றியே இறைவன் உருவம் கொள்கின்றான் என்று அறியலாம்.

அருவம் என்பது ஆண் பெண் என்றோ, தேவர் மக்கள் விலங் கென்றோ வகைப்படுத்த முடியாத நிலையில் இருப்பதாகும்.

இறைவன் உலகை இயக்குவதற்குப் பல வடிவங்களைக் கொள்கிறான். அவ்வடிவங்களுள் முக்கியமானவை ஒன்பது. அவற்றுள் **சிவம், சக்தி, நாதம், விந்து** ஆகிய முதல் நான்கும் அருவமாகும். நடுவினதாகிய **சதாசிவம்** காண்பதாயும் காண முடியாததாயும் அருவுருமாகும். **மகேசுவரன், உருத்திரன், விஷ்ணு, பிரமன்** ஆகிய இறுதி நான்கும் உருவமாகும். இவற்றுள் அருவுருவான சதாசிவத்தை **இலிங்க வடிவம்** எனக் கொள்ளலாம்.

இலிங்கம் என்னுஞ் சொல்லுக்குக் **குறி** என்பது பொருள். உருவப்பொருள் அல்லாத சிவப்பொருளைக் குறிப்பது இலிங்கம் எனப்பட்டது. சிவபெருமானின் திருமேனிக்கு இலிங்கம் என்று பெயர். ஆன்மாக்களும் உலகங்களும் தோன்றுதற்கும் பின் ஒடுங்கு தற்கும் இடமானது இலிங்கத் திருமேனியாகும்.[96] சிந்துசமவெளி நாகரிகத்தில் சிவலிங்க வழிபாடு பெருவழக்கத்தில் இருந்தது என்பதை அங்குக் கண்டெடுக்கப்பட்ட சிவலிங்கங்களால் நன்கு அறிந்துகொள்ளலாம் என்று **சுப்பிரமணிய பிள்ளை** எடுத்துரைக் கின்றார்.[97] இவ்வாறு இமயம்முதல் குமரிவரையில் கோயில்களில் சிவலிங்கங்கள் காணப்படுகின்றன. இதனால், சைவ சமயம் இந்தியா வெங்கும் பரவியிருந்ததை உணரலாம்.

## சொரூபலட்சணம்

எந்தப் பொருளின் சார்பினாலும் மாறுபடாமல், என்றும் ஒரே பெற்றியதாய் இருக்கும் நிலைக்குச் **சொரூப லட்சணம்** என்று பெயர். இந்நிலையில் இறைவனுக்கு யாதொரு வடிவமும், யாதொரு பெயரும், யாதொரு தொழிலும் இல்லை என்பது விளங்கும். இந்நிலையையுடைய இறைவனே சொரூ நிலையுடையவனாவான்.

## சச்சிதானந்த நிலை

**'சத்'** என்பது உடல்; **'சித்'** என்பது உயிர். இவையிரண்டும் இணைந்து பிரியாத நிலையே ஆனந்தம். இதனையே ஞானிகள் உயிரெழுத்து, மெய்யெழுத்து என்கின்றனர். மெய்யெழுத்து சடமாகிய உடல்; உயிரெழுத்து மெய்யெழுத்தில் அணைந்ததும் ஒலி யுண்டாகிறது. அதுவே நாத விந்தாகும்.[98] இங்ஙனம், **சத் - சித் - ஆனந்தம்** என்பது இறைவன் உடல், அறிவு இவற்றில் கலந்து இன்பத்தில் திளைக்கச் செய்பவன் என்று பொருள்படும்.

## பரப்பிரமம்

பரப்பிரமம் தானே எல்லாவற்றையும் அறியுந்தன்மையுடையது.. அதனால், பரப்பிரமம் ஆன்மாவாகாதென்க. சிருஷ்டிக்கு வரு முன்னும், லயம் அடையும்போதும் இந்த ஆன்மக் கருக்கள் எந்த ஆதாரத்தில் அடங்குகின்றனவோ, அதைப் பரப்பிரமம், சிவம், கடவுள் என்ற பெயர்களால் அழைக்கின்றனர்.[99] எண் குணங்களை யுடையவன் இறைவனாதலால் அவனே எல்லாப் பொருளிலும் பெரும்பொருளாதல் தெளியப்படுகின்றது. பெரும்பொருள் என்பதை உபநிடதங்கள், பரப்பிரமம் எனக் கூறுகின்றன.[100] ஆதலால், இறைவன் எங்கும், என்றும், எவ்வுயிரும், எல்லாமாகவும் திகழ்கின்றான்; நீக்கமற நிறைந்து விளங்குகிறான் என்பதைத் தெள்ளிதின் உணரலாம்.

## பசு (உயிர்)

பசு என்பது உயிர், சிற்றுயிர், ஆன்மா, ஜீவன் எனப் பல சொற்களால் வழங்கப்படுகின்றது. ஆணவம், மாயை, கன்மங்களாகிய பாச சம்பந்தமுடையது எதுவோ அதுவே பசு; அதுவே ஆன்மா. பசுக் களாகிய உயிர்கள் அநாதியாக உள்ளவை. உயிர் எந்தெந்த உடலை எடுக்கிறதோ அந்தந்தப் பெயரால் '**மனிதன்**', '**விலங்கு**','**பறவை**' என்று கூறப்படுகின்றது. ஆன்மா இயல்பாக முற்றறிவு உடைய பொருளாகாது. ஞானம், கிரியை ஆகிய இவற்றைத் தனக்கென இயல்பாயுடையது. அதனால் ஆன்மாவானது அறிதல், அசைதலைப் பெறும்.[101] பசுவின் இலக்கணத்தினைச் சிவஞானபோதம் தெள்ளிய தாக எடுத்துரைக்கின்றது.

" **யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்**
**சத்தே யறியா(து); அசத்தில(து) அறியாது**
**இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா**"[102]

'பசு' என்பதற்குப் பாசத்தாற் கட்டுண்டு கிடப்பது என்பதுதான் பொருள். உயிர், தான் எடுத்த உடம்பின் அளவாய், **செழுகம்** (அட்டை என்னும் நீர்ப்பூச்சி) போல விரிந்தும் சுருங்கியும் விளங்கும் என்பர். அஃது உண்மையாயின், பெரிய உடம்பையுடைய உயிர் கட்கு அறிவு பெரிதாயும், சிறிய உடம்புடைய உயிர்கட்கு அறிவு சிறியதாயும் இருத்தல்வேண்டும்.[103]

கண், படிகக்கல், ஆகாசம் முதலியவை இருளிலே தாமும் மறைந்தும் ஒளியிலே தாமும் புலப்பட்டும் விளங்குகின்றன. ஆன்மாவும் இத்தகைய பொருளே. ஆணவத்தைச் சார்ந்தால் ஆணவ மயமாயும், திருவருளைச் சார்ந்தால் திருவருள்மயமாயும் நிற்பது ஆன்மவியல்பு. உடலுக்கு உயிர் இயக்கியாகவுள்ளது. உயிரின் இயக்கி இறைவராவார். உடல் உயிரை உணராமை போன்றே, உயிர் இறையை அறியாமல் இருத்தலுமாகும்.[104]

உயிர் என்பது அறிவுடையது; ஆயினும், இறைவனது அறிவு போன்று பேரறிவுடையதாகாது; அது சிற்றறிவுடையதாய் உள்ள பொருள்; இதுவே சைவ சித்தாந்தம் கூறும் உயிரைப்பற்றிய சுருக்க மான முடிவாகும்.

உயிர்கள் படைக்கப்படாதவை. ஒரு பிறப்பில் விலங்கு, பறவை முதலியனவாய் இருந்த உயிர்கள், அடுத்த பிறப்பில் மக்களாகவோ, தேவர்களாகவோ பிறக்கலாம். அவ்வப்பொழுது அவை எடுத்துள்ள உடம்புபற்றியேயன்றி, அவ்வுயிரைப்பற்றியன்று. யாதோர் உடம்பும் இல்லாத உயிருக்கு யாதேனும் ஓர் உடம்பை இறைவன் படைத்துக் கொடுத்து அவ்வுடம்பையும், அவ்வுயிரையும் ஒன்று கூடியிருக்கச் செய்கின்றான். எனவே, உடம்பை இறைவன் படைப்பதல்லது, உயிர்களை இறைவன் படைப்பதில்லை; உயிர் படைக்கப்படுவதும் அன்று எனச் சித்தாந்தத் தெளிவியல் விளக்கம் கூறுகிறது.[105]

## உயிர்பற்றிய வாத மறுப்பு

### 1. உயிர் சூனியம் ஆகாமை

பௌத்த சமயத்தவர் உயிர் ஒரு சூனியப் பொருளே. அஃதாவது, உள்ளது இல்லது என்ற இரண்டனுள் ஒன்றிலும் சேராத பொருள் என்பர். இஃது இன்னது; இஃது இன்னது என்று திடமாக ஆராய்ந்து முடிவு செய்கின்ற ஒன்றில்லை என்று கூறுவது. என் தாய் மலடி என்றுகூறுகின்றவன் கூற்றோடு ஒப்பதாய் நகை விளைக்கும். ஆகவே, உயிர் சூனியமன்று; உள்ளது.[106]

### 2. பருவுடம்பு உயிராகாமை

உலகாயதர், மக்கள்முதல் தாவரம் ஈறாகக் காணப்படுகின்ற பிறவிகள் பலவற்றிலும் அவற்றினது அறிவு கண்ணிற்குக் காணப்

படுகின்ற பருவுடம்பிற்கு வேறாய்க் காணப்படாமையால், பருவுடம்பே உயிர் அல்லது ஆன்மாவாகும் என்பர். ஒவ்வொரு வனும் தனது உடம்பிற்கு வேறாய்த் தான் இருக்கின்றான் என்பது புலனாவதால் தான் அல்லது யான் எனப்படுகின்ற உயிர் காணப்படு கின்ற பருவுடம்பின் வேறேயாகும்.[107]

## ஐம்பொறி உயிராகாமை

உலகாயதருள் ஒரு சாரார், உலகில் ஐம்புலன்களையும் அறிவன ஐம்பொறிகளே (பஞ்சேந்திரியங்களே) ஆதலின், அவற்றை உயிர் என்பர். ஐம்பொறிகளே உயிர் எனில், ஒவ்வொரு பொறியும் ஒவ்வொரு புலனை அறிவதன்றி, மற்றையப் புலன்களை அறியாமை யால், ஐம்பொறிகளையுங்கொண்டு ஐம்புலன்களையும் அறிகின்ற தாகிய உயிர், அவற்றிற்கு வேறானதேயாகும்.[108]

## நுண்ணுடம்பு உயிராகாமை

உலகாயதருள் மற்றொரு சாரார், மனம் முதலிய உட்கருவி களையுடைய நுண்ணுடம்பே ஐம்பொறிகள் வழியாகப் புலன்களை அறிவதால் அதுவே ஆன்மாவாகும் என்பர். நுண்ணுடம்பு கனவு நிலையில் செயற்பட்டு நிற்பது என்பது அனைவர்க்கும் உடன்பாடு. அதனால் மெய்கண்டார், நுண்ணுடம்பே உயிராயின், நாம் காண்கின்ற கனவு யாவும் விழித்தபின் முன்பு கண்டதுபோலவே, தெளிவுற விளங்கவேண்டும்; கனவு கண்டதையே அடியோடு மறந்தும் விடுகின்றோம். ஆகவே, நுண்ணுடம்பு ஆன்மாவன்று என்கிறார்.[109]

## பிராணன் - ஆன்மா இல்லை

எல்லாவற்றையும் கண்டறிதற்கு இடமாகிய இவ்வுடம்பின் கண்ணே, அவ்வாறு கண்டறிதற்குக் கருவியாய் உள்ளவை செயற் படாமல் ஒடுங்கிப் போகவும், அதனால், உடம்பிற்குப் புலன் நிகழ்ச்சியும் இயக்கமும் இல்லையாகவும் பிராண வாயு ஒழிவின்றி இயங்குதலால், எல்லாவற்றையும் கண்டறிதற்கு உரிய ஆன்மா அந்தப் பிராணவாயுவுக்கு வேறாய் உண்டு என்ற கருத்தைச் சிவஞானபோதம் எடுத்துரைக்கின்றது.[110]

## பிரம்மத்திற்கு வேறானது ஆன்மா

இயல்பாக முற்றுணர்பு உடைய பிரம்மமே ஆன்மா எனக் கொள்ளலாம், என்னும் வழக்குரையும் மறுக்கப்படுகிறது. எவ்வாறெனின், பிரமம் மாறுதலில்லாது, தானாக உணரும் உணர் வுடையது. ஜீவான்மாவோ தானாக உணராது, உணர்த்த உணர்வது. ஆன்மாக்கள் உணர்த்த உணர்வன என்பதைச் சித்தியார் செய்யுள் தெளிவுபடுத்துகின்றது.[111]

ஆகவே, மேற்குறிப்பிட்ட எவையும் ஆன்மா அன்று. இவை அனைத்திற்கும் வேறாய் இருந்த உடலின்கண் உயிர் எனப்படுவது ஒன்று உண்டு. உலகைக் கொண்டு இறைவன் ஒருவன் உளன் என்று சாதிப்பதுபோல, உடலைக்கொண்டு ஆன்மா ஒன்று உளது என்பது சாதிக்கப்பட்டது.

இங்ஙனம் ஆன்மாவைப்பற்றிப் பிறர் கூறும் வழக்குரைகளை மறுத்து ஆன்மாவின் தனிச்சிறப்பைச் சித்தாந்தம் எடுத்துரைக்கின்றது. சத்தையும் அசத்தையும் சார்ந்து, அறிந்து, நுகர்வது ஆன்மாவே யாகும். அதனின் நீங்கிச் சத்தைச் சார்ந்து சத்தாயும் நிற்கும் இயல்புபற்றி ஆன்மா சதசத்து எனப்படும்.[112] **சித்து** என்பது அறிவுடைய பொருள். **அசித்து** என்பது அறிவில்லாத பொருள். அதாவது சடம் ‘சத்து’ என்பதற்குத், **‘தோன்றியும் நின்றும் அழிந்தும் வருதலாகிய மாற்றம் இல்லாதது’** என்பதே சைவ சித்தாந்தத்தில் கொள்ளப்படும் பொருள். நிலை மாற்றத்தை உடையனவாதலின் அவை அசத்துகளாம்.

சிவஞானபோதம் ஆன்மா சத்தும், அசத்தும் ஆகிய வகையில் சேராமல் உணர்த்த உணர்ந்துகொள்ளும் இயல்புடையது. ஆதலின், சிவசத்து என்று குறிப்பிடுகிறது.[113]

இவ்வாறு ஆன்மா சத்தாக இருந்தாலும், அசத்தாக இருந்தாலும், அதற்கேற்பக் கடவுளுக்கும் ஆணவத்துக்கும் இடையே ஆன்மா ஒரு சமயம் இந்தப் பக்கமும் மறுசமயம் அந்தப் பக்கமுமாய் இழுக்கப் படுகிறது. உயிர்கள் தம்மைச் சார்கின்றவற்றை ஒத்து நிற்கும் தன்மையுடையன. இறைவனைச் சாரும்போது அவனைப் போன்றும், தளைகளைச் சார்ந்து நிற்கும்பொழுது அவையே போன்றும் அவை விளங்கும். இங்ஙனம் இறைவனோடும் தளைகளோடும் சார்ந்துள்ள உயிர்கள் தளைகளோடுள்ள சார்பை நீக்கி இறைவனில் அழுந்துதலே அவற்றிற்குக் கிட்டும் பெரும் பேறாகும்.

## ஆன்மாவின் மூன்று நிலைகள்

1. கேவலாவத்தை, 2. சகலாவத்தை, 3. சுத்தநிலை என்பன.

**கேவலாவத்தை:** இந்நிலையில் ஆன்மா ஆணவத்தால் மறைக்கப் பட்டுச் செயலற்றுக் கிடக்கின்றது. இந்நிலையில் இஃது அசத்தாகும்.

**சகலாவத்தை;** கருணைக்கடலாகிய இறைவன் ஆன்மாவின்மீது கொண்ட பேரிரக்கத்தால், அது ஆணவ மலத்தின் வலியைக் கெடுப்பதற்குக் கருவிகளான **தனு, கரண,** புவன, **போகங்களை** அளிக்க, ஆன்மா இயங்கத் தொடங்கும் நிலை.

**சுத்தநிலை:** ஆன்மா தெய்விகப் பேரருளிலே மூழ்கிப்போய் நிற்கையில் அது சத்தாகிவிடுகின்றது. இனி அதற்குப் பிறப்போ, வினைகளோ இல்லை. அது பேரானந்தத்தினை அனுபவிக்கத் தொடங்குகிறது. சிவஞானசித்தியார் கேவலாவத்தைப்பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகிறது:

"அறிவிலன் அமூர்த்தன் நித்தன் அராகாதி குணங்களோடும்
செறிவிலன் கலாதியோடும் சேர்விலன் செயல்களில்லான்
குறியிலன் கருத்தா வல்லன் போகத்திற் கொள்கை யில்லான்
பிறவிலன் மலத்தினோடும் வியாபி கேவலத்தில் ஆன்மா"[114]

கேவல நிலையில் உயிரானது, ஆணவ மலத்தோடு மாத்திரங் கூடி நின்று தோற்றக்கேடுகள் இல்லாது அறிவு, இச்சை, செயல்கள் ஆகியவை இன்றிப் போகத்தில் முழுவதும் மூழ்கி இருப்பதாகும். **கேவலம்** என்பதற்குத் **'தனிமை'** என்பது பொருளாகும். ஆணவ மலத்தினையொழித்தற்பொருட்டு, இறைவனருளால் கலை முதலிய மாயா காரியங்கள் உயிரைப் பொருந்தும். அதனால் அறிவு விளங்கும் என்று சிவப்பிரகாசம் உணர்த்துகின்றது.[115]

### சுத்தநிலை

ஆணவமலம் பரிபாகம் உற்றபொழுது இறைவன் தீக்கையால் மும்மலங்களையும் அறுத்து, ஞானத்தைக் கொடுத்துத் தன்மயமாக ஆக்கும் நிலை சுத்தாவத்தையாகும். இதனையே,

"இருவினைச் செயல்க ளொப்பி னீசன்றன் சக்தி தோயக்
குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத்
திரிமல மறுத்துப் பண்டைச் சிற்றறி வொழிந்து ஞானம்
பெருகிநா யகன் றன்பாதம் பெறுவது சுத்த மாமே"[116]

எனச் சிவஞானசித்தியார் குறிப்பிடுகின்றது.

## உயிர்களின் அவத்தைகள்

உயிர்கள் உடம்பை எடுத்து வாழும்போது **சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்** என்னும் ஐந்து நிலைகளை உடையனவாய் இருக்கும். இந்நிலைகள் **காரிய அவத்தை** எனப்படும்.

அவத்தைகளையும் அவை தோன்றும் இடம், கருவி பற்றியும் சைவ சித்தாந்தம் பின்வருமாறு எடுத்துரைக்கின்றது.

| அவத்தை | இடம் | கருவி |
|---|---|---|
| சாக்கிரம் | புருவநடு | முப்பத்தைந்து |
| சொப்பனம் | கழுத்து | இருபத்தைந்து |
| சுழுத்தி | இருதயம் | மூன்று |
| துரியம் | நாபி | இரண்டு |
| துரியாதீதம் | மூலாதாரம் | ஒன்று |

## உயிர்கள் எண்ணற்றவை

சிவாக்கிர யோகியர் இயற்றிய '**சிவநெறிப் பிரகாசம்**' என்னும் நூலில் உயிர்கள் பல என்பதற்குச் சான்றுகள் கூறப்படுகின்றன.

உயிர்களின் பன்மையானது உரையளவை, வழி அளவைகளால் பெறப்படும் என்கிறார் சிவாக்கிர யோகியார்.

"ஆதலினால் உலகினுக்கும் சிவனுக்கும் வேறாய்
அநேகம் உயிர் உளதென்றே அனுமானத்தாலும்
ஓதியிடும் ஆகமத்தினாலும் உயிர்சித்தம்"[117]

உயிர்கள் தாம் செய்யும் நல்வினை, தீவினைக்கேற்பப் பிறக்கும். அஃதாவது, நல்வினைக்கேற்பச் சுவர்க்கத்தையும் தீவினைக்கேற்ப நரகத்தையும் தன் உடலைவிட்டுச் சென்றடையும். இந்நிகழ்ச்சி சுழல்குழவன் திகிரியைப் போன்று நடந்துகொண்டிருக்கும்.

வீடுபேறு அடைவதற்கு மக்கட்பிறவியே ஏற்றது என்பதைச் சிவஞான சித்தியார் எடுத்துரைக்கிறது.

"மானிடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயத்து
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன் பணிக்காக அன்றோ
வானிடத் தவரும் மண்மேல் வந்து அரன்தனை அர்ச்சிப்பார்
ஊனெடுத்துழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ"[118]

## மூவகை உயிர்கள்

விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என உயிர்கள் மூன்று திறன்களை உடையது.

## விஞ்ஞானகலர்

நம்மை மயக்குவதாகிய மாயையாலோ, அதனாலே தன்னிச்சைச் செயலின்றி நிகழும் கன்மங்களாலோ பந்திக்கப்படாதவர்.

## பிரளயாகலர்

மாயையினின்று நீங்கினாலும் கன்மத் தளையினாலே பிணிக்கப்பட்டிருப்போர்.

## சகலர்

கலையினின்றும் நீங்காதவராதலாலே அவர்கள் தம்மைப் பிடித்துள்ளது என்ற உண்மையையும் உணராது, மும்மலங்களாலும் பிணிக்கப்பட்டுப் பிறவியிலே அழுந்திக் கொண்டிருப்பர். மூன்று உயிர்களின் திறன்களைச் சிவஞானபோதம் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

"மெய்ஞ்ஞானம் தானே விளையும்விஞ் ஞானகலர்க்கு
அஞ்ஞான அச்சகலர்க்(கு) அக்குருவாய் - மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்தும் அன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்தும் தான்குருவாய் முன்."[119]

விஞ்ஞானகலர் முதலிய மூவர்க்கும் இறைவன் தன்மை, முன்னிலை, படர்க்கை நிலையில் நின்று ஞானத்தை உணர்த்துவன் என்பதாகும்.

இவ்வாறு உயிர் தனது முன்னேற்றப்பாதையில் பத்து நிலைகளைக் கடக்கிறது. அவை **தசகாரியம்** என வழங்கப்பெறும். தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆத்ம ரூபம், ஆத்ம தரிசனம், ஆத்ம சுத்தி, சிவ ரூபம், சிவ தரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பதாகும். இந்நிலையில் இருளையும் மருளையும் கடந்து அருளில் உயிர்கள் நிலைபெற்று விளங்கும் என்பதைத் தெள்ளிதின் உணரலாம்.

## பாசம்

ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மூன்றும் உயிர்களைப் பந்தித்ததால் **பாசம்** என்று பெயர் பெற்றது. **ஆணவம்** என்பது உயிர்களை அறியாமையில் அழுத்தி நிற்பது. **மாயை** என்பது தனு கரண புவன போகங்களாய் அமைவது. **கன்மம்** என்பது உயிர்களின் நல்வினை தீவினையாகும்.

பாசம், **தளை** என்ற பெயரால் குறிக்கப்படுதலால் இஃது உயிர்களைச் செயற்பட வொட்டாது அடக்கி வைத்திருக்கும் என்பது தெரிவாகும். பாசத்தின் செயலாகிய தடுத்தல் தொழிலையே செய்வதால் இதற்குத் '**தடை**' என்று பெயர் வழங்கலாயிற்று என முப்பொருள் இயல்பு குறிப்பிடுகின்றது.[120] மும்மலமும் அநாதியாகவே நெல்லில் உமிபோலவும், செம்பிற் களிம்பு போலவும் ஆன்மாவைப் பற்றிக்கொண்டு அதன் சிவ சொரூபமாகுந் தன்மையைப் பாசம் மறைத்துக் கொண்டிருக்கிறது என்பதைச் சிவஞானபோதம் எடுத்துரைக்கிறது.[121]

பாசம், என்றும் எல்லா உலகங்களிலும் உள்ள உயிரினை அடக்கி ஆளும் வலிமை உடையது. அந்நிலையில் பாசத்தை ஒரு கொடுங்கோலரசனுக்கு ஒப்பிடலாம். இக் கொடுமையை உணர்பவர் இறைவனேயாவர்.

## ஆணவம்

ஆணவம் உயிர்களுக்கு அறியாமையைத் தரும் பொருள், மாயை கன்மங்கட்கு வேறான ஒன்றே என்பது நன்கு பெறப்படும். அதுவே ஆணவ மலமாகும். '**ஆணவம்**' என்பதற்கு அணுத் தன்மையைச் செய்வது என்பது பொருள். எனவே, இயற்கையில் விரிவுடையதாகிய உயிரின் அறிவை மிகச் சுருங்கியதாகச் செய்வது. அது '**மலம்**' என்று அறியப்படும்.[122]

ஆணவத்தின் இயல்புபற்றித் திருவருட்பயன் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

"ஒருபொருளுங் காட்டா திருள்உருவங் காட்டும்
இருபொருளுங் காட்டா திது."[123]

இருள், பிற பொருள்களை மறைத்துத் தன்னைக் காட்டுவதால் அதனிடத்துச் செல்வோர் பாதுகாப்பிற்காகவும், அங்குள்ள பொருளை அறிதற்காகவும் விளக்கைக்கொண்டு செல்லல் கூடும். ஆனால், இருளே இருக்கின்றது எனத் தெரியாத நிலையிலே செல்வோர் ஆபத்துக்கு உள்ளாக நேரிடும். ஆணவம் தன்னையும் புலப்படுத்தாமையால் அதன்வசப்படும் ஆன்மாக்கள் அறியாமையிலே கிடந்து உழல்வர்.

கோட்டானுடைய கண்ணுக்கு ஆதித்தப் பிரகாசமும் அந்தகாரமாய் இருக்கும். அதுபோல, நிலைபெற்ற சிவஞானத்தை ஆன்மாக்கள் ஆணவமலத்தால் காணாமல் இருக்கிறது என ஆணவத்தின் இயல்பு குறிப்பிடப்படுகிறது.[124] 'அறியாமையை அஞ்ஞானத்தைச் செய்வதே ஆணவத்தின் சொரூபம் அல்லது உண்மை இயல்பு. அதனால், இஃது ஆன்மாக்களின் அறிவு, இச்சை, செயல் என்னும் மூன்றினையும் சிறிதும் நிகழவொட்டாது தடுத்து, ஆன்மா என்பதொன்று உண்டு என்பதே தோன்றாதவாறு அவற்றை மறைத்துத் தானேயாய் நிற்கும்' என்று **அருணைவடிவேல் முதலியார்** விளக்கம் கூறுவர்.[125] அடிப்படைக் குற்றங்களைக் கொண்டிருப்பதால் **'மூலமலம்'** எனப்படுகின்ற ஆணவ மலம், உயிருக்கு இயற்கைக் குற்றமாதல் பற்றிச் **'சகச மலம்'** எனப்படுகின்றது. சகசம் உடன் தோன்றியது இயற்கை. மலம் - அழுக்கு என்றும் பெயர் பெற்றது. உயிர்களுக்குச் செம்பில் களிம்புபோல இயற்கையில் ஓர் அழுக்கு உள்ளது என்பது **'சகச மலம்'** என்னும் பெயராலே பெறப்படுகின்றது.[126]

மலங்கள் திரோதாயி, மாயை, கன்மம், புவனம், போகம் என ஐந்து என்பதைச் சிவப்பிரகாசம் குறிப்பிடுகிறது.[127] **கன்ம மலம்** என்பது உடம்பிற்கேதுவாய்ப் பல்வகை நுகர்ச்சிகளைச் சார்ந்துள்ளதாய், படைப்புக் காலத்தில் உயிர்தோறும் பற்றி நிற்கும். உயிர்கள்தோறும் பற்றி நின்று, மனமொழி மெய்களாலியற்றப்படும் செயல்வடிவாய், புத்தி தத்துவத்தைச் சார்ந்தும், இன்பமும் துன்பமும் தோன்றுதற் கேதுவாய் நன்மை தீமையாய் ஒடுங்குங்காலத்தே மாயையிற் பொருந்திக் கிடைப்பதாகும் எனச் சிவப்பிரகாசம் கூறுகின்றது.[128]

## மாயை

உலகின் அடிப்படை மாயை. மாயை என்னும் சொல் உலகம் தோன்றுவதற்கும் அது மீண்டும் ஒடுங்குவதற்கும் அடிப்படையான தத்துவத்தை விளக்கும். மா என்றால் ஒடுங்குதல்; யா என்றால் வருதல் என்று சொற்பொருள் கொள்ளலாம்.[129]

சைவ சித்தாந்தமோ அஃது உண்மையானது; வெளித் தோன்றும் தன்மை உடையது என்று மாயையை அறுதியிட்டுக் கூறும். ஆன்மாவிற்கு இயல்பாக உள்ள அறிதலும், உணர்தலுமாகிய தன்மைகளை அது பயன்படுத்த மாயையே உறுதுணையாகின்றது. அதற்கான தனு, கரண, புவன, போகங்களை அளிப்பதும் மாயையே யாகும்.

## மாயையின் குணங்கள்

அஞ்ஞானத்தை உண்டுபண்ணுதலும், பொய் சொல்லுதலும், மயங்கி வருதலும், காம ஆசைப்படுதலும், ஆசை உண்டாக அதனை இல்லையாக ஒழித்தலும், மாச்சரியம் வைத்தலும், பயப்படுதலும் ஆகிய குணங்கள் மாயைக்கு உண்டு என்று சைவ சித்தாந்த வினாவிடை இயம்புகிறது.[130]

மாயையைச் சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை என்று மும்மாயையாகப் பிரிக்கலாம். **சுத்தமாயை** என்பது ஆணவத் தோடும் கன்மத்தோடும் கலந்து தூயதாய் நிற்கும் பகுதி. **அசுத்தமாயையாவது** ஆணவத்தோடும் கன்மத்தோடும் கலந்து நிற்கும் பகுதி. **பிரகிருதிமாயை** என்பது அசுத்தமாயையினின்றும் தோன்றும் '**கலை**' என்னும் தத்துவத்தின் காரியமாய் நிற்கும் எனலாம். இம்மூன்று மாயைகளைத்தான் சிவதத்துவம், வித்தியா தத்துவம், ஆன்ம தத்துவம் என்று பிரிப்பர்.

## சுத்தமாயை

இதனைக் **குடிலை, விந்து** எனவும் வழங்குவர். சுத்தமாயை தோன்றுவதுபற்றிக் குறிப்பிடும்போது, முதல் நாதம் தோன்றும். அதில் விந்து தோன்றும். பின் **சாதாக்கியம், ஈசுவரம், சுத்தவித்தை** மூன்றும் ஒன்றிலிருந்தொன்றாகத் தோன்றும். இவ்வைந்தும் சிவ தத்துவம், சுத்த தத்துவம், பிரேரக காண்டம் என்றும் பெயர் பெறும்.

ஆணவத்தின் ஆதிக்கத்தினின்றும் ஆன்மாவை ஓரளவு விடுவித்து ஆன்மா கன்மங்களைச் செய்ய வழிகோலுகின்றதாயினும், இதனை ஆன்மா முற்றாகச் சார்ந்திருத்தலாகாது. ஏனெனில், இதுவும் ஆன்மாவை உலக பந்தங்களில் அழுந்துவதேயாகும்.[131]

இருபத்து நான்கு ஆன்ம தத்துவத்தையும், ஏழு வித்தியா தத்துவத்தையும், ஐந்து சிவ தத்துவத்தையும் **தத்துவ விளக்கம்** குறிப்பிடுகிறது. இவற்றை **இராமலிங்க அடிகளார்** முறையே மலரோன் தத்துவம், மாலோன் தத்துவம், சுத்த தத்துவம் எனக் குறிப்பிடுகின்றார்.[132]

## சிவ தத்துவம்

சிவம், சக்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை எனச் சுத்த மாயையில் தோன்றும் தத்துவங்கள் ஐந்து. இவை ஐந்தும் ஐந்தொழில் செய்தற்கண் இறைவனுக்கு இடமாதல் பற்றிச் '**சிவ தத்துவம்**' என்றும் சொல்லப்படுகின்றன. மாயை பொதுவாகக் கூறப்படினும் சுத்தமாயை, அசுத்தமாயை எனப் பெயர் பெறும். இவை மல கர்மங்களோடு கலவாத மாயை இறைவன் திருவருள் நேராக இயங்குவதற்கு ஏற்றதாக உள்ளது.

## வித்தியா தத்துவம்

வித்தியா தத்துவங்கள் காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்பன. அசுத்த மாயையை இறைவன் நேரே தொழிற்படுத்தலாவது, '**அனந்தர்**' என்னும் வித்தியேசுரர் வாயிலாகக் காரியப்படுத்துவான். ஆதலின், இந்த ஏழும் **வித்தியா தத்துவம்** எனப் பெயர் பெற்றன.

## அசுத்த மாயை

சுத்த மாயையின் கீழடங்கி ஆணவ கன்ம மலங்களுடன் கலந்து சுத்தா சுத்த காரிய பிரபஞ்சத்துக்கு முதற் காரணமாயிருப்பது. இது **மோகினி** எனப்படும். இதில் காலமும், நியதியும், கலையும், கலையில் வித்தையும், இராகமும் தோன்றும். இவை பஞ்சகஞ்சுகமாகும். இவற்றோடு கூடிய ஆன்மா **பஞ்சகஞ்சுகன்** எனப்படும்.

இதற்கு உருவம் இல்லை. மந்தமானது அறிவற்றது. அதுவே, தன்னிடமிருந்து பல்வேறுபட்ட தன்மைகள் தோன்ற உடம்புகளையும், கருவிகளையும், உலகங்களையும், பொருள்களையும் தோற்றுவிக்கின்றது; ஆன்மாக்களை மயக்கத்தில் ஆழ்த்துகின்றது.

சாணம், உவர்மண், தேற்றாங்கொட்டை முதலிய பொருள் அழுக்கினைப் போக்குவதுபோல, அசுத்த மாயையானது, ஆன்மாவுடன் சேர்ந்திருந்து அதன் அழுக்குகள் போக உதவுகிறது.

"உருவாதிச் சதுர்விதமாய் ஒன்றென் றொவ்வா
உண்மையதாய் நித்தமாய் ஒன்றாய் என்றும்
அருவாகிக் கன்மமார் அணுக்கள் யார்க்கும்
ஆவாரமாய் அசித்தாய் அசலமாகி
விரிவாய தன்செயலின் வியாபியாய் எல்லாம்
விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவை ஒடுங்க
வருகாலம் உயிர்களெல்லாம் மருவிடமாய் மலமாய்
மன்னியிடும் அரனருளால் மாயைதானே" [133]

என வரும் பாடலால் இதுபற்றி அறியலாம்.

## ஆன்ம தத்துவம்

இதனைப் பிரகிருதி என்றும் கூறுவர். அது தத்துவம், ராஜஸம், தாமசம் என்ற மூன்று குணங்களை யுடையது. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பூதங்கள் ஐந்தும், சப்த, ஸ்பரிச, ரூப, ரதகந்தம் என்னும் புலன்கள் ஐந்தும், மெய், நா, கண், மூக்கு, செவி என்னும் பொறிகள் ஐந்தும், வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்னும் கன்மேந்திரங்கள் ஐந்தும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணம் நான்கும் ஆகிய இருபத்து நான்குமாகும்.

ஆன்ம தத்துவத்திலிருந்து புத்தி, மனம், அகங்காரம், சித்தம் என்னும் நான்கு உட்கருவிகள் (அந்தக்கரணங்கள்) தோன்றுகின்றன என்று கணக்கிடப்படுகிறது என அந்தக்கரணங்கள் பற்றிச் சிவஞானசித்தியார் குறிப்பிடுகிறது.[134]

மனமும், புத்தியும், அகங்காரமும் சித்தமும் ஆகக் கருவிகளாம் அந்தக்கரணங்கள். மனம் பற்றியதைப் புத்தி தீர்மானிக்கும். அகங்காரமும் தீர்மானத்தைப் பலமுறை விரும்பி எழுந்திருக்கும். சித்தம் அதனை நினையும் என அந்தக்கரணங்களின் செயல்களை உண்மை விளக்கம் எடுத்துரைக்கின்றது.[135]

## கன்மம்

உயிர்களை ஒட்டிச் செய்யப்பெறும் நற்கருமங்களினின்றும் கிடைக்கும் புண்ணியம் **பசுபுண்ணியம்** என்றும் கூறப்படும். எடுத்த பிறவிக்கு வித்தாக உள்ள வினைகளின் கூட்டம் பிராரப்த கன்மம் எனப்படும். இனி, எடுத்த பிறவியில் செய்யப்படுவதும், வினைக் கூட்டத்தோடு வந்துசேரக் கடவதுமாக உள்ள வினை **ஆகாமிய கன்மம்** எனப்படும்.

அறிந்து செய்யும் வினை '**புத்தி பூர்வம்**' என்றும், அறியாது செய்யும் வினை '**அபுத்தி பூர்வம்**' என்றும் சொல்லப்படும். பாசத்துள் ஒன்றாகச் சொல்லப்படும் வினை உடம்பால் மட்டும் ஆவதன்று. மனத்தின் நினைவாலும் ஆகும்; வாக்கின் சொல்லாலும் ஆகும். அதனால் மானதம், வாசிகம், காமிகம் என வினை மூன்று வகையாய் உண்டாவதாம்.[136]

இவ்வினைகள் திருமுறைகளில், '**தொல்வினை**' என்றும், '**மேல்வினை**' என்றும், '**பழவினை**' என்றும், மேலும் **கிடைவினை, நுகர்வினை, வருவினை** என்றும் சொல்லப்படுகிறது. மூல வினைக்கு மலமே காரணம் என்பதைப் பின்வரும் பாடல் எடுத்துரைக்கின்றது.

"தன்மமோ டதன்ம மாகித் தானிரு பயனுந் தந்து
நன்மைதீ மையினு மின்பத் துன்பினு நாடிக் காண
முன்னமே யான்மா வின்றன் மும்மலத் தொன்றதாகிக்
கன்மமு மூலங் காட்டிக் காமிய மலமாய் நிற்கும்." [137]

வினைகளின் செயல் குறித்து, பசு புண்ணியங்களைச் செய்து அதனால் வரும் இன்பத்தை நுகர்வோர், பசி வந்தபொழுது இவ்வுலக உணவை உண்டு மீளப் பசிக்கின்றவனோடு ஒப்பர். சிவ புண்ணியத்தைச் செய்வோர் அமிர்தத்தை உண்பவர்போலச் **சாலோகாதி** பதவிகட்குப் பின்பும் அவற்றால் இருவினையொப்பு, மலபரிபாகம், சத்தி நிபாதம் வரப்பெற்று ஞானத்தை அடைவர்[138] என அருணைவடிவேல் முதலியார் விளக்கம் கூறுகின்றார்.

## மனம்

மனமானது அன்பு, அருள், பொறுமை ஆகிய நல்வினைகளையும் அழுக்காறு, அவா, வெகுளி ஆகிய தீவினைகளையும் கொண்டது.

## வாக்கு

வாய்மை, பாராட்டு, இன்சொல், உறுதிமொழி ஆகிய நல்வினைகளையும் பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் ஆகிய தீவினைகளையும் கொண்டது.

## காயம்

நன்றி, ஈகை, இன்னாச்செய்யாமை, புலால் உண்ணாமை ஆகிய நல்வினைகளையும் களவு, கொலை, கள்ளுண்டல், புலால் உண்டல் ஆகிய தீய வினைகளையும் கொண்டது.

உயிர்களால் செய்யப்படும் வினை, பின் தம் பயனைத் தாமே செய்து உயிர்கட்குத் தரும் எனச் சமண சமயத்தாரும், மீமாஞ்சகரும் கூறுவர். வினைகள் சடமாகலின் அவை தாமே சென்று தம்மைச் செய்தவனை அறிந்து அடைதல் இயலாது. ஆதலின், இறைவனே அவற்றை அறிந்து அவற்றின் பயனை உயிர்கட்குக் கூட்டுவிப்பான். ஆதலின், அவன் ஆணைவழியே வினைகள் உயிர்களைச் சென்று அடைவனவாகும்.

சைவ சித்தாந்தம் ஞானேந்திரியங்களைப்பற்றி எடுத்துரைக்கின்றது. மலம் தோன்றிய பின்னர், முறையே ஒன்றன் பின் ஒன்றாகச் செவி, தோல், கண், நாக்கு, மூக்கு என்னும் ஞானேந்திரியம், அறிவுப்பொறி, பஞ்சேந்திரம் (அல்லது) ஐம்பொறி தோன்றும்.

வினைப்பொறிகளைப் (கன்மேந்திரியம்)பற்றி உண்மை விளக்கம் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

“வாக்குப்பாதம் பாணி மன்னு குதம்உபத்த
மாக்கருது நாளு மது.”[139]

வாய், கால், கை, குதம், குறி என்பவற்றினிடமாக நின்று சொல்லுதல் முதலிய தொழில்களுக்குக் காரணமாகக் கன்மேந்திரியங்கள் விளங்குகின்றன. தன் மாத்திரையாகிய ஐம்புலன்களை ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் எனக் குறிப்பிடுகின்றது.[140]

தன் மாத்திரைகள் ஐந்தனும் ஒவ்வொன்றினின்றும் ஒவ்வொரு பூதம் தோன்றும். அஃதாவது, ஓசையிலிருந்து வானமும், ஊறுவிலிருந்து வாயுவும், ஒளியிலிருந்து நெருப்பும், சுவையிலிருந்து நீரும், நாற்றத்திலிருந்து நிலமும் முறையே தோன்றும்.[141] இதனை உண்மை விளக்கம் குறிப்பிடுகிறது.

## உடம்பின் வகை

'உடம்பு' என்பது தூலம், சூக்குமம், பரம் என மூன்று வகைப்படும். உடம்பு, தேகம், சரீரம் என்பன ஒரு பொருட்சொற்கள்என்பது யாவரும் அறிந்தது. இவ்வுடலில் பஞ்சபூதங்கள் மண் 1¼ பங்கும், தண்ணீர் 1½ பங்கும், நெருப்பு 1 பங்கும், காற்று ¾ பங்கும், ஆகாயம் ½ பங்குமாகப் பரந்து அடங்கியுள்ளன. இதன் எடை அளவு எப்பொழுதும் நிலைபெறுமானால் இறப்பு என்பதே இல்லை.[142]

மனம், புத்தி, அகங்காரம் என்பன சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகிய ஐந்தும் கூடிய சூக்குமம். இதனைப் **பிராணமயகோசம்** என்றும் கூறுவர். இப்பொழுது உலகில் உலாவித் திரிவது ஸ்தூலம். இது **அன்னமயகோசம்** எனப்படும்.

மும்மலமுடைய சகலர்கட்கு அசுத்த மாயையின் காரண சரீரம் என்னும் சரீரம் ஒன்றுண்டு. இது **அனந்தமயகோசம்** எனப்படும். வித்தியா தத்துவத்தில் **பஞ்சகஞ்சுகம்** என்னும் பர சரீரம் ஒன்றுண்டு. இது **விஞ்ஞானமயகோசம்** எனப்படும். கலையில் தோன்றிய அவ் வியக்க ரூபமாகிய **குணசரீரம்** ஒன்றுண்டு. இது **மனோமயகோசம்** எனப்படும். இவை மூன்றும் பர சரீரமாகும்.[143]

தேகத்தின் வகையினைப் பற்றிக் குறிப்பிடும்போது, **"இருள் தேகம், மருள்தேகம், சுத்ததேகம், பிரணவதேகம், ஞானதேகம்"** என்று **பலராமையா** குறிப்பிடுகின்றார். இருள் தேகமுடைய நாம் ஞான தேகமுடைய உடலைத் தீட்சை செய்தல் வேண்டும். சித்தர்கள் அதைத் தசதீட்சை யென்று சொல்லலாயினர். இந்தத் தச தீட்சைப் பெற்றவனே ஞானி; சீவன் முக்தன்; ஞான சித்தன். இவன் உடலைப் பிணமாக விடுபவனல்லன், ஞான தேகத்திற்குத் தூலம் கிடையாது. அது சோதி மயமானது என்றும் விளக்கம் தருகிறார்.[144]

எல்லையில் அடங்காது பிரம்மாண்டமாயிருக்கும் பிரகிருதி யின் அணுபோன்ற ஒரு சிறு பகுதியே நமது உடல். பிரம்மாண்டத்தின் பெருமை முழுவதும் சிறு பிண்டமாகிய நம் உடலில் உள்ளது. நமது உடலையும் அதனுள் ஒளிர்பவனையும் உள்ளபடி தெரிந்து கொண்டால் அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகனையும் தெரிந்து கொள்ள இயலும்.

ஆலயங்கள் அனைத்திலும் சாலச் சிறந்ததான நம் உடலில் உலகெங்கும் குடிகொண்டுள்ள இறைவன் நம் உள்ளத்தில் சிறப்பாக இயங்குகின்றான்.[145] அப்பர் அடிகள்,

"காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக"[146]

என உடலைக் கோயிலாகவும், மனத்தை அடிமையாகவும், வாய்மையைத் தூய்மையாகவும், மனமணியை இலிங்கமாகவும் கூறுகின்றார்.

இங்ஙனம் உடம்பைப் பெற்று இதனைப் பேணிப் பாதுகாத்து, அதன்மூலம் நம் அறிவையும் அன்பையும் இன்பத்தையும் வளர்த்துக் கொண்டு இறைவன் திருவடியினைப் போற்றி அடைவது நம்முடைய கடமையாகும்.

## அண்டங்கள்

அண்டங்கள் ஒன்பது வகைப்படும். அவை ஐம்பெரும் பூதங்களானாகிய பூத அண்டமும், அவற்றின் வேறுபட்டவையாய்க் காணப்படும் பேத அண்டமும், ஆங்காங்கே இருவினைக்கீடாக இன்ப துன்பம் நுகர்வண்டமும், செறிவினால் சேர்ந்து பயன் துய்க்கும் போக அண்டமும் இவையனைத்தும் பரவி மேலாக நிற்கும் மூதாண்டமும், திருவடிப்பேற்றின்கண் நீங்காப் பெருவிழைவு கொள்ளும் மோகாண்டமும், நுகர்வுக்குக் கருவியாம் தேகாண்டமும், நுகர்வின்மேன் மிகுவிழைவாகிய வேட்கை கொள்ளும் தாகாண்ட மும் என்பன. இவ்வண்டங்கள் அனைத்தையும் ஐம் பெருந்தொழிலால் ஆண்டு கொண்டருள்பவன் சிவன். அவனே முழு முதல்வன். அவன் திருவடிக்கண் வேறற ஒற்றித்து நிற்பதே பிர;மமாண்டமாகும்.[147]

மேலும், அண்டங்களின் பிரிவு பற்றிச் சித்தாந்தத் தெளிவியல் பின்வருமாறு குறிப்பிடுகிறது. கீழே பாவிகள் சென்று வீழ்கின்ற நரகலோகமும், மேலே குண உருத்திர லோகமும் நிற்க, இடையே பூமியைப் பற்றிக் கீழ் ஏழுலகமும், மேலேழ் உலகமும் உள்ளன. அவற்றுள் கீழ் ஏழுலகங்களே '**பாதாளம்**' எனப்பட்டு, அசுரர், இராக்கதர், உரகர் என்பவர்கட்கு இடமாய் இருக்கும். பூமிக்குமேல் உள்ளவை, பூலோகம், புவலோகம், சிவலோகம், மகலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம் என்பனவாகும்.[148] ஆய கலைகள் அறுபத்துநான்கு என்பதுபோலச் சித்தாந்தம் பஞ்ச கலைகள் பற்றிக் குறிப்பிடுகிறது. அவை **சாந்திய தீகை, சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவர்த்தி** என்பன.

## பிரணவ கலைகள்

பிரணவம், '**ஓம்**' எனக் கூறப்படுவதைச் **சமட்டிப் பிரணவம்** என்று வைத்து, அதனை **அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம்** என ஐங்கூறுபடுத்தி, அக்கூறுகளை **வியட்டிப் பிரணவம்** எனக் கூறுவர். இக்கூறுகள் **பிரணவ கலைகள்** எனப்படும்.

பஞ்சகலையும் ஐந்து கடவுளர்களுடன் இணைத்து அதன்மூலம் அவர்களின் தொழில்களையும்,

| | | | | |
|---|---|---|---|---|
| நிவர்த்தி | - | பிரமன் | - | படைத்தல் |
| பிரதிட்டை | - | விட்டுணு | - | காத்தல் |
| வித்தை | - | உருத்திரன் | - | அழித்தல் |
| சாந்தி | - | மகேசுரன் | - | மறைத்தல் |
| சாந்தியதீதை | - | சதாசிவன் | - | அருளல் [149] |

என வகைப்படுத்துகின்றார் டாக்டர் சுப்பு ரெட்டியார்.

பிரணவ கலைகளின் சொற்பிரபஞ்சம் முழுவதையும் பிரணவத்துள் அதாவது, '**ஓம்**' என்பதனுள் அடக்கிக் கூறுதல் சித்தாந்த மரபாகும்.

ஐந்து அக்கரமாகிய **சிவாயநம** என்பதைச் சித்தாந்தமுறைப்படி விரித்துரைத்தால் நன்கு பொருள் விளங்கும். அவை:

| | | |
|---|---|---|
| சி | - | சிவன் (இறைவன்) |
| வா | - | வாலை, அருள், சக்தி |
| ய | - | உயிர், ஆன்மா, ஜீவன், பசு |
| ந | - | உயிரை மறைக்கும் திரோதன சக்தி |
| ம | - | மமதை, ஆணவம், கன்மம், மாயை [150] |

பிரணவத்தின் சிறப்பினைப்பற்றிச் சிவஞானபோதம் பின்வருமாறு விளக்குகின்றது.

"அகார உகார அகங்காரம் புத்தி
**மகாரம் மனம் சித்தம் விந்துப் - பகாதிவற்றை**
**நாதம் உளவடிவா; நாடிற் பிரணவமாம்**
**போதம் கடல் திரையே போன்று."**[151]

அகாரமும், உகாரமும், மகாரமும், விந்தும், நாதமும் தனித்தனியாகப் பிரிக்காது ஒன்றாகத் தொகுத்து நோக்கினால் 'ஓம்' என்பதில் அடங்கும்.

இங்ஙனம் ஆணவம், மாயை, கன்மம் ஆகியவையும், மனம், வாக்கு, காயம், அண்டங்கள், பிரணவ கலைகள், அவற்றில் அடங்கும் எழுத்துகள் ஆகியவையும் எடுத்துரைக்கப்பட்டன.

## நால்வகை நெறிகள்

இறைவனை அடையக் கூடிய வழிகள் நான்கு ஆகும். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இந்த நால்வகை நெறிகளிலும் உடல், உள்ளம், உயிர் ஆகிய மூன்றையும் நல்வழிப்படுத்தி இறைப் பணியில் ஈடுபட வைப்பது இறைவனை அடையும் வழிகளாகும்.

சிவவழிபாடு, மிகப் பழைய தமிழ் இலக்கண நூலாகிய தொல் காப்பியத்திற்கும் முற்பட்டது எனலாம். பாசப்பற்று விடுதற் பொருட்டு முதல்வனைப் பற்றும் முறையே கடவுள் வழிபாடு எனப்படும். அது பொதுவும் சிறப்பும் என இருவகைப்படும். வழிபாடு - பின் நிற்றல் - இறைவன் திருக்குறிப்பின் வழிநின்று ஒழுகுதல். வழிபாடு - பிற்றைநிலை என்பவை ஒரு பொருட்சொற்கள்[152] என **வச்சிரவடிவேல் முதலியார்** கூறியுள்ளார்.

## சரியை

சரியையாவது, பெரும்பாலும் உடலாலும் சிறுபான்மை உள்ளத்தாலும் (மானசமாகவும்) இறைவனை வழிபடும் முறையாகும்; கோயிலை அலகிடுதல், மெழுகுதல், இறைவனைப் புகழ்ந்து பாடும் பாமாலையோடு பூமாலையும் தொடுத்தல், திருவிளக்கேற்றுதல், திருத்தொண்டர்களைக் கண்டால் அவர்களை வணங்கி அவர்களுக்குச் செய்யவேண்டிய நன்மைகளைக் கேட்டு அதனைச் செய்தல் முதலானவை இறைவனுக்குச் செய்யும் தொண்டுகளாகும்.

ஆணவத் தடிப்பைக் குறைக்கும் சரியை நிலையில் பெறும் வெற்றியானது சாலோகத்தை (கடவுளின் இருப்பிடத்தை) அளிக்கும். அஃதாவது, பக்தன் இம்மார்க்கத்தின்மூலம் ஈசனுலகை அடைகிறான்.[153]

சிவஞான சித்தியார் சரியை நிலைபற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

“தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரன்றன் கோயிற்
றலமலகிட் டிலகுதிரு மெழுக்குஞ் சாத்திப்

போதுகளுங் கொய்துபூந் தார்மாலை கண்ணி
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதிறிரு விளக்கிட்டுத் திருநந்த வனமுஞ்
செய்துதிரு வேடங்கண் டாலடியேன் செய்வ
தியாதுபணியீ ரென்று பணிந்தவர்தம் பணியு
மியற்றுவதிச் சரியை செய்வோ ரீசனுல கிருப்பர்"[154]

## கிரியை

கிரியை என்பதற்குச் செயற்பாடு என்பது பொருள். உள்ளத்தோடு உடலும் கலந்து செயற்படுதலாகும். அதாவது இறைவனுக்கு உடல்உறுப்புகள்தொண்டுசெய்வதோடு, உள்ளமும்ஈடுபடுவதாகும். அன்றலர்ந்த நறுமலர்களையும், நறும் புகையினையும், திருமஞ்சன நீரையும், அமுதையும்கொண்டு வழிபடுதலாகும். தொண்டன் தன்னைப் பரம்பொருளாகிய தந்தையின் தொண்டுக்காகப் பயபக்தியுடன் கட்டுப்பாடு, கடமை யுணர்வுடன் பணிந்து பணி செய்கின்றான்.

"புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போது
புகையொளிமஞ் சனமமுது முதற்கொண் டைந்து
சுத்திசெய் தாசனம்மூர்த்தி மூர்த்தி மானாஞ்
சோதியையும் பாவித் தாவாகித்துச் சுத்த
புத்தியினா லருச்சித்துப் பரவிப் போற்றிப்
பரிவினொரு மெரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலுமிக் கிரியையினை யியற்று வோர்கள்
நின்மலன்ற னருகிருப்பர் நினையுங் காலே"[155]

எனத் தேவநாயனார் கிரியை நெறியைப்பற்றி விளக்கமாக எடுத்துரைக்கின்றார்.

## யோகம்

யோகம் என்பது சித்தத்தைச் சிவன்பால் வைத்திருத்தல் என்பதாம். சிவன் புறப்பொருளின் நாட்டங்கொண்டு புறப் பொருளோடு பொருந்துவதும் யோகந்தான். ஆனால், புறத்தே நாடாது அகத்தே நாடிச் சிவனை அடைவதே சிறந்த யோகமாகும். யோகத்தால் இறைவனுடன் ஒன்றாகலாம் என்று பின்வரும் செய்யுள் விளக்குகிறது.

"ஆதார யோகம் நிராதார யோகமென
மீதானத் தெய்தும் விதியிரண்டும் - ஆதாரத்து
ஆக்கும் பொருளாலே ஆக்கும் பொருளாம்ஒன்று
ஆக்காப் பொருளே ஒன்றாம்."[156]

குரு மாணாக்கமுறையில் நெடுங்காலம் வந்தனவும், உபநிடதங் களிற் கூறப்பட்டனவுமாகிய யோக நூற்பொருள்களைப் பதஞ்சலி முனிவர் திரட்டிக் கி.மு. 150இல் யோக சூத்திரங்களாகச் செய்தார்.

யோக வழிகளை எல்லாம் தமிழ் மக்கள் மிகமிக முற்பட்ட காலத்திலேயே அறிந்திருந்தார்கள் என்பது மொகஞ்சொதரோவிற் காணப்பட்ட திருவுருவங்களால் நன்கு தெளிவுறுகின்றது.[157]

'யோகம் என்பது ஒன்றல் என்னும் பொருளுடையது. சீவான்மா பமான்மாவுடன் ஒன்றுவது யோகம். இதனைச் சீவான்மா பமான்மாவை அகத்தில் வழிபடுவது என்றுங் கூறலாம். யோகமே அவழிபாடு; அகவழிபாடே யோகம் என்று தெளிக. யோகமென்னும் அகவழிபாட்டுக்குக் கால்கொள்வது புற வழிபாடு'.[158] யோகம் எட்டு அங்கங்களை உடையது: 1. இயமம் - தீயவற்றை நீக்குதல், 2. நியமம் - நற்காரியங்களைச் செய்தல், 3. ஆசனம் - அமரும் நிலை, 4. பிராணாயாமம் - மூச்சை நெறிப்படுத்துதல், 5 பிரத்தியாகாரம் - புலன்களையும் மனத்தையும் தடுமாற்றத் தினின்றும் பின்வாங்குதல், 6. தாரணை - மனத்தைக் கடவுள்பால் செலுத்துதல், 7. தியானம் - ஆன்மிகத்தொடர்பு, 8. சமாதி - ஆன்மிக அனுபவம் என்பனவாம்.

சித்தர்கள் மூவகை யோகத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது, சாகாக் கலையில் சிரத்தை வைப்பதே **பக்தியோகம்.** உண்மை நம்பிக்கை கிடைத்தவுடன் அக்கலையை அடையும் மார்க்கத்தில் ஈடுபடுவதே **கர்மயோகம்;** கர்மத்தால் சாகா உடலை மாற்றியமைத்துச் சூட்சுமமாக்கி ஞானதேகம் பெற்று ஞானசித்தியடைவதே **ஞானயோக**மாகும் என்று குறிப்பிடுகின்றனர்.[159]

## ஞானம்

ஞானமாவது ஞானாசிரியனின் அறிவுரைகளைக் கேட்டலும், அதனை உளப்படுத்தலும், பின் அறிவுறுத்திய பொருளைத் தெளிதலும், தெளிந்தபடி நிட்டையின் அழுந்துதலும் ஞானமாகும். '**ஞானம்**' என்பதற்கு அறிவு என்பது பொருளாகும். அறிதல்

எனினும் அளவில் 'சரியை, கிரியை, யோகம் என்பனவும் ஞானமே யாயினும், சைவ சித்தாந்தம் இவற்றை என்னாது பொருளியல்பை உள்ளவாறு உணரும் உணர்வை - தத்துவ உணர்வை - 'ஞானம்' எனச் சிறந்தெடுத்துக் கூறலாம் என டாக்டர் சுப்பு ரெட்டியார் விளக்கம் கூறுகிறார்.[160]

ஞானத்தின் கூறுகளைத் தாயுமானவர் பின்வருமாறு எடுத்துரைக்கிறார்.

"விரும்புஞ் சரியை முதல்
மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்பு மலர்காய் கனிபோல்
அன்றோ பராபரமே"[161]

சரியை என்பது அரும்பையும், கிரியை என்பது மலரையும், யோகம் என்பது காயையும், ஞானம என்பது கனியையும் குறிக்கும் என்று சைவ நெறியின் படிகளை அழகாக உணர்த்துகின்றார்.

ஞான உண்மையின் பண்புகளைப் பொறுச் சிவபபிரகாசம் எடுத்துரைக்கிறது.[162] ஞானத்தினால் வீடுபேற்றை எயதமுடியும என்று சைவ சித்தாந்தம் கூறுகிறது. அஞ்ஞானத்தினால் தடை ஏறபடின், அது மெய்ஞ்ஞானத்தாலே நீக்கப்படும எனச சிவஞான சித்தியார் உணர்த்துகின்றது.[163] ஞான பூசையில் ஓமம் செய்யும் முறையினைத் தொடங்குங்கால் முதற்கண் இருதயம, உந்தி, புருவநடு எனனும மூன்றையும் பூசைத்தானம், ஓமததானம், தியானத்தானமாகக் கருதிக்கொண்டு தொடங்குதல் வேண்டும். இதனை அட்டபுட்பமாகக் கூறலாம். அவை கொல்லாமை, பொறி யடக்கம், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்பன வாகும்.

ஞானபாதத்தில் நின்றோர் சாயுச்சியமாகிய மிக்குயர்ந்த மோட்ச நிலையினை அடைவர். அஃதாவது, இறைவனின் திருவருளின் வழியே சென்று இறைவனோடு இரண்டறக் கலந்து நிற்கும் மிக உன்னதமான நிலையாகும் என்பதை இதன்மூலம் உணரலாம்.

சரியை, கிரியை, யோகம் ஆகிய மூன்றின்வழி உயிர் ஞானவழியிற் செல்லும் நெறியை அடைகிறது. இந்நிலையில் இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் என்பவை நிகழ்கின்றன. இம்மூன்றின் நிலையினைப் பற்றிக் காணலாம்.

இருவினையொப்பு என்பது நல்வினையின் பயனாகிய இன்பத் திடத்து விருப்பமும், தீவினையின் பயனாகிய துன்பத்திடத்து

வெறுப்பும் நிகழ்தலாகிய உணர்ச்சி வேறுபாடுகள் இன்றி, இரண்டையும் ஒன்றுபோல நினைத்து, அவற்றின்கண் பற்றச் செய்யாது நிற்கும் உணர்வேயாகும்.

உண்மையோகத்தின் முதிர்ச்சியில் இருவினையொப்புமுற்ற நிகழும் வழிப் பரமசிவன் எவ்வாற்றாலேனும் ஞானத்தை அருளுவன். ஞானத்தைப் பரமசிவன் விஞ்ஞானகலர்க்கு உயிர்க்குயிராய் உள்நின்றும், பிரளாயகலர்க்கு அவர்முன் தோன்றியும், சகலர்க்குத் தன்னை அடைந்த தானேயாய் நிற்கும் சீவன் முத்தராகிய ஆசாரியர் உடனிருந்து தந்தருளுவான் எனச் சித்தாந்தத் தெளிவியல் விளக்கம் தருகிறது. [164]

## மலபரிபாகம்

மலம் என்பது ஆணவம். பரிபாகம் என்பது முதிர்ச்சி. அஃதாவது, ஆணவ மலத்தின் சக்தி குன்றிப்போதல் என்பது பொருள். இவ்வாணவமே, இறைவனிடத்தில் பரந்து நிற்க வேண்டிய உயிரை, அணுவாக்கிச்சிறுமைப்படுத்துவது; இறைவனுக்குஅன்னியமானவன் என்ற செருக்கை வளர்ப்பது. தெய்வ சாதனையால் இதன் முனைப்பு நெகிழ்வதையே மலபரிபாகம் என்று **வி. அருணாசலம்** குறிப்பிடுகின்றார். [165]

ஆன்மா தன் கடின உழைப்பின்மூலம் பெறுவதே இவ்வெகுமதியாகும். அஃதாவது, கர்மா பக்குவமடைதலாகும். இந்நிலையில் கர்மா விரைவாக அகல்வதற்கான நிலையைக் காட்டும். அப்பொழுது தான் கர்மாவின் மிகப்பெரிய பளுவை ஆன்மாவினால் தள்ள முடியும் என்பதைத் தெள்ளிதின் உணரலாம்.

## சத்திநிபாதம்

இருவினை ஒப்புத் தோன்றவே ஆன்மா தன்னை மலம் பீடித்துள்ளது என்ற உணர்வினைப் பெறும். மல முனைப்பைக் கெடுக்க முனைகையில் இறைவனின் திருவருட் சத்தியானது ஆன்மாவில் பதியத் தொடங்கும். இதுவே சத்திநிபாதம். (சத்தி - நிபாதம் - திருவருட்சக்தி பதிதல் என்று பொருள்படும்).

‘நிபாதம்’ என்னும் சொல்லுக்கு ‘வீழ்தல்’ என்பது பொருள். அருட்சக்தி பதிந்தவிடத்து உலகச்சூழலில் நின்ற உயிர்க்கு, ஓர்அவையிடத்துக் கல் வந்து வீழ்ந்தாற் போல்வதோர் அதிர்ச்சி

யுண்டாகி, உலக மயக்கத்தினின்றும் நீங்கமுயலும் என்பது பற்றிச் 'சக்தி பதிதல்' என என்னாது 'சக்தி வீழ்தல்' என்று கூறுகின்றனர் என **அருணைவடிவேல் முதலியார்** விளக்கம் தருகின்றார்.[166]

இறைவனருள் திரோதனமாகவிருந்து சித்சத்தியாக மாறும் நிலையினைச் 'சத்திநிபாதம்' என்பர்.[167] இஃது ஓர் அக வளர்ச்சி. இவ்வளர்ச்சி ஏற்படும்போது மலத்தொடர்பினால் ஒரு மாற்றம் ஏற்படுகிறது. அம்மாற்றத்தினைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

| | | | |
|---|---|---|---|
| 1. மாயை<br>அசுத்தம் | கன்மம்<br>நல்வினை<br>தீவினை | ஆணவம்<br>முனைப்பு | அருள்<br>திரோதானம் |
| 2. மாயை<br>சுத்தம் | கன்மம்<br>இருவினை<br>ஒப்பு | ஆணவம்<br>மலப்பரி<br>பாகம் | அருள்<br>சித்சக்தி |

இறைவன், படிமுறையால் மலத்தை நீக்குதலால் சத்திநிபாதம், மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நால்வகைப்பட்டு, மந்ததரத்தில் மந்ததரம் முதலாக ஒவ்வொன்றும் நந்நான்காய்ப் பதினாறு வகைப்பட்டு அவற்றுள்ளும் பலவேறாய் விரிவாகச் செல்லும் என்பதை அறியலாம்.

## தீட்சை

அஞ்ஞானத்தைப போக்கி மெய்ஞ்ஞானத்தைத் தருதலே **தீட்சை** எனப்படும். அவை: நயனம், பரிசம், மானசம், வாசகம், சாத்திரம், யோகம், ஔத்தரி என ஏழு வகைப்படும்.[168]

1. நயனதீட்சை : குரு தம்மை சிவனாகப் பாவித்து நின்று தலை முதல் கால்வரை தமது அருட்பார்வையாற் பார்த்துஆணவத்தைக் கெடுத்தல்.
2. பரிசதீட்சை : குரு, தமது கரத்தினைச் சிவபெருமானின் திருக்கரமாகப் பாவனை செய்து சீடனின் தலையிலேவைத்து மாயா மலத்தைக் கெடுத்தல்,
3. மானசதீட்சை : வேதாகம சாத்திரங்களைக் குரு சீடனுக்கு விளக்குதல்.
4. வாசகதீட்சை : ஸ்ரீபஞ்சாட்சரத்தையும் வேறு பதினொரு மந்திரங்களையும் உபதேசித்தல்.

5. சாத்திரம் : பதினான்கு சாத்திர நூல்களை ஓதியுணர்த்தல்.

6. யோகதீட்சை : குரு, சீடனின் இருதயத்துட் பிரவேசித்துச் சிவத்தோடு சேர்த்தல்.

7. ஔத்தரிதீட்சை : ஓமம் வளர்த்து அதன்மூலம் கொடுப்பது. இதுகிரியாவதி, ஞானவதி என இரு வகைத்து.கிரியாவதியாவது புறத்தே ஓமகுண்டம் அமைத்து அளிக்கப் படுகிறது. ஞானவதியாவது மானச மாக ஓமகுண்டம் அமைத்துச் செய்வது ஆகும்.

ஒருவன் சைவ சமயத்தவன் என்பதற்குத் திருநீறு உருத்தி ராக்கமாகிய சிவ சின்னங்கள் இன்றியமையாதவைபோலச் சைவ சமயத்தவனாய் இருபபதற்குத் தீட்சை பெறுதல் அவசியமாம். இன்றேல், சைவ சமயியாகான் எனலாம்.

தீட்சை முறைமையைப் பின்வரும் செய்யுள் எடுத்துரைக்கிறது.

**"மூவகையா குயிர்வகுக்க மலத்தார் கன்ம**
**மூலமலத் தார்மூன்று முடையா ரன்றே**
**தீவகமா மெனவுருவாய் வந்து நாதன்**
**திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால்**
**பாவனையான் மிகுநூலால் யோகப் பண்பால்**
**பரவிவரு மவுத்திரியாற் பாச நாசம்**
**மேவவரு ளுதவுமதவுத் திரியிரண்டு திறனும்**
**வியன்கிரியை ஞானமென விளம்பு மாறே"** [169]

தீட்சையின் வகையினை நால்வகை நெறிகொண்டு சைவ சித்தாந்திகள் பிரிக்கின்றனர். ஆசிரியரால் சரியையின் பொருட்டுச் செய்யப்படும் தீட்சை, சமயதீட்சை என்றும், கிரியை, யோகம் என்னும் இரண்டின்பொருட்டுச் செய்யப்படும் தீட்சை, விசேட தீட்சை என்றும், அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தைத் தருவதற்காகச் செய்யப்படும் தீட்சை நிருவான தீட்சை என்றும் வகைப்படுத்துகின்றனர்.

## மந்திரங்கள்

தீட்சையில் உபதேசிக்கப்படும் மந்திரங்கள் பலவற்றுள், பஞ்சாக்கரம் எனப்படும் திருவைந்தெழுத்தே முதன்மையானது. அதனால்தான் அது, **'மூல மந்திரம்'** எனப்படுகிறது. பஞ்சாக்கரத் தியானம் பற்றிக் **கொடிக்கவி** தெளிவாக எடுத்துரைக்கின்றது.

"அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும் நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும் மேலைப் பெருவெழுத்தும் - நெஞ்சழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமற் காட்டக் கொடி"[170]

ஐந்தெழுத்து மந்திரத்தை நெஞ்சில் வைத்தால் சக்தி தானே சிவனுடன் இரண்டறக் கலந்து மோட்சத்தை அடையச் செய்யும் என்பதை நன்கு அறியலாம்.

சாதனங்களால் அடையும் பயன்கள் இரண்டு. ஒன்று: பாச நீக்கம்; மற்றொன்று: சிவப்பேறு; அஃதாவது, சித்தாந்த சைவ முத்தியை அடைதலாகும். உயிர்கள் அடைய வேண்டிய முடிந்த பயன் வீடுபேறு; இதுவே சிவப்பேறு; முத்தி என்றும் வழங்கப்பெறுவதும் உண்டு எனப் பாச நீக்கத்திலிருந்து விடுபட்டுச் சிவப்பேறு அடைவதைப்பற்றிச் சைவ சித்தாந்தம் தெள்ளிதின் உணர்த்துகின்றது.

தவம், புண்ணியம் என்பன ஒரு பொருட்சொற்களாய் வழங்கப்படும். அதனால், இவை சிவனை நோக்கிச் செய்யப்படுதல் பற்றிச் சிவபுண்ணியம் என்றும், சிவனே பதியாகலான் பதிபுண்ணியம் என்றும் சொல்லப்படும்.[171]

பதிப்புண்ணியமாகியசிவப்புண்ணியங்களே இடைநிலையாகச் சில பயன்களைத் தரினும் முடிவாக ஞானத்தைத் தருவது தவங்களே. அவையே சரியை, கிரியை, யோகம் என்பன. இவமுறையே சாலோகம், சாமீபம், சாரூபம் என்னும் பயன்களை முனர்த் தந்து முடிவில் ஞானத்தைக் கொடுக்கும். அதனால், சிப்புண்ணியம் சிறப்பில் தவம் எனப்படும் என்று சைவ சித்தாந்தம் சான்று தரும்.

## சீவன் முக்தர்

ஞானத்தில் ஞானமாகிய நிட்டையின் பயனாக அடையப் படுவது பரமுக்தி. அஃதாவது, சாயுச்சியம் என்னும் நிலையை இவ்வுலகில் இவ்வுடம்போடு கூடியிருக்கும் நிலையில் பெற்றிருத் தலையே **'சீவன்முத்தி'** என வழங்குவர். ஞானிகள் அத்தகைய நிலையைத் தங்கள் உடலினிடமே கண்டார்கள். சீவன் முத்தி ஒருவன் அடைவதென்பது, இவ்வுடம்பு இருக்கும்போதே இறவா நிலை அடைவதாகும். இதுவே **'சாகாக்கலை' எனப்படும்.**[172]

உண்மை ஞானமடைந்தவனுக்குத் தூல உடல் இல்லை ஆகையால், அவனுக்கு இறப்பில்லை பிறப்பு மில்லை யென்று சித்தர்கள் கூறுவார்கள்.

ஞானம் பெற்றவர்கள் குருவின் அருளால் ஞானம்பெற்றுச் சீவன் முத்தராகி, சங்கரனோடு சேர்ந்து, ஒருவரை யொருவர் விடாது சிவன் தோற்றத்தைக் காண்பார்கள் என்று சிவஞானசித்தியார் குறிப்பிடுகின்றது.[173] பட்டினத்தார், தாயுமானவர், இராமலிங்க அடிகள் ஆகிய இவர்கள் தாம் உயிரோடு இருந்து சீவன்முத்தி என்ற நிலையை அடைந்திருக் கின்றார்கள்.

"தேகம் யாதேனும் ஒருசித்தி பெறச் சீவன்
முத்தி ஆகுநெறி நல்லநெறி ஐயா பராபரமே"[174]

எனச் சீவன் சித்திபெற்றால் முத்திநிலையை அடையும் என்பதைத் தாயுமானவர் குறிப்பிடுகின்றார்.

மலர் தானே அலர்ந்து கண்டார்க்கும், கொண்டார்க்கும் மகிழ்ச்சியையும் மணத்தையும் தருவதுபோல, அணைந்தவர்களுக்கு இறைவன் தானே பரிணமித்து விடுதலையையும், மாட்சிமை யையும் தருவான் என எடுத்துரைக்கின்றது. இதனையே,

"செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே"[175]

எனச் சிவஞானபோதம் விளக்கம் தருகிறது.

## முத்தி

சிவஞானத்தின் முடிந்த பயனாகிய முத்தி நிலையைச் சிவஞானிகளே உணர்வர். உணர்ந்தவர் தாமே அறிந்து அனுபவிப்பர். அந்த அனுபவ நிலையை அவர் தமது மனத்தினால் மதித்து, வாக்கினால் சொல்ல இயலாது.

முத்தி என்னும் சொல்லுக்கு விடுதலை என்று பெயர். உலகப் பற்று நீக்கமே பேரின்பம் அல்லது வீடுபேற்றுக்குக் காரணமாகும். பிறவி உள்ளவரை பற்று ஒழியாது. பிறவிக்குக் காரணம் உலகப் பற்று. அதனால், சிறிது சிறிதாக உலகப்பற்றை அறுத்துச் சிவபிரா னிடத்து அன்புகொள்ளக் கொள்ளப் பிறவி நீங்கி என்றும் அழியாத பேரின்பம் சித்திக்கும்.

சிவப்பிரகாசம் முத்தி பேதங்களது இயல்புபற்றிப் பின்வரும் செய்யுள் எடுத்துரைக்கின்றது.

"அரிவையர்இன் புறமுத்தி கந்தம் ஐந்தும்
அறுமுத்தி திரிகுணமும் அடங்கும் முத்தி

விரவுவினை கெடு முத்தி மலம்போம் முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி
பரவும்உயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்தி இவை பழிசேர் முத்தி
திரிமலமும் அகலஉயிர் அருள்சேர் முத்தி
திகழ்முத்தி இதுமுந்தித் திறத்த தாமே." [176]

இராமலிங்க அடிகள் முத்திநிலை பெற்றதை,

"முத்தியைப் பெற்றேன் முத்தினால் ஞான
சித்தியை யுற்றே னென்றுந் தீபற
சித்தனுமானே னென்றுந் தீபற"[177]

எனத் தாமே கூறுகிறார். " முத்திநிலைபற்றித் தூலம் நரைதிரை மூப்பு பிணியால் பழுதடைந்து பிணமாகாமல் சுத்த சாதகம் கூறியபடி அத்தூலத்தோடு முத்தியடைதல் உண்மை முத்தியாகும்" எனப் **பலராமையா** குறிப்பிடுகின்றார்.[178]

பரமுத்தி அடைந்தோர் பழத்தின் சுவையும், மலரின் மணமும், நெருப்பிற் சூடும், வீணையின் இன்னிசையும் போலச் சிவத்திற் கலந்திருப்பரென உண்மை விளக்கம் எடுத்துரைக்கும்.[179]

உடலைப் பிணமாகவிட்டு உயிர் நீங்கிய பிறகுதான் முத்தி அடையலாம் என்பது தவறானது. இவ்வாதத்தினைச் சித்தர்கள் மூடத்தனமானது எனக் கருதுகின்றனர்.

முத்திநிலையைப் பதமுத்தி, அபரமுத்தி, பரமுத்தி என்று பிரிக்கப் படுகிறது. **பதமுத்தி:** வித்தியா தத்துவங்கள் ஏழினும் உள்ள சீகண்ட புவனம் முதலிய உருத்திர வுலகங்களை அடைதல். இது சிவலோகம் என வழங்கப்படும். **அபரமுத்தி:** சுத்தவித்தை முதலிய சிவதத்துவம் ஐந்தினும் உள்ள புவனங்களை அடைதலாம். **பரமுத்தி:** பரமசிவனோடு இரண்டறக் கலத்தல். பரமுத்தி, அபரமுத்தி இரண்டும் சாலோகம், சாமீபம், சாரூபம் என்று தனித்தனியே மூன்று வகைப்படும். முத்தி இன்பத்தால் சாலோபம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் ஆகிய நான்கு பதவிகளைப் பெறலாம்.

## சாலோகம்

ஒருவர் இல்லறத்தில் பணியாற்றும் அகத்தொண்டர் இவ்வில்லம் முழுவதினும் தடையின்றிச் செல்லும் உரிமையைப் பெற்றிருத்தல் போல, அவ்வுலகங்களில் எங்கும் தடையின்றி இயங்கும்உரிமையைப்

பெற்றிருத்தலாம். இப்பயனைத் தரும் சரியை வழிபாடு தாசமார்க்கம்; அஃதாவது, அடிமைநெறி எனக் கூறலாம்.

### சாமீபம்

உலகங்களில் பணியாளர்போல அகல நில்லாது, மைந்தர்போல அவ்வப்புவனகதிகளோடு அருகிருக்கும் உரிமையைப் பெற்றிருத் தலாகும். இப்பெற்றியே இப்பயனைத்தரும் கிரியை வழிபாடு. சற்புத்திர மார்க்கம் - மகன்மைநெறி எனப்படும்.

### சாரூபம்

அவ்வுலகங்களில் மைந்தரினும் சிறந்த தோழர்போல, அப்புவன பதிகளோடு ஒத்த உருவும் பெயரும் முதலியன உடையராய் அளவளாவி இருக்கும் உரிமையைப் பெற்றிருத்தலாகும். இது யோக வழியாகிய பயனைத் தரும். சகமார்க்கம் - தோழமை நெறி எனக் கூறலாம்.

### சாயுச்சியம்

ஒருவன் இறைவனைத் தன்னுள்ளே காணும்போது, தனது உண்மையியல்பை உணர்ந்து, தானே தெய்வ எண்ணத்தின் ஒரு வாய்க்கால் என உணர்கிறான். அந்தத் தெய்வ ஆணைக்குக் கீழ்ப் படியும் போது அவன் பேரொளியுடன் இணைந்து பேரின்பம் அடைகின்றான். அதுவே சாயுச்சியம்.[180]

### தசகாரியம்

தனது முன்னேற்றப்பாதையில் ஆன்மா பத்து நிலைகளைக் கடக்கிறது. அவையே தசகாரியம் என வழங்கப்பெறும். தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவசுத்தி, ஆத்மரூபம், ஆத்மதரிசனம், ஆத்ம சுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பன அவை. அவற்றுள் ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி,[181] சிவதரிசனம்[182] ஆகியவற்றை உண்மைநெறி விளக்கம் எடுத்துரைக் கின்றது.

ஆருயிரிலே யான், எனது என்னும் அகப்பற்றும் புறப்பற்றும் ஆகிய செருக்கற்றபோது முன் உள்ளடக்கி மேலோங்காது பின்னின்ற

திருவருள் மேலோங்கி முன்னிற்கும். இதுவே சிவதரிசனம் எனச் சித்தாந்த சாத்திரம் விளக்கம் கூறும்.

உயிர்கள் பசுக்களாதலான், அவை தம்மையே தாம் அறியும் அறிவு **'பசு ஞானம்'** எனப்படும். இப்பாச ஞானப்பசு ஞானங்களால் இறைவனது சொரூப நிலையை அறிதல் இயலாது. அதுவே. இவ்வகையில் இறைவன் உயிர்களால் அறியக்கூடாதவனாகின்றான் பதியினது அருளைப்பற்றி நின்று அறிதலின், அங்ஙனம் அறியம் அறிவு, **'பதிஞானம்'** எனப்படும். எனவே, இறைவன் பதிஞானத்தால் அறியப்படுவான் என்பதை அறியலாம்.

தத்துவங்களின் இயல்பினை உணராதபொழுது அவற்றின்வழி நிகழும் யான், எனது என நிகழும் உணர்வு பாசத்தால் நிகழ்ந்து பாசத்தையே பொருளாக உடைமையால், **'பாச ஞானம்'** எனப்படும் என்று சித்தாந்தத் தெளிவியல் விளக்கம் தரும்.[183]

இவ்வாறு, உயிர் உவப்பிலாப் பேரின்மடைந்து, எப்பொழுதும் அந்நிலையில் இருப்பதையே நோக்கமாகக் கொள்கிறது சித்தாந்தம். அதன்பிறகு உயிர், அந்தப் பேரின்பத்திலிருந்து மாறுவதில்லை. சிவலோகத்தை அடைதலையே குறிக்கோளாகக் கருதுகிறது. சித்தாந்த முத்தி என்பது சிவத்தோடு அத்துவிதமாய்க் கலந்து உயிர் சிவனது இன்பத்தில் திளைத்திருத்தலே யாகும்.

## தொகுப்புரை

இவ்வியலில் சைவ சித்தாந்தக் கொள்கை பற்றிய கருத்துகள் ஆராயப்பட்டுள்ளன.

சமயம் என்பதன் சொற்பொருள் விளக்கம்; சமயத்தின் பழைமை. வளர்ச்சி; தமிழ் தொன்மையுடைய ஆகமம், வேதம் அவை உணர்த்தும் கடவுள்; வேதாந்தம் என்பதன் பொருள்; பல்வகை மதங்கள்; சைவ சமயத்தின் சிறப்பு; சைவ சமய நூல்கள் முதலியன பற்றி விளக்கப்பட்டுள்ளன.

சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு, அவற்றின் ஆசிரியர்கள் பற்றிய விளக்கங்கள், சைவ சித்தாந்தம் - சொற்பொருள், இறை உண்மை, பதி, பசு, பாசங்களுக்கிடையேயுள்ள தொடர்பு, இறைவனின் அத்துவிதத் தன்மை, சக்தியின் தன்மை, ஐந்தொழில்கள், மறைப்பாற்றல், இறைவனின் மூவகைத் திருமேனிகள், சொரூப

லட்சணம், சச்சிதானந்த நிலை, பரப்பிரமம் என்பன இறைவனின் கொள்கைகளாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

உயிர் என்பது பற்றி விளக்கம், அது பற்றிய வாத மறுப்பு, கேவலம், சகலம், சுத்தம் என்னும் ஆன்மாவின் நிலைகள், உயிர்களின் அவத்தைகள், மூவகை உயிர்கள் என்பன உயிர்க்கொள்கையாகத் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன.

பாசம், ஆணவம், மாயை, கன்மம் பற்றிய விளக்கங்கள், மாயையின் பிரிவுகள் (சிவ தத்துவம், வித்தியா தத்துவம், ஆன்ம தத்துவம்) மனம், வாக்கு, காயம் பற்றியும், உடம்பின் ஐவகை அண்டங்கள், பிரணவ கலையின் கூறுகள்பற்றியும் ஆராயப் பட்டுள்ளன.

இறைவனை அடையும் நால்வகை நெறிகளாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம்பற்றிய விளக்கங்கள், அந்நெறிகளினால் அடையும் மலபரிபாகம், சத்திநிபாதம் பற்றியும் மாணவன் பெறும் குரு தீட்சை, அதன் வகைகள், மந்திரங்களின் மாட்சி, சீவன் முத்திபெறும் நிலை, நான்கு நெறியினால் பெறும் சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியமாகிய பதங்கள் பற்றியும், தசகாரியங்கள், அக்காரியங்களைச் செய்வதால் உயிர்பெறும் இன்பநிலை ஆகியவைபற்றியும் ஆராயப்பட்டுள்ளன.

*****

## குறிப்புகள்

1. திரு.வி. கலியாணசுந்தரனார், **சைவத்தின் சமரசம்**, ப.8.
2. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி**, ப. 16.
3. கா. சுப்பிரமணிய பிள்ளை, **தமிழர் சமயம்**, ப. 10.
4. A.C. Bouquet, **Comparative Religion, P.11.**
5. கா. சுப்பிரமணிய பிள்ளை, **தமிழர் சமயம்**, ப. 92.
6. திரு.வி. கலியாணசுந்தரனார், **சைவத்தின் சமரசம்**, ப. 12.
7. திரு.வி. கலியாணசுந்தரனார், **சித்த மார்க்கம்**, ப. 39.
8. ந.சி. கந்தையா பிள்ளை, **இந்து சமய வரலாறு**,ப. 66.,
9. திரு. 1244.
10. ஏ.வி. சுப்பிரமணிய ஐயர், **தமிழ் இலக்கியத்தில் அறுவகைச் சமயம்-ஓர் ஆராய்ச்சி**,ப.27.
11. ந.சி. கந்தையா பிள்ளை, **தமிழ் இந்தியா**, ப. 194.
12. அ. சுத்தானந்த பாரதியார், **திருமந்திர விளக்கம்**, ப.62.
13. செந்துறை முத்து, **தாயுமானவரும் திருமூலரும்**, ப. 140.
14. ந.சி. கந்தையா பிள்ளை, **இந்து சமய வரலாறு**, ப. 68.
15. ந.சி. கந்தையா பிள்ளை, **தமிழ் இந்தியா**, பக். 183-184.

15அ) **கலைக்களஞ்சியம் - தொகுதி - ஒன்பது**, பக். 516-517.

16. ந.சி. கந்தையா பிள்ளை, **இந்து சமய வரலாறு**, பக். 68-69.
17. மேற்படி. ப. 15; 18. மேற்படி, ப. 14-15.
19. **கலைக்களஞ்சியம், தொகுதி ஒன்பது**, ப.523.
20. சாமி சிதம்பரனார், **சித்தர் கண்ட விஞ்ஞானமும் தத்துவமும்**, ப. 151.
21. மேற்படி, ப. 67.
22. செந்துறை முத்து, **தாயுமானவரும் திருமூலரும்**, ப. 91.
23. திரு.வி. கலியாணசுந்தரனார், **சைவத்தின் சமரசம்**, ப. 26.
24. அ. சுத்தாந்தானந்த பாரதியார், **சமய விளக்கம்**, ப. 7.
25. ந.சி. கந்தையா பிள்ளை, **இந்து சமய வரலாறு**, ப. 86.
26. மா. இராசமாணிக்கனார், **சைவ சமய வளர்ச்சி**, ப. 30.
27. **பட்டினப்பாலை. வரி**.53. உ.வே. சாமிநாத அய்யர் பதிப்பு. ப. 535.
28. **மதுரைக்காஞ்சி, வரி**. 487. உ.வே.சாமிநாத அய்யர் பதிப்பு, ப. 393.
29. **சிலப்பதிகாரம் - அடைக்கலக் காதை. வரி**. 108.
30. ந.சி. கந்தையா பிள்ளை, **தமிழ் இந்தியா**, ப. 40.

31. **மணிமேகலை**, 5,68.
32. அ.மு. பரமசிவானந்தம், **தமிழக வரலாறு**, பக். 299-307.
33. ந.சி. கந்தையா பிள்ளை, **தமிழ் இந்தியா**, ப. 200.
34. டி. சந்திரசேகரன், **சித்தாந்த விளக்கம்-முன்னுரை**, ப.XIII
35. இ.எஸ். வரதராச ஐயர், **தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி. 1 முதல் 1100 வரை**, ப.114
36. அப்துல் சமத், **சைவத்தின் சிறப்பு**, ப. 42.
37. டி.பி. சித்தலிங்கம், **சைவ சமய தோற்றமும் வளர்ச்சியும்**, ப. 9.
38. (மேற்கோள்), மா. இராசமாணிக்கம், **சைவ சமயம்**, ப.70.
39. மறைமலையடிகள், **தமிழர் மதம்**, ப.35.
40. அப்துல் சமத், **சைவத்தின் சிறப்பு**, ப. 3.
41. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி**, ப. 22.
42. ப. அருணாசலம், **இந்து சமயம் - ஓர் கையேடு**, ப. 5.
43. கா. சுப்பிரமணிய பிள்ளை, **இலக்கிய வரலாறு - இரண்டாம் பாகம்**, ப. 177.
44. மறைமலையடிகள், **தமிழர்மதம்**, ப. 137
45. மா. இராசமாணிக்கனார், **சைவ சமயம்**, ப. 52.
46. **சித்தாந்தம் - மலர் -45, இதழ் - 9, ப.242; (கட்டுரை)**, பொ. திருஞானசம்பந்தம்.**சிவவழிபாட்டில் தொன்மை**.
47. மா. இராசமாணிக்கனார், **சைவ சமயம்**, பக. 142-143.
48. ஆ. வேலுப்பிள்ளை, **தமிழர் சமய வரலாறு**, ப. 64.
49. இர. இராமானுஜாசாரி, **சைவ சித்தாந்தம்**, ப. 109.
50. எஸ். அனவரத விநாயகம் பிள்ளை, **சைவ சித்தாந்த வரலாறு**, ப. [illegible]
51. ந.சி. கந்தையா பிள்ளை, **சைவ சமய வரலாறு**, ப. [illegible]
52. இர. இராமானுஜாசாரி, **சைவ சித்தாந்தம்**, ப.112.
53. எஸ். அனவரத விநாயகம் பிள்ளை, **சைவ சித்தாந்த வரலாறு**,ப. 42.
54. இர. இராமானுஜாசாரி, **சைவ சித்தாந்தம்**,ப. 118.
55. எஸ். அனவரத விநாயகம் பிள்ளை, **சைவ சித்தாந்த வரலாறு**, ப.48.
56. ப. அருணாசலம், **இந்து சமயம் - ஓர் கையேடு**, ப. 86.
57. அருணந்தி சிவாசாரியார், **சிவஞான சித்தியார் சுபக்கம்**, செ.1,2,4,7,12.
58. திரு.115.
59. அ.சுத்தானந்த பாரதியார், **சிவஞான தீபம்**, ப. 129.
60. **திருவாசகம், குழைந்த பத்து**, செ.5.
61. உமாபதி சிவாசாரியார், **சிவப்பிரகாசம்**, செ.17, பக். 11-12.

62. **தொல்காப்பியம், பொருளதிகாரம்,** நூற்பா. 4.
63. ந. சுப்பு ரெட்டியார், **சைவ சமய விளக்கு,** ப. 34.
64. சி. அருணைவடிவேல் முதலியார், **சித்தாந்தத் தெளிவியல்,** ப.58.
65. **சிவஞான சித்தியார் சுபக்கம்,** செ. 90.
66. அ. சுத்தானந்த பாரதியார், **சிவஞான தீபம்,** ப.82.
67. உய்யவந்த தேவனார், **திருக்களிற்றுப்படியார்,** செ.79.
68. உமாபதி சிவம், **வினா வெண்பா (மெய்கண்ட சாத்திரம் பதினான்கு-பகுதி-II),** ப. 56, செ.10.
69. **சிவஞான சித்தியார் சுபக்கம்,** செ.110.
70. பி.நா. சிதம்பர முதலியார் (பதி.), **கட்டளைகல்கொத்து,** ப.198.
71. கே. ஆறுமுக நாவலர், **இந்துமத இணைப்பு விளககம்,** ப. 106.
72. **திருவாசகம், அறிவுறுத்தல்,** ப.28, பா.15. 73. திரு.2015.
74. மேற்படி. 270
75. **தாயுமான அடிகள் திருப்பாடல்கள்,** பா.205.
76. **சிவஞான சித்தியார் சுபக்கம்,** செ. 92.
77. உமாபதி சிவம், **திருவருட்பயன், மெய்கண்ட சாத்திரம் பதினான்கு - பகுதி-II,** ப.62.
78. **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** ப. 383.
79. அருணைவடிவேல் முதலியார், **சித்தாந்தத் தெளிவியல்,** ப. 95.
80. **சிவஞான சித்தியார் சுபக்கம்,** ப. 83, செ.83.,
81. மேற்படி, செ.82, 82. மேற்படி, செ. 50.
83. மேற்படி, செ.104.
84. அருணைவடிவேல் முதலியார், **சித்தாந்தத் தெளிவியல்,** ப.93.
85. **திருவருட்பயன்,** செ.32 86. **சிவப்பிரகாசம்,** செ. [illegible]
87. கா. சுப்பிரமணியம், **தமிழர் சமயம்,** ப. 46.
88. அ. சுத்தானந்த பாரதியார், **திருமந்திர விளக்கம்,** ப. 14.
89. வ.ஆ. தேவசேனாபதி, **சைவ சித்தாந்த அடிப்படைகள்,** பக்.3[illegible]
90. **கலைக்களஞ்சியம் - தொகுதி-4,** ப.711.
91. கே. ஆறுமுக நாவலர், **இந்தும விளக்கம், (இரண்டாம் பாகம்),** ப. 7.
92. **சிவஞான சித்தியார் சுபக்கம்,** செ. 166.
93. இர. இராமானுஜாசாரி, **சைவ சித்தாந்தம்,** பக்.40-41.
94. **சிவஞான சித்தியார் சுபக்கம்,** செ.69
95. மனவாசகம் கடந்தார், **உண்மை விளக்கம், (மெய்கண்டசாத்திரம் பதினான்கு-பகுதி-II)** செ.34.
96. ப. அருணாசலம், **இந்து சமயம் - ஓர் கையேடு,** ப. 97.

97. கா. சுப்பிரமணிய பிள்ளை, **தமிழர் சமயம்,** ப.47.
98. வி. பலராமையா, **கடவுளும் மோட்சமும்,** ப. 21;
99. மா. இரத்தினசபாபதி, **காயசித்தி,** ப. 32.
100. ந. சுப்பு ரெட்டியார், **சைவ சமய விளக்கு,** ப. 129.
101. பொ. சுப்பிரமணிய பிள்ளை, **சித்தாந்தச் செம்பொருள் விளக்கம்**, பக்,27-28.
102. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** ப.214, நூற்பா.7.
103. சி. அருணைவடிவேல் முதலியார்,**சித்தாந்தத் தெளிவியல்,**ப. 136.
104. ப. அருணாசலம், **இந்து சமயம் - ஓர் கையேடு,** ப. 194.
105. சி. அருணைவடிவேல் முதலியார், **சித்தாந்தத் தெளிவியல்,** ப. 37.
106. மேற்படி, ப.129.
107. மேற்படி, ப. 122.
108. மேற்படி, ப. 124.
109. மேற்படி, ப. 125.
110. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** ப. 122.
111. **சிவஞான சித்தியார் சுபக்கம்**, செ. 234.
112. ச. கங்காதரன், **சைவ சித்தாந்த அடிப்படைகள் கொள்கைகள்,** ப. 61.
113. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்**, நூற்பா,6.
114. **சிவஞானசித்தியார் சுபக்கம்,** செ. 227.
115. **சிவப்பிரகாசம்,**பக்.25-26, செ.37.
116. **சிவஞானசித்தியார் சுபக்கம்,** செ.229.
117. சிவாக்கிரயோகிகள், **சிவநெறிப் பிரகாசம்,** செ. 45.
118. **சிவஞானசித்தியார் சுபக்கம்,** செ. 181.
119. **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** ப. 253.
120. அருணைவடிவேல் முதலியார், **முப்பொருள் இயல்பு,** ப. 5.
121. **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** ப.79.
122. சி. அருணைவடிவேல் முதலியார், **முபபொருள் இயல்பு,** ப.12.
123. **திருவருட்பயன்,** செ. 23.
124. மேற்படி, செ.19.
125. சி. அருணைவடிவேல் முதலியார், **சித்தாந்தத் தெளிவியல், ப. 146.**
126. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** ப. 147.

127. **சிவப்பிரகாசம்,** செ. 32.128. **சிவப்பிரகாசம்,** செ. 28.
129. ப. அருணாசலம், **இந்து சமயம் - ஓர் கையேடு,** ப. 97.
130. கு. திருஞானசம்பந்தசாமி பிள்ளை, **சைவ சித்தாந்த வினாவிடை,** ப. 75.
131. ப. அருணாசலம், **இந்து சமயம் - ஓர் கையேடு,** பக். 94-95.
132. இரா. மாணிக்கவாசகம், **நம்நாட்டுச் சித்தர்கள்,** ப. 255.
133. **சிவப்பிரகாசம்,** செ. 22.
134. **சிவஞானசித்தியார் சுபக்கம்,** செ. 191.
135. மனவாசங்கடந்தார், **உண்மை விளக்கம் (மெய்கண்ட சாத்திரம் பதினான்கு-பகுதி-II)** ப. 48.
136. சி. அருணைவடிவேல் முதலியார், **முப்பொருள் இயல்பு,** ப.39.
137. **சிவஞானசித்தியார் சுபக்கம்,** செ. 128.
138. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** ப. 273.
139. மனவாசங்கடந்தார், **உண்மை விளக்கம் (மெய்கண்ட சாத்திரம் பதினான்கு-பகுதி-II)** செ.13.
140. மேற்படி, செ.9. 141. மேற்படி, செ. 10.
142. வி. பலராமையா, **சித்தர் மெய்ப்பொருள்,** ப. 19.
143. கு. திருஞானசம்பந்தசாமி, **சைவ சித்தாந்த வினாவிடை,** பக். 78-79.
144. வி. பலராமையா, **அமுத கலசம்,** முகவுரை, ப.
145. ந. சுப்பு ரெட்டியார், **சைவ சமய விளக்கு,** ப. 397.
146. **தேவாரம்** - அப்பர், 4:76:4. 147. திரு.செ.2682.
148. சி. அருணைவடிவேல் முதலியார், **சித்தாந்தத் தெளிவியல்,** ப. 189.
149. ந. சுப்பு ரெட்டியார், **சைவ சமய விளக்கு,** ப. 265.
150. அ. சுத்தானந்த பாரதியார், **சிவஞான தீபம்,** ப. 143.
151. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** ப. 144.
152. க. வச்சிர வடிவேல் முதலியார், **சைவமும் வைணவமும்,** ப.80
153. இர. இராமானுஜாசாரி, **சைவ சித்தாந்தம்,** ப. 96.
154. **சிவஞானசித்தியார் சுபக்கம்,** செ. 270.
155. மேற்படி, செ. 271.
156. திருக்கடவூர் உய்யவந்த தேவனார், **திருக்களிற்றுப்படியார்,** செ. 22.
157. ந.சி. கந்தையா பிள்ளை, **தமிழ் இந்தியா,** ப. 203.
158. திரு.வி. கலியாணசுந்தரனார், **உள்ளொளி,** ப. 86.

159. வி. பலராமையா, **சாகாக்கலை,** ப. 24.
160. ந. சுப்பு ரெட்டியார், **சைவ சமய விளக்கு,** ப. 357.
161. **தாயுமானவர் பாடல், பராபரக்கண்ணி,** 157.
162. **சிவப்பிரகாசம்,** செ. 70.
163. **சிவஞானசித்தியார் சுபக்கம்,** செ. 278.
164. சி. அருணைவடிவேல் முதலியார், **சித்தாந்தத் தெளிவியல்,** ப. 227.
165. ப. அருணாசலம், **சைவ சமயம் - ஓர் அறிமுகம்,** ப. 97.
166. சி. அருணைவடிவேல் முதலியார், **சித்தாந்தத் தெளிவியல்,**ப. 214.
167. ப. அருணாசலம், **சைவ சமயம் - ஓர் அறிமுகம்,** பக். 135- 136.
168. ப. அருணாசலம், **இந்து சமயம் - ஓர் கையேடு,** ப. 97.
169. **சிவப்பிரகாசம்,** செ.8.
170. உமாபதி சிவம், **கொடிக்கவி (மெய்கண்ட சாத்திரம் பதினான்கு, பகுதி-II), செ.4.**
171. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** ப. 244.
172. மா. இரத்தினசபாபதி பிள்ளை, **சாகாக்கலை,** ப. 9.
173. **சிவஞானசித்தியார் சுபக்கம்,** செ. 281.
174. **தாயுமானவர் பாடல்கள், பராபரக்கண்ணி,** செ. 357.
175. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** நூற்பா-12.
176. **சிவப்பிரகாசம்,** ப.35, செ.50.
177. இராமலிங்க அடிகள். **திருவருட்பா,** செ. 4904.
178. வி. பலராமையா, **கடவுளும் மோட்சமும்,** ப. 30.
179. மனவாசங்கடந்தார், **உண்மை விளக்கம்,** ப. 65, செ. 44.
180. இர. இராமானுஜாசாரி, **சைவ சித்தாந்தம்,** ப. 105

181. உமாபதிசிவம், **உண்மைநெறி விளக்கம், (மெய்கண்ட சாத்திரம் பதினான்கு, பகுதி-II)** ப.74, **செ.2.**
**182. மேற்படி, ப.77, செ.4.**
**183. சி. அருணைவடிவேல் முதலியார்,** சித்தாந்தத் **தெளிவியல்,** ப. 234.

*****

# 2. சித்தர் - சொல் விளக்கமும் வரலாறும்

## சித்தர் - சொல் விளக்கம்

சமயத் துறையிலும் சமுதாயத் துறையிலும் ஒரு புரட்சியை ஏற்படுத்தி, ஓரிறைக் கொள்கையையும் சமத்துவ நெறியையும் நிலை நாட்டியவர்கள் சித்தர்கள் ஆவார்கள். அவர்கள் சித்த மார்க்கத்தால் இறைமையை உணர்ந்தவர்கள். சித்தம், சித்தர் பற்றிய சொல் விளக்கம், சித்தர் பாடல்கள், அவர்தம் வரலாற்றுச் சுருக்கம் முதலியன பற்றி இவ்வியல் விரிவாக ஆராய்கின்றது.

## முனிவர்

அறவழியில் ஒழுகும் சான்றோர்களாக முனிவர், ரிஷி, சித்தர் ஆகிய மூவரும் குறிக்கப்படுகின்றனர்.[1] முனிவர் என்ற சொல் 'மன' என்பதின் அடியாகத் தோன்றியது; மன - அனி - முனி எனலாம். **மனம்** என்பதற்கு இச்சொல்லே மூலமாகும். மனத்திற்கு அன்னிய மானவற்றை அகற்றியவர் என்பது இதன் பொருளாகும்.[2] நம் இலக்கியங்கள் முனிவர் என்னும் சொல்லுக்குப் பல்வேறு பொருள் களைத் தருகின்றன. **முனி** என்பது **சினம்**,[3] **துன்பம்**,[4] **வெறுப்பு**,[5] ஆகிய பொருள்களில் குறிக்கப்படுகின்றது.

**"தெய்வ மால்வரைத் திருமுனி யருள"**[6] என வரும் இடத்தில் **அகத்தியர்** குறிக்கப்படுகின்றார். **பெருந்தவ முனிவர்**[7] எனப் புத்தர் குறிக்கப்படுகின்றார். மன் - உ - இ - முனி எனவும் பிரித்துப் பரம்பொருளைப்பற்றி அறிந்தவர் எனவும் பொருள் கொள்ளுதல் சாலும். 'மன்' என்பதற்கு அறிதல் அல்லது நினைத்தல் என்பது பொருள்.[8] முனிவர்களைச் சமுதாயச் சீர்திருத்தவாதிகள் எனலாம்.

உறங்கிக கிடந்த உள்ளங்களில் ஏன்?, எதற்கு?, எப்படி? என்று சிந்திக்கும் உணர்வினைத் தட்டியெழுப்பிப் புதியதோர் உணர்விற்கு வழிவகுத்த கிளர்ச்சி விதை சாக்ரடீசும், இங்கர்சாலும் எனப்படுவர்.

## ரிஷி

ரிஷிகள் பழையன நீக்கிப் புதியன கண்டு மக்களைத் தெளிவித்த தொண்டர்கள். இருடி எனத் தமிழில் குறிக்கப்படும் ரிஷி என்னுஞ் சொல் 'த்ர' என்பதன் வேர்ச் சொல்லாகப் பிறந்தது. சிந்தித்தறிதல் என்பது இதன்பொருள். திருஷ்டி என்னும் சொல்லுக்கு இதுவே அடிச்சொல்லாகும்.[9] ஆதலால், கண்டுபிடிப்பவர்களுக்கு ரிஷி என்பது பெயர். அறிவியல் அறிஞர்களையும் மருத்துவ முன்னோடிகளையும் ரிஷி எனக் கூறலாம்.

## சந்நியாசி

மனிதன் தன்னைப் பக்குவப்படுத்தியதன் பயன் அனைத்தும் சந்நியாசி என்னும் சொல்லில் அடங்கும். தன்னடக்கத்தால் விளையும் திறமைகளை யெல்லாம் துறந்துவிடும்பொழுதே ஒருவர் சந்நியாசி ஆகின்றார்.[10] தங்களிடத்துள்ள குறைபாடுகளை யெல்லாம் அகற்றிவிட்டு நிறைமையில் நிலைத்திருப்பவர்கள் சந்நியாசி யாகின்றனர்.

## ஞானி

ஞானி என்பவன் சித்துவழியில் தன்னுள் இறைவனைக் கண்டு, கானல்நீர் போன்ற உலகப் பற்றினைவிட்டுச் சிவபத நிழலை யடைந்து ஐந்தெழுத்து மந்திரத்தை நெஞ்சில் வைப்பவயோவன்.[11] மெய்ஞ்ஞானி உலகைப் பார்க்கும்பொழுது சிவமும் அவனுக்குத் தோன்றும். சேவை செய்கின்றவனே சிறந்த ஞானியாவான். மரணத்தைத் தவிர்த்து ஞானசித்தி பெற்றவனே ஞானி; அறிஞர். அஃதாவது, உண்மை நிலையை யடைந்தவன்.[12] ஆதலால், ஞானிகள்தான் சமுதாயத்தை அரசு புரியவேண்டும். ஆகவே, ஞானமும் அரசியல் தன்மையும் ஒரு கையில் இணைந் திருக்கவேண்டும்.[13] அவ்வாறு இருப்பின் நாடு நலமும் வளமும் பெறும். உண்மை ஞானமடைந்தவனுக்குக் கண்களுக்குப் புலனாகும் பருவுடல் இல்லையாதலால், அவனுக்கு இறப்பில்லை;

பிறப்பில்லை என்று சித்தி பெற்றவர்களாகிய சித்தர்கள் சொல்கின்றனர். சமயத்துறையில் உயிராய் உடலாய் இணைந்து இறையுணர்விலேயே மூழ்கித் திளைத்து உலக வாழ்வில் ஈடுபடாமல் தாமரை இலைத் தண்ணீர்போல் இருப்பவர்கள் ஞானிகள் எனப்படுவர்.[14] கயிலாயம் என்பது தத்துவம் கடந்த அருள் நிறைந்த இடமாகும். இதனைச் சிவஞானிகளே உணர்வர்.[15] இறைவனை அடையும் நெறிகளாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவற்றுள் ஞானநெறி மூலம் இறைவனை அறிந்தவரே ஞானியாவர்.

## முத்தர்

'முத்தர்' என்ற சொல் விடுபட்டவர் என்று பொருள்படும். இத்தகைய முத்தி யடைந்த ஆன்மாவை 'முத்தனார்' என்று பெருமையுடன் குறிப்பிடுகின்றனர் ஆழ்வார்கள்.[16] இவ்வுலகத்துத் தளைகளைக் களைந்து பரமபதத்தினை அடைந்து இன்பம் துய்ப்பவர் முத்தராவர்; ஆணவம், கன்மம், மாயை ஆகிய மலமகன்றோர் எனலாம். அவர்களுக்கு வினைவழி வந்த மாயாவுடல் இறந்துவிடும். முத்தர்களுக்கு உடல் இருப்பினும் அதைச் சார்ந்து அவர்கள் வாழ்தல் இல்லை.[17] முத்தர்களின் முத்திநிலை சாயுச்சிய நிலைக்கு வித்தாகிய மூலமந்திரமாகும்.[18]

## சித்தர்

தமிழ்ச் சித்தர்கள் உலகமெங்கும் பரவி உலக ஒருமைப் பாட்டிற்கு வழி வகுத்தவர்கள். மண்ணுலகத்திலேயே அமர வாழ்வைப் பெற்றுக் காலத்தையும் வென்று வாழ்ந்தார்கள்.

## சித்தர் - சொற்பொருள் விளக்கம்

சித் - அறிவு. சித்தை உடையவர்கள்; அறிவு படைத்தவர்கள் சித்தர்கள். சித்தம் என்பதற்கு அறிவு என்னும் பொருள் உண்டு. ஆகவே, சித்தர்கள் என்றால் அறிஞர்கள், மேதைகள், பேரறிவு படைத்தவர்கள், விஞ்ஞானிகள், மெய்ஞ்ஞானிகள் என்று பொருள் சொல்லுவதே பொருத்தமாகும்.[19]

சித்தாவது ஆத்ம சக்தியினின்றும் எழுவதாகும். சித்தத்தைச் சிவன்பால் வைத்துச் சிந்தனையில் மூழ்கிச் சித்தத்தைஒடுக்கி

யவர்கள் சித்தர்கள். சித்தத்தை வென்றவன் சித்தன் என்றும் அவனது அருளனுபவ நிலை சித்து அல்லது சித்தி என்றும் கூறலாம்.[20]

சித்தி என்ற சொல்லுக்கு அடைதல் என்பது பொருள். பெறத்தக்க பேறாகிய சாயுச்சிய நிலையை அடையப் பெறுதலே - சித்தி எனவும், அடைந்தவரே சித்தர் என்றும் கருதலாம்.[21]

இறைவனை அடைந்தவர்; சீவன் முத்தர்; மரணமில்லாப் பெருவாழ்வு வாழ்ந்தவர் எனச் சித்தருக்குப் பல்வேறு பொருள் கூறுவர். திருவண்டப்பகுதி இறவாநிலை பற்றி இயம்புகிறது. அந் நிலையைப் பெற்றோர் சித்தராவர்.

சித்தன் என்னுஞ் சொல்லுக்கு உலகில் பல பெயர்கள் வழங்கப்படுகின்றன. நந்தி, நாதன், அருகன், புத்தன், குமரன், தீர்க்கங்கரன், தீர்க்கதரிசி, கிறித்து, நபி, குரு, ஆச்சாரியன் முதலியன.[22] இப்பெயர் வேற்றுமையைக் கருதாது, செப்புமொழி பதினெட்டிருப் பினும் சிந்தனை ஒன்றுடைய பாரதத்தாய் போன்று பொருள் ஒற்றுமையில் கருத்துச் செலுத்துவதே சிறப்பாகும்.

## சித்தம் - சொல் விளக்கம்

'சித்தம்' என்பது நினைவு. அது எண்ணம் என்பதில் அடங்கும். ஒருவன் எதையாவது திண்ணமாக எண்ணிக் கொண்டிருந்தால் எண்ணிய பயனை அவன் அடைகின்றான் என்பது திண்ணம்.[23] சித்து என்னும் சொல் சித்தம்[24] என்ற சொல்லினின்று வந்திருக்கலாம். சித்த என்பது அந்தக்கரணங்களில் ஒன்று எனச் சித்தாந்தம் கூறுகிறது. அசுத்த மாயையிலிருந்து தோன்றுவதே சித்தம்.[25] இச்சித்தத்தி லிருந்து ஐம்பொறிகளும், இவை ஐந்தில் ஒவ்வொன்றும் கரியம் செய்வதால் கர்மேந்திரியங்களும் தோன்றி அடங்குகின்றன. மனம், அறிவு, நினைவு, முனைப்பு என வகுக்கப்பட்டு அகக்கருவிகள் நான்கும் அனைத்துப் பிணிகளையும் உண்டாக்குவன வாகும்.[26] இங்ஙனம் சித்தம் என்னும் சொல்லிற்குப் பொருள் வழங்கப்படுகின்றன.

## சித்தம் - சொல் திரிபு

'சித்து' என்னும் சொல்லுக்கு 'அடைதல்' என்பது பொருள். இதனைக் 'காரியம் சித்தியாச்சு', 'சொன்னது சித்தியாச்சு' போன்ற பேச்சுவழக்காலும் அறியலாம்.

"சீரி லுயரட்ட சித்தியார்க்குஞ்
சித்திக்கு மேசிவன் செயலினால் பக்தி"[27]

எனக் **கடுவெளிச் சித்தர்** குறிப்பிடுகின்றார். **சித்தி** என்ற சொல்லுக்குப் பேறு அல்லது நல்வாய்ப்பு என்ற பொருளும் இருப்பதாகத் தெரிகின்றது.[28] உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே[29] என்பது போன்று பேறு என்ற சொல் இறை இணைப்புப் பண்பாகிய சிறந்த வாய்ப்பினையே குறிக்கும். இவ்வாய்ப்பினைப் பெறுதல் **சித்தி** எனவும் இவ்வாய்ப்புப் பெற்றவர்களைச் **சித்தர்** எனவும் குறித்தனர்.

சித்தி என்பது சித்தியாதல் அல்லது நிறைவு பெறுதலாகும். சிவம்பற்றி ஞானம் சித்தியாதல் சிவஞானசித்தி என்பதுபோல், பூதங்கள் சித்தியாதல் பூதசித்தி; கரணஞ் சித்தியாதல் கரணசித்தி; இந்திரியங்கள் சித்தியாதல் இந்திரிய சித்தி எனப் பொருள் தரும்.[30] இங்கு ஆன்மா இறைவனோடு இரண்டறக் கலக்கும் வீடுபேறான நிலையே சித்தி என்பதாகும்.

## சித்தம் - இலக்கியச் சான்று

திருவாசகத்தில் சித்தமலம்,[31] சித்தம்[32] என்ற சொற்கள் வந்துள்ளன.

"சித்தம் செவ்வை நில்லா
தென் செய்கேன் தீவினையேன்"[33]

எனச் சிந்தை ஒருவழி நில்லாது என்ற பொருளில் **பிரபந்தம்** சித்தத்தைப்பற்றிச் சுட்டுகிறது.

சங்க இலக்கியங்களில் சித்தம் என்ற சொல் வழக்கற்று இருந்தது. ஆனால், தன் சித்தத்தை இறைவன்பால் வைத்த பக்தி இலக்கியக் காலத்தில்தான் சித்தம் என்ற சொல் மலர்ந்திருக்கலாம் எனக் கருத இடம் உண்டு.

## சித்தி - இலக்கியச் சான்று

சித்தி, சித்து, சித்தம் பற்றிய சொற்கள் சங்க இலக்கியங்களில் கையாளப்படவில்லை. திருவிளையாடற் புராணத்தில் **சிவன்** எல்லாம் வல்ல சித்தராய் வந்து சித்தர்களின் பெருமை, சித்தர்களின் தன்மை ஆகியவற்றை விளக்குவதிலிருந்து தெரிய வருகிறது.

இறைவன் நம் அன்றாடம் காணுகின்ற தாயாகவும் தந்தையாகவும் தமராகவும் அனைத்துத் தேவதைகளாகவும் விளங்குகின்றான். நம் சிந்தையும் சிந்தையின் தெளிவாகவும், வித்தும் அதன் விளைவுமாகவும், சித்தியும் முத்தியும் தானாகவும் திகழ்கின்றான்.

"சித்திநெறி கேட்டல் செக மயக்கஞ் சம்மமற
கேட்டல் முறைகாண் பராபரமே"[34]

எனத் தாயுமானவரும்,

"சித்தியில் முழுதுந் தெரிந்தமை"[35]

என வள்ளலாரும் சித்தி அனுபவம்பற்றிக் குறிப்பிடுகின்றனர்.

சித்தி பெறுதலே முத்தியாகும் என்பது சித்தர் நெறியாகும். 'எனக்குள் நீ, உனக்குள் நான்' என்ற நிலையை உருவாக்கவேண்டும். இதனை,

"சத்தியும் முத்தியும் சேர்ந்ததுதான் சித்தி"[36]

என்று சிவவாக்கியரும், சித்தான மூன்றெழுத்துச் செயலால் சோதியை இலட்சவுரு செபிக்கச் சித்தி முற்றிடும்[37] என்று **இராமதேவரும்** உணர்த்துகின்றனர். சித்தர் அனைவரும் இறைவனைத் தன் சித்தத்துள் கொண்டு பல அற்புதமாகிய சித்தியைப் பெற்றனர்.

**சித்து** என்பது பேரறிவு; **ஆனந்தம்** என்பது பேரின்பம்; பேரறிவுப் பெரும்பொருளான கடவுளை உணர்த்தும் 'சித்' என்ற சொல்லின் அடியாகச் 'சித்து', 'சித்தன்' என்னும் சொற்கள் தோன்றியிருக்கலாம்.[38] ஆதலின், சித்தத்தைச் சிவன்பால் கொண்டு சித்தி அனுபவம் பெற்றுச் சித்தாகிய பேரின்ப நிலையை அடைந்தவனே சித்தன் எனப்படுவான் எனக் கொள்ளலாம்.

## சித்தி வகைகள்

சித்தத்தைச் சிவன்பால் வைத்தவருக்கு அவன் தரும் ஆற்றலே சித்தி எனப்படும். சித்தி பெற்றவராகிய வள்ளலாரும் தாம்பெற்ற மூவகைச் சித்திகளையும் எடுத்துரைக்கின்றார். சித்தர்களும் அறுபத்து நான்கு வகைச் சித்திகளைக் குறிப்பிடுகின்றனர்.[39] அவற்றுள் **கருமசித்தி, யோகசித்தி, ஞானசித்தி** ஆகியவற்றின் சிறப்புகளைக் காணலாம்.

## கருமசித்தி

ஆதிபகவன்போன்று முடிவில்லாக் காலம்வரை வாழும் நிலையினை இச்சித்தி நல்கும். இதனைக் '**கல்பசித்தி**' என்பர். இச்சித்தி இறைநிலையை எய்தும் மாற்றத்திற்கான முதல்நிலையாகிய அபரமார்க்கத்தைத் தரும் அந்நிலையை எய்தியவர் **அபரமார்க்கி** எனப்படுவர்.[40] இச்சித்தியை **அணிமா, லகிமா, மகிமா, கரிமா, பிராத்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம்** என எண்வகைகளாகப் பிரிக்கலாம். இந்தச் சித்திகளின் வயத்தால் இறந்தவர்களை மீண்டும் உயிர்பெறச் செய்யலாம் என்று கண்டிருக்கின்றனர்.[41]

## யோகசித்தி

சித்தர்கள் கூறும் அறுபத்து நான்கு சித்திகளும் இதில் அடங்கும். இச்சித்தியை அடைந்தவர்கள் தாம் நினைத்த செயலை முடிக்கும் ஆற்றலைப் பெறுவர். மண்ணினுள் புதைந்த உடலை மீண்டும் 12 ஆண்டுமுதல் 108 ஆண்டுக்குள் யோக சித்தியால் உயிர் பெறச் செய்யமுடியும்.[42]

## ஞானசித்தி

இஃது அறுபத்து நான்கு சத்தியாகிய சித்திகளையும் தம் விருப்பப்படி நடத்துகின்றது. 688 கோடி மாறுபட்ட சித்திகளையும் புரிகிறது. அடிநிலை, முடிநிலை, சுத்தகர்மா, சுத்தயோக, சுத்த ஞானசித்திகளின் செயல்களை எடுத்துரைக்கின்றது.[43]

சித்தர்கள் ஞானசித்தி நிலையைப்பற்றிக் கூறும்போது ஞானசித்தியடைவதே சித்தர்களின் முடிந்த முடிபு. இறைவனடி காணின் அட்டமா சித்திகளும் எளியனவாம். தான் அவனாகவும், அவன் தானாகவும் பிரமாணிப்பதே ஞானசித்தி.[44] மேற்குறிப்பிட்ட **இராமலிங்க அடிகளின்** சித்தி நிலைகளையும் சித்தர்களின் சித்தியினையும் நோக்க, எல்லாம்வல்ல சித்தி வாய்க்கப் பெற்றவரே **சித்தர்** எனப்படுவர் என்பதை அறியலாம்.

## சித்தர்

சித்தி என்பதற்கு இறைவனோடு ஆன்மா இரண்டறக் கலக்கும் அனுபவநிலை என்பது பொருள்.[45] இங்ஙனம் இறைவனோடு நேரடித் தொடர்புகொள்ளும் தன்மையே '**மிஸ்டிசிஸம்**' ஆகும்.

இதனை ஆரம்ப நிலையில் கிருத்துவர் ஆழ்ந்த சிந்தனை என்ற சொல்லையே பயன்படுத்தி வந்தனர். மேற்கு நாடுகளுக்கு இச்சொல் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் அறிமுகம் செய்யப்பட்டது என்கின்றார் **ரஸ்ஸ்.**[46]

சித்தர்களைப்பற்றிச் சிந்திக்கும்போது சீன தேசத்துப் பழங்கால ஞானியரான **தாவோயிகள் (Taoists)** நினைவுக்கு வராமற் போகார். இரு சாராருக்கும் மிக நெருங்கிய ஒற்றுமைகள் உள்ளன. தமிழகத்துச் சித்தருக்கும் தாவோயிகளுக்கும் ஒப்புமைகள் மட்டு மன்றி, நேரடியான தொடர்புகளுமிருக்கின்றன. இவர்களின் தத்து வங்கள் ஏறத்தாழ ஒரே தன்மையன.[47]

தூய தனித்தமிழினத்தவரிடையே மிகவும் உயர்மதிப்புக்குரிய வர்கள் **அறிவர்** அல்லது **சித்தர்களே.** அவர்கள் காலத்தின் மூன்று கூறுகளையும், அஃதாவது, மூன்று காலத்தையும் அறிந்தவர்களாகக் கருதப்பட்டனர். அவர்கள் ஒதுங்கிய சமய வாழ்வு வாழ்ந்ததால், பெருநகரங்களுக்கு வெளியிலேயே தங்கியிருந்தனர். பார்ப்பார் ஆடல் நங்கையருடனும் கூத்தியருடனும் ஊடாடத் தயங்க வில்லை. காதலரிடையே தூதுவராகச் செல்லவும் தயங்க வில்லை. ஆனால், அறிவர்கள் இவற்றிலிருந்து முற்றிலும் விலகி யிருந்தனர்.[48] சித்தர்களை அழிக்கும்படியாகப் **பிராமணர்கள்,** தங்களை ஆதரித்த அரசர்களைத் தூண்டினர். சித்தர்கள் வாழ்ந்த குகையை இடிக்கவும் செய்தனர். இதுவே, **'குகை இடிக் கலகம்'** ஆகும்.[49]

சித்தர்கள் ஆரியக் கொள்கையை எதிர்த்து நின்ற காரணத்தால் ஆரியர்களாலும் ஆரியர்களுக்கு அடிமைப்பட்டவர்களாலும் தாழ்ந்த சாதியினர் எனத் தள்ளப்பட்டனர்.[50] சித்தர்கள் எத்தன்மையவர் என்பதைப் **பட்டினத்தார்,** பேய் போற்றிரிந்து, பிணம்போல் கிடந்து, இட்ட பிச்சை எல்லாம் நாய்போல் அருந்தி, நரிபோல் உழன்று, நன்மங்கையரைத் தாய் போல் கருதும் தன்மையர்[51] என்று குறிப்பிடுகின்றார். சித்தர்கள், சங்கரரின் ஒருமை வாதத் தத்துவத்தையும், இந்துக்களின் விக்கிரக வழிபாட்டையும் எதிர்த்து மறுத்தனர். இவர்கள் வைதிக சமயத்தை எதிர்த்து நின்றனர்[52] என்பதையும் அறியலாம்.

## சித்தர்களின் காலம்

சித்தர்களின் காலத்தை நோக்கும்போது, நீண்டகாலமாகச் சித்தர் மரபு இருந்து வந்திருக்கவேண்டும். அவர்களின் காலத்தை அறுதியிட்டுச் சொல்லுதல் இயலாது. சித்தர்கள் யுகங்களையும் வென்று வாழும் இயல்புடையவர்கள். **மணி, மந்திரம், மருந்து** இவற்றோடு ஆன்மிகப் பயிற்சியிலும் மரணமிலாப் பெருவாழ்வைப் பெற்றவர்கள் இவர்கள். இத்தகைய இயல்புடைய சித்தர்களின் காலத்தைக் கணிப்பது என்பது அத்துணைப் பொருந்துவதாக இல்லை.

**'முக்கட் செல்வர்'** அறிவர் மரபில் தோன்றியதாகக் கொள்ளலாம். **முதல் அறிவரே'** முதல் சித்தராகத் திரிபாகி இருத்தல்வேண்டும். எனவே, சித்தர் குமரிக் கண்டத்திலிருந்து தோன்றியிருக்கவேண்டும் என்று கூறுகின்றார்[53] க. வெங்கடேசன். சங்க காலத்திற்கு முன்பிருந்தே சித்தர்கள் பலர் மருத்துவ நூல்களைச் செய்துள்ளனர். **திருவள்ளுவர், தொல்காப்பியர், ஔவையார்** முதலியோரைச் **சித்தர்** என்றே கூறலாம்.[54] பதஞ்சலி யோக அறிவு பரவியிருந்த காலமும் சித்தர் காலமும் ஒன்றாகும். எனவே, எண்சித்துகளைப் பற்றியும் யோகநெறி பற்றியும் ஒரு தனியறிவுடைய நூலையளித்தவர் **திருமூலர்.**[55] சித்தர்கள் காலத் தொடக்கம் ஏறக்குறைய கி.பி.5ஆம் நூற்றாண்டு தொடங்கி இன்றுவரை தொடர்கிறது எனக் கொள்வது ஏற்படைத்தாகும். சித்தர்களின் காலத்தை உண்மையில் ஆராய்ந்தால் சிவனின் காலமே யாகும். சிவனே முதல் சித்தன் என்னும் கருத்து சித்தர்கள் மத்தியில் இருந்து வருகிறது. [56] அருணாசலம்,[57] சதாசிவ பண்டாரத்தார்[58] ஆகியோர் சித்தர்கள் காலம் கி.பி. 5,6ஆம் நூற்றாண்டில் தொடங்கியது என்றும், செல்வநாயகம் கி.பி. 6-9ஆம் நூற்றாண்டு ஆகும்[59] என்றும் கூறுகின்றனர். சரித்திர ஆசிரியர்கள் சிலர், சித்தர் காலம் கி.பி. பத்தாம் நூற்றாண்டு என்று குறிப்பிடுகின்றனர்.[60] பெரும்பாலான சித்தர்கள் கி.பி. பத்தாம் நூற்றாண்டிற்குள் தோன்றியுள்ளனராதலின் கி.பி.ஐந்தாம் நூற்றாண்டிற்கும் கி.பி. பத்தாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலமே சித்தர்களுக்கு உரிய காலம் எனலாம்.[61] 10-11ஆம் நூற்றாண்டுகளில் பட்டினத்தாரும் பிற சித்தர்களும் வாழ்ந்தனர் எனலாம்.[62] சேக்கிழார் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டாதலின் அந்நூற்றாண்டுக்கு முன்னரே சித்தர்கள் காலம் தொடங்கிவிட்டது என்பது தெளிவு.[63] சித்தர்கள் காலம் கி.பி. 8-14ஆம் நூற்றாண்டுக்குள் அடங்கும் எனப் பூர்ணலிங்கமும்[64] 14ஆம் நூற்றாண்டுயென

மு. இராதாகிருஷ்ணனும், 15ஆம் நூற்றாண்டு எனத் தெ.பொ. மீனாட்சிசுந்தரமும், கி.பி. 16,17ஆம் நூற்றாண்டு எனக் **கால்டுவெல்**[65] அவர்களும் குறிப்பிடுவர்.

மேற்கண்ட சான்றுகளைக்கொண்டு ஆராயின் திருமூலரின் காலம் கி.பி. 5 ஆம் நூற்றாண்டிற்கும் முற்பட்டதாகும். எனவே, சித்தர்களின் காலத் தொடக்கம் 5 ஆம் நூற்றாண்டிற்கு முன்பிருந்தே கணக்கிடலாம். சித்தர்கள் காலத்தைக் கடந்தவர்களாதலால் அவர்களின் காலம் இதுதான் என அறுதியிட்டுச் சொல்ல முடியாது.

## இலக்கியங்கள் காட்டும் சித்தர்கள்

பழம்பெரும் இலக்கணமாகிய தொல்காப்பியத்திலும்,[66] சங்க இலக்கியங்களிலும், திருக்குறளிலும்[67] சித்தர் என்ற சொல் இல்லையெனினும் குறிப்புப் பெயராக **நிறைமொழி மாந்தர்** எனக் குறிக்கின்றது. **குறுந்தொகைப் பாடல்** ஒன்று சித்தரைப்பற்றிக் குறிப்பாக எடுத்துரைக்கிறது. தோழி! நம் தலைவர் சித்தி பெற்றவர்போல் பூமியைத் தோண்டி உள்ளே புகார்; ஆகாயத்தின்கண் ஏறார்; கடல்மீது நடந்து செல்லார்[68] என்று கூறுவதன்மூலம் சித்தர் செயல்பற்றிக் குறிப்பிடுவதை உய்த்துணரலாம். சிவனைச் சித்தன் என்றும் **தேவாரம்** குறிக்கின்றது.[69] **நாவுக்கரசரும்** சிவனைச் சித்தன் என்றே அழைக்கிறார்.[70] **திருவாசகமும்** சிவனைச் சித்தன் என்றே விளிக்கின்றது.[71] சிவபெருமானைச் சித்தர்கள் போற்றிப் பரவுவதாகத் **திருவிளையாடற் புராணம்** இயம்புகின்றது.[72]

## இலக்கிய அறிஞர்களின் சித்தர்கள்பற்றிய சிந்தனை

கடவுளைக் காண முயல்பவன் பக்தன் என்றும், கண்டு தெளிந்தவன் சித்தன் என்றும் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் குறிப்பிடுவார்.[73] சித்தர்கள் எனப்படுபவர் யோகத்தின் திறனால் பல புதுமைகளைச் செய்தவர்களே யாவர்[74] என ந.சி. கந்தையா பிள்ளை இயம்புகின்றார். சித்தர் சாகா நிலையைப் பெற்றவர்கள்; காயசித்தி பெற்றவர்கள்; தம்முடைய உடம்பை அப்படியே வைத்துவிட்டு மற்றோர் உடம்பிலே புகுந்து நடமாடும் வல்லன்மை படைத்தவர்கள்[75] எனச் **சாமி சிதம்பரனார்** விளக்குகிறார். சிவப்பேறு சித்திக்கப் பெற்ற பெரியவர்களே சித்தர்கள். இச்சித்தர்கள் இறையுரையாளர் - தீர்க்க தரிசிகள் போன்றோர்கள்[76] ஆவர் என்று **தி. தயானந்தன் பிரான்சிஸ்** எடுத்துரைக்கின்றார்.

சிவத்தை நினைந்து நினைந்து சிவமானவரே சித்தராவர். அவர் **நரைதிரை, மூப்பு, சாக்காடு** முதலியவற்றைப் பெறுவதில்லை. அவர் என்றும் ஒரு பெற்றியராய்ச் சிவந்தமேனியராய் என்றும் இளையராய், அழகராய் வாழ்வர்[77] என்பார் **திரு. வி. கலியாண சுந்தரனார்.** சித்தர்களென்பார் பண்டைக்காலத்து அறிவருள் ஒரு சாரார்[78] எனக் குறிப்பிடுகிறார் **க. சுப்பிரமணிய பிள்ளை.**

தம் வாழ்க்கை அனுபவங்களால் கண்டறிந்த உண்மைகளை மட்டுமே தெளிவாக எடுத்துச் சொல்வது சித்தர்களின் நோக்கம். இவர்கள் தத்துவஞானிகள்; மெய்யுணர்வு பெற்றவர்கள்; இவர்களில் சிலர் யோகிகளாய்ச் சிறப்புற்றவர்கள்; சிலர் மருத்துவர்களாய் விளங்கியவர்கள்[79] என்பார் **மு. வரதராசனார்.**

சமயங்களுக்கும் அதை விதிக்கும் வழிபாட்டுமுறைகளுக்கும் சித்தர்கள் கட்டுப்பட்டவர் அல்லர். அனைத்து உயிர்களிலும் ஒன்றாகிய இறைவனைக் கண்டவர்கள். சமுதாயம் திருந்த வேண்டும் என்ற விழுமிய நோக்குடன் சாதி, மதம், சடங்கு முதலியனவற்றைக் கண்டித்தவர்கள்[80] என **இரா. மாணிக்கவாசகம்** இயம்புகின்றார்.

உண்மைச்சித்தி அடைந்த சித்தர்கள் முத்தி நலமறிந்த முழு மெய்ஞ்ஞானிகளாவர்[81] என்று பலராமையா எடுதுரைக்கின்றார். சித்தர்கள் புறச் சீர்திருத்தத்திற்கு முக்கியத்துவம் அளிக்கவில்லை; அகச் சீர்திருத்தத்திற்கே முக்கியத்துவம் கொடுத்து வந்தனர்[82] என்பார் **நா. முத்தையா.** சமயம் என்ற எல்லைக்குள் நின்று இறைவனைத் துதித்த பக்தர்கள் **சைவர்** எனப்பட்டனர்; சிவனைச் சித்தனாகக் கொண்டு சமயச் சார்பற்ற நிலையில் பாடிய யோகிகள் **சித்தர்கள்** எனப்பட்டனர் என்பார் இரா. மாணிக்கவாசகம்.[83]

## சித்தர் பாடல்கள் இயம்பும் சித்தர்கள்

சித்தர்கள் தங்கள் பாடல்களிலேயே தங்களைப் பற்றி அறிமுகப் படுத்துகின்றனர்; தங்கள் இயல்புகளையும் செயற்கரிய திறன் களையும் குறிப்பிடுகின்றனர். சித்தர் கணங்களுக்கு மூலமாக விளங்கும் சித்தாந்தத் தந்தை திருமூலர் **சித்தர் யார்** என்று அறுதி யிட்டுக் கூறுகின்றார்.

**"சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன்**
**சுத்தாசுத் தத்துடன் தோய்ந்துந்தோ யாதவர்**

முத்தரம் முத்திக்கு மூலத்தர் மூலத்துச்
சத்தர் சதாசிவத் தன்மையர் தாமே"[84]

மேலும், அவர் உலகிற்கு அச்சாணியாய் அறிவொளியாய்த் திகழ்பவன் உத்தம சித்தன்[85] என்றும், சித்தர் சிவஞானஞ் சென்றெய்து வோர்களே என்றும்[86] குறிப்பிடுகிறார். "சாத்திரத்தைச் சுட்டு எரித்தால் அவன் சித்தன் "[87] என **அகத்தியரும்**, "வாலையைப் பூசிப்பவன் சித்தன்"[88] என்று **கொங்கணர், கருவூரார்,**[89] **சட்டைமுனி,**[90] **இராமதேவர்**[91] ஆகிய சித்தர்களும் விளக்கம் தருவர்.

"எழும்பாமல் வாசனையைக் கொன்றோன் ஞானி
ஏகாமல் வாசனையை யடித்தோன் சித்தன்"[92]

எனச் சட்டைமுனி கர்மவினை தோன்றாவண்ணம் செய்பவனே சித்தன் என்று விளக்கம் தருகிறார். யோகநிலையில் **குண்டலினியை** மேலே எழுப்பிப் பயன்பெறுபவன் சித்தன் என்று இராமதேவர், கொங்கணர் ஆகியோர் பொருள் கொள்கின்றனர். சக்திக்குச் சித்தை என்னும் பெயரும் உண்டு.[93] மனம் தெளிவாகிச் சிவசக்தியாகிய வீட்டில் சேர்ந்தோர் சித்தன்[94] என்கிறார் **வால்மீகர்**. இங்ஙனம் சித்தர்கள் தங்களைப்பற்றித் தான்தன் புகழ்கின்ற தன்மேன்பாட்டுரை யாகச் சொல்லாது, மக்களுக்கு அறிவுறுத்தும் முகத்தான் இறைமை யைத் தன் உடலில் காணும் நெறியை அறிவுறுத்தினர் என அறியலாம்.

## சித்தர்கள் தொகை

சித்தர்களின் தொகையைக் கணக்கிடும்போது சரியாக அறுதியிட்டுச் சொல்ல முடியாத நிலை உள்ளது. பதினெண் சித்தர் என்னும் மரபு தெரிகின்றதே தவிர, அவர்கள் யார் எனத்தெளிவாகத் தெரியவில்லை. சித்தர்கள் இத்துணைப் பேர்கள்தான் தோன்றி னார்கள் என்று குறிப்பிடாத நிலையில், இன்றும் மலைப்பகுதியில் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர் எனுங் கருத்தும் நிலவுகிறது.

அறிஞர், பதினெண் சித்தர்கள் யார்யார் எனக் குறிப்பிடுவதைப் பற்றிக் காணலாம்.

| | | |
|---|---|---|
| கும்பமுனி | தேரையர் | சிவவாக்கியர் |
| நந்திமுனி | யூகிமுனி | சண்டிகேசர் |

| | | |
|---|---|---|
| கோரக்கர் | மச்சமுனி | ரோமரிஷி |
| புலிப்பாணி | புண்ணாக்கீசர் | சட்டநாதர் |
| புசுண்டர்ரிஷி | இடைக்காடர் | காலங்கி |
| திருமூலர் | பூனைக்கண்ணர் | போகர்[95] |
| அகத்தியர் | போகர் | தன்வந்தரி |
| புலத்தியர் | கொங்கணர் | புண்ணாக்கீசர் |
| புசுண்டர் | சட்டைமுனி | கோரக்கர் |
| நந்தி | ரோமமுனி | யூகிமுனி |
| திருமூலர் | மச்சமுனி | தேரையர் |
| காலாங்கிநாதர் | கருவூரார் | இடைக்காடர்[96] |

இவ்வாறு பதினெண் சித்தர்களின் பட்டியலைத் தொகுத்துக் கொண்டே செல்லலாம்.

பதினெண் சித்தர்களைப்பற்றிக் கூறும்போது பதினெண் என்பதனை எண்ணைக் குறிக்காமல், பதியை எண்ணும் சித்தர் என்றும் கொள்ளலாம். பதினெண் என்பதற்கான விளக்கங்கள் பலவாக உள்ளன. ஆதலால், பதினெண் சித்தர்களை இவர்இவர் எனக் குறிப்பிடவோ கணக்கிடவோ முடியாது.

சித்தர்களின் சித்தாந்தம் என்னும் இவ்வாய்வு, **சித்தர் பெரிய ஞானக்கோவை** என வழங்கும் சித்தர் பாடல்களில் உள்ள சித்தர்களை மட்டுமே ஆராய்கின்றது.

| | | |
|---|---|---|
| 1. நந்தீஸ்வரர் | 8. இடைக்காடர் | 15. காகபுசுண்டர் |
| 2. அகத்தியர் | 9. அகப்பேய் | 16. உரோமரிஷி |
| 3. சுப்பிரமணியர் | 10. பத்திரகிரியார் | 17. சட்டைமுனி |
| 4. திருமூலர் | 11. குதம்பை | 18. இராமதேவர் |
| 5. சிவவாக்கியர் | 12. கடுவெளி | |
| 6. பட்டினத்தார் | 13. அழுகணி | |
| 7. பாம்பாட்டி | 14. கொங்கணர் | |

## சித்தர்களின் நெறி

காலம் மாறினும் தேகம் அழியினும் எவ்வேறுபாடும் இல்லாத அன்புநெறியை வற்புறுத்தியவர்கள் சித்தர்கள். இவர்களின் நெறி யோகத்தைத் தழுவியதாகும். ஆதலின், இவர்களை **யோக மார்க்கிகள்** எனலாம். எட்டு அங்கங்களை அடிப்படையாகக்கொண்ட **'அட்டாங்க யோகம்'** இவர்களது வழியாகும்.[97] உடம்பாகிய மெய்,

அழியாமல் வைத்துக் காப்பாற்றக் கூடியது என்பதுதான் சித்தர்களின் கொள்கை. உண்மையானது உடம்பு என்ற பொருளை மெய் என்று சொல்வது பொருந்தாது. இதுவே சித்தர் வழியினர் கூறும் ாதமாகும்.[98] வீடுபேற்றை அடைய வேண்டுமானால் உண்மையான வேதாந் தத்தை அறிந்தால் முடியும் எனப் **பாம்பாட்டிச் சித்தர்** வலியுறுத்து கின்றார்.[99] சித்தர்களின் நெறியைப் பற்றிக் கூறுகையில் இரா. மாணிக்கவாசகம் சித்தர்கள் அட்டாங்க யோகத்தைப் பின்பற்றிய யோக மார்க்கிகள் என்பதையும், அவர்கள் பிராணாயாமத்தினால் சித்தத்தை அடக்கிப் பல்வேறு சித்திகளைப் பெற்றவர்கள் என்பதை யும் உணர்த்துகின்றார்.[100]

ஆற்றல், வல்லமை, துணிவு, திறம் ஆகியவற்றைக்கொண்ட சித்திகளைப் பெற்ற யோகியரே **சித்தர்** எனக் கூறுவர் எனக் **கமில்சுவலபில்** குறிப்பிடுகின்றார்.[101] தென்னாட்டில் சித்த மார்க்கம் நன்கு வளர்ந்து வந்தது. இடையில் அதற்குச் சிதைவு நேர்ந்தது. அப்போது **சமயக்குரவர் நால்வர்** தோன்றி அம்மார்க்கத்தை ஓம்பினர். அந்நால்வரும் சித்தர்களே யாவர்.[102]

## யோக மார்க்கம்

புலன், உயிர், உடம்பு எல்லாம் ஒருங்கே சேர்ந்து, இறை உணர்வுடன் ஒன்றாகிப் புற உணர்வு செத்துக்கிடப்பவர்; அவரே சிவயோகி சித்தர்.[103] சிவயோக சித்தியால் சிவானுபவம் பெற்றவர் களைச் சித்தர் என்று கூறுவதே பொருத்தமானது. எனினும், **அட்டமாசித்தி** முதலிய பாசயோகசித்தி பெற்றவர்களையும் சித்தர்கள் எனக் கூறலாம்.[104] பிங்கலையும் இடகலையும் மாறும் போது சுழிமுனையில் மனத்தை வைத்து அசையாமலொரு மனதாய்க் காக்கும்போது சிவயோகம் சித்தி யாகும். இம்முறையால் சித்தர்கள் பல ஆண்டுகள் இறவாமல் வாழ்கின்றனர்.[105] இவ்வாறு சித்தர்கள் இறைவனைக் கண்டு தெளிந்த நெறியையும் அவர்கள் தாங்கள் கண்டதோடன்றி இறைவனைக் காணுவதற்குரிய வழிகளையும் கூறியுள்ளனர். ஆதலால், பக்திநெறியைக் காட்டிலும் சித்தர்கள் கண்ட சித்த நெறியே மேலோங்கி விளங்குகிறது.

இனிக் கடவுள்நெறி பற்றிச் சித்தர்களின் கொள்கைகளையும் அவர்கள் பூசை முறையை வெறுத்தமையையும் காணலாம்.

## கடவுள் நெறி

சைவம் ஓரிறைக்கொள்கை படைத்ததொரு சமயம் ஆகும்.[106] இக்கொள்கைக்கு அடிப்படையாக விளங்கியவர்கள் சித்தர்களே ஆவர். சித்தர் இறைவனைத் தாயொத்த அருளுடையவனாகவும், மெய்ப் பொருளைத் தருபவனாகவும், வினையறுப்பவனாகவும், மரணம் தவிர்த்து ஞானம் அருளுபவனாகவும் கண்டனர்[107] எனச் சித்தர்களின் கடவுள் கொள்கைபற்றிக் **காயாரோகணம்** எடுத்துரைக்கின்றார். இக் கருத்திற்கேற்ப இறைவனின் அத்துவைதக் கொள்கையைப் பற்றிப் பாம்பாட்டிச் சித்தர்,

> **"எவ்வுயிரும் எவ்வுலகும் ஈன்று புறம்பாய்**
> **இருந்து திருவிளையாட்டு எய்தியும் பின்னர்**
> **அவ்வுயிரும் அவ்வுலகும் ஆதியும் நின்ற**
> **ஆனந்த வெள்ளங் கண்டுஆடு பாம்பே"[108]**

எனக் குறிப்பிடுகின்றார். ஊட்டுவிப்பவன், உறங்குவிப்பவன், ஒன்றோடொன்றை மூட்டுவிப்பவன், முயங்குவிப்பவன், வினைகாட்டு விப்பவன், நல்வினை, தீவினைவழிப் பாசக்கயிற்றி னால் வழி ஆட்டுவிப்பவனும் ஒருவன்தான் என்று **பட்டினத்தடிகள்** உரைக்கின்றார்.[109] தெய்வம் இவரென்று சொன்னவர்கள் நல்ல சித்தரும் முத்தரும் ஆவர்.[110]

## சாதி, மதம் கடந்தமை

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்று சொன்ன பெருந்தகை யாளர் வள்ளுவனார் பிறந்த நாட்டில் சிறப்புக் கருதாது தொழிலால் சாதிகண்டு பிரிவினைகளை ஏற்படுத்தினார்கள். உயர்ந்தகுடியில் பிறந்தவன் உயர்ந்த சாதி, முயற்சியோடு உழைக்கின்றவன் தாழ்ந்த சாதி என்று பிரித்தவர்கள், பஞ்சமர் என்ற தீண்டத்தகாத சாதியையும் உருவாக்கினர். இந்நிலைகண்டு புயலாய் எழுந்து சாதி மதமாகிய பகைசாய சித்தர்கள் புரட்சிக்குரலை எழுப்பினர்.

இறைவன் எல்லா உயிர்களிடத்தும் இருக்கின்றான். ஆதலால், நாம் பிறப்பினை வைத்து வேறுபாடு கருதக்கூடாது. சித்தர்கள் இந்நிலையை அறிந்து சாதி, மதம் கடந்து விளங்கினார்கள். சிவவாக்கியர் சாதி, மத பேதத்தைக் கடுமையாக எதிர்க்கின்றார்.

"பறைச்சியாவது ஏதடா பணத்தியாவது ஏதடா
இறைச்சிதோல் எலும்பினும் இலக்கமிட்டு இருக்குதோ
... .... ...
... .... ...
பறைச்சியும் பணத்தியும் பகுத்துப் பாரும் உம்முளே"[111]

என மனிதப் பிறப்பில் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற வேறுபாடு இல்லை என்பதை அறிவுறுத்துகின்றார். மேலும், இறைவனுக்குச் செய்யும் கிரியைகளை விலக்கிச் சாதி ஒன்றாதல்பற்றிக் கூறுகின்றார்

"சாதியாவது ஏதடா சலம் திரண்ட நீரலோ
பூதவாசல் ஒன்றலோ பூதம் ஐந்தும் ஒன்றலோ
காதில் வாளி காரை கம்பி பாடகம் பொன் ஒன்றலோ
சாதிபேதம் ஓதுகின்ற தன்மை என்ன தன்மையே?"[112]

எனச் சாதிபேதம் கூறுகின்றவர் மனிதத் தன்மை அற்றவர்கள் என்று சாடுகின்றார். சாதி, மதம் கடந்த சித்தர்கள் சமுதாயத்தில் நிலவி வந்த சாதி மத பேதத்தை அச்சமின்றி எதிர்த்தனர்.

## சித்தர் பாடல்களில் இலக்கியம்

சித்தர்கள், இலக்கியங்களுக்குத் தங்களுடைய பாடல்களை நன்கொடையாக அளித்துள்ளனர். இலக்கிய உத்திமுறைகள் அனைத்துமே அவர்களுடைய பாடல்களில் காணப்படுகின்றன.

## உவமை நயம்

இலக்கிய ஆசிரியர்கள் தன் உள்ளக் கருத்தையோ, தாம்கண்ட கருத்தையோ விளக்குவதற்குப் பெரும்பாலும் உவமை வாயிலாகவே கூறி, அக் கருத்தினை இன்பம் பயக்கச் செய்வர்.

பட்டினத்தார், இறைவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பதை 'நன்னாளில் பூட்டிய சூத்திரப் பாவை நல்நார் தப்பினால் தன்னாலும் ஆடிச் சலித்திடுமோ?'[113] என விளிக்கின்றார். புதல்வர்களைப் பெற்று விட்டு அவர்களைக் காக்கும்வகை அறியா மூடரை இரு பிளவாகப் பிளந்த மரத்துளையில் வால் நுழைத்துக்கொண்டு, ஆப்பதனை அசைத்துவிட்ட குரங்கு[114] எனக் கூறுகின்றார். உடலில் கலந்து நிற்கும் மும்மலத்தைச் செம்பில் களிம்புபோல[115] உள்ளது என்கிறார். இறைவனின் தன்மையை எள்ளில் எண்ணெய்போல் நின்றுளான்[116] எனச் சிவவாக்கியர் குறிப்பிடுகின்றார்.

"கானலைமான் நீரெனவே கண்டு செல்லல்போல்
காசினிவாழ் வினைமூடர் கண்டு களிப்பார்"[117]

என நிலைமாறும் உலகத்தின் உண்மைத் தன்மையையும் எடுத்துரைக்கின்றார். ஆசையை நீக்குதல்பொருட்டுச் சித்தர்கள் பாடியுள்ளனர். அதனை உவமை, உருவகங்கள் வாயிலாகக் கூறுகின்றனர்.

"ஆசையென்னுஞ் செருப்பின்மேல் அடியை வைத்தே
அங்கார முட்காட்டை அறவே மிதித்தே
காசையெனுந் துர்க்குணத்தில் கனலைக் கொளுத்திக்
காலாகாலங் கடந்தோம் என்றுஆடுபாம்பே"[118]

என்னும் பாடலில் ஆசையைச் செருப்பாகவும், அகங்காரத்தை முட்காடாகவும் உருவகப் படுத்தி, அவற்றை அழிக்கும்விதத்தையும் கூறுகின்றார் பாம்பாட்டிச் சித்தர். காலன் என்னும் கொடும் பகையைக் கற்பமெனும் வாளினால் அழித்துவிடவேண்டும்[119] எனக் காலனை வெல்லும் வழியைக் கூறுகின்றார். சித்தர்கள் தம் கருத்துகளை விளக்குவதற்கு உவமைகளை இவ்வாறு கையாண்டுள்ளனர்.

## யாப்பு

சித்தர்களின் பாடல்களில் யாப்பிலக்கணமுறை அமைந்துள்ளது. ஒவ்வொரு சித்தரும் பாவின் வகைகளை அறிந்து தம் பாடல்களை யாத்தனர். பெரும்பான்மையான சித்தர் பாடல்கள், **சிந்து** என்னும் ஒருவகை யாப்பைச் சேர்ந்தனவாக உள்ளன. சிந்து என்பது கலிப்பாவின் இனத்தைச் சேர்ந்தது என்பர் **புலவர் குழந்தை.**[120] ஒரே எதுகையுடைய இரண்டு அடியாய் வருவது சிறுபான்மை நான்கு அடியாக வரும். முதலடியில் தனிச்சொல் பெற்று வரும். இரண்டாம் அடியில் சிறுபான்மை தனிச்சொல் பெற்று வரும்.

"மூலம் இல்லையடி - அகப்பேய்
முப்பொருள் இல்லையடி
மூலம் உண்டானால் - அகப்பேய்
முத்தியும் உண்டாமே"[121]

இப்பாடலில், தனிச்சொல்லுக்கு முன்னும் பின்னும் உள்ள இருசீர் அடியாக இரண்டடியில் உள்ளதால் இருசீர் இரட்டைச் சமநிலை சிந்துவகையைச் சாரும்.

## கும்மி

இது வெண்பாவின் இனம்; ஓரெதுகையுடைய எழுசீர் கழிநெடிலடி இரண்டு வருவது.[122] அடியின் முதற்சீரிலும் ஐந்தாம் சீரிலும் மோனை வரவேண்டும்; இயற்சீர் வெண்டளையும் வெண்சீர் வெண்டளையும் அல்லாது வேறு தளை வருதல் கூடாது. ஈற்றுச்சீர் பெரும்பாலும் விளங்காய்ச் சீராக வரும்; இது கும்மியின் பொது இலக்கணம்.

"நெஞ்சிலே ருத்திரன் சூழிருப் பானவன்
நேருட னாமடி வாலைப்பெண்ணே!"[123]

இப்பாடல் எழுசீரால் அமைந்து வெண்பாத் தளையோடு முதற் சீரிலும் ஐந்தாம் சீரிலும் மோனை பெற்று வந்துள்ளது. ஆதலின், இதனை **இயற்கும்மி** என்பர்.

## சந்தம்

பாடல்களின் குறிக்கோள் சிறந்த கருத்தை விளக்குவதே என்றாலும் பாடல்கள் சொல்நயம், அணிநயம், சந்தம் (ஓசை) முதலியவை சிறந்து அமையவேண்டும்.

சித்தர் பாடல்கள் நுணுகிய பொருள்களைக் கொண்டிருந்தாலும், அப்பாடல் வகைகள் மக்கள் மத்தியில் அதிக வழக்கில் வழங்கி வருகின்றன.

"பாட்டிலாத பரமனைப் பரமலோக நாதனை
நாட்டிலாத நாதனை நாரிபாங்கர் பாகனை
கூட்டிமெள்ள வாய்புதைத்து குணுகுணுத்த மந்திரம்
வேட்டகாரர் குசுகுசுப்பை கூப்பிடா முடிந்ததே"[124]

## நாடோடி இலக்கியத் தாக்கம்

காற்றில் மிதந்த கவிதைகளாகத் திகழ்வதே நாடோடி இலக்கியம். இப்பாடல்களும் யாப்புமுறையோடு சொல்நயமும் பெற்றுத் திகழ்கின்றன. சித்தர்கள் பாமர மக்களுக்குப் புரியாத மறைபொருள் சொற்களைக் கையாண்டாலும் அவர்களின் பேச்சு வழக்குச் சொற்களைத் தம் பாடல்களில் பயன்படுத்துகின்றனர்.

**"ஆவியொடு காயம் அழிந்தாலும் மேதினியில்
பாவி என்று நாமம் படையாதே"[125]**

**"பொன்னால்பிரயோசனம்பொன்
படைத்தார்க்குண்டுபொன் படைத்தோன்**

தன்னால் பிரயோசனம் பொன்னுக்கங் கேதுண்டு"[126]
"மாயான் மகளடியோ மச்சினியோ நானறியேன்"[127]

என வரும் பாடல்கள் சித்தர்களின் நாடோடி இலக்கியத் தாக்கத்தை எடுத்துரைக்கின்றன. பாவி, பிரயோசனம் என்னும் சொற்கள் மக்களின் பேச்சு வழக்கு மொழியில் புகுந்துள்ளன. இவ்வாறு பேச்சு வழக்குச் சொற்களை இலக்கியங்களில் அறிமுகப்படுத்தியவர்கள் சித்தர்களே. இவர்களின் ஆளுமைக்குப் பிறகுதான் சிற்றிலக்கியங் களாகிய **குறவஞ்சி, பள்ளு** ஆகியவை தோன்றின.

விடுகதைகளும், நாட்டுப்புற இலக்கியம் என்பதாகும். அவை சிந்தனை ஆற்றலைத் தூண்டக் கூடியவையாகும்.

"இருவர்மண் சேர்த்திட ஒருவர் பண்ண
ஈரைந்து மாதமாய் வைத்த சூளை
அருமையாய் இருப்பினும் அந்தச் சூளை
அரைக் காசுக்கு ஆகாதென்று ஆடுபாம்பே"[128]

இப்பாடலை விடுகதைக்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். இங்குக் குறிப்பது குயவன் செய்த மட்பாண்டமன்று; உடலாகிய மட்பாண்டம் நிலையற்றது என்று கூறுகிறார் பாம்பாட்டிச் சித்தர்.

## சித்தர் பாடல்களில் மருத்துவம்

சித்தர் கண்டதே சித்தாந்தம் என்பதுபோலச் சித்தர் கண்ட மருத்துவமே சித்த மருத்துவமாகும். இயற்கை தரும் செல்வங்கள் தான் சித்தர்களின் மருத்துவமுறையில் பயன்படும் மருந்துகளாகும். சித்தர்கள் உடலுக்கு உறுதி தருவன; மனத்திற்கு உறுதி தருவன; மாந்திரீக சக்தி தருவன என மூவகையான மருந்துகளைக் கையாண்டனர். **பருவுடல், நுண்ணுடல், காரண உடல்** என மூவகை உடல்களின் குறைகளை நீக்கும் ஆற்றல் பெற்றிருந்தனர். முதலில் நோயை நாடி, நோய்க்கு மூலமாகிய காரணத்தையும் நாடி, அதனை நீக்கும் முறையையும் சித்தர்கள் அறிந்திருந்தனர். சித்தமருத்துவத்தில் **மணி, மந்திரம், மருந்து** என மூன்றும் பயன்படுத்தப் படும்.

"மருந்தறியேன் மணியறியேன்
மந்திரமொன் றறியேன்"[129]

என இராமலிங்க அடிகள் சித்த மருத்துவத்தின் பிரிவுபற்றிக் குறிப்பிடுகிறார்.

நம்முடல் பஞ்ச பூதங்களால் ஆனது. அவற்றுள் காற்று, நெருப்பு, நீர் மூன்றும் முறையே வாத, பித்த, சிலேத்துமம் என்பன அடங்கி யுள்ளன. இவை மூன்றும் என்றும் ஒரே நிலையில் இருக்க வேண்டும். அவை மாறுபட்டால் உடலில் கேடு வரும். இதனையே,

"பூரணமா யுள்மூலம் பொறியிற் சூடாய்ப்
புகையெழும்பி மேகமதாய்ச் சிரசில் சூடாம்
காரணமாம் நீரெழும்பிப் பீனசம்போற் கொள்ளும்
கனலெழுந்தே வாயுவதாம் கபாலமெல்லாம்
சீரமாய்ப் போகாது வாதபித்தம்
சிலேஷ்பனந்தான் மூன்றாலே நோய்களெல்லாம்
தாரணையாய்த் திசைவாவில் மூன்றுவாயுச்
சமானனோடு பிராணனுட னபானன்றானே"[130]

என அகத்தியர் குறிப்பிடுகின்றார். 'பதினெண்சித்தர் நாடி சாஸ்திரம் நூல் ஆண்களுக்கும் பெண்களுக்கும் நாடி நடக்கும் முறையையும், இன்னின்ன கிழமைகளில் இன்னின்னவாறு நோய் வரும் என்பதையும் மிகவும் தெளிவாகவும் கூறுகின்றது. 'அகஸ்தியர் அஷ்டமா சித்து'[131] என்னும் நூலில் குழந்தைகளுக்கு ஏற்படும் தோஷங்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. சித்தர்கள் உடலோம்புதல்பற்றி எடுத்துரைக்கின்றனர்.

"பாலுண்போ மெண்ணெய் பெறின் வெந்நீரிற் குளிப்போம்
பகற்புணரோம் பகற்றுயிலோம் பருவமுத்த
வேலஞ்சேர் குழலியரோடிள வெயிலும் விரும்போ
மிரண்ட பக்கோ மென்றவிடா மிடதுகையிற் படுப்போ
மூலஞ்சேர்கறி நுகரோ மூத்ததயி ருண்போ
முதனாளிற் சமைத்த கறியமு தெனினு மருந்தோம்
ஞாலந்தான் மடைந்திடினும் பசித்தொழிய வுண்ணா
நமனார்க்கிங்கேது கவை நாமிருக்கு மிடத்தே"[132]

என நோய் வராமல் காக்கும் முறையைப்பற்றிப் பதார்த்தகுண சிந்தாமணி குறிப்பிடும்.

இங்ஙனம் சித்தர்கள் மருத்துவ உலகிற்குச் செய்த அரும்பணிகள் கணக்கிடலங்கா. அவர்கள் மருத்துவத்தால் தீராத நோய்களில்லை என்பதை அறியலாம்.

## புராண இதிகாசம்

புராண இதிகாசக் கதைகளை எடுத்துக்காட்டிக் கருத்தை விளக்கும் பாடல்களாகச் சங்க இலக்கியங்கள்முதல் காப்பிய இலக்கியங்கள்வரை காணப்படுகின்றன. பட்டினத்தார், இறைவனிடம் தன்னை ஆட்கொள்ளும்படி வேண்டும்போது மகனை அறுத்துப் பிள்ளைக் கறியூட்டிய சிறுத்தொண்டரையும், மாது சொன்ன வஞ்சினத்தால் இளமையைத் துறந்த திருநீலக்கண்ட நாயனாரையும், கண்ணை இறைவனுக்கு அப்பிய கண்ணப்பனையும் எடுத்துக் காட்டுகின்றார்.[133] ஆதியும் அந்தமும் இல்லா அருட் பெருஞ்சோதியின் திருவடியைத் திருமாலும் திருமுடியை நான்முகனும் காண முயன்று முடியாத கதையைச் சித்தர் பாடல் இயம்புகின்றது.[134]

இங்ஙனம் புராண இதிகாசக் குறிப்புகள் சித்தர் பாடல்களில் குறிப்பிடப்படுகின்றன.

## மந்திரம்

மந்திரம் என்பதற்குப் பல்வேறு பொருள்கள் வழங்கப்படுகின்றன. மனத்தை உறுதிப்படுத்துவது மந்திரம் (மன - ஸதிரம்) என்றும் கூறுதல் உண்டு. சித்தர்கள் மன - த்ர எனப் பிரிப்பர். 'மன' என்பது மனம் ஆகும்; 'த்ர' என்பது பிரிப்பது. அஃதாவது, மனத்தில் எல்லையிலிருந்து பிரிப்பது என்பது இதன் பொருள்.[135] நிறைந்த குணத்தையுடைய மாந்தர்கள் கூறும் பயன்மிகுந்த சொற்களே மந்திரமாகும்.

## மறைபொருள்

சித்தர் பாடல்களில் மிகுதியாக மறைபொருள் செறிந்த பாடல்களே மிகுந்திருக்கின்றன. சிறுபான்மை கல்வியறிவற்ற மக்கள் விளங்கிக் கொள்ளுமாறும் பெரும்பானமை நுண்மாண் நுழைபுலம் உள்ள மெய்ஞ்ஞானிகள் விளங்குமாறும் இயற்றினர். தமிழ் இலக்கணத்தில் கூறுவது போன்ற ஒரு சொல் இரண்டு பொருள்படுமாறு இரட்டுற மொழிதலாகவும், மேலும் ஒரு குழுவில் இருக்கின்றவருக்கே விளங்குமாறு குழூஉக் குறியாகவும் சித்தர்கள் பாடிச் சென்றனர்.

" மாங்காய்ப்பால் உண்டுமலைமேல் இருப்போர்க்குத்
தேங்காய்ப்பால் ஏதுக்கடி? - குதம்பாய்!
தேங்காய்ப்பால் ஏதுக்கடி?"[136]

என்ற பாடல் எளிதாக மாங்காய்ப்பால், தேங்காய்ப்பால் என்ற சொற்களோடு காணப்படுகிறது. உயிரைப் பாதுகாக்கும் அமுதமென்னும் சிவநீரை அதாவது மாங்காய்ப் பாலை உட்கொண்டு, பிரமமந்திரமென்னும் மிக உயர்ந்த மலையின்மேல் இருக்கக் கூடிய யோகிகளுக்குத் தேங்காய்ப்பால் ஏதுக்கடி[137] என மறைபொருளுக்கு விளக்கம் கூறப்படுகிறது.

கடுவெளிச்சித்தர் உடற் கூற்றைப்பற்றிக் கூறும்போது,

" நந்தவனத்திலோ ராண்டி - அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டு வந்தானொரு தோண்டி - மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி"[138]

என்ற பாடல்மூலம் மறைபொருளாக உடலின் நிலையாமைபற்றிக் குறிப்பிடுகின்றார்.

குயவனாகிய இறைவனிடம் உயிராகிய ஆண்டி, பத்து மாதமாக வேண்டி, உடல் என்னும் தோண்டியைக் கொண்டுவந்து, உலகில் ஆழித்துரும்பென அங்கும் இங்கும் அலைந்து கூத்தாடி முடிவில் உடலாகிய தோண்டியைப் போட்டு உடைத்தான் என்னும் தத்துவத்தை மறைபொருளாக அழகாகக் கூறியுள்ளார்.[139] இவ்வாறு சித்தர்கள் மெய்ஞ்ஞானிகளுக்கு மட்டும் விளங்குமாறும் கூறிச் சென்றுள்ளனர்.

இங்ஙனம் சித்தர்களின் சொல் விளக்கமும் அவர்தம் பணிகளும் ஆராயப்பட்டன, அடுத்து, அவர்களின் வரலாறுபற்றி விளக்கமாகக் காணலாம்.

# சித்தர்கள் வரலாறு

சித்தர்களைப்பற்றிக் குறிப்பிடும்போது அவர்களைப் பதினெண் சித்தர்களாகக் கூறும் வழக்கம் இருந்து வருகிறது. அவர்களின் பாடல் களைக் கொண்டும் அவர்களைப்பற்றி எழுந்த நூல்களைக் கொண்டும் அவர்தம் வரலாற்றை அறிந்துகொள்ளலாம். இங்குப் பதினெண் சித்தர்களின் வரலாறு பற்றித் தனித்தனியாக ஆராயப் படுகின்றது.

## 1. அகத்தியர்

அகத்தியரைப் பற்றி ஆராய்ச்சியாளர்கள் பலவாறு கூறியுள்ளனர். பிரமன் செய்த கும்பத்தில் தோன்றியவர் என்பதும், மித்திரன் ஊர்வசிமேல் மோகங்கொண்டு வீரியத்தைக் கும்பத்திலிடத் தோன்றியவர்; புலத்திய முனிவரின் சகோதரியாகிய லோபாமுத்திரை என்பவளை மணந்தவர் என்பதும்; சிவன் திருமணத்தின்போது தெற்கே அனுப்பப்பட்டவர் என்பதும், இன்னும் இவைபோன்ற பலவும் பிற்காலத்தில் எழுந்த கதைகள் பல உள்ளன.[140]

பண்டைச் சித்தருள் தலையானவர் அகத்தியர். ஆனால், அகத்தியர் செய்த ஒரு நூலும் இப்பொழுது கிடைக்கவில்லை. அவருடைய நூல்களென்று சொல்லப்படுவன பிற்காலத்து நூல்களே யாகும். அகத்தியரின் அடியவர்கள் எழுதிய நூல்கள் அகத்தியரின் நூல்கள் போன்று வந்தன எனலாம்.[141] சென்னையில் உள்ள கீழ் நாட்டுக் கையெழுத்துப் பிரதி நூலகம் தயாரித்துள்ள பட்டியலில் அகத்தியர் பெயரில் சுமார் 96 நூல்கள் காணப் பெறுகின்றன. **பெருந்திரட்டு, ஆயுள்வேத பாஷ்யம், விதிநூல் மூவகைக் காண்டம், வைத்திய சிகாமணி, செந்தூரம் 300, அகத்தியர் ஞானம் பன்னிரண்டு, வைத்தியக் கும்மி** முதலிய சில இவர் பெயரில் காணப்படும் நூல்களாகும். தொல்காப்பியருக்கு ஆசிரியராகிய அகத்தியரின் பாடல் நடைக்கும், சித்தர்களில் ஒருவராகிய அகத்தியரின் பாடல் நடைக்கும் வேறுபாடு பெரிதும் காணப்படுகிறது. சித்தர் பெரிய ஞானக் கோவையில் அகத்தியர் பாடல்கள் ஐந்து ஞானத் தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டு ஐம்பத்திரண்டு பாடல்கள் காணப்படுகின்றன. இவர் பாடல்களிலிருந்து பார்க்குமிடத்து இவர் சித்தி பெற்றவர்; இறைவன் அருளைப் பெற்றவர் என உணரலாம்.

## 2. அகப்பேய்ச் சித்தர்

இவர் வேளாளர் குடியில் தோன்றினார் என்று கூறுவர்.[142] அலையும் தன்மையுள்ள மனத்தை அகப்பேய் என்று பெண்ணாக உருவகப்படுத்தி, அதனை முன்னிறுத்தி அறிவு புகட்டிப் பாடினாராதலின் அகப்பேய்ச் சித்தர் எனப் பெயர் பெற்றார். சில சங்க இலக்கியப் பாடல்கள் எழுதிய ஆசிரியர்கள் பெயர்கள் அப்பாடல்களின் வரிகளைக் கொண்டே **செம்புலப்பெயனீரார், தேய்புரிப்பழங் கயிற்றினார்** என வருகின்றன. அதுபோன்றே இச்சித்தர் அகத்தைப் பற்றிப் பாடியதால் அகப்பேய்ச் சித்தர் எனப் பெயர் பெற்றிருக்கலாம். இவரது இயற்பெயர் என்ன என்பது பற்றி அறிந்துகொள்ள முடியவில்லை.

சித்தர் ஞானக்கோவையில் இவர் பெயரில் நூறு பாடல்கள் காணப்படுகின்றன. இதனைத் தவிர, வேறு பாடல்கள் இல்லை எனத் தெரிகிறது. சித்தர் பாடல்களில் இவர் பெயரில் 90 பாடல்கள் காணப்படுகின்றன. வேறு நூல்கள் இவர் பெயரில் காணப்பட வில்லை எனத்தெரிகிறது. அகப்பேய்ச் சித்தர், அகத்திலுள்ள அகந்தையை நீக்கி அங்கே உண்மை என்ற விளக்கேற்றியவர் என்பது மிகையாகாது.

## 3. அழுகணிச் சித்தர்

அழுகண்ணி என்பது ஓர் அரிய கல்ப மூலிகை. இதைப் பயன்படுத்திக் காயசித்தி கைவரப் பெற்றவராக அழுகணிச்சித்தர் இருந்திருத்தல் கூடும். அதனால், இப்பெயர் பெற்றிருக்கக் கூடும்.[143] இவரது பாடல்களில் எல்லாம் இரங்கி வருந்திப் பாடுவ்தாக அமைந்திருக்கும் காரணத்தினாலும் அழுகணிச்சித்தர் என்று பெயர் பெற்றிருக்கலாம்.

**"கொல்லன் உலைபோலக் கொதிக்குதடி யென்வயிறு!**
**நில்லென்று சொன்னால் நிலைநிறுத்தக் கூடுதில்லை!**
**நில்லென்று சொல்லியல்லோ நிலைநிறுத்த வல்லார்க்குக்**
**கொல்லென்று வந்தநமன் என் கண்ணம்மா!**
**குடியோடிப் போகானோ!"** [144]

என்ற பாடலைப்போன்று எல்லாப் பாடல்களுமே வருந்திக் கூறிப் புலம்புவதாகக் காணப் படுகின்றன. சித்தர் பெரிய ஞானக்கோவை யில் அழுகணிச்சித்தர் பாடிய முப்பத்திரண்டு பாடல்களும் கலித்தாழிசை யாப்போடு அமைந்துள்ளன. இப்பாடல்கள் எளிய சொற்களைக் கொண்டிருந்தாலும், இதன் உட்பொருள்களை முற்றும் உணர்ந்த மெய்ஞ்ஞானிகளால் மட்டும் உணர முடியும்.

"சம்பா அரிசியடி சாதஞ் சமைத்திருக்க
உண்பாய் நீயென்று சொல்லி உழக்குழக்கு நெய்வார்த்து
முத்துப் போலன்னமிட்டு முப்பழமுஞ் சக்கரையுந்
தித்திக்குந் தேனமிர்தம் என் கண்ணம்மா!
தின்றுகளைப் பாறேனோ!" [145]

என்ற பாடலில் அமைந்த சொற்கள் எளிதில் பொருள் விளங்குமாறு அமைந்திருந்தாலும் இதன் மறைபொருளை முழுமையாக உணர்ந்துகொள்வது கடினமாகும்.

## 4. இடைக்காட்டுச் சித்தர்

நம் நாட்டுச் சித்தர்களுள் இடைக்காட்டுச் சித்தரும் ஒருவராவார். இடைக்காட்டுச் சித்தர் ஆனந்தக்கோனாரிடம் உரையாடுதல் போன்று அவர்தம் பாடல்கள் அமைந்து உள்ளன. இவர் ஆனந்தக் கோனாரையும், புல்லாங்குழலையும், அறிவையும், நெஞ்சையும், மயிலையும், குயிலையும் தன்முன் நிறுத்திப் பல உலகியல்புகளையும் உண்மைகளையும் பாடி, ஜீவன் என்னும் பசுவிலிருந்து ஞானப்பால் கறக்கும்படி தூண்டியிருக்கிறார். அதனால், இவர் இடைக்காடர் என்று பெயர் பெற்றிருக்கலாம் என்று கருத இடமுண்டு,[146] திருவண்ணாமலையில் இடையர் குலத்தில் தோன்றியவராதலின் இப்பெயர் பெற்றார் என்றும் கூறுவர்,[147] இவர் தொண்டை மண்டலத்தில் இடையன்திட்டிலிருந்த இடையர் என்றும்,[148] மலையாள நாட்டிலுள்ள இடைக்காடு என்னும் ஊரினர் என்றும்,[149] இடைக்கழி நாட்டில் பிறந்தவர்[150] என்றும் கருத்துகள் பல நிலவுகின்றன. இவர் திருமாலின் அவதாரம் என்ற கருத்தும் நிலவி வருகிறது.[151] நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு முதலிய சங்கப் பாடல்களைப் பாடிய இடைக்காடரின் இவர் வேறானவர்[152] என்பதை இடைக்காட்டுச் சித்தரின் பாடல்களிலிருந்து அறியலாம்.

இவர் போகரின் மாணாக்கர்[153] என்ற கருத்தும், கொங்கணரின் மாணாக்கர்[154] என்ற கருத்தும் நிலவுகிறது.

இடைக்காடனார் உவமை, உருவகங்கள் வாயிலாகத் தன் கருத்தை விளக்குகிறார். அன்பு நிலைதனிலே நேர்மையாக அறிவதும், நாம் புறக்கண்ணால் காண முடியாதவற்றை அகக் கண்ணால் காணுவதும், தன்மானத்தோடும் தன்னிச்சையாய் வாழ்வதே வாழ்வின்பம் என்பதை அவர்தம் பாடல்கள்மூலம் அறியலாம்.

## 5. இராமதேவர்

இவர் நாகப்பட்டினத்தில் வீற்றிருந்து சிவபூசையின் ஆற்றலால் அனைத்துச் சித்திகளும் அடைந்த சித்தர். இவர் இயற்றிய பூஜா விதிகளை இயம்பும் பத்துப் பாடல்கள் பெரிய ஞானக்கோவையில் காணப்படுகின்றன. இவர் வைத்திய நூல் எழுதியிருப்பதாகவும் அதற்கு **இராமதேவர் வைத்தியம்** என்று பெயர் எனவும், இவர் காசி மாநகரி லிருந்து சட்டைநாதரை எழுந்தருளச் செய்து நாகப்பட்டினத்தில் ஸ்தாபித்தவர் என்றும் கூறுவர்.

"தானென்று சதுரகிரிதன்னில் முன்னந்
தானிருக்கும் போதுஎன்பேர் இராமதேவர்
எத்திசையுந் தானறிய யாக்கோபென்று
எனக்குப் பேரிட்டுச் சுன்னத்துஞ் செய்தார்"[155]

என்ற பாடல்கள்மூலம் இராமதேவரே பின்னர் **யாகோபு** என்ற பெயருடன் விளங்கினார் என்பதை உணரலாம்.

இவர் இசுலாமியாக மாறியவர். எனவே, இவர் காலம் கி.பி.14ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு என ஆய்வாளர்களிடையே கருத்து நிலவுகிறது.[156] தேரையரே இராமதேவர் என்ற பெயரோடு பின்னர் விளங்கினார் என்ற கருத்தும் கூறப்படுகிறது.[157]

"தானென்ற மூலமுடன் சித்தி பண்ணு;
தனதான நூற்றெட்டுக் குள்ளே சித்தி
ஆனென்ற அண்டர் பதியெட்டு மாடும்;
அறுபத்து நால்மூலி யெல்லா மாடும்;
கோனென்ற கோடி சித்துக் கணத்தி லாடுங்
குணமாக ரேவதி நாட் செய்ய நன்று
வானென்ற அட்டமியிற் செய்ய நன்று
வளர்பிறையில் செய்தவனே யோகியாமே"[158]

என்ற பாடல் சித்தியைப்பற்றியும், யோகம் செய்யும் முறையைப் பற்றியும் எடுத்துரைக்கின்றது.

## 6. உரோமரிஷி

இவர் போகரைப்போன்று சித்த மருந்திற்காக உரோமாபுரிவரைச் சென்றிருக்கின்றார் என்பது மட்டும் தெரிகிறது. இவர் புசுண்ட மாமுனிவரின் புதல்வர். 'உரோமரிஷி 500' என்னும் நூலில்,

"புசுண்டருடைய பிள்ளை ரோமன்' என்று தன்னைப் பற்றி அறிமுகப் படுத்துகிறார். இவருக்கு உடம்பெல்லாம் மயிர் (ரோமம்). ஒரு பிரமன் இறந்தால் ஒரு மயிர் உதிரும். அப்படி மூன்றரைகோடி பிரமாக்கள் இறந்தால் ஆயுள் முடிவு. இவர் இறக்கின் அட்டகோண ரிஷிக்கு ஒரு கோணம் நிமிரும் என்ற குறிப்புக் காணப்படுகிறது. இவருடைய காலத்தைக் கணித்துச் சொல்வதற்குச் சான்றுகள் கிடைக்கவில்லை. ஆயினும், சித்தர்களின் தொடக்கக்காலம் கி.பி.5ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு முழு வளர்ச்சி பெற்றிருக்கிறது. சித்தர் பெரும்பான்மையும் பெருகியிருந்த காலம் 6, 7, 8 ஆம் நூற்றாண்டுகள் எனலாம். எனவே, இவர் இந்நூற்றாண்டுகளில் ஒரு நூற்றாண்டில் வாழ்ந்திருக்கலாம் எனக் கருத இடமுண்டு.[158அ] இவர் உரோமரிஷி நூறு, உரோமரிஷி ஐந்நூறு முதலிய நூல்கள் அன்றி பஞ்சபட்சி சாஸ்திரம் என்னும் பட்சி சாஸ்திரமும் பாடியுள்ளார். சித்தர் ஞானக்கோவையில் பதின்மூன்று பாடல்கள் இவர் பெயரில் இடம் பெறுகின்றன.

இவர்தம் காப்புச் செய்யுளில் மூலவட்டமான குரு, முத்திக்கு வித்தான முதல்மேல வட்டமான பரப்பிரமம், வேதாந்தங்கடந்த மெய், அறிவாகிய அமுதப்பாலைக்கண்டு பசியாற்றி மனக்குற்றம் நீக்கிய ஞானம் பெற்ற பெரியோர் முதலியவர்களை வணங்கித் துடிக் கின்றனர். மௌனமென்ற யோகத்தைவிட்டால் ஒருபோதும் சித்தியில்லை என்றும், பெண்களின் ஆசையைவிட்டால் பேரின்ப முத்தியை அடையலாம் என்று அறிவுறுத்துகின்றார். யோகசித்தி ஞானசித்தி பருவமாய் நாடி வைத்துப் பழக்கம் செய்யவேண்டும். சொரூபமுத்தி பெற்றவர்கள் குறைவானவர்களே; சொரூப முத்திக்கு அடையாளம் உடல் சுடர் போன்று தோன்றும் எனவும் குறிப்பிடுகின்றார். இவர் பாடல்களிலிருந்து யோகத்தின் வழிமுறை களையும் மெய்ஞ்ஞானத்தின் சிறப்பினையும் நன்கு அறியலாம்.

## 7. கடுவெளிச் சித்தர்

கடுவெளி என்பது சுத்தவெளி. அதாவது பிரமம், இந்தச் சித்தர் பிரபஞ்சத்தைக் கடுவெளி என்று கண்டு தம் ஆத்மானுபவத்தைப் பிறரும் அறிந்து அவ்வழி நடந்து சீர்பெறுவதற்காகப் பாடல்கள் இயற்றினார். அதனால், இவர் கடுவெளிச் சித்தர் என்று பெயர் பெற்றார்.[159] வெட்ட வெளியாகிய முத்தி நிலையை இவர் கைவரப் பெற்றதனால் கடுவெளிச்சித்தர் என அழைக்கப்பட்டார் என்று உணரலாம்.

கடுவெளிச்சித்தர்,

**"சொல்லும்பொழுது செலுத்துவேன் சிந்தனையை**
**வெல்லும் பொழுது விடுவேன் வெகுளியை**
**அல்லும் பகலும் அறிவுடன் தூங்கினால்**
**கல்லும் பிளந்து கடுவெளி யாமே"**[160]

என்ற பாடலைப் பாடவே சிவலிங்கம் இரண்டாகப் பிளந்தது. அரசன் முதலானோர் அஞ்சிப் பணியவே, இவர் '**எட்டும் இரண்டும்**' என்ற பாடலைப் பாடினார்; சிவலிங்கம் ஒன்றாகியது; இவரும் அதற்குள் அடங்கிவிட்டார். பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த சித்தராவார் இவர். சோழ நாட்டில் கடுவெளி என்ற சிற்றூரில் பிறந்தவர் என்பர். காரணப் பெயராகத்தான் கடுவெளி என்ற பெயர் வந்ததாகத் தெரிகின்றதே தவிர, அவரது இயற்பெயர் இன்னதென்று விளங்கவில்லை.

கடுவெளிச்சித்தரின் பாடல்கள் '**ஆனந்தக் களிப்பு**' என்ற இசைப்பா வகையைச் சார்ந்தன. முப்பத்து நான்கு பாடல்கள்தான் கிடைத்துள்ளன. நாட்டு மக்களுக்கு அறிவுரை கூறுகின்றமுறையில் பெரும்பான்மையான பாடல்கள் அமைந்துள்ளன. முதலில் பல்லவியாக அமைந்த பாடலிலேயே,

**" பாவஞ்செய் யாதிரு மனமே - நாளைக்**
**கோபஞ்செய் தேயமன் கொண்டோடிப் போவான்."**[161]

என்று அறிவுறுத்துகின்றார்.

**"அன்பெனும் நன்மலர் தூவிப் - பர**
**மானந்தத் தேவின் அடியினை மேவி**
**இன்பொடும் உன்னுடலாவி - நாளும்**
**ஈடேற்றத் தேடாய் நீஇங்கே குலாவி"**[162]

என இறைவனை நாடும் நிலையை உணர்த்துகின்றார். இவ்வாறு விழிப்புணர்வும் ஆழ்ந்த நினைவும் அடையுமாறு அன்புறவுகொள் என்பதை நெடுவெளி உலாவும் நமக்குக் கடுவெளிச் சித்தரின் பாடல்கள் விடிவெள்ளியாக விளங்குகின்றன.

## 8. காகபுசுண்டர்

இவரது இயற்பெயர் 'புசுண்டர்' என்பதாகும்.[163] இவர் காக்கை போன்று பார்வை பெற்றிருந்தார் என்றும்,[164] காக்கை வடிவங் கொண்டு உலகனைத்தும் சுற்றி மெய்ப்பொருளைக் கண்டறிந்தார்

என்றும்,[165] இவர் பாடல்களிலிருந்து உணரலாம். மது உண்டு அன்னங்கள் இரண்டு களிக்கும்போது சிவமூர்த்தி அவற்றைப் பார்க்க அந்த அன்னங்களிடம் சிவகலை காகவுருவத்துடன் பதிந்தது. அன்னம் இருபது முட்டைகளைப் பொரித்து இருபத்தொன்றாவது காகத்தைப் பொரித்தது. இதுவே **புசுண்டர்** எனப் பெயர் பெற்றது. இப்புசுண்டர் வசிட்டரைக் கண்டு தன் வரலாறும், சதுர்யுகத்தில் தான் கண்ட அதிசயங்களையும், தன் ஆயுளில் பலமுறை தேவர் கடல் கடைந்ததும், திருமால் பலமுறை அவதரித்ததும் கூறி, உம்மைப் போல் எட்டு வசிட்டர்களைக் கண்டேன் எனவும் கூறிய காக உருவாக விளங்கியவர் என்னும் குறிப்பு **அபிதானசிந்தாமணி**யில் காணப்படுகிறது.

பெரிய ஞானக்கோவையாகிய சித்தர் பாடல்களில் இவர் பாடிய 159 பாடல்கள் உள்ளன. நான்கு பிரிவுகளாகப் பிரித்துப் பாடல்கள் அமைந்துள்ளன. முதல் மூன்று நூல்கள் எண்சீர் ஆசிரிய விருத்தப் பாவாகவும் இறுதிப்பிரிவு குறள் வெண்பாவாகவும் அமைந்துள்ளன. இவை ஒரே பாவகையாக இல்லாமல் மாறுபட்டு விளங்குவதால், வேறு சித்தர்கள் எழுதிய பாடல்களை இணைத்திருத்தல் கூடும் எனக் கருதலாம்.

இவர் யோகத்தைப்பற்றியும், பரப்பிரமம், சச்சிதானம், சமயம் ஆகியவற்றைப்பற்றியும் பாடுகிறார். மனத்தைப் பரத்தின்பால் வைத்தவர்களே கயிலாய தேகம் கொண்டவர்களாவார்கள். ஆனால், இதனை உணராது மலரெடுத்து லிங்கம் வைத்துப் பார்த்தீப லிங்கத்தைப் பணியாதவர்கள் நீராட்டிப் பூசை செய்து வீணாகக் கதறுவார்கள்[167] என உருவ வழிபாட்டை வெறுத்துப் பாடுகின்றார்.

உலகத்தில் வீணாக அலையும் மனிதரோடு திரியாமல் தனித்து நிற்கவேண்டும்; ஊண் மிகுதியாக உண்ணாதிருக்கவேண்டும். ஒரு பக்கமாக வழக்கு உரைக்காதிருக்க வேண்டும்; அட்சரமாகிய எழுத்தை மறவாதிருக்கவேண்டும்; சாம்பேறியாகத் திரியாதிருக்க வேண்டும்[168] என்று அறிவுரை கூறுகிறார்.

## 9. குதம்பைச் சித்தர்

மனத்தைப் பெண்ணாக இவர் உவமித்து அதை முன்னிலைப் படுத்திக் குதம்பாய்! என்று விளித்துப் பாடியதால் குதம்பைச் சித்தர் என்று பெயர் பெற்றார். இவர், அறிவையே தெய்வமாக எண்ணியவர்;

கூர்மையான மனப்பான்மையும் நேர்மையான சொல்லையும் உடையவர். அகத்தி மூலிகையால் அகத்தியரும், அழுகணியால் அழுகணிச் சித்தரும் பெயர்பெற்றதைப்போலக் குதம்பைச் சித்தர், குதம்பை அல்லது மூக்கொற்றிப்பூடு என்ற மூலிகையால் பெயர் பெற்றிருத்தல் கூடும் என இரா. மாணிக்கவாசகம் குறிப்பிடுகிறார்.[169]

சித்தர் பாடல்களில் இவர் பாடிய பாடல்கள் கண்ணிப் பாவாக உள்ளன; முப்பத்திரண்டு பாடல்களைக் கொண்டுள்ளன. பாமர மக்களும் புரிந்துகொள்கின்ற நடையில் அமைத்துள்ளார். சித்தாந்தக் கருத்துகளையும் மெய்ஞ்ஞானிகளுக்கு விளங்குமாறு அமைந்த மறைபொருள்களையும் குழூஉக்குறிச் சொற்களையும் தம் பாடல்களில் கையாள்கின்றார். கடவுள் ஒருவரே எல்லார்க்கும் இடமாக உள்ளார். அவரை அடைவதே சாலச் சிறந்தது எனக் குதம்பைச் சித்தரின் சிந்தனை ஒளிவிடுகின்றது.

## 10. கொங்கணச் சித்தர்

இவர் திருமழிசை ஆழ்வார் காலத்தவர். கி.பி. ஏழாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர். மருத்துவ நூல்களும், இரசவாத நூல்களும், யோக நூல்களும் இயற்றியவர் எனக் கூறுவர். கொங்கணநாதர், கொங்கணதேவர், கொங்கண நாயகர் என்றும் பல பெயரையுடைய பலரும் இந்தச் சித்தரும் ஒருவரா? என்பது ஆராயத்தக்கது. பேராசிரியர் கா.நா. சுப்பிரமணிய பிள்ளை, இவர் கொங்குநாட்டிலுள்ள ஊதியூர் மலையில் வசித்தவர், அதற்குக் கொங்கணகிரி என்ற பெயரும் உண்டு[170] எனக் குறிப்பிடுகின்றார். இவரைப் பற்றிய குறிப்பு **கொங்குமண்டலச் சதகம்**376ஆம் பாடலில் வருகின்றது. இவர் கோயம்புத்தூருக்கு அருகில் இருந்ததாகவும் கூறுவர். இவர் காலம் **திருவள்ளுவர்** காலமாக இருக்கலாம்.[171]

கொங்கணச்சித்தர் போகரின் மாணவர். இவர் பளிக்கச் சாதியினர். இவர், வீரட்டகாசமூர்த்தியின் தலையில் தமது குளிகை வைக்க, அச்சிவலிங்க மூர்த்தம் அக்குளிகையை நீறாக்காமல் மறைத்ததால் அச்சிவமூர்த்தியைப் பூசித்து இவர் குளிகை பெற்றார். சட்டைமுனிச் சித்தரின் பாடல் ஒன்றினால் இவர் திருமூலர் தோன்றிய கைலாய மரபில் தோன்றியவர் என்பது புலனாகும். இவர் இயற்றியதாகக் கூறப்படும் நூல்களாவன: கொங்கணர் கடைக்காண்டம், ஞானம் நூறு, குளிகை, கொங்கண தேவர் ஐந்நூற்று இரண்டு, கொங்கண

தேவர்கலை, கொங்கணநாதர் சூத்திரம், கொங்கண கலைஞர் சூத்திரம், குருசுகுரு முப்பத்தொன்று, முப்பூதீட்சை, கொங்கண வாக்கியம், கொங்கணர் தியானம் முதலியனவாகும்.[172]

கொங்கணச் சித்தர் வாலைப் பெண்ணை முன்னிறுத்தி, 'கும்மியடியுங்கடி' என்று ஆன்மாக்களைக் கும்மியடிக்கத் தூண்டும் 'வாலைக்கும்மி'யை இவர் இயற்றியுள்ளார். இவரது வாலைக்கும்மியில் விநாயகரைத் துதித்துப் பாடுவதாக இரண்டு பாடல்களும், கலைமகள், சிவபெருமான், முருகன், திருமால், நந்தீசர் ஆகிய தெய்வங்களைத் துதித்துக் காப்புச் செய்யுள்களும் உள்ளன. சித்தர் பாடல்களில் இவர் இயற்றிய பாடல்கள் நூற்றுப்பத்துப் பாடல் களாகும். கொங்கணர் குழூஉக்குறிச் சொற்களையும், தத்துவப்பொருள்களையும், மெய்ப்பொருளாகிய இறைவனை அடைவதற்குரிய வழிகளையும் விளக்குகின்றார்.

## 11. சட்டைமுனி

இவரும் மற்றச் சித்தர்கள்போன்று கயிலாயப்பரம்பரையைச் சார்ந்தவர். கம்பளிச் சட்டையை யணிந்தவர். ஆதலின், கைலாயக் கம்பளிச்சட்டை முனி நாயனார் என்று பெயர் பெற்றார். இவர் சேணியர் குடியில் பிறந்தவர் என்பர்.[173] போகருடைய மாணவராக இவர் விளங்கினார். மதுரை வாலைசாமி என்பவர் இவரைத் தம் குரு எனக் கூறுகின்றார்.[174]

சித்தர் ஞானக்கோவையில் கைலாயக் கம்பளிச்சட்டைமுனி நாயனார் பாடிய முன்ஞானம் நூறு, பின்ஞானம் நூறு என 200 பாடல்கள் காணப்படுகின்றன. முதல் நூறு பாடல்கள் உலகியல் கருத்துகளையும், சமய ஒருமை பற்றியும் உணர்த்துகின்றன.

"போச்சப்பா ஆறாறும் பானத்தாலே
புத்தியுள்ளோர் பானத்தாற் கண்டா ரையா!
ஆச்சப்பா வாமமென்ன நிசித மென்பார்
அதன் குணமோ திரோததாயி யனுட்டா னந்தான்
ஓச்சப்பா நாதாக்கள் ரிடிகள் சித்தர்
உயர்ந்தவரைக் கண்டவர்பா னந்தாலன்றே?
காய்ச்சமரம் பட்டதென்ன வேரற்றாற் போல்
கசடரென்ற அறுசமயங் கேட்ட பாங்கே"[175]

எனப் பல்வேறு சமயங்கள் இல்லை, ஒரே சமயம்தான் என்று சமயங்களைப் பற்றி இப்பாடல் மூலம் உணர்த்துகின்றார்.

"கூடாத நல்லபுத்தி சித்தர் வென்றார்
கொள்கியே வரங்கள் பூமியிலே தட்டி

நீடாகத் தெண்டனிட்டே அழைத்துக் கொண்டு
நிமிடத்திற் குகையினுள்ளே நேர்ந்து போனார்
ஆடானா லதுமாட்டு வன்றே சித்தர்
ஆனந்த போகமுண்ட ஆண்மை யாண்மை
ஓடானா லோட்டுநிர்க் குணத்தின் வீதி
ஒருமனமாய் நின்றுபுத்தி யுரைப்பத்தானே"[176]

என்ற பாடல் சித்தர்களின் இயல்பு, செயல்பற்றி எடுத்துரைக்கின்றது.

## 12. சிவவாக்கியர்

பதினெண் சித்தருள் ஒருவராக எண்ணப்படுபவர் சிவவாக்கியர். சித்தர் பாடல்களுள் அதிகமான எண்ணிக்கை உடையது இவரது பாடல்களே ஆகும். இவர் வேதியர் குலத்திற் பிறந்து காசி யாத்திரை சென்று இல்லறத்தில் விருப்பங்கொண்டு ஒரு ஞானியாகிய சக்கிலி, காசும் பேய்ச்சுரைக்காயும் கொடுக்கப்பெற்று அவன் உனக்கு, "எந்தப் பெண் மணலையும் இச்சுரைக்காயையும் சமைத்து இடுகின்றாளோ அவளே மனைவி!" என்று கூறியதாகவும், அவ்வாறே சமைத்து இவருக்கு உணவிட்ட ஒரு குறப்பெண்ணை இவர் மணந்து இல்லறத்தில் இருந்தார் எனவும், ஒரு சமயம் மூங்கில் வெட்டும்போது அது பொன்பொழிய அதை நீத்து, இவர் ஒரு கீரையைப் பிடுங்கும் போது அது தன்னிலையிலே நிற்கக் கண்டு திகைத்தார் எனவும், கொங்கணரால் இவர் திருந்தினார் என்றும், இவரைத் திருமழிசை ஆழ்வார் என்றும் கூறுவர். இவர் தமிழில் தம் பெயரால் சிவவாக்கியம் எனும் நூல் செய்தார். இவர் வந்து பூமியில் பிறக்கையில் 'சிவ' என்று சொல்லிக்கொண்டு விழுந்தபடியால் இவருக்கு இப்பெயர் ஏற்பட்டது எனவும்,[177] **அபிதானசிந்தாமணி** என்னும் நூலின் ஒரு கதைக் குறிப்புத் தெரிவிக்கின்றது. சிவவாக்கியர் என்னும் பெயர் வந்தவகை சிவவாக்கியத்தில் கிடைக்கின்றது. காப்புச் செய்யுளில், 'சொல்லு கிறேன் சிவவாக்கியம்' [178] எனகிறார். இந்தச் சித்தர் சிவயோகிகளில் தலைசிறந்தவர். தாயுமானவரால் குறிப்பிடப்படும் பெருமை பெற்றவர். இவரது காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டாக இருக்கலாம்.

இவருடைய வரலாறு பற்றி ஆதாரபூர்வமான செய்திகள் எதுவும் கிடைக்கவில்லை. இவரது இயற்பெயரும் தெரியவில்லை. காரணப்பெயராகத்தான் சிவவாக்கியம் என்ற பெயர் ஏற்பட்டு வழங்கி வருகின்றது.

இவருடைய செய்யுள் நடை பெரும்பாலும் திருமூலரின் திருமந்திர நடையை ஒத்திருக்கின்றது.

**"தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்**
**முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்**
**பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்**
**சென்னியில் வைத்த சிவனரு ளாலே"** [179]

சிவவாக்கியரும் இக்கருத்தையே வலியுறுத்துகிறார்.

**"என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்தது இல்லையே**
**என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்து கொண்டபின்**
**என்னிலே இருந்த ஒன்றை யாவர் காண வல்லரோ**
**என்னிலே இருந்திருந்து யான் உணர்ந்து கொண்டேனே"**[180]

இறைவனை அறிதலாகிய நிலையைப்பற்றிக் குறிப்பிடும்போது,

"கோயிலாவது ஏதடா குளங்களாவது ஏதடா
... ... ... ...
கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே"[181]

எனக் குறிப்பிடுகின்றார்.

மதவாதத்தை மறுத்து இறைவன் ஒன்றானவன் என எடுத்துரைக்கின்றார்.

**"நட்ட கல்லைத் தெய்வம் என்று நாறுபுட்பம் சாத்தியே**
**சுற்றி வந்து முணமுணென்று சொல்லு மந்திரம் ஏதடா**
**நட்ட கல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்**
**சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ?"**[183]

என்ற பாடலில் சிவவாக்கியர், நட்ட கல்லைத் தெய்வம் என்று சொல்லக் கூடாது என்றவுடன் இறைக்கொள்கை இல்லாதவர் என்று முடிவிற்கு வந்துவிடக்கூடாது. அவர், 'நாதன். உள் இருக்கையில்' என்று குறிப்பிடும்போது இறைவன் இருக்கின்றான் எனக் கூறிக் கிரியை வழிபாட்டை விளக்குகிறார்.

இரு சிவவாக்கியர் இருந்திருக்கின்றனர் என்று கொள்ள இடமுண்டு. முன்னவர் 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்றும், பின்னவர் 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்றும்[184] கருத்து நிலவுகின்றது.

சிவவாக்கியர் சாதி மத பேதம் இல்லை என்று பாடுகிறார்.[185] பிறப்பொக்கும் எல்லா உயிருக்கும் என்ற கொள்கை யுடையவராக விளங்குகிறார். உண்மையில் சிவவாக்கியரின் வாக்கு விருப்பு

வெறுப்பற்ற இறைவன் திருவாக்கே எனலாம். அவர்தம் வாக்கை வாழ்வில் பின்பற்றி வாழ்வாங்கு வாழ்ந்தால் வானுறையும் தெய்வமாக மண்ணில் ஞானியாய்த் திகழலாம்.

## 13. சுப்பிரமணியர்

முருகனின் பெயர் பெற்ற இவரும் சித்தர் வரிசையில் வைக்கப் படுகிறார். இவர் பெயரில் சுப்பிரமணியர் ஞானம் 200, சுப்பிரமணியர் ஞானம் 500 எனும் நூல்கள் காணப்படுகின்றன. இவர் இறைவனை அடையும் வழியாகிய யோகமுறையில் வாசியோகத்தினைப் பற்றியும், மெய்ப்பொருள் உண்மைகளையும் எடுத்துரைக்கின்றார்.

சித்தர் என்று தோன்றினார்கள், எப்பொழுது அவர்களின் காலம் முடிவடைந்தது என்று வரையறுத்துக் கூற முடியாத நிலையில் உள்ளது. அதுபோன்று இவரது அகவை வரையறுத்துக் கூற முடியாத நிலையில் உள்ளது.[186] இவர் நூற்று முப்பத்திரண்டு தலை முறைக்காலம் உயிர் வாழ்ந்தவர்[187] எனக் கருதப்படுகின்றார்.

சிவன், உமாதேவி ஆகிய இருவரிடத்துச் சண்முகனும், கணபதியும் தோன்றிய தோற்றம், ஞானக்கனியாகிய மாங்கனியைத் தன் தாய் தந்தையையே உலகம் என்று நினைத்துச் சுற்றிவர கணபதிக்கு வழங்குதல், முருகனுக்கும் ஞானக்கனியை வழங்கி இவ்வுலகிலுள்ள மலைகளிடத்துக் குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருப்பிட மாகக் கொண்டு வாழ்வாயாக என்று சிவன் அறிவுரை கூறுதல், தேவர் படைத்லைமைப் பொறுப்பேற்றல், உடல் தினவெடுத்து அசுரர் உடல் கிழித்து அழித்துத் தேவர்கள் வாழ வழிசெய்தல் போன்ற செய்திகளை முதல் பத்துப் பாடல்களில் குறிப்பிடுகின்றார்.

இவரது கருத்துகளின் வாயிலாக இவர் சித்திபெறும் முறை களையும், யோக முறைகளையும் நன்கு எடுத்து இயம்புவதால் இவர் ஆண்டவனின் அருள் பெற்றவர் எனக் கருத இடமுண்டு.

## 14. திருமூலர்

'திரு' என்பதற்குப் பல பொருள்கள் இருப்பினும், 'தெய்வத்தன்மை வாய்ந்த' என்பது இயைந்ததாக உள்ளதெனலாம். பெரியபுராணத் தின்மூலம் கிடைத்த செய்தியால் கைலாயத்திலிருந்து வந்த சிவயோகியார் ஒருவர் திருவாவடுதுறையில் **மூலன்** என்னும் உயிர் இழந்த இடையனது உடலில் புகுந்தார் என்பதை அறியலாம்.

மூல நட்சத்திரத்தில் பிறந்ததால் மூலன் எனப் பெயர் பெற்றிருக் கலாம். 'மூலன்' என்பதைக் காரணப் பெயராகவும், தமிழில் சமய சாத்திரங்களுக்கு மூலமாகவும், சித்தர் பரம்பரைக்கு மூலமாகவும், தோத்திர சாத்திரங்களுக்கு மூலமாகவும் இருந்தமையால் திருமூலர் அப்பெயர் பெற்றிருக்கலாம். மரம் என்பது மரன் என வருவது போல, மூலம் என்பது மூலன் என வருவதுண்டு.[188] திருமூலரின் இயற்பெயர் சுந்தரன் எனக் கொள்ளவும் இடம் உண்டு. அவர்தம் நூலின் தற் சிறப்புப் பாயிரத்தில்,

**"தந்திரம் ஒன்பது சார்வுமூ வாயிரம்**
**சுந்தரன் ஆகமச் சொன்மொழிந் தானே"[189]**

எனக் குறிப்பிடுகிறார். திருமூலர் கைலாய மரபில் வந்தவர். கயிலை மரபு என்பது கயிலைநாதராகிய சிவன், சக்திக்குச் சாத்திரமுறையை அருள, சக்தி நந்திதேவருக்கு அருள, நந்திதேவர் சனற்குமாரர் முதலியவர்களுக்கு அருள, அவர்கள் அதனைச் சத்திய ஞான தரிசினிகளுக்கு அருள, அவர் அதனைப் பரஞ்சோதி முனிவருக்கு அருள, அவர் அதை மெய்கண்ட தேவருக்கு அருள இங்ஙனமாக வந்த பரம்பரை ஆகும்.[190] திருமூலர் தம் நூலாகிய திருமந்திரத்தைத் தமிழிலேயே எழுதினார் என்பதை,

**'என்னைநன் றாக இறைவன் படைத்தனன்**
**தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே"[191]**

இவ்வரிகளால் அறியலாம். திருமூலர் பரமசிவயோகி; சிவனையே பரம்பொருளாகக் கொண்டு சைவ ஆகம நெறியில் மூழ்கித் திளைத்தவர் என்பதைத் தெளிவாக உணரலாம்.

திருமூலர் சித்தரோடு தொடர்புகொண்டவரும் முதன்மையான வருமாவார். ஓராண்டு சிவயோகச் சமாதியில் கூடிப் பின் தெளிந்து ஒரு மந்திரப் பாட்டினை அருளிய திருமூலரும், இரவு முழுவதும் சிவயோகச் சமாதியில் நின்று பெற்ற அனுபவத்தையே திருவிசைப் பாக்களாக அருளிய பெருந்தகையாளர் கருவூர்த்தேவரும் கொள்கையால் ஒத்தவர்களே[192] என்பதைக் காணமுடிகிறது.

திருமூலர் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து, ஆண்டொன்றுக்கு ஒரு பாடல்வீதம் பாடினார் என்பது தெற்றென விளங்கும். தமிழ் **மூவாயிரம்** என்னும் திருமுறை சைவ சித்தாந்தமாகவும் தோத்திர மாகவும் விளங்கும் தனிச்சிறப்புடையது; சிவாகம உண்மைகளும் உலக வாழ்க்கையும் ஆகிய இருவகைப் பொருள் களையும் இனிய

தமிழில் விரித்துக் கூறுகிறது.[193] திருமந்திரத்தில் இல்லாத செய்திகளே கிடையாது. அதில் இருப்பதுதான் அறிவு, ஞானம்; அதில் இல்லாதது அஞ்ஞானம் என்று சொல்லலாம். சைவ சித்தாந்தத் திற்கே எடுத்துக்காட்டாக விளங்கும் நூல்களில் ஒன்று திருமந்திரமே யாகும்.[194]

திருமந்திர நூலிலுள்ள ஒன்பது தந்திரங்களுள் முதல் நான்கு தந்திரங்களும் சிவஞானத்தைப் பெறுதற்கு விரும்புபவர்கள் தம்மை அகமும் புறமும் தகுதியுடைய வராக்கிக் கொள்ளுதற்குரிய சாதனங் களையும், நடுவிலுள்ள ஐந்தாம் தந்திரம் சைவ சித்தாந்த சமய தத்துவங்களையும், பின்னுள்ள நான்கு தந்திரங்களும் ஞானம் பெறும் நிலையில் உணர்ந்து பெறுதற்குரிய நற்பயன்களையும் விரித்துரைக்கும் முறையில் அமைந்தனவாகும். திருமந்திரம் சிறப்புப் பாயிரம், பொதுப்பாயிரம், தற்சிறப்புப் பாயிரம் என்று மூன்று பாயிரங்களையும் ஒன்பது தந்திரங்களையும் உடையதாக உள்ளது.

முதல் தந்திரம் உபதேசம்முதல், கள்ளுண்ணாமை வரை 17 உட்பிரிவுகளையும் 166 பாடல்களையும் கொண்டுள்ளது. இரண்டாம் தந்திரம் 208 பாடல்களைக் கொண்டுள்ளது. அகத்தியம்முதல் பெரியாரைத் துணைக்கோடல்வரை 25 உட்பி ரிவு கள் உள்ளன. மூன்றாம் தந்திரம் அட்டாங்கயோகம்முதல் சந்திரயோகம் வரை 21 உட்பிரிவுகளைக் கொண்டது. இப்பகுதியில் 333 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இப்பகுதி முழுமையும் யோக மார்க்கம் பற்றியது. நான்காம் தந்திரம் அசபைமுதல் நவாக்கரி சக்கரம் வரையில் 13 உட் பிரிவுகளை உடையது. 520 பாடல்களைக் கொண்டுள்ளது. மூன்றாம் தந்திரம் முழுமையும் யோகம் பற்றிக் கூறியுள்ளது. இத் தந்திரம் சக்கரங்களைப் பற்றிக் கூறுகின்றது.

ஐந்தாம் தந்திரம் சுத்தசைவம் முதல் உட்சமயம்வரை 20 பகுதிகளையும் கொண்டது; 156 பாடல்களையும் உடையது. சைவத்தில் நான்கு வகைகளான சுத்த சைவம், அசுத்தசைவம், மார்க்க சைவம், கடுஞ்சுத்த சைவம் முதலியன பற்றியும் அவற்றின் அடிப்படைப் பொதுமறைகளான சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன பற்றியும் அவை தனித்தனியே முறையே சார்ந்துள்ள சன்மார்க்கம், சுகமார்க்கம், சற்புத்திர மார்க்கம், தாசமார்க்கம் என்பனபற்றியும் கூறியுள்ளார். அடுத்து, அவற்றின் முடிவாகிய சாலோபம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் முதலியவற்றையும் குறிப்பிடுகின்றார்.

ஆறாம் தந்திரம் சிவகுருதரிசனம்முதல் பக்குவன் ஈறாக 14 உட்பிரிவுகளை உடையது. 128 பாடல்களைக் கொண்டுள்ள இத் தந்திரம் சைவ சித்தாந்ததில் இரண்டாவது நிலையைக் கூறுவதாக உள்ளது.

ஏழாம் தந்திரம் ஆறாதாரம்முதல் இதோபதேசம்வரை 30 உட்பிரிவுகளைக் கொண்டுள்ளது. 407 பாடல்கள் உள்ளன. எட்டாம் தந்திரம் உடலிற் பஞ்சபேதம் முதலாகச் சோதனை இறுதியாக 33 உட்பகுதிகளையும் 518 பாடல்களையும் கொண்டுள்ளது. ஒன்பதாம் தந்திரம் குருமட தரிசனம்முதல் சர்வ வியாபி வரை 22 உட்பிரிவுகளையும், 400 பாடல்களையும் கொண்டுள்ளது. இப்பகுதி முழுமையும் சித்தாந்தக் கூறுகளைப் பற்றிக் கூறுவது.

புராணக் கதைகளும் தத்துவப் பொருள்களும் நிரம்பியவை என்னும் உண்மையைச் சித்தர்கள் இலக்கியம் பயில்வார் அறிவர். இறைவன் நஞ்சுண்டு அமுதமாக்கிக் கண்டம் கறுத்தான் என்னும் கதையின் உண்மையையும் விளக்குகின்றார் என்பதை,

"கண்டங் கறுத்த கருத்தறி வாரில்லை
உண்டது நஞ்சென் றுரைப்பர் உணர்விலோர்"[195]

என்ற பாடல்மூலம் உணரலாம். **திருமூலர் கருத்திடை தொள்ளாயிரம்** என்ற பெயரில் தொள்ளாயிரம் பாடல்கள் அடங்கிய நூலொன்றும் கிடைத்துள்ளது. **திருமூலர் ஞானம்** என்னும் பெயரில் பதினொரு பாடல்கள் அடங்கிய சிறுபகுதி சித்தர் ஞானக்கோவையில் காணப்படுகின்றது. **திருமூலர் ஆயிரம்** என்ற பெயரில் வைத்திய நூல் ஒன்றும் காணப் பெறுகிறது. இந்நூல்களையெல்லாம் திருமூலர்தான் எழுதினாரா என்பது ஐயப்பாட்டில் உள்ளது.

## 15. நந்தீஸ்வரர்

நந்தீஸ்வரர் என்ற பெயர் சிவனுக்கு இருக்கும் 66 பெயர்களில் ஒன்று என்பதைச் **சூடாமணி நிகண்டு**[196] என்னும் நூல் உணர்த்துகின்றது. திருமூலர் தன் குருவாக நந்திதேவனைக் குறிப்பிடுகின்றார். நந்தியைச் சித்தர் பெருமக்கள் புகழ்கின்றனர். சிவபெருமானையே நந்தி என்று குறிகலாம்.

**"நாடும் உறவுங் கலந்தெங்கள் நந்தியைத்
தேடுவன் தேடிச் சிவபெரு மான் ..."[197]**

எனவரும் திருமந்திர அடிகளை ஆராய்ந்தால் நந்தியும் சிவனும் வேறல்லர் என்பது தெள்ளத் தெளிவாக விளங்குகிறது.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நிலைகளுள் முதலிரண்டு நிலைகளில் இறைவனுக்குப் பூசை செய்யும் முறைகளைப் பற்றிக் குறிப்பிடுகிறது. முதலில் விக்னேசுவரன், முருகன், சிவன், சக்தி, திருமால் ஆகிய கடவுளர்களுக்குப் பூசை செய்யும் முறைகளை எடுத்தியம்புகிறார். மேலும், இரேசகத்தில் சூரிய பூசையும், பூரகத்தில் சந்திர பூசையும், கும்பத்தில் சனிபூசையும் செய்யும் முறைகளையும் அவற்றால் கிட்டும் பயன்களையும் நந்தீஸ்வரர் பூஜாவிதி தெளிவாக விளக்குகின்றது.

நந்திதேவரின் பாடல்கள் பூசை செய்யும் முறைகளை மற்றவருக்கு உணர்த்துவது போன்று கேளப்பா, பாரப்பா, ஏத்தப்பா, பண்ணப்பா என்று மூன்று முன்னிலை ஏவல் பொருளில் வைத்துக் கூறுகின்றார். இவருடைய பாடல்கள் மற்றச் சித்தர்களின் பாடல்களைப் போன்றும் மறைபொருளுடையனவாகக் காணப்படாமல் எளிமையான முறையில் அகப்பூசை செய்யும்முறைகளையும் புறப்பூசை செய்யும் முறைகளையும் விளக்குகின்றன.

## 16. பட்டினத்தார்

இவர் காவிரிப்பூம்பட்டினத்தில் தனவணிகர் குலத்தில் சிவநெறிச் செல்வரான சிவநேசஞ் செட்டியாருக்கும் ஞானகலை ஆச்சிக்கும் திருமகனாய்ப் பிறந்தார். திருவெண்காட்டு சுவேதாரண்யப் பெருமாளின் திருவருளை முன்னிட்டுச் சுவேதாரண்யர் என்று பெயரிடப்பட்டுத் திருவெண்காடர் என்று எல்லாராலும் அழைக்கப் பட்டார். சிவபெருமானின் அருளால் குபேரனே இவ்வாறு பிறந்ததாகக் கூறுவதும் உண்டு.

பட்டினத்தார் இறைவனின் அருள்பெற்று திருவெண்காடு, சீர்காழி, சிதம்பரம் முதலான பல சிவத்தலங்களுக்கும் யாத்திரை சென்று ஞானப்பாடல்களும் திருப்பாடல்களும் திருக்கழுமலமும் மணிக்கோவை, கோயினான்மணிமாலை போன்ற நூல்கள் பலவும் இயற்றித் திருவொற்றியூருக்கு வந்து சேர்ந்தார். அங்கு ‘முதல்வன் முறையீடு’, ‘அருட்புலம்பல்’ முதலிய பாக்கள் இயற்றி வைத்திருந்த இடத்திலேயே சமாதிநிலை அடைந்து சிவலிங்க வடிவமானார்.

இவர் இயற்றிய நூல்கள், கோயில் நான்மணிமாலை, திருக்கழுமலமும் மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது முதலிய நூல்கள் பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன.

இவருடைய காலம் 10 ஆம் நூற்றாண்டு அல்லது 11 ஆம் நூற்றாண்டாக இருக்கலாம். இவர் பெயர் கொண்ட மற்றொரு பட்டினத்தார் 15 ஆம் நூற்றாண்டில் இருந்ததாகத் தெரிகிறது.[198] திருவிசைப்பாத் தலைவர் பட்டினத்தடிகளின் கணக்க ரென்பது கேள்விப்படுதலின், ஒன்பதாவது திருமுறையாகிய திருவிசைப்பாக் காலமாகிய கி.பி.9 ஆம் நூற்றாண்டே அடிகள் நிலவுலகில் திகழ்ந்த காலமென்று கொள்ளுதல் தவறாகாது.[199] வேதாந்தக் கருத்துகளை விளக்கிக் காட்டுவதிலே பட்டினத்தார் பாடல்கள் சிறந்து விளங்கு கின்றன. பதினோராந்திருமுறையில் உள்ள பட்டினத்தார் பாடல்கள் பக்தி மார்க்கத்தையே பெரும்பாலும் வலியுறுத்துவன. பட்டினத்தார் பாடல் திரட்டு பெரும்பாலும் ஞானமார்க்கத்தையே வலியுறுத்து கின்றன.[200] பட்டினத்தார் சைவ திறத்தினைச் சைவ உலகிற்கு எடுத்தியம்பித் திருவள்ளுவப் பெருந்தகையின் சீரிய கொள்கைக்குத் துணைபுரிந்துள்ளார்.[201]

பட்டினத்தார் அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பதனை நல்ல நாரில் பூட்டிய சூத்திரப்பாவை அந்த நார் தவறிவிட்டால் தானே ஆடாத தன்மைபோல, இறைவனைப் பிரிந்தால் தன்னால் ஒன்றும் இயலாது[202] என்று இறைவனின் தன்மையைக் கூறுகின்றார். இறைவனிடத்து உள்ளன்பு இல்லாமல் செய்யும் பூசையினால் ஒரு பயனும் இல்லை என்பதைக் குறிப்பிடுகின்றார்.

**"காடே திரிந்தென்ன? காற்றே புசித்தென்ன? கந்தைசுற்றி**
**ஓடே எடுத்தென்ன? உள்ளன்பி லாதவர் ஓங்குவிண்ணோர்**
**நாடே யிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியப்பால்**
**வீடே யிருப்பினும் மெய்ஞான வீட்டின்பம் மேவுவரை"[203]**

என மெய்யன்பர்கள்தான் மெய்ஞ்ஞான வீட்டின்பத்தை அடைய முடியும் என்பதை எடுத்துரைக்கின்றார். பட்டினத்தார் நிலை யாமை யைப் பற்றி உணர்த்தும்போது இருப்பது பொய், போவது மெய் என்றெண்ணி எவ்வுயிருக்கும் தீங்கு செய்ய எண்ணாதே[204] எனக் கூறுகின்றார்.

**"அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே! விழியம்பொழுந**
**மெத்திய மாதரும் வீதிமட்டே; விம்மிவிம்மி இரு**

கைத்தலம் மேல்வைத்து அழும் மைந்தரும் சுடுகாடுமட்டே
பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே"[205]

எனவரும் பாடல்மூலம் வீடுவரை உறவு, வீதிவரை மனைவி, காடுவரை பிள்ளை இறுதியில் தன்னைத் தொடர்ந்து வருவது இருவினைகளே என்பதைத் தெளிவு படுத்துகிறார். தாயாருக்குத் தகனக்கிரியை செய்யும்போது பாடிய பத்துப் பாடல்களும் தாயின் பெருமையைப் பற்றிக் கூறுவனவாக உருக்கமாக அமைந்துள்ளன. உடற்கூற்றுவண்ணம் கடலினும் கருத்தாழம் கொண்டது; படர்ந்த விண்ணினும் நம்மைக் கருத்துணர வைப்பதாகும்.

## 17. பத்திரகிரியார்

இவர் அரசனாக இருந்து, பட்டினத்தாரின் தவசக்தியை உணர்ந்து, தம் மணிமுடி அரச போகங்களையெல்லாம் உதறித் தள்ளித் துறவுபூண்டு பட்டினத்தாரையே தம் ஞான குருவாகக் கொண்டு அவருடைய கட்டளைப்படி திருவிடைமருதூருக்குச் சென்று சட்டியில் பிச்சை வாங்கித் தம் குருவிற்கும் உண்பித்துச் சேடத்தைத் தாம் உண்டு சிவயோகம் எய்தி இருந்து வரலானார்.

பத்திரகிரியார் பற்றனைத்தையும் துறந்ததும், மெய்ஞ்ஞானப் புலம்பல் முதலான தமிழ்க்கண்ணிகள் பாடியும், சிவயோகம் எய்தியும் சமாதி நிஷ்டைகளில் சூழ்ந்துமிருந்தார். பட்டினத்தார் வாழ்ந்த 10 ஆம் நூற்றாண்டு அல்லது 11 ஆம் நூற்றாண்டில் இவர் வாழ்ந்திருக்கலாம் என்று உணரலாம். விக்கிரமாதித்தன் கதையில் வரும் பத்திரகிரிராசனும் வடமொழியில் நூல்கள் இயற்றிய பத்ருஹரியும் இவரினும் வேறானவர் என்பதை அறியலாம்.[206]

இவருடைய பாடல்கள் மெய்ஞ்ஞானப் புலம்பல் பாடல்கள்; அவை மனித நெஞ்சத்தை ஈர்த்து இறையருளின் இன்சுகத்தில் திளைக்கச் செய்வன. பத்திரகிரியாரின் பாடல்கள் தாயுமானார் பாடல்கள் போன்று கண்ணிப் பாக்களாக அமைந்துள்ளன. தாயுமானார் ஒவ்வொரு கண்ணியின் முடிவிலும் பராபரமே என்று முடிப்பதுபோன்றே இவர் எக்காலம்? என்று முடிக்கின்றார். 'பிறவி நீங்கவேண்டும்; பிறவியே கவலையைத் தரக் கூடியது; அப்பிறவி யிலிருந்து விடுபடவேண்டும்'[207] என வேண்டுகிறார். யோக நிலையைக் கூறும்போது, ஆணவத்தை அடக்கி ஐம்புலன் களைச் சுட்டறுத்துத் தூங்காமல் தூங்கி யோகநிலையை அடைவதுவும், நீங்காத சிவயோக நிலை கொண்டும் இருக்க வேண்டும் என்றும்,

அந்தக்காலம் எக்காலம்? [208] என்று வினவுகிறார். எண்ணூறு யுகம் இருந்தாலும் அடையாத வீட்டின்பத்தைத் திருநீறுபூசி விளங்கினால் அந்த வீடுபேறு கிடைக்கும் என்றும், உண்மையான சிவவேடம் பூண்டு விளங்கவேண்டும்[209] என்றும் குறிப்பிடுகின்றார்.

பட்டினத்தார் போன்றே இவரும் சிவனை வேண்டிப் பாடுகிறார். பன்றி வடிவெடுத்துத் திருமால் சிவனைக் காணாத நிலைபற்றியும்[210] சேவைபுரிந்து சிவரூபக் காட்சி பெறுதல் பற்றியும்[211] கூறுகின்றார்.

இறைவனை நினைத்தால் அவன் அருள் பெறலாம் என்பதைக் கடலில் முட்டையிட்ட ஆமை, பிறகு வேறிடத்திற்குச் சென்று அம் முட்டையினை நினைத்துப் பார்க்கும்போது உருவம் உண்டாகும். அதுபோல உன்னை நான் நினைந்து அடைவது எக்காலமோ? [212] என வேண்டுகிறார்.

இறைவன் சித்தாந்த உட்பொருளானவன்; அவனை நினைக்க வேண்டும்; வேதாந்த வேதம் எல்லாம் விட்டொழிக்க வேண்டும்[213] என்று கூறுகின்றார். தென்றலைப் போன்று உலகிற்கு இன்பமும் மகிழ்ச்சியும் அளிக்க எண்ணும் ஏக்க உணர்வாகப் பத்திரகிரியார் புலம்பல் அமைந்துள்ளது. மற்றவர்களின் நலனுக்காகத் தாம் வருந்துவதே சிறந்ததென்று குற்றமற்ற காட்சியைக் காண்கிறார் பத்திரகிரியார்.

தம் வாழ்வின் பயனை உலகம் அறியவேண்டும். இவ்வுலகத்தில் அறியாமை யாகிய இருள் அகன்று, அருளாகிய ஒளி எங்கும் பரவவேண்டும் என்று அவர் புலம்புகின்றார்.

## 18. பாம்பாட்டிச் சித்தர்

நம் நாட்டுச் சித்தர்களுள் பாம்பாட்டிச் சித்தரும் ஒருவராகக் கருதப்படுகிறார். இவருடைய ஒவ்வொரு பாடலிலும் பாம்பினிடம் சொல்வது போன்று அமைந்திருக்கின்றன. பாம்பென்னும் வாசியைக் கட்டி, நாதர் முடியில் ஆடச் செய்து, ஒளி நிலையைப் பெற்றவர் பாம்பாட்டிச் சித்தர்.[214] மூலாதாரமாகிய பாம்பினை யோகப் பயிற்சி யினால் எழுப்பி மேலேற்றும் திறம்பற்றிப் பாடியதால் இவர் பாம்பாட்டிச் சித்தர் என்று அழைக்கப்பட்டார் எனவும், அல்லது மனத்தைப் பாம்பாகவே உருவகித்து அடக்குவதற்காகப் பாடிய தாலும் இப்பெயர் பெற்றிருக்கலாம். இவர் அந்தணர் குலத்தில் பிறந்தவராகக் கருதப் படுகிறார்.[215] இவர் முருகன் கோயில்கொண்ட

இடமாகிய மருதமலையில் தவம்செய்தார் என்பதற்குப் பாம்பாட்டிச் சித்தர் குகை என்று இவர் பெயரில் ஒரு குகை இன்றும் காணப் படுகிறது. இவருடைய ஆசிரியர் சட்டைமுனி என்பர். சித்தர் ஆருடம், பாம்பாட்டிச் சித்தர் பாடல் முதலியன இவர் இயற்றி யவையே யாகும்.[216] இவர் திருக்கோகர்ணத்தில் பிறந்தவர் என்ற செய்தியும் கூறப்படுகின்றது.[217] இவர் காட்டில் பாம்பைப் பிடித்தாட்டிக் கொண்டிருந்த காலத்தில் ஒருமுறை நவரத்ன பாம்பைப் பிடித்துச் செல்ல சட்டைமுனி அங்குவர, அவரிடம் தீட்சையும் பெற்று அவர் சமாதியிலிருந்து மீண்டும் எழுந்து சித்துகள் பல செய்தார். ஓர் அரசன் இறந்து விழுந்தபோது இவர், திருமூலரைப் போன்று அவ் வரசனின் உடலில் புகுந்து அவன் மனைவியுடன் இருந்து, செத்த பாம்பை ஆட வைத்துக் காட்டினார். அதனால் இப்பெயர் பெற்றார் என்ற கதையும் உண்டு.[218]

பாம்பாட்டிச் சித்தர் எளிய சொற்களைக் கொண்டும், இனிமை யாகவும் சந்தம் மிகுந்ததாகவும் இருப்பதால் அறிஞர்முதல் ஆண்டிவரை இவர் பாடல்களைச் சுவைத்துப் பாடுகின்றனர். இவர்தம் பாடல்களில் குரு வணக்கம், பாம்பின் சிறப்பு, சித்தர் வல்லபம், பொருளாசை விளக்கம், உடலின்குணம், அகப்பற்று நீக்கல் ஆகியவற்றைப் பற்றிப் பாடியுள்ளார். சித்தர்களின் செயற்கரிய செயல்பற்றிக் கூறுகிறார். தூணைத் துரும்பாகத் தோன்றிடச் செய்தல், துரும்பைப் பெருந்தூணாகத் தோன்றச் செய்தல், ஆணைப் பெண்ணும், பெண்ணை ஆணுமாகச் செய்தல், எட்டு மலைகளைப் பந்தாய் எடுத்தல், ஏழு கடலையும் குடித்து ஏப்பமிடுதல், மட்டுப்படா மணலையும் மதித்துவிடுதல் போன்ற சித்து வேலைகளைச் சித்தர்கள் செய்யும் தன்மை படைத்தவர்கள் எனக் குறிப்பிடுகின்றார்.[219]

மக்கள் பொருளாசை மீதுள்ள பற்றினை விலக்குதல்வேண்டும் என்கிறார். நாடு நகர் வீடு மாடு நற்பொருள் எல்லாம் யமன் வரும்போது தம்மை நாடி வருவதில்லை என்றும், கானல்நீரை நீரெனவே கண்டு களிப்பார் என நிலையற்ற உடலின்தன்மைபற்றி உவமைவாயிலாக வெளிப்படுத்துகிறார்.[220] மனிதர்கள் யான், எனது என்ற அகப் பற்றையும், புறப் பற்றையும் அறவே நீக்குதல் வேண்டும்; தாமரை இலையில் தண்ணீர் இருப்பதுபோல, இவ்வுலக ஆசையை நீக்கி, ஒளிவடிவாய் உள்ள இறைவனை வணங்கிட வேண்டும் என்கிறார்.[221] இவர் இறையருளும் சித்தும் தெளிவுற உணரப் பெற்றவர் என்றும், யோக முறைகள் கைவரப் பெற்றவர் என்றும் அறியலாம்.

இங்ஙனம் பதினெண் சித்தர்களின் வரலாற்றுச் சுருக்கமும், அவர்தம் பணியும் நன்கு உணர்த்தப்பட்டன.

## தொகுப்புரை

இவ்வியலில் சித்தர்களின் சொல் விளக்கமும் அவர்களின் வரலாறும் பற்றிய செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

முனி - ரிஷி, சந்நியாசி, ஞானி, முத்தர், சித்தர் ஆகிய சொற்களின் பொருள்கள்; சித்தம் - சொல் விளக்கம்; சித்தர் - இலக்கியச் சான்றுகள் ஆகியவை எடுத்துரைக்கப்படுகின்றன. சித்தி என்னும் சொல் பற்றி இலக்கியச் சான்றுகளும், கருமசித்தி, யோகசித்தி, ஞானசித்தி என்னும் மூவகைச் சித்திகளின் இயல்புகளும் கூறப்பட்டுள்ளன.

சித்தர்கள் என்பவர்கள் யார் என்பதுபற்றியும், அவர்கள் ஆதிக்கமுள்ளவர்களால் ஒடுக்கப்பட்ட நிலை, அவர்களின் இயல்புகள், காலம்பற்றிப் பல்வேறு அறிஞர்களின் கருத்துகள் முதலியன விளக்கப்படுகின்றன.

இலக்கியங்களில் சித்தர்கள் பெறுமிடம்; இலக்கிய அறிஞர்களின் சித்தர்கள்பற்றிய சிந்தனை; சித்தர் பாடல்கள் இயல்பும் சித்தர்களின் தன்மை முதலியன தொகுத்துரைக்கப்பட்டன. பதினெண் சித்தர் பற்றி அறிஞர் கூறும் பல்வேறு தொகைக் குறிப்புடன் இவ்வாய்வுக்கு அடிப்படையாக விளங்கும் பதினெண் சித்தர்களின் பெயர்ப் பட்டியலும் தரப்பட்டுள்ளன

சித்தர்களின் யோகநெறி, யோக நெறியில் பெறும் சித்தி நிலை; கடவுள் நெறி; சாதி மதம் கடந்தமை ஆகிய செய்திகள் சித்தர்களின் நெறியாக ஆராயப்பட்டுள்ளன.

சித்தர் பாடல்களில் இலக்கியச் சுவை என்னும் பகுதியில் அவர்களின் பாடல்களில் நிறைந்துள்ள பலவகை இலக்கிய நயங்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அவர்கள் பாடல்களில் பயின்றுவரும் உவமை நயம், யாப்பு, கும்மி, சந்தம், நாடோடி இலக்கியத் தாக்கம் ஆகியவை தக்க உதாரணங்களுடன் விளக்கப்பட்டுள்ளன. சித்தர்களின் மருத்துவப் புலமை பற்றியும் ஆராயப்பட்டுள்ளது.

அடுத்துச் சித்தர் பாடல்களில் அமைந்துள்ள புராண இதிகாசச் செய்திகள், மந்திரம், மறைபொருள் பற்றிய கருத்துகள் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

பதினெண் சித்தர்களின் வரலாற்றுச் சுருக்கம் என்னும் பகுதியில் அகத்தியர், அகப்பேய்ச் சித்தர், அழுகணிச் சித்தர், இடைக்காட்டுச் சித்தர், இராமதேவர், கடுவெளிச் சித்தர், காகபுசுண்டர், குதம்பைச் சித்தர், கொங்கணச் சித்தர், சட்டைமுனி, சிவவாக்கியர், சுப்பிரமணியர், திருமூலர், நந்தி, பட்டினத்தார், பத்திரகிரியார், பாம்பாட்டிச் சித்தர் ஆகிய பதினெண் சித்தர்களின் வரலாற்றுச் செய்திகள் சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

# குறிப்புகள்

1. **சித்தர் பெரிய ஞானக்கோவை - இரண்டாம் பாகம்,** பா. 12.
2. இரா. மாணிக்கவாசகம், **நம்நாட்டுச் சித்தர்கள்,** ப. 38
3. **கலித்தொகை:** 19:5. 4. **நற்றிணை:** 392:9-10.
5. **திணைமாலை நூற்றைம்பது,** 27:2.
6. **சிலப்பதிகாரம்: அரங்கேற்ற காதை,** 1.7. **மணிமேகலை,** பா.8: 61.
8. இரா. மாணிக்கவாசகம், **நம்நாட்டுச் சித்தர்கள்,** ப. 39.
9. மேற்படி, ப.36.
10. சுவாமி சித்பவானந்தர், **சந்நியாசி,** ப.36.
11. அ. சுத்தானந்த பாரதியார், **சிவஞான தீபம்,** ப. 136.
12. வி. பலராமையா, **சாகாக்கலை,** ப.22.
13. **ஐந்தாவது திருமந்திர மாநாட்டு மலர்,** ப.4.
14. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி,** ப. 25.
15. பொ. சுப்பிரமணிய பிள்ளை, **சித்தாந்தச் செம்பொருள் விளக்கம்,** பக்.9-10.
16. ந. சுப்பு ரெட்டியார், **முக்தி நெறி,** ப. 353.
17. வை. இரத்தினசபாபதி, **திருமுறைத் தெளிவே சிவஞானபோதம்,** ப. 196. 18. திரு. 1440.
19. சாமி சிதம்பரனார், **சித்தர் கண்ட விஞ்ஞானமும் தத்துவமும்,** ப. 28.
20. திரு.வி. கலியாணசுந்தரனார், **சித்த மார்க்கம்,** ப.10.
21. இரா. மாணிக்கவாசகம், **நம்நாட்டுச் சித்தர்கள்,** ப. 43.
22. திரு.வி. கலியாண சுந்தரனார், **சித்த மார்க்கம்,** ப. 15.
23. கா. சுப்பிரமணிய பிள்ளை, **தமிழர் சமயம்,** ப. 86.
24. (மேற்கோள்) இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி,** ப. 35.
25. (மேற்கோள்) இரா. மாணிக்கவாசகம், **நம்நாட்டுச்சித்தர்கள்,** பக்.40-41.
26. (மேற்கோள்) மேற்படி, ப.41.
27. **சித்தர் பெரிய ஞானக்கோவை-முதற்பாகம்,** பா.18, ப. 231.
28. திருநாவுக்கரசர், **தேவாரம் - திருமுறை -6, திருப்பாச்சூர்-6.**
29. **திருக்குறள் - பரிமேலழகர்உரை,** ப. 1410.
30. இரா. மாணிக்கவாசகம், **நம் நாட்டுச் சித்தர்கள்,** ப. 88.
31. **திருவாசகம், அச்சோப்பதிகாரம்,** ப. 170, பா.1.

32. மேற்படி, **திருத்தெள்ளேணம்,** ப.78, பா. 16.
33. **நாலாயிரத் திவ்விய பிரபந்தம் (திருக்குறுந்தாண்டம்)**,செ.2041.
34. தாயுமான அடிகள், **தாயுமானவர் பாடல்,** பா. 267, ப.241.
35. இராமலிங்க அடிகள், **திருவருட்பா,** பா.3193, ப. 584.
36. **சித்தர் பெரிய ஞானக்கோவை-முதற்பாகம்,** பா.13. ப. 120.
37 மேற்படி, பா.4, ப.322-323.
38. ப.சொ. காயாரோகணம், **சித்தர் கடவுள் கொள்கை - ஆய்வேடு**, ப.6.
39. இரா. மாணிக்கவாசகம், **நம் நாட்டுச் சித்தர்கள்,** ப.88.
40. T.R.Thulasiram - **Arut Perum Jothi and Deathless Body**, Pp.410-411.
41. மேற்படி, ப.413 42. மேற்படி, ப.414.
43. மேற்படி, 414.
44. வி. பலராமையா, **சித்தர் மெய்ப்பொருள்**, ப.25.
45. (மேற்கோள்), இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி**, ப.41.
46. Runes, D., **Dictionary of Philosophy**, P.203
47. க. கைலாசபதி, **ஒப்பியல் இலக்கணம்,** ப. 195.
48. (மேற்கோள்) மு. தெய்வநாயகம், **விவிலியம், திருக்குறள், சைவ சித்தாந்தம் - ஓர் ஒப்பாய்வு**,ப.151.
49. ந.சி. கந்தையா பிள்ளை, **இந்து சமய வரலாறு**, ப.108.
50. மு. தெய்வநாயகம், **விவிலியம், திருக்குறள், சைவ சித்தாந்தம் - ஓர் ஒப்பாய்வு**,ப,149.
51. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற்பாகம்**,பா,35, ப.60.
52. க. கைலாசபதி, **ஒப்பியல் இலக்கியம்,** பக். 187-189.
53. க. வெங்கடேசன், **தமிழ் நூல்களில் சித்த மருத்துவக்கலை - ஆய்வேடு,** ப.51.
54. வி. பலராமையா, **சித்தர் மெய்ப்பொருள்**, ப. 8.
55. மு. கோவிந்தசாமி, **இலக்கியத் தோற்றம்,** ப. 108.
56. இரா. மாணிக்கவாசகம், **நம் நாட்டுச் சித்தர்கள்,** ப. 234.
57. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு** - 14 ஆம் நூற்றாண்டு, ப. 340.
58. வை. சதாசிவ பண்டாரத்தார், **தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி. 250-611),** ப. 63.
59. ப. செல்வநாயகம், **தமிழ் இலக்கிய வரலாறு,** ப. 125.
60. **தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு,** ப. 320.
61. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி,** ப. 28.

62. மு. கோவிந்தசாமி, **இலக்கியத் தோற்றம்,** ப. 171.
63. வெள்ளைவாரணம், **பன்னிரு திருமுறை வரலாறு,** பாகம்-1, ப. 25.
64. Puranalingam Pillai, **Tamil Literature, P.24.**
65. (மேற்கோள்) இரா. மாணிக்கவாசகம், **நம் நாட்டுச் சித்தர்கள்,** ப. 232
66. (மேற்கோள்) மேற்படி, ப. 53. 67. **திருக்குறள்,** 28.
68. **குறுந்தொகை,** 130.
69. **திருஞானசம்பந்தர் தேவாரம்-3; திருவாலவாய்**:51: பா.2:3.
70. **திருநாவுக்கரசர் தேவாரம்: திருவீழிமிழலை**:5, பா.128.
71. **திருவாசகம், அருட்பத்து,** ப. 126.
72. பரஞ்சோதி முனிவர், **திருவிளையாடற் புராணம், கூடற் காண்டம்,** பா.54.
73. **கலைக்களஞ்சியம் - தொகுதி-4,** ப.643.
74. ந.சி. கந்தையா பிள்ளை, **தமிழ் இந்தியா,** ப. 204.
75. சாமி சிதம்பரனார், **சித்தர்கள் கண்ட விஞ்ஞானமும் தத்துவமும்,** ப. 27.
76. தி. தயானந்த பிரான்சிஸ், **தமிழ்ச் சைவம்,** ப. 110.
77. திரு.வி. கலியாணசுந்தரனார், **சித்த மார்க்கம்,** ப. 11.
78. கா. சுப்பிரமணிய பிள்ளை, **இலக்கிய வரலாறு,** ப.333.
79. மு. வரதராசனார், **தமிழ் இலக்கிய வரலாறு,** ப.190.
80. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி,** ப. 26.
81. வி. பலராமையா, **சித்தர் மெய்ப்பொருள்,** ப. 11.
82. நா. முத்தையா, **ஈழத்துச் சித்தர்கள்,** ப.3.
83. இரா. மாணிக்கவாசகம், **நம் நாட்டுச் சித்தர்கள்,** ப. 45.
84. திரு. 2486. 85. மேற்படி, 2042.
86. மேற்படி, 1419.
87. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்,** பா.5.
88. மேற்படி, பா. 75.89. மேற்படி, பா. 18.
90. மேற்படி, இரண்டாம் பாகம், பா.1.
91. மேற்படி, முதற் பாகம், பா. 3.
92. மேற்படி, இரண்டாம் பாகம், பா.57
93. **கலைக்களஞ்சியம்-தொகுதி-3,** ப. 1416.
94. சித்தர் பெரிய ஞானக்கோவை-முதற் பாகம், பா.3; ப.317.
95. (மேற்கோள்), இரா. மாணிக்கவாசகம், **நம் நாட்டுச் சித்தர்கள்,** ப. 115.
96. கா. சுப்பிரமணிய பிள்ளை, **இலக்கிய வரலாறு, பகுதி-2,** ப. 338.

97. The Oxford English Dictionary, Vol. VII, P.46.
98. சாமி சிதம்பரனார், **சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம்,** ப. 49.
99. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்,** பா.88, ப. 192.
100. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி,** ப. 50.
101. V. Kamil Zvelebil, The Poets of Powers, P.128.
102. திரு.வி.கலியாணசுந்தரனார், **சித்த மார்க்கம்,** ப. 12.
103. அ. சுத்தானந்த பாரதியார், **திருமந்திரம்,** ப. 88.
104. இரா. மாணிக்கவாசகம், **நம்நாட்டுச் சித்தர்கள்,** ப.51.
105. வி. பலராமையா, **சித்தர் மெய்ப்பொருள்,** ப. 43.
106. தி. தயானந்தன் பிரான்சிஸ், **தமிழ்ச் சைவம்,** ப. 12.
107. ப.சொ. காயாரோகணம், **சித்தர்களின் கடவுள்கொள்கை-ஆய்வேடு,** ப. 218.
108. **சித்தர் பெரிய ஞானக்கோவை-முதற் பாகம்,** பா.9, ப.182.
109. மேற்படி, பா.11, ப.51.
110. மேற்படி, பா.79, ப. 265.
111. மேற்படி, பா.38, ப. 123.
112. மேற்படி, பா.45, ப. 124.
113. மேற்படி, பா.4, ப.44
114. மேற்படி, பா.20, ப.69.
115. மேற்படி, பா. 180, ப. 114.
116. மேற்படி, பா. 9, ப. 153.
117. மேற்படி, பா. 49, ப. 187.
118. மேற்படி, பா. 79, ப. 191.
119. மேற்படி, பா. 80, ப. 191.
120. புலவர் குழந்தை, **தொடையதிகாரம்,** ப. 257.
121. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்,** பா. 65, ப. 222.
122. புலவர் குழந்தை, **தொடையதிகாரம்,** ப. 81.
123. **சித்தர் பெரிய ஞானக்கோவை-முதற் பாகம்,** பா. 34, ப. 243.
124. மேற்படி, பா. 31, ப.122.
125. மேற்படி, பா. 7, ப. 67.
126. மேற்படி, பா. 2, ப. 53.
127. மேற்படி, பா.11, ப. 235.
128. மேற்படி, பா. 60, ப. 189
129. **திருவருட்பா, திருமுறை-6,** 6:1.
130. இரா. மாணிக்கவாசகம், **நம்நாட்டுச் சித்தர்கள்,** பக். 306-307.
131. (மேற்கோள்), இரா. மாணிக்கவாசகம், **நம் நாட்டுச்சித்தர்கள்,** ப. 309.
132. (மேற்கோள்), மேற்படி. ப. 317.
133. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்,** பா.3, ப. 53.
134. மேற்படி, பா.5, ப.225.
135. இரா. மாணிக்கவாசகம், **நம் நாட்டுச் சித்தர்கள்,** ப. 293.
136. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்,** பா. 289, ப. 227.
137. வி. பலராமையா, **சித்தர் மெய்ப்பொருள்,** ப. 7.

138. **சித்தர் பெரிய ஞானக்கோவை-முதற் பாகம்**, பா. 4, ப. 229.
139. மேற்படி, முன்னுரை, ப. 9.
140. இரா. மாணிக்கவாசகம், **நம் நாட்டுச் சித்தர்கள்**, ப. 122.
141. கா. சுப்பிரமணிய பிள்ளை, **இலக்கிய வரலாறு**, ப. 344.
142. **தமிழ் கிளாசிகல் அகராதி**, ப. 136.
143. இரா. மாணிக்கவாசகம், **நம்நாட்டுச் சித்தர்கள்**, ப. 126.
144. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்**, பா.7, ப. 235.
145. மேற்படி, பா.4, ப. 234. 146. மேற்படி, ப. 21.
147. மேற்படி, ப. 4.
148. **அபிதான சிந்தாமணி**, ப. 150. 149. மேற்படி, ப. 150.
150. ஜெ. ஆர். அர்நால்டு, **புலவர் சரித்திர தீபகம்**, ப. 34.
151. மேற்படி, ப. 34.
152. **அகம்**. 130, 194, 247; **குறுந்தொகை** 251;
**நற்றிணை**: 142, 136; **புறம்**: 42.
153. **கலைக்களஞ்சியம்**, ப. 150;
154. M.S. Purnalingam, **Tamil Literature**, P.99.
155. (மேற்கோள்) இரா. மாணிக்கவாசகம், **நம்நாட்டுச் சித்தர்கள்**, ப. 132.
156. இரா. மாணிக்கவாசகம், **நம்நாட்டுச் சித்தர்கள்**, ப. 133.
157. **கலைக்களஞ்சியம்**, ப. 891.
158. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்**, பா. 9, ப. 327
158அ) இரா. மாணிக்கவாசகம், **நம்நாட்டுச் சித்தர்கள்**, பக். 142-143.
159. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்**, குறிப்புரை, ப. 23
160. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு, 15 ஆம் நூற்றாண்டு**, ப. 326.
161. **சித்தர் பெரிய ஞானக்கோவை-முதற் பாகம்**, பா.1, ப. 229.
162. மேற்படி, பா.18, ப. 231.
163. மேற்படி, இரண்டாம் பாகம், பா. 19, ப.47.
164. மேற்படி, பா.10, ப.73.
165. மேற்படி, பா.50, பா.53.
166. **அபிதான சிந்தாமணி**, ப. 1237.
167. **சித்தர் பெரிய ஞானக்கோவை- இரண்டாம்** பாகம், பா.23, ப. 48.
168. மேற்படி, பா.27, ப. 48.
169. இரா. மாணிக்கவாசகம், **நம் நாட்டுச் சித்தர்கள், ப. 157.**
170. அபிதான சிந்தாமணி, ப. 505.
171. கா. சுப்பிரமணிய பிள்ளை, **இலக்கிய வரலாறு**, ப. 366.

172. (மேற்கோள்) இரா. மாணிக்கவாசகம், **நம் நாட்டுச் சித்தர்கள்**, ப.159.
173. **கலைக்களஞ்சியம்**, ப. 551
174. **சித்தர் பெரிய ஞானக்கோவை** - முதற் பாகம், பா. 137, ப. 270.
175. மேற்படி, இரண்டாம் பாகம், பா. 5, ப. 6.
176. மேற்படி, பா.96, ப. 42.
177. **அபிதான சிந்தாமணி**, ப. 665.
178. **சித்தர் பெரிய ஞானக்கோவை** - [illegible] பாகம், பா. [illegible] ப. 118
179. திரு. 2565.
180. **சித்தர் பெரிய ஞானக்கோவை** - முதற் பாகம், பா [illegible] ப. 123
181. **சித்தர் பெரிய ஞானக்கோவை** - முதற் பாகம், பா 33, ப 123
182 மேற்படி, பா.8, ப. 135. 183. மேற்படி, பா 496 ப 177.
184. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு**, ப. 349.
185. **சித்தர் பெரிய ஞானக்கோவை** - முதற் பாகம், பா 38, ப 123.
186. **போகர் ஏழாயிரம்**, பா 852. 187. மேற்படி, பா. 731
188. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர** [illegible], ப.57.
189. **திருமந்திரம்** - சிறப்புப் பாயிரம், பா 1
190. (மேற்கோள்), டாக்டர் இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி**, ப. 67. 191. திரு. 152.
192. வை. இரத்தின சபாபதி, **திருமுறை நெறியே சிவஞானபோதம்**, பா. 172.
193. வெள்ளைவாரணா, **திருமந்திர அருள்முறைத் திரட்டு**- பதிப்புரை, ப.IX
194. கோபால ஐயர், **நான்காவது திருமந்திர மாநாட்டு மலர்**, ப. 3.
195. திரு 504.
196. **சூடாமணி நிகண்டு**, தெய்வப்பெயர்த் தொகுதி, பா.8.
197. திரு. 1626.
198. அரு. இராமநாதன், **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்**, ப 17.
199. கா. சுப்பிரமணிய பிள்ளை, **பட்டினத்து அடிகள் வரலாறும் ஆராய்ச்சியும்**, ப. 3.
200. சாமி சிதம்பரனார், **பட்டினத்தார் தாயுமானார் பாடல் பெருமை**, ப.11.
201. அப்துல் சமத், **சைவத்தின் சிறப்பு**, ப. 21.
202. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்**, பா.4, ப. 44.

203. மேற்படி, பா.1. ப. 53. 204. மேற்படி, பா.17, ப. 69.
205. மேற்படி, பா.13, ப.57.
206. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம் - குறிப்புரை,** ப. 18.
207. மேற்படி, பா.5, ப. 102. 208. மேற்படி, பா. 1, ப. 102.
209. மேற்படி, பா. 27, 28, ப. 104.
210. மேற்படி, பா. 30, ப. 130.
211. மேற்படி, பா. 167, ப. 113.
212. மேற்படி, பா. 173, ப. 113.
213. மேற்படி, பா. 31, 32, ப. 104.
214. கே. ஆர். பசுபதி, **சித்தர்கள்,** ப. 43.
215. **அபிதான கோசம்,** ப. 136.
216. கா. சுப்பிரமணிய பிள்ளை, **இலக்கிய வரலாறு - இரண்டாம் பாகம்,** ப. 373.
217. **அபிதான கோசம்,** ப. 299.218. **அபிதான சிந்தாமணி,** ப. 1081.
219. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்,** பா.27, 28, பக். 184-185.
220. மேற்படி, பா.40, 49, பக். 186-187.221. மேற்படி, பா. 70, ப. 190.

*****

# 3. சாத்திர நூல்களுக்கு முன் தோன்றிய சித்தர்களின் சித்தாந்தம்

பதினான்கு சைவ சித்தாந்தச் சாத்திரங்களுக்குமுன் வாழ்ந்த சித்தர்களாகிய அகத்தியர், அகப்பேய்ச் சித்தர், அழுகணிச் சித்தர், இடைக்காட்டுச் சித்தர், உரோமமுனி, கடுவெளிச் சித்தர், காக புசுண்டர், குதம்பைச் சித்தர், கொங்கணர், சட்டைமுனி, சுப்பிரமணியர், திருமூலர், நந்திதேவர், பாம்பாட்டிச் சித்தர் ஆகியோரின் சித்தாந்தக் கருத்துகள் இப்பகுதியில் ஆராயப்படுகின்றன.

## அகத்தியர் பாடல்களில் சித்தாந்தம்

ஏறத்தாழ 37 அகத்தியர்கள் பல்வேறு காலங்களில் இருந்ததாக அ. சாமி சிதம்பரனார் தம்முடைய அகத்தியர் வரலாறு என்னும் நூலில் குறிப்பிடுகின்றார்.[1] மூன்றுக்கும் மேற்பட்ட அகத்தியர்கள் பல்வேறு காலங்களில் வாழ்ந்து பல இலக்கியங்களை இயற்றியுள்ளனர் என அறிஞர் சுத்தானந்த பாரதி கூறுகின்றார்.[2] இங்ஙனம் அகத்தியர் பற்றிய குறிப்புகளையும் அவர்களுக்குரிய காலங்களையும் எந்த வரலாற்று அடிப்படையில் தொகுக்கப்பெற்றன என்பதற்கு எவ்விதச் சான்றும் காட்டப்படவில்லை என்பது கொள்ளத்தக்கதாகும் என்னும் இதே கருத்திற்கு இரா. ராகவையங்கார் உடன்பட்டவராக இருக்கின்றார்.[3]

அறிஞர்கள் பலரின் கூற்றினைக்கொண்டும், அகத்தியர் பெயர் தாங்கிய நூல்கள் கொண்டும் ஆராயின், அகத்தியர் என்ற பெயருடன் ஒன்றுக்கும் மேற்பட்டவர்கள் இருந்திருத்தல் கூடும் என்பது உறுதியாகின்றது.

அகத்தியர் பாடல்களில் சித்தாந்தக் கருத்துகள் நிறைந்திருப்பதால் அவருடைய காலத்தைக்கொண்டு, கணித்தால் சாத்திர நூல்களின் காலத்திற்கும் முற்பட்டவர் என்பதை அறியலாம். இனி, அகத்தியர் பாடல்களில் விரவிவரும் சித்தாந்தக் கருத்துகளைக் காணலாம்.

## பதி (இறைவன்)

சித்தர்கள் கடவுட் கொள்கை இல்லாதவர் என்று கூறிவிட முடியாது. அவர்கள் தெய்வம் உண்டு என்று நம்பினார்கள். ஆனால், மூட நம்பிக்கையின் பெயரில் செய்கின்ற '**சடங்குகளையும் சம்பிரதாயங்களையும்**' சாடுகின்றனர்.

அகத்தியர் இறைவனைப்பற்றிக் கடவுள் ஒருவர் என்றும்,[4] அவ்விறைவன் தாயின் கருவிலேயே கலந்துறைகின்றான் என்றும்[5] கூறுகின்றார். உடல், உயிர், பூரணம் மூன்றும் ஒன்றே. இவை முறையே அயன், மால், அரன் என்பதை உலகினர் உணராமல் அறிவு மயங்கியுள்ளனர்.[6] தனக்குள் இருக்கும் பூரணத்தை உணராமல், அதற்குப் பெயரும் உருவமும் கற்பிக்கின்றார்கள் என்றும் குறிப்பிடுகின்றார்.[7]

## குரு

இறைவன் குருவாக வந்து அருள் செய்தமையை அகத்தியர்,

"மூவெழுத்தும் ஈரெழுத்துமாகி நின்ற
மூலமதை யறிந்துரைப் போன் குருவுமாகும்
ஊவெழுத்துக் குள்ளேதா னிருக்கு தப்பா
உணர்வதுவே கண்டறிந்தோன்அவனே ஆசான்"[8]

என்று உணர்த்துகின்றார்.

மேலும் இறைவனைச் சித்தன், உத்தமன் என்றும்,[9] தேவரோடு திருமால், அயன் இவர்கள் தேடிக் காணமுடியாத திருநடனத்தையுடையவன்[10] என்றும் எடுத்துரைக்கின்றார்.

## சக்தி

சக்தியை வாலை என்று குறிக்கின்றார். அவளைப் பூசை செய்தால் நந்தி சொல்லும் சிங்காரம் தோன்றும்; சத்தியும் பெறலாம் என்றும் கடவுளின் உருவ வேறுபாட்டைக் கூறுகின்றார்.[11]

## விந்து

விந்து நிலையால் வீடுபேறும்[12] நாதத்தைப் பெறுவதால் குரும் கிடைக்கும் என்றும் கூறுகின்றார்.[13]

## உயிர் அவத்தை

உயிர் அவத்தைகளில் துரியம்பற்றி அகத்தியா, துரியமென்ற பராபரத்தில் சென்று சேரவேண்டும் [14] என்று குறிக்கின்றார்.

## மனம்

எல்லாச் சித்தர்களும் மனத்தின் தன்மையையும், அதனை அடக்கும் முறையையும் பற்றிக் கூறுகின்றனர். அகத்தியர் மனமது செம்மை யானால் மந்திரம் செபிக்கவேண்டாம். வாயுவை (காற்றை) உயர்தத வேண்டாம், வாசியை நிறுத்தவேண்டாம் என உணர்த்துகின்றார்.[15]

அகத்தியர் இறைவனை அடையும் வழிகளாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியவற்றுள் பின்னிரண்டுபற்றி எடுத்துரைக்கின்றார்.

## யோகம்

யோக நிலையில் நின்றால் இறைவனைத் தன்னுள் காணலாம் எனவும் தூங்காமல் தூங்கிச் சுகம் பெறலாம் எனவும்குறிப்பிடுகின்றார்.[16]

## சிவயோகம்

தானென்ற பெரியோர்கள் உலகத்துள்ளே தாயாகிய பூரணத்தை யறிந்த பின்பு, தேனென்ற அமுதத்தைப் பானம் செய்து தெவிட்டாத மவுனமென்ற சிவயோகம் செய்தார்[17] என்று சிவயோக நிலையைச் சுட்டிக் காட்டுகின்றார்.

இறைவனை அடைய உயிர், யோகநிலையில் சுழுமுனை, இடைகலை, வித்தை ஆகியவற்றைப் பெறுவதைப் பற்றியும்,[18] வாசியோகம் பெறுதல் பற்றியும்[19] மூலத்தை அறிந்தால் யோகம் உண்டாகும் என்பது பற்றியும் எடுத்துரைக்கின்றார்.

## ஞானம்

அகத்தியர் ஞானம் பெறுதல்பற்றிக் கோடானகோடி மக்களில் ஒருவனாகத் திகழ்கின்றவன் இறைவன். அவனை மனத்தால் அறிய வேண்டும். அவ்வாறு அறிந்து அவனை நிலை நிற்க வைத்தால் ஞானம் உண்டாகும்[21] எனவும், கண்ணான கணபதியைக் கண்ணில் கண்டால் கலந்துருகி ஞானம் கிட்டும்[22] எனவும் கூறுகிறார்.

### காயசித்தி, யோகசித்தி

உடம்பைக் கட்டுப்படுத்திச் சித்திபெறுதல்பற்றியும், மனத்தைக் கட்டுப்படுத்திச் சித்திபெறுதல் பற்றியும் உணர்த்துகின்றார்.

மனத்தைச் சுழுமுனையில் செலுத்தி, சக்திமந்திரம் சொல்லி, மனத்தை அடக்கினால் காயசித்தியையும் யோகசித்தியையும் பெறலாம் என்று கூறுகின்றார்.[23]

### சித்திமுத்தி

சித்தி அடைந்து அச்சித்தியினால் இறைவனைத் தம்முள் கண்டு முத்தி பெற்றவர்கள் சித்தர்கள். சிறப்பைத் தருகின்ற எழுத்தை மனத்தில் நினைத்துச் சாரெழுத்தின் உட்பொருளாகிய பரத்தை நோக்கிச் சார்ந்தவர்க்குச் சித்தி முத்தி தரும்.[24]

உடலில் ஓரெழுத்தைக் காண்போன் ஞானியாவான்; அவனது திருநடனத்தைக் காண முத்தி சித்தியாகும் என அகத்தியர் சாகாமலேயே சித்திபெற்று முத்தி அடையும் நெறியை[25] எடுத்துரைக்கின்றார்.

## அகப்பேய்ச் சித்தர் பாடல்களில் சித்தாந்தம்

### இறை

அகப்பேய்ச் சித்தர் இறைவனைப்பற்றிக் கூறும்போது, அவன் ஆனந்தமானவன்[26] என்றும், அவனைக் கண்டுகொண்டதாகவும் அவனிடம் காதல்கொண்டதாகவும்[27] கூறுகின்றார். இறைவனின் பாசம் எங்குச் சென்றாலும் காணப்படுகின்றன[28] என்பதையும் உணர்த்துகின்றார்.

### சதாசிவம்

இறைவனின் உருவ வேறுபாடுகளுள் ஒன்றாகிய சதாசிவமாகிய தெய்வத்தைப் பற்றியும், அத்தெய்வத்தைத் தவிர, மற்றைய தெய்வங்களெல்லாம் மாயையே என்றும் குறிப்பிடுகின்றார்.[29]

### பாசம்

உயிர்களைப் பற்றியுள்ள பாசங்களாகிய ஆணவம், மாயை, கன்மம் ஆகியவற்றைப் பற்றியும் எடுத்துரைக்கின்றார். உயிர்களை விட்டு இறைவனின் அருளால் பாசம் அகன்றாலும், பசுவாகிய உயிர்களுக்கு அழிவில்லை[30] என்றும் உணர்த்துகின்றார்.

### ஆணவம்

அகப்பேய்ச் சித்தர் பாசத்தைப்பற்றி உயிர்கள் ஆணவ மலத்துடன் திகழ்கின்றன என்பதை எடுத்துரைக்கின்றார்.

இங்ஙனம் ஆணவம் உயிர்களிடத்துத் தொன்றுதொட்டு இருந்து வருகின்றது என்றும், அவ்வாணவம் ஆகாரமாய் வந்தது என்றும் குறிப்பிடுகின்றார்.[31]

### கன்மேந்திரியங்கள்

வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் ஆகியன கன்மேந்திரியங்கள் எனப்படும். இதனையே அகப்பேய்ச் சித்தர்,

"வாக்காதி ஐந்தடியோ வந்த வகை கேளாய்"[32]

என்று குறிப்பிடுகின்றார்.

### ஐம்பூதங்கள்

விந்து நாதம் மெய்யாக வந்ததென்றும், ஐம்பெரும்பூதங்களும் அதனிடம் ஆனதென்றும்[33] ஐம்பெரும்பூதங்கள்பற்றிக் கூறுகின்றார்.

## வீடுபேறு (முத்தி)

கடவுளுடன் ஒன்றாகி அதாவது அத்வைத நிலையை அடைவதையே முத்தி என்கிறோம். "மூலமானதல்லால் முத்தி அல்லவடி"[34] என்று மூலமாகிய இறைவனுடன் ஆன்மா இரண்டறக் கலந்ததே முத்தி என்று கூறுகின்றார் அகப்பேய்ச் சித்தர்.

### யோகம்

ஆன்மாவின் புலன்கள் உலகப் பொருள்களின் மயக்கத் தினின்றும் மனத்தைக் கட்டுப்படுத்தி மிகவுயர்ந்த தியானத்தில் ஈடுபட்டுக் கடவுளை வேண்டுவதே யோக நிலையாகும்.[35] இந்த யோகநிலையை அடையாமலேயே தேகம் ஞானத்தைப் பெறும் வழியை அகப்பேய்ச் சித்தர் காட்டுகின்றார்.[36]

### சிவயோகம்

அகப்பேய்ச் சித்தர் நிட்டையாகிய சிவயோகத்திலும் சாரா; இருந்து இறைவனுடன் சேருமாறு கூறுகின்றார்.[37]

### நாலுபதம்

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு பாதங்களும் இறைவனை அடைவதற்குரிய நன்னெறிகளாகும். "நாலுபாதமடி நன்னெறி கண்டாயே"[38] என்று கூறுகின்றார். மேற்குறிப்பிட்ட சரியை, கிரியை ஆகியவற்றைச் செய்தால் கிட்டுவது ஒன்றுமில்லை என்றும் கூறுகின்றார்.[39]

### சாயுச்சியம்

இறைவனை அடையும் ஞான மார்க்கத்தின்மூலம் பெறும் பயனாகிய சாயுச்சநிலையை,

"ஒன்றோடு ஒன்று கூடில்ஒன்றுங் கெடுங்கானே"[40]

என்று உணர்த்துகின்றார்.

### சிவகுரு தரிசனம்

இறைவன் தனது எல்லையற்ற அருளால் உயிர்களின் உள்ளத்தையே கோயிலாகக் கொண்டு தனது அருளால் அப்பொழுது குரு வடிவாகத் தோன்றித் தனது அருட்கரத்தை நீட்டி உயிர்களுக்கு வீடுபேறு அடையும்வழியைக் காட்டி மகிழ்விக்கின்றார்.

இறைவன் குருவாய் வந்து ஆன்மாவிற்கு அருளல் செய்கின்ற நிலையைச் "**சாவதும் இல்லையடி சற்குரு பாதமடி**"[41] என்று குறிப்பிடுகின்றார்.

## அழுகணிச் சித்தர் பாடல்களில் சித்தாந்தம்

அழுகணிச் சித்தரும் இறைமை, புலன் அடக்கல், உடல், பஞ்சவர்கள் (கன்மேந்திரியங்கள்) யோகப் பயிற்சி ஆகிய சித்தாந்தக் கருத்துகளைக் குறிப்பிடுகின்றார்.

## இறைமை

இறைமை அடைதல் பற்றிக் குறிப்பிடும்போது **'பற்றற்ற நீரிலே பாசி படர்ந்தாற் போன்று தன்னைப் பாசமாகிய தளை பிடித்துள்ளது;** அப்பாசமாகிய தளை நீங்கினால் பற்றற்ற நிலை உண்டாகும். பிறகு இறைவனைக் காணலாம்[42] என்று கூறுகின்றார்.

## புலன் அடக்கல்

தன்னை ஐம்புலன்களும் வருத்துவதாகவும், அதனைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் இல்லாமல் நிலை கடந்து வாடுவதாகவும் கூறும் பகுதியில் அவற்றின் இயல்பினைத் தெளிவுபடுத்துகிறார்.[43] மேலும், பஞ்சவராகிய ஐம்பொறிகளும் தன்னைவிட்டுப் பிரியாமல் வீரியங்கள் பேசுவதாகவும் கூறுகின்றார்.[44]

## உடல்

சித்தர்கள் யாக்கை நிலையாமைபற்றியும், யாக்கையைக் கட்டுப்படுத்துதல்பற்றியும், அவற்றின் இயல்புபற்றியும் எடுத்துரைக்கின்றனர்.

அழுகணிச் சித்தர் உடலின் நிலையாமையைப்பற்றி ஊற்றைச் சடலம், உப்பிருந்த பாண்டம், காயப்பதி என்றும், அக்காயத்தை விட்டு இறைவனடியைச் சேர வேண்டுமென்றும்,[45] பையூரும் மெய்யூரும் பாழாய் முடியவேண்டும்[46] என்றும் கூறுகின்றார்.

இங்ஙனம் உடம்பின் நிலையாமையைக் கூறியவர், அதனை நிலைபெறச் செய்யும்வழியையும் உணர்த்துகின்றார்.

## யோகம்

யோகப் பயிற்சியின் அனுபவங்களைப்பற்றிக் குழூஉக் குறியாகக் குறிப்பிடுகின்றார்.

**" மூக்கால் அம்பெழுத்து மூவிரண்டாய்த் தான்தூக்கி**
**நாக்கால் வளைபரப்பி நாற்சதுர வீடுகட்டி**
**நாக்கால் வளைபரப்பி நாற்சதுர வீட்டினுள்ளே**
**முக்காலைக் காணாமல் என் கண்ணம்மா!**
**முழுதுந் தவிக்கிறண்டி"[47]**

என்று யோகத்தினைப்பற்றித் தன் பட்டறிவின் மூலமாக எடுத்துரைக்கின்றார்.

# இடைக்காட்டுச் சித்தர் பாடல்களில் சித்தாந்தம்

இவர் இறைவனையும் உயிர்களையும் பாசங்களையும் நால்வகை நெறிகளையும் பற்றி ஆங்காங்குக் குறிப்பிடுகின்றார்.

## பதி (தன்மை)

இறைவன் ஆதியும் அந்தமுமில்லாதவன் என்றும்,[48] காலாகாலங் கடந்திடும் சோதி என்றும், கற்பனைக்கு எட்டாத அற்புதம் என்றும்,[49] ஆதிபகவன்,[50] எங்கும் நிறைந்த பொருள்,[51] தாயினும் அன்பன் என்றும்[52] எடுத்துரைக்கின்றார்.

## சிவன்

எல்லா உலகமும் எல்லா உயிர்களும் எல்லாப் பொருள்களும் எண்ணுதற்கரிய வல்லாளன் ஆதிபரமசிவன் என்றும்,[53] கண்ணுள் கருமணியாகவும் கற்பகமாகவும் பெண்ணுருவைத் தன் பாதியாகவும் முப்பொருளாகவும் திகழ்கின்றான்[54] என்றும், சீரார் சிவக்கொழுந்து என்றும்[55] மூவர்க்கும் முதல்வன் என்றும்[56] சிவபெருமான் பெருமையைக் குறிப்பிடுகின்றார்.

## சக்தியும் பரமும்

இறைவன் சிவசக்தியாகத் திகழக் கூடியவன் என்பதை இடைக்காட்டுச் சித்தர், சக்திக்கு உறவோன் என்றும்[57] சக்தியும் பரமுந் தன்னுள் கலந்தது என்றும்[58] உணர்த்துகின்றார்.

## இறைத்தொழில்

இறைவன் நடத்தும் தொழில்கள்பற்றி இடைக்காட்டுச் சித்தர் வரிசைப்படுத்து கின்றார்.

இறைவன் எல்லாப் பொருள்களையும் எண்ணியபடி படைத்தவன்.[59] உலகத்தைப் படைத்த தனிவானமூலம் என்றும், பராபரன்,[60] மண்ணாதி பூத முதல் வகுத்தளித்த வான் பொருளானவன் என்றும்,[61] அன்னையைப்போல் எவ்வுயிர்களையும் அன்புடன் காத்துவரும் முன்னவன் என்றும்,[62] காத்தல் தொழிலையும், கட்புலனுக்கு

எள்ளளவும் காணாது இருந்தெங்கும் மறைந்துள் ளவன்[63] என்றும் இறைவனின் படைத்தல், மறைத்தல் தொழில்களைக் குறிப்பிடுகின்றார்.

## இறைவன் திருமேனி

இறைவன் மூவகைத் திருமேனிகள் உள்ளவன் என்றும் சித்தாந்தம் குறிப்பிடுகின்றது. இடைக்காட்டுச் சித்தர் மூவகைத் திருமேனிகளுள் உருவம், அருவம் ஆகிய இரண்டையும்பற்றி உணர்த்துகின்றார். இறைவனின் உருவத் திருமேனிபற்றி,

**"ஆத்துமத்தின் கூறான அவயவப் பேய் உன்னுடனே**
**கூத்துப் புரிகின்ற கோள் அறிவாய் புல்லறிவே"[64]**

என்று விளக்குகின்றார்.

இறைவனின் அருவம்பற்றிக் கண்ணுள் மணியாகவும், கருதிய பேரொளியாகவும், விண்ணின் மணியாகவும், விளக்கொளியாகவும்[65] காலம் மூன்று கடந்த கதிரொளியாகவும் திகழ்கின்றான்[66] என்பதை உணர்த்துகின்றார்.

### சூனியம்

இறைவன் சூனியமாகவும் இருந்து அருள் செய்பவன் என்று குறிப்பிடுகின்றார்.[67]

### சூக்குமம்

இறைவன் சூக்குமமாக உள்ளவன். அவனைப் புத்தி நுட்பத்தால்தான் சுட்டிக் கூறமுடியும்[68] என்று கூறுகின்றார்.

### பாசம் - மும்மலம்

ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலத்தையும் நீக்கி முப்பொறிக்கு எட்டாத முப்பாழாய்க் கிடந்த அப்பாழைச் சிந்தையில் வைக்கவேண்டும்,[69] என்றும், மலம் என்ற மாட்டை ஒதுக்கிக் கட்ட வேண்டும் என்றும்[70] குறிப்பிடுகின்றார்.

## ஆணவம்

ஆணவங்கள் அறவேண்டும்,[71] அகங்காரங்கள் மூன்றையும் அகற்றிவிடவேண்டுமென்று[72] ஆணவமலத்தைப் பற்றி எடுத்துரைக்கின்றார்.

## மாயை

இடைக்காட்டுச் சித்தர் உலகில் கண்ணில் காணும் பொருள்களெல்லாம் மாயை. அவை என்றும் நில்லாது என்று கூறுகின்றார். இதனையே,

"மாடும் மனைகளும் மக்களுஞ் சுற்றமும் வான்பொருளும்
வீடும் மணிகளும் வெண்பொன்னுஞ் செம்பொன்னும் வெண்கலமும்
காடுங் கரைகளும் கல்லாம்பணுயுங் கரிபரியும்
தேடும்பலபண்டம் நில்லா; சிவகதி சேர்மின்களே"[73]

என்று மாயைகளாக உள்ள பொருள்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

மேலும், "பெண்ணாசை கொண்டு பேணித் திரிதல்[74] என்று பெண்ணையும் மாயை என்று கூறுகின்றார்.

## கன்மம்

இருவினைகளினால் உயிர்கள் பிறப்பு இறப்பு என்னும் இன்ப துன்பத்தில் அகப்பட்டுத் துன்புறுகின்றன. இதனால் இடைக்காட்டுச் சித்தர், தொல்லை வினை நீங்கவேண்டும்,[75] இருவினையாகிய மாடுகளை ஏகவிட வேண்டும் என்று[76] கூறுகின்றார்.

## பற்று

மண், பொன், பொருள், பெண் ஆகிய பற்றினை நீக்கி இறைவனைப் பற்ற வேண்டும்[77] என்பதை அறிய வைக்கின்றார்.

## கரணங்கள்

இடைக்காட்டுச் சித்தர் கரணங்கள் ஒரு நான்கும் அடங்கினவாகவும், கெட்ட காமம் முதல் ஓராறும் ஒடுங்கினவாகவும்[78] தன் அனுபவத்தைக் கூறுகின்றார்.

## கன்மேந்திரியங்கள்

இடைக்காட்டுச் சித்தர் ஐம்புலன்களை அடக்கியாளும் திறனை,

"மெய்வாய் கண் மூக்குச் செவியெனும் ஐந்தாட்டை
வீறுஞ் சுவையொளி யூறோசை யாங்காட்டை
எய்யாமல் ஒட்டினேன் வாட்டினேன்"[79]

என்றும், கன்மேந்திரங்கள்பற்றி **'வாக்காதி ஐந்தையும் வாகாய்த் தெரிந்தேனே!'** [80] என்றும் குறிப்பிடுகின்றார்.

## பிரமம்

ஆன்மா தனது இயல்பை மறந்து பிறகு தனது உண்மையியல்பை உணர்ந்து இறுதியில் பிரமத்தை அடையும். இதனை நீருடன் சேர்ந்த உப்பு கலந்து ஒன்றாதல் போன்று ஆன்மா தானே பிரமம் என்ற நிலையில் கலந்துவிடும் என்று கூறுகின்றார்.[81]

## பிரமமே சூனியம்

வானவெளிபோன்று விளங்கும் பிரமமே சூனியமாகும் என்றறிந்து இறைவனைப் போற்றவேண்டும்[82] எனறு உணர்த்துகின்றார.

## மூக்காயம்

ஸ்தூல சரீரம், சூட்சும சரீரம், காரண சரீரம் என்று மூன்றுங் காயங்கள் (உடல்கள்) என வழங்கப்படும். இதனையே இடைக் காட்டுச் சித்தர், முக்காய மாடுகளை முன்னங் கட்ட வேண்டும்[83] என்று உணர்த்துகின்றார்.

## மந்திரம்

நிறைமொழி மாந்தர்களாக விளங்கியவர் சித்தர்கள் ஆவார்கள். பொருள் விளக்கிக் கூறமுடியாத மந்திரங்கள் எல்லையற்ற ஆற்றலையுடையன. ஒவ்வொரு தெய்வத்திற்கும் உரிய மந்திரங் களின் ஆற்றல் ஒலி வடிவமேயாகும். மூல மந்திரங்கள் மகிமை தரக்கூடியன[84] என்று இடைக்காட்டுச் சித்தர் மந்திரங்களின் பெருமைபற்றிக் கூறுகின்றார்.

## முத்தி

முத்திக்கு வித்தான மூர்த்தியைத் தொழுது முத்திக்கு உறுதிகள் செய்யாவிட்டால் சித்தியும் பத்தியும் முத்தியும் வந்து சேர்வது கடினமாகும்.[85] ஆதலால், சிற்றின்பத்தையும் நீக்கிவிட்டு, சிற்பரஞ் சேர்ந்ததாகவும், தற்பரஞ் சார்ந்ததாகவும் கூறுகின்றார்.[86]

மேலும், இறைவன் முத்திக்கு வித்தானவன்[87] என்றும், அல்லும் பகலும் ஆதியாகிய இறைவனின் பாதத்தைத் தேடினால் மோட்ச நிலை தானாக வந்து கிடைக்கும்[88] என்றும் கூறுகின்றார்.

## ஐந்து யோகம்

இடைக்காட்டுச் சித்தர்,

"நோக்கரு யோகங்கள் ஐந்தும் புரிந்தேனே
நுவலுமற்ற ஐந்தியோக நோக்கம் பரிந்தேனே"[89]

என்று யோகங்களின் ஐந்துநிலைபற்றிக் கூறுகின்றார். மேலும்,

"வாசிக்கு மேலான வான்கதியுன் னுள்ளிருக்க
யோசிக்கு மேற்கதிதான் உனக்கரிதோ புல்லறிவே!"[90]

## சிவயோகம்

ஆன்மா, தான் என்ற நிலையற்றுக் கடவுளுடன் இரண்டறச் சேர்ந்து இன்பநிலையில் இருப்பதே நிட்டையாகும். இதனை,

"பிரமாந்தரத்திற் பேரொளிகாண் எங்கள் கோனே! - வாய்
பேசாது இருந்துவரு நிட்டை சார்எங்கள் கோனே!"[91]

என்று கூறுகிறார்.

## மெய்ஞ்ஞானம்

இடைக்காட்டுச் சித்தர், தாம் மெய்ஞ்ஞானம் ஒன்று அன்றி வேறொன்றை நாடாததாகவும்,[92] மெய்யான ஞானக் கல்வி கற்க விரும்புவதாகவும்,[93] முடிவில் தனக்கு மெய்ஞ்ஞானம் கிடைக்கப் பெற்றதாகவும்[94] கூறுகின்றார்.

அடியவர்கள் நாடுவது மெய்ஞ்ஞானமே யாகும். அந்த ஞானத்தையே இடைக்காட்டுச் சித்தரும் பெற்று இன்பத்தில் திளைத்திருக்கின்றார் என்பதை அவர் பாடல்களினால் தெள்ளிதின் உணரலாம்.

## தீட்சை

சைவ சித்தாந்தம், குருவானவர் மாணவனுக்குத் தீட்சை தருதல்பற்றிக் குறிப்பிடுகின்றது. தீட்சைகளின் வகைகளுள் ஒன்றான பிரமத்தீட்சைப்பற்றி,

"சற்றேபிரமத்தீச்சை தாண்டவக் கோனே! உன்னுள்
சலியாமல் வைக்கவேண்டும் தாண்டவக் கோனே![95]

என எடுத்துரைக்கின்றார்.

### சாரூபம்

இறைவனை அடைதலினால் வரும் பயன்களுள் ஒன்றான சாரூபம் பற்றிக் கீழ்வருமாறு உணர்த்துகின்றார்.

"விண்ணின் அமுதை விளக்கொளியை வெங்கதிரைத்
தண்ணளியை உள்ளில் வைத்து சாரூபஞ் சாருவனே"[96]

இங்ஙனம் இடைக்காட்டுச் சித்தர் சைவ சித்தாந்தக் கருத்து களைத் தம் பாடல்களில் கையாளுகின்றார். இதனால் இவரும் சித்தாந்தி என்று தெள்ளிதின் உணரலாம்.

## உரோமரிஷி பாடல்களில் சித்தாந்தம்

உரோம ரிஷி தம் பாடல்களில் கணபதி, திருமால், உருத்திரன், சதாசிவன் ஆகிய கடவுளரைப் பற்றியும், விதி, முத்தி, யோகம் ஆகியவற்றைப் பற்றியும் எடுத்துரைக்கின்றார்.

### பதி, கணபதி, நான்முகன், மாயன், உருத்திரன்

உரோமரிஷி பதியாகிய கடவுளரைப் பற்றிக் குறிப்பிடும்போது,

"மூட்டுவிக்கு மாதார மாறுந்தானே மூலவட்டக்
கணபதிநான் முகத்தோன் மாயன்
தாட்டி கமா மணிப்பூரங் கையன் வட்டந்
தணலான ருத்திரனுந் தணலு மாமே"[97]

என்று கணபதியையும் நான்முகத்தனையும் திருமாலையும் உருத்திரனையும் துதித்துப் பாடுகின்றார்.

### சதாசிவம்

இறைவனின் உருவ வேறுபாடுகளில் சதாசிவமாகிய கடவுளைப் பற்றிக் கீழ்வருமாறு கூறுகின்றார்.

சதாசிவனைப் பூசை செய்தல்பற்றி, **"நேரையா இரண்டிதழி னருவை வைத்து நிறைந்த சதாசிவனாரைத் தியாகம் பண்ணுக"**[98] என்று கூறுகிறார்.

## பாசம் - விதி

ஆணவம், மாயை, கன்மமாகிய பாசங்களில் தாம் செய்கின்ற நல்வினை, தீவினைப் பயனால் வருவனவற்றை **விதி** என்றும் கூறலாம்.

"தாமொன்று நினைக்கையிலே தெய்வமொன்று
தானினைந்த தன்மை யல்லோ விதிகள் தாமே?"[99]

என்று உரோமரிஷி விதியின் வயத்தினைப்பற்றி நமக்கு உணர்த்துகின்றார்.

## முத்தி

வீடுபேறாகிய முத்தி நிலைபற்றி,

"நேசமாதாய் நடுவிருந்த சுடர்தான் நீங்கி நீங்காம
லொன்றான லதுதான் முத்தி
பார்த்தோர்க்கிங் கிதுதான் மோட்சம்"[100]

என்று குறிப்பிடுகின்றார்.

## அருபமுத்தி

உரோமரிஷி முத்தியை அருபமுத்தி என்றும், சொரூப முத்தி என்றும் பிரித்துக் காட்டுகின்றார். அருபமுத்தியாவது:

"அருபமுத்தி யிடமல்லோ பிரமஞானம் அபராட்ச மென்று
சொல்லுஞ் சிரவ ணந்தான்
பருபதத்தை அசைப்பனெனச் சிற்றெ றும்பின் பழங்
கதையோ லாச்சு திந்த யோகம் விட்டால்
வெறுங்கடத்தி லீப்புகுந்த வாறுபோல வேதாந்த மறியாத
மிலேச்சர் தாமே"

## சொரூப முத்தி

"சொரூபமுத்திக் கடையாளம் ஏதென்றக்கால் சுடர்போலக்
காணுமடா தூலதேகம்"[101]

என்று ஒருவன் சொரூப முத்தியைப் பெற்றால் அவன் உடல் ஒளிமயமாய்க் காணப்படுவதாகக் கூறுகின்றார்.

### யோகசித்தி

சித்தியின் வகைகளுள் யோகசித்திபற்றிக் குறிப்பிடுகின்றார்.

**"பலித்ததடா யோகசித்தி ஞானசித்த பருவமாய்**
**நாடி வைத்துப் பழக்கம் பண்ணே"**[102]

என்று யோகசித்தி உண்டாகும் வழியினைக் காட்டுகின்றார் உரோமரிஷி.

### அட்டாங்கயோகம்

உரோமரிஷி அட்டாங்யோகம் செய்தலாகிய முறைபற்றிப் பின்வருமாறு கூறுகின்றார்.

"மேலென்ன இருக்கையிலும் நடக்கும்போது வேறுரையால்
சாரங்கள் விடாம லேற்று
நாலென்ன எட்டென்ன வெல்லா மொன்று நவமான
அட்டாங்க மப்பியசித்துக்
காலலென்னப் பிராணாய முன்னே செய்யில் கணக்காகப்
பூரங்கும் பகமே நாலு
கோலென்ன ரேசகந்தா னெனறு மூன்று குறையாமற்
சரபீசங் கூட்டித் தீரே"[103]

## கடுவெளிச் சித்தர் பாடல்களில் சித்தாந்தம்

கடுவெளிச் சித்தர் பாடல்கள் நாட்டு மக்களுக்கு அறிவுரை கூறுவதுபோன்று அமைந்திருந்தாலும் சிவம், இறை, அருள், தீவினை, உடல், முத்தி நிலை, மெய்ஞ்ஞானம் ஆகியவற்றைப்பற்றிக் குறிப்பிடுகின்றன.

### பதி - சிவம்

பதியாகிய இறைவனைப் பற்றி உணர்த்தும்போது, '**சிவமன்றி வேறே வேண்டாதே**'[104] என்று சிவத்திற்குமேல் தெய்வ மில்லை; சிவனே எல்லாவற்றையும் செய்பவனாக இருப்பதால் அவனைத் தவிர மற்றக் கடவுளரை வேண்டாதே என்று கடுவெளிச்சித்தர் உறுதியாகக் கூறுகின்றார்.

## இறையருள்

இறைவன் எங்கும் பராபரமாய் இருக்கின்றவன்; அன்பர்கள் உள்ளத்தில் வாசம் செய்பவன்; தன்னைத் துதிக்கின்றவர்களுக்கு நாலாம் பதவியை அருள்கின்றவன். ஈசன் என இறைவன் அருள்நிலையை உணர்த்துகின்றார்.[105]

## தீவினை

ஒருவனுக்குப் பிறப்பு இறப்பு அவன் செய்த நல்வினை, தீவினைகளால் வருவன ஆகும். நல்வினையால் இன்பத்தையும் தீவினையால் துன்பத்தையும் பெற முடிகின்றது. இதனால், கடுவெளிச்சித்தர் தீவினைகள் செய்யாதே[106] என்று அறிவுறுத்துகின்றார்.

## உடல்

சித்தர்கள் உடல் நிலையற்றது என்றும், ஆனால், அவ்வுடலைப் பேணிக் காத்தால் நன்மை யுண்டாகும் என்றும் கூறுகின்றார்.

"நீர்மேற் குமிழியிக் காயம் - இது
நில்லாது போய்விடும் நீயறி மாயம்"[107]

என்று உணர்த்துகின்றார். கடுவெளிச்சித்தர் யாக்கை நிலையாமை பற்றி நீர்மேல் எழுகின்ற குமிழ் எவ்வாறு தோன்றிய உடனே மறைந்துவிடுகின்றதோ அதுபோன்று உடலும் அழிந்துவிடும். ஆதலால், அதன் நிலையாமையை நாம் அறிதல்வேண்டும் என்று கூறுகின்றார்.

## முத்தி

கடுவெளிச் சித்தர் பொன்னையும், பொருளையும் மற்றச் செல்வங்களையும் தேடுமாறு சொல்லவில்லை. முத்தியாகிய வீடுபேற்றை வருந்தித் தேட வேண்டுமென்றும், அந்த மூலமாகிய இறைவனை அறிந்திட்டால் முத்திவீடு தானாக வந்து வாய்க்கும் என்றும்[108] எடுத்துரைக்கின்றார்.

## மெய்ஞ்ஞானம்

கண்போன பாதையில் தன் காலைச் செலுத்தாமல் மெய்ஞ் ஞானமாகிய பாதையில் உடலையும் உள்ளத்தையும் செலுத்த

வேண்டும். அவ்வாறு தன்னை மெய்ஞ்ஞானப் பாதையில் செலுத்த வேண்டுமெனில் அஞ்ஞானத்தை விட்டொழிக்க வேண்டும்[109] என்று கூறுகின்றார் கடுவெளிச்சித்தர்.

இங்ஙனம் கடுவெளிச்சித்தர் அறிவுரைகளைக் கூறினாலும், அதனைச் சித்தாந்தப் போக்கில் எடுத்துரைத்துச் சித்தாந்தத்தின் பாதையில் செல்லுமாறு கூறுகின்றார்.

## காகபுசுண்டர் பாடல்களில் சித்தாந்தம்

காகபுசுண்டர் பாடல்களில் பதி, பசு, பாசம், நால்வகை நெறிகள் ஆகிய சித்தாந்தக் கருத்துகள் காணப்படுவனபற்றி ஆராயப் படுகின்றன.

### பதி

காகபுசுண்டர் இறைவனின் தன்மைபற்றிக் குறிப்பிடும்போது, கண்ணுள் மணியாகிக் காரணமாய் நின்றவன்; மண்ணுயிர்களுக்குப் பதியாய் இருக்கின்றவன் என்றும், எள்ளுக்குள் எண்ணெய்போலும், வித்தினுள் அடங்கி நின்ற மரம்போலும், பூவிலுறையும் வாசம்போலும், பாலிலுள்ள நெய்யைப் போலும், மயில்முட்டையின் மேலுள்ள வண்ணம்போலும் இறைவன் சூட்சுமமாய் துலங்கி நிற்கின்றவன் என்றும் உணர்த்துகின்றார்.[110]

### இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி

காகபுசுண்டர் சக்தியின் தன்மைகளை வகைப்படுத்துகின்றார்.

“நூலான சாத்மிகமம் அகங்கா ரத்துள்
நுழைந்தவிச்சா சக்தியல்லோ நுணுக்கமாச்சு”[111]

என்று இச்சாசக்தியின் தன்மையையும்,

“தர்மவத்தைச் சாக்கிரபி மானி விசுவன்
தனக்குவமை யாங்கிரியா சத்தி தானே”[112]

என்று கிரியாசக்தியின் தன்மையையும்,

“தானயயாக் கிருதமெனுஞ் சரீரத் துக்குத்
தானமதே இதயமா ஞானசக்தி”[113]

என்று ஞானசக்தியின் தன்மையையும் குறிப்பிடுகின்றார்.

## சிவன்

ஈசனாகிய கடவுள் கங்கைதனைப் பூண்டவன்; சந்திரனைப் பூண்டிருந்து தவம் பெற்றவன்; மங்கையை (உமாதேவியை) இடப்பாகம் வைத்திருப்பவன்; சோதி மயமானவன் என்று[114] காகபுசுண்டர் சிவனின் பெருமையைக் கூறுகின்றார்.

## திருமால்

இறைவனின் உருவ வேறுபாடுகளில் ஒன்றாகிய திருமாலின் தன்மையைக் காகபுசுண்டர் எடுத்துரைக்கின்றார். திருமால் ஆலிலைமேல் துயில் கொண்டவர் என்றும், திருமால் கமலத் தன்னிலிருந்து பல்லாயிரங்கோடி அண்ட உயிர்களையும் நேராகஅழைத்தார் என்றும், மூன்று குணங்களைக் காட்டி, நிலையான சமுத்திரங்கள், பூமி கதிரவரோடு திங்களையும், சூரியனோடு திங்களையும், மலை, காடு, உயிரினங்கள், நவக்கிரகம், நட்சத்திரங்கள், வெற்றியுடன் பார்த்து நான்கு வேதங்களை வகுத்தளித்தான் திருமால்[115] என்றும் குறிப்பிடுகிறார்.

## பரப்பிரமம்

பரப்பிரமம் என்னும் ஒளியினால் பத்தி நரம்புவழி பாயும்போது இரு கண்ணிலும் ஒளிவதாகி இவ்வுலகமெல்லாம் ஏகமாய்த் தெரியும் என்றும் நரம்பென்ற விழுது வட்டம் கபாலத்தில் முக்கூறாகச் சுழுமுனை ஆயிற்று என்றும்[116] கூறுகின்றார்.

## சச்சிதானந்தம்

சத் + சித் + ஆனந்தம் என்னும் சச்சிதானந்தத்தைப்பற்றிப் பின்வருமாறு கூறுகின்றார்.

"சிறந்தபரா பரமாகி யெங்குந் தானாய்த்
தீர்க்கமுடன் ரவிமதியுஞ் சுடர்மூன் றாகிப்
பறந்தருளும் ஐம்பூத மாயை தோன்றிப்
பல்லாயிரங் கோடி அண்டம் படைத்த போதம்
வரம்பெருகி யனந்தனந்தம் உயிருமாகி
மதபேத மாகவுந்தான் வடிவைக் காட்டிச்
சரம்பெருக அண்டத்தி லெழுந்தே நின்ற
*சச்சிதா னந்தமதைப் பணிகு வோமே*"[117]

என்று உலகத்தில் பராபரமாகி எங்கும் தானாய்த் தோன்றி நின்ற சச்சிதானந்தமாகிய இறைவனின் மேலான நிலையை எடுத்துரைக்கின்றார்.

## ஆன்மா

காகபுசுண்டர் ஆன்மாவின் இயல்புபற்றிக் குறிப்பிடும்போது, ஆன்மா மற்றப் பொருள்களோடு சார்ந்து விளங்குவதையும், *சீ*வாத்மா அசாரமானதையும் உணர்த்துகின்றார். [118] மேலும், ஆன்மா பரமான்மாவாக ஆகின்றநிலை பற்றியும்,[119] தீர்க்கமுடன் பிரமத்தில் மனத்தைச் செலுத்தினால் *சீ*வனுக்குச் *சீ*வனாய் இருக்கலாம் என்பது பற்றியும்[120] ஆன்மாவின் நிலையினைக் கூறுகின்றார்.

## மும்மலம்

ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மூன்று மலங்களும் அழித்தல்பற்றிப் பின்வருமாறு கூறுகின்றார்.

"முப்பொருளைச் சுட்டு முழுதழுது நீறாக்கித்
தப்பாம லுண்டுநிலை சார்"[121]

என்று மும்மலத்தை அழித்து இறைவனடியை ஆன்மா சார்தல் பற்றியும் குறிப்பிடுகின்றார்.

## யோகம்

இறைவனை அடைகின்ற நெறிகளாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் இவற்றுள் யோகம்பற்றி உணர்த்துகின்றார். யோகத்தைப் பற்றித் தான் உரைத்ததாகவும், அதனைக் கண்டுணருமாறும்[122] சித்தர்கள் கூடி உலகத்தின் அறுபத்து நாலுயோகத்தைச் செய்தனர் என்றும்[123] குறிப்பிடுகின்றார்.

## தாரணை

பிரத்தியாகாரத்தால் இந்திரியங்கள் சுவாதீனமான பின் பயிற்சிக்கு உரியது தாரணை யாகும். சூக்கும உடலில் விந்து அமைப்பிடம் தெளியும் பயிற்சி இதுவாகும். அதாவது மனத்தை ஒரு வழியே நிறுத்தி உள்முகமாக ஆராய்தலாகும் என்று மாணிக்கவாசம் கூறுகின்றார்.[124] மனத்தை ஒரு வழியே நிறுத்தி மவுனம் கண்டால் காமதேனு, கற்பகத்தரு நமக்குச் சித்தியாகும் எனக் காகபுசுண்டர் உணர்த்துகின்றார்,[125]

## பிராணாயாமம்

ஆசனம் பயிற்சியானபின் அவ்வாசனத்தில் அமர்ந்து கொண்டு பயில வேண்டுவது பிராணாயாமம் ஆகும். காகபுசுண்டர் பிராணாயாமம் செய்யும் முறைபற்றிப் பின்வருமாறு கூறுகின்றார்.

"பார்க்கலாம் ஒருகாலை உயரத் தூக்கி
பாடுவா னொருகாலைத் தாழ விட்டே
ஏர்க்கையிலே மேல்நோக்குங் காலைக்கேளாய்
என்மகனே மதியென்ப ததற்குப் பேரு
கார்க்கையிலே கீழ்நோக்குங் காலை மைந்தா!
கண்டுபார் ரவியென்று கருதலாகும்
மார்க்கமுடன் அண்டவுச்சி மேலேதானும்
மகத்தான வன்னியிருப் பிடந்தான் பாரே."[126]

## யோகநிட்டை

காகபுசுண்டர் யோகநிட்டைப் பற்றி,

"நித்யமெனு முபநிடதப் பொருள்தான் சொல்லும்
நிலவரத்தால் யோகநிட்டை நிறைந்து முற்றே"[127]

என்று ஞானம் கைக்கூடும் நிலையைக் குறிப்பிடுகின்றார்.

## நால்வகைப்பேறு

சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்ற நால்வகைப் பேறுகளுள், சாரூபமாகிய பேற்றால் குரு அரசன், இந்திரன், மூன்று கடவுளர் போன்று பிரமத்துடன் பல அவதாரங்கள் செய்யலாம் என்று கூறுகின்றார்.[128]

## தசதீட்சை

மல நீக்கத்திற்கு ஆசிரியன் மாணவனுக்குச் செய்வதே தீட்சை ஆகும். உயிர்களின் பசுத்துவத்தை (மலத்தின் தொடர்பை) நீக்கிச் சிவத்துவத்தை விளங்கச் செய்வது தீட்சை யாகும்.[129] இதன் வகைகளும் பிரிவுகளும் பல உண்டு. காகபுசுண்டர் அவற்றுள் தசதீட்சை பற்றி,

"புகட்டினான் தசதீட்சை மகிமை தன்னைப்
பூரிப்பா னெனக்களித்தே அகண்டந் தோறும்
சகட்டினான் சகலசித்து மாடச் சொன்னாள்"[130]

என்று குறிப்பிடுகின்றார்.

இங்ஙனம் காகபுசுண்டர் சித்தாந்தக் கருத்துகளை முறைப்படி எடுத்துரைப்பதன் மூலம், இவர் சித்தாந்தம்பற்றித் தெள்ளிதின் உணர்ந்தவர் என்பதை அறியலாம்.

## குதம்பைச் சித்தர் பாடல்களில் சித்தாந்தம்

குதம்பைச் சித்தரும் இறைவன் மனம், யோகம் போன்ற சித்தாந்தக் கருத்துகளைத் தம் பாடலில் உணர்த்துகின்றார்.

### பதி

குதம்பைச் சித்தர் பதியாகிய இறைவனைச் சேர நினைப்பவர்கள் முதலில் தன்னை அறியவேண்டும். அங்ஙனம் இறைவனைச் சேர்ந்தவர்க்குப்பின் ஆசை ஒன்றுவேண்டாம் என்றும்,[131] பத்தாவும் தானும் பதியோடு இருந்தவருக்கு உத்தாரம் ஒன்றும்வேண்டாம் என்றும்[132] கூறுகின்றார்.

### மெய்ப்பொருள்

மெய்ப்பொருளாகிய இறைவனைக் கண்டு சிறந்து விளங்குகின்ற மெய்ஞ்ஞானிக்கு ஆயுளை நீட்டிக்கச் செய்யும் மருந்துதேவையில்லை என்று[133] மெய்ப்பொருள் பற்றிக் குதம்பைச் சித்தர் கூறுகின்றார். ஆதலால், இவர் சிறந்த மெய்ப்பொருளை அழிவிலா மணியைத் தெரிந்து முக்காலமும் உணர்ந்தவர் என்பதை அறியலாம்.

### மனம்

மனம் எப்படிப்பட்டது, அதனை எப்படிக் கட்டுப்படுத்தவேண்டும் என்பதை அறிந்தவர். யோகம் ஆகியவற்றைச் செய்யவேண்டாம் என்றும்,[134] தன் மனத்திலுள்ள துன்பத்தை நீக்கி அறிவோடு இருப்பவர்களுக்குப் பல்லாக்குத் தேவையில்லை என்றும்,[135] மனத்தின் இயல்புபற்றிக் கூறுகின்றார்.

### யோகம்

குதம்பைத் சித்தர் யோகத்தைப் பற்றி, நாட்டத்தைப் பற்றி நடுவனைச் சேர்ந்தவர்கள்.[136] மேலும், செத்தாரைப்போலத் திரியும் மெய்ஞ்ஞானி[137] சாகாமல் தாண்டித் தனிவழி போகின்றவர்கள்.[138]

உச்சிக்குமேல் சென்று உயர் வெளியைக் கண்டவர்கள்[139] என்றெல்லாம் யோகப் பயிற்சி யுள்ளவர்கள் பெறும் பயன்களைக் கூறுகின்றார்.

### அட்டாங்யோகம்

குதம்பைச் சித்தர், அட்டாங்கயோகம் அறிந்த மெய்ஞ்ஞானிக்கு வேறுநிலை தேவையில்லை என்று அந்த யோகத்தின் பெருமையைக் கூறுகின்றார்.[140]

இவர் பாடல்களைக்கொண்டு ஆராயின் யோக நிலையில் மனத்தைச் செலுத்தும் யோகியாய்த் திகழ்ந்தார் என்பதை அறியலாம்.

## கொங்கணர் பாடல்களில் சித்தாந்தம்

### பதி - விநாயகர்

முழுமுதற் கடவுளாகிய விநாயகரைக் கொங்கணர் வேண்டிப் போற்றிப் பாடும்போது,

"... ... ... - நல்விசய
நாதனின் சொல்வேதனஞ்சு போதன்மிஞ்சு மானகஞ்ச
பாதம் வஞ்ச நெஞ்சினில்வைப் போம்"[141]

என்றும்,

"வித்தைக் குதவிய வொற்றைக்கொம் பாம்வாலை
சித்தி விநாயகன் காப்பாமே"[142]

என்றும் பாடுகின்றார்.

### சரஸ்வதி

'அகர முதல எழுத்தெல்லாம் அறிய வைக்கும் தேவியாகிய சரஸ்வதியைப் போற்றிச் சக்தியின்மேல் பாட்டுரைக்கச் சரஸ்வதியின் பொற்பாதம் காப்பாமே' என்று வேண்டுகின்றார்.[143]

### சிவபெருமான்

'வாலைப்பெண்ணும் திருமாலின் தங்கையுமாகிய சக்தியின்மேல் கும்மி பாடுவதற்குக் கங்கையணிந்த சிவபெருமானாகிய சற்குரு பங்கயப் பொற்பாதம் காப்பாமே' என வாழ்த்துகின்றார்.[144]

## சுப்பிரமணியர் துதி

'ஞானப் பெண்ணாகவும் அருட்சோதிப் பெண்ணாகவும் ஆதிவாலைப் பெண்ணாகவும் திகழும் சக்தியின்மேல் கும்மி பாடுவதற்கு மானைப் பெண்ணாக்கிய வள்ளிக்கு இசைந்திடும் மால்முருகனுக்குக் காப்பாமே'[145] என்று முருகப்பெருமானை வேண்டுகின்றார்.

## விஷ்ணு துதி

ஆண்டிப் பெண்ணாகவும் இராசபாண்டிப் பெண்ணாகவும் வாலை அம்பிகையாகவும் விளங்கும் சக்தியின்மேல் கும்மி பாடுவதற்கு அர்ச்சுனனால் துதிக்கப்படுபவனும் வைகுந்தம் ஆண்டவனும் ஆகிய திருமாலின் பொற்பாதம் காப்பாமே[146] என்று பரவுகின்றார்.

## நந்தீசர் துதி

அந்தரி சுந்தரி வாலைப் பெண்ணாய் அம்பிகைமேற் கும்மி பாடுவதற்குச் சிந்தையில் நினைத்தால் நற்கலைகள் வந்திடும் நந்தீசர் பொற்பதம் காப்பாமே[147] என்று நந்திதேவனைப் போற்றித் துதிக்கின்றார்.

இங்ஙனம் காப்புச் செய்யுள்களில் கொங்கணர் கடவுளரின் பெருமைகளையும் அந்தந்த இறைவனின் சிறப்பியல்புகளையும் உணர்த்துகின்றார்.

## இறைவனின் தொழில்கள்

இறைவன் ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களையும் கொண்டு உலகை ஆட்டிப் படைக்கின்றான் என்று கொங்கணர் இறைவனின் மூன்று தொழில்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

### ஆக்கல்

அன்னை, தந்தையில்லாமல் வெளி மண்ணையும் விண்ணையும் படைத்தருள, பேதைப் பெண்ணாகவும் வாலைப்பெண்ணாகவும் விளங்கும் சக்தி, இப்புவியில் புகுந்தாள் என்று சக்திக்குப் படைத்தல் தொழில் என்று உணர்த்துகின்றார்.[148] மேலும், ஐந்து பூதங்களையும்

பெண்ணாசைகளையும் இவ்வுலகத்தையும் படைத்தருள்கின்றாள் என்றும்,[149] பல்லாயிரங்கோடி அண்டங்கள்முதல் பதினான்கு புவனங்களையும் மூர்த்தி முதல் எல்லாந் தானாய் வாலையாகிய சக்தி படைத்தருள்கின்றாள்[150] என்றும், அனைத்துமாகிய சக்தியின் படைத்தல் தொழிலைக் குறிப்பிடுகின்றார்.

## காத்தல்

சக்தியாகிய வாலைப்பெண் தாயாக வந்து அமுதத்தையும் மனைவியாய் வந்து சுகத்தையும் கொடுத்தருளுகின்றவள் என்று[151] சக்தியின் காத்தல் தொழில் பற்றி உணர்த்துகின்றார்.

## அழித்தல்

சக்தியின் அழித்தல் தொழிலைப்பற்றிக் கொங்கணர்,

"சிரித்து மெல்லப் புரமெரித் தாள்வாலை
செங்காட்டுச் செட்டியைத் தானு தைத்தாள்
ஒருத்தியாகவே சூரர்தமை வென்றாள்
ஒற்றையாய்க் கஞ்சனைக் கொன்றுவிட்டாள்"[152]

என்று எடுத்துரைக்கின்றார்.

இங்ஙனம் இறைவனின் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களை நான்முகன், திருமால், சிவன் இவர்களின் தொழில்கள் என்று கூறாமல், அந்த மூன்று தொழில்களும் வாலையாகிய சக்தியின் தொழில்களே என்று உணர்த்துகின்றார். கொங்கணர் இறைவனின் உருவ வேறுபாடுகளாகிய சிவன், சதாசிவன், மகேஸ்வரன், உருத்திரன், விஷ்ணு, அயன் ஆகிய கடவுளர்களைப்பற்றிப் பாடுகின்றார்.

## சிவன்

கொங்கணர் சிவனை வாழி என்றும்,[153] வாலை பெரிதானாலும் அவள் நாயகனாக முடியாது. சிவம் பெரியது[154] என்று சிவனின் முதன்மை நிலையை எடுத்துரைக்கின்றார். சதாசிவன் நெற்றியில் குடியிருக்கிறார் எனவும்[155] உணர்த்துகின்றார்.

## மகேஸ்வரன்

மகேஸ்வரன் கழுத்தில் இருக்கின்றான் என்பதை,

"அழுத்தி லேசொல்லஞ் செழுத்தி லேநானும்
வழுத்தி னேன்ஞானப் பழத்திலே
கழுத்தி லேமயேஸ்வரனு முண்டுகண்
கண்டு பாரடி வாலைப் பெண்ணே!" [156]

என்று குறிப்பிடுகின்றார்.

## உருத்திரன்

நெஞ்சிலே உருத்திரன் சூழ்ந்திருப்பான் என்று கொங்கணர் உணர்த்துகின்றார்.[157] இதன்மூலம் இறைவன் அடியவர் நினைவிடமாகிய நெஞ்சில் குடி புகுந்தமையை அறியலாம்.

## விஷ்ணு

திருமால் உந்திக் கமலத்தில் இருக்கக் கூடியவன்[158] என்று தம் பாடல்மூலம் கொங்கணர் பெற வைக்கின்றார்.

## பிரமன்

பிரமன் மூலத்தில் குடியிருக்கின்றான் என்று கூறுகின்றார்.[159] இங்ஙனம், கொங்கணர் இறைக்கொள்கைகளையும் பல்வேறு கடவுள்களைப்பற்றியும் எடுத்துரைக்கின்றார்.

## உடல்

கொங்கணர் உடலைப்பற்றி ஒன்பது வாயில்கொண்ட கோட்டையின் உள்ளே நிலைக்காரர் அஞ்சுபேர் உள்ளனர் என்றும்,[160] ஊத்தை ச்சடலமென்றும் உப்பிட்ட பண்டமென்றும்[161] குறிப்பிடுகின்றார்.

## ஐந்தெழுத்து

கொங்கணர் ஐந்தெழுத்தின் சிறப்பினைப் பற்றிப் பின்வருமாறு உணர்த்துகின்றார்.

"அரிக்கு முந்தின தவ்வெழுத்தாம் பின்னும்
அரிக்குள் நின்றதும் அஞ்செழுத்தாம்
தரிக்கும் முந்தின தஞ்செழுத்தாம் வாசி
பரிக்குள் நின்றது மஞ்செழுத்தாம்"[162]

என்றும்,

"செகம் படைத்ததும் அஞ்செழுத்தாம் பின்னும்
சீவன் படைத்ததும் அஞ்செழுத்தாம்
உகமுடிந்தது மஞ்செழுத்தாம் பின்னும்
உற்பனமானது மஞ்செழுத்தாம்"[163]

என்றும் ஐந்தெழுத்தின் ஆற்றலைக் கூறுகின்றார்.

## யோகம்

கொங்கணர் நாசிவழிக் கொண்டு செய்யும் யோக நிலையையும்[164] சித்தம் சிவனுடன் சேர்ந்தால் வாசியோகம் செய்யலாம். நாம் மேலான வீட்டின்பத்தையும் அடையலாம்[165] என்பதையும் குறிப்பிடுகின்றார்.

## பரகதி

நம்முடன் வந்து பரகதி தருபவர் மனைவி, மக்களும் அல்லர். நாம் செய்த தருமமே நமக்குப் பரகதியைக் கொடுக்கும் என்று கூறுகின்றார்.[166]

## சட்டைமுனி பாடல்களில் சித்தாந்தம்

சட்டைமுனி பாடல்களில் கடவுள், உயிர், பாசம், நால்வகைநெறி பற்றிய சித்தாந்தக் கருத்துகள் விளக்கப்படுகின்றன.

## பதி - சிவன்

சட்டைமுனி சிவபெருமானின் உருவத்தைப்பற்றிப் பாம்பை ஆபரணமாகப் பூண்டவன்; மதியோடு கொன்றை மாலையையும் சூடிப் பாம்பையே முந்நூலாய்ப் போட்ட கூத்தன். யானையின் தோலை அணியாக உடுத்தவன். பாம்பைக் கங்கணமாய்த் தரித்துக் கொண்டவன்[167] என்றும், கைலாயப் பரம்பரத்தில் தன்னை ஆண்ட கடவுளென்றும் தெட்சணாமூர்த்தி பாதத்தையும் கைலாயத்துத் தன்னை ஈன்ற சக்தியின் பாதத்தையும் கருணையுடன்தான் போற்றியதாகவும் கூறுகின்றார்.[168]

## திரோதாயி சக்தி

உலகமெல்லாம் பெண்ணாக உருவெடுத்த சக்தியையே திரோதாயி சக்தி என்று உணர்த்துகின்றார்.[169]

## இறைவன் தடத்தநிலை

இறைவனின் இயல்பை ஸ்வரூபம், தடஸ்தம் (தட்டதம்), பொது, சிறப்பு என்று இருவகைப்படுத்துகிறது சித்தாந்தம்.[170] சட்டைமுனி இறைவன் பிரமன், திருமால், உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன் என்ற உருவ வேறுபாடு கொண்டு விளங்குகின்றான் என்பதை உணர்த்துகின்றார்.[171]

மேலும், இறைவனின் உருவ வேறுபாட்டை விந்து, நாதம் என்று குறிப்பிடுகின்றார்.

## பரம்

இறைவன் எங்கும் நிறைந்து நீக்கமற இருந்து, சிறந்து விளங்குவதைப் பரம் என்று கூறலாம். சட்டைமுனி இறைவன் பரம்பொருளாக இருப்பதைப் பற்றி, அகாரத்திலிருந்து உகாரத்தையும், உகாரத்திலிருந்து மகாரத்தையும், மகாரத்திலிருந்து சக்தியையும், விந்திலிருந்து நாதத்தையும், நாதத்திலிருந்து சக்தியையும், சக்தியிலிருந்து சிவத்தையும் கொண்டு இருப்பான். அந்தச் சிவம்தான் பரம் என்ற மேலான நிலையாகும்[173] என்று எடுத்துரைக்கின்றார்.

## சச்சிதானந்தம்

இறைவனின் தன்னியல்பை சத், சித், ஆனந்தம் என்று கூறலாம். இம்மூன்றும் எண் குணங்களாக விரியும்.

சட்டைமுனி, யோகத்தில் சச்சிதானந்தயொளிதானே தோன்றும்[174] என்றும், சச்சிதானந்த வெள்ளச் சார்பினால் மாயை நீங்கும் என்றும்[175] உணர்த்துகின்றார். சட்டைமுனி, ஆணவம், மாயை, கன்மம் என்ற பாசத்தின் நிலையையும் கூறுகின்றார்.

## ஆணவம்

ஒருவனை விட்டு **நான்** என்னும் ஆங்காரம் போனால் அப்பொழுதுதான் அகாரம் முதல் உகாரம் காணும்[176] என்று குறிப்பிடுகின்றார்.

## மாயை

மாயை என்பது பற்றிய விளக்கத்தையும் நீண்டிருக்கும் அண்டமும் புவனமும் நாம் ஆடுகின்ற ஆட்டமும் மாயை என்றும் உரைக்கின்றார்.[177]

## கன்மம் (இருவினை)

இருவினையை மூன்றாகப் பகுத்து **சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம்** என்பர். சட்டைமுனி ஆகாமியம், பிராரத்தம் என்ற இரு வினைகளையும் உணர்த்துகின்றார்.[178]

## ஐம்பூதம்

சட்டைமுனி ஐம்பூதங்களெல்லாம் சடமென்று வேதாந்தம் கூறுகின்றது என ஒன்றிலிருந்து ஒன்று தோன்றிய நிலையைப்பற்றிக் குறிப்பிடுகின்றார்.[179]

## ஐங்கோசங்கள் (ஐயுடம்புகள்)

உடம்பின் வகைகள் அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் எனப்படும். இவை தமிழில் முறையே 1) உணவுடம்பு அல்லது பருவுடம்பு, 2) காற்று உடம்பு அல்லது வளியுடம்பு, 3) மனவுடம்பு, 4) அறிவுடம்பு, 5) இன்ப உடம்பு என வகுக்கப்பட்டு ஐந்து உடம்புகள் எனச் சட்டைமுனி குறிப்பிடுகின்றார்.[180]

## யோகம்

திருமூலர் கூறும் **பதஞ்சலியோகம்** பற்றியும்,[181] யோக மார்க்கம் பற்றியும்,[182] மவுனத்தை மேற்கொண்டால் செறிந்து நின்ற ஞானத்தின் யோகம் உண்டாகும் என்றும் உணர்த்துகின்றார்.[183] யோகசித்தி ஞானமாதல் பற்றியும் கேசரியோகம் பற்றியும்[184] எடுத்துரைக்கின்றார்.

## ஞானம்

சட்டைமுனி ஞானத்தைப்பற்றி, அகால வெள்ளம் கடந்தால் நேரான ஞானம் கடந்து நிற்கும் என்றும்[185] தீக்குள்ளேவிழுந் தெழுந்த நெய்யைப் போன்று சிறப்பான ஞானமது வந்து சேரும் என்றும்[186] உணர்த்துகின்றார். ஞானத்தின் பயனைப்பற்றி முத்தி நின்ற ஞானத்தில் புகுந்தோர்க்குப் பிரபஞ்சம் மூன்றும் அழியும் என்றும்,[187] ஞானசக்தியால் ஞானம் முற்றிப் பிறப்பு, இறப்பு கடந்த நிலையைக் கூறுகின்றார்.[188]

சமாதி யோகத்தினால் முழு ஞானமடையலாம் என்பதைச் சட்டைமுனி,

"உரைத்திட்ட காரமென்ற பிருதிவி போக்கு
ஓடுகின்ற வாசியினால் யோகம் பார்த்து
மறைத்திட்ட மவுனத்துடன் மவுன மூட்டி
மருவியந்த வறிவோடே வாசமாகி
நிறைத்திட்ட அகண்டத்திற் சென்றே ஆடி
நேரான அண்டமுதற் புவனம் பார்த்து
முறைத்திட்டந் தப்பாமற் சமாதி நின்றால்
முழுயோகி முழுஞானமு மூட்சா வாயே"[189]

என்று பாடுகின்றார்.

மேலும் சரியை, கிரியை, யோகம், ஞானம் பற்றி உணர்த்து கின்றார். சரியையில் நின்று சடம் வீழ்ந்தால் தவறாது கிரியையுள் சாரச் செய்யும், கிரியைவிட்டு விழுந்தால் மகத்தான உடலெடுத்து யோகம் பண்ணும், பிறகு கிரியைவிட்டு நீங்கினால் உயர்ந்து நின்ற ஞானம் தோன்றும்[190] எனச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற படிநிலைகளை வரிசைப்படுத்துகின்றார்.

மாணவர் ஆசானிடம் பெறும் தீட்சை பற்றியும், அவை தச தீட்சை என்றும், சட்டைமுனி நாயனார் உணர்த்துகின்றார்.[191]

சட்டைமுனி தம் பாடல்களில் சித்தாந்தக் கருத்துகளைக் கூறி இருப்பதைச் சில எடுத்துக்காட்டுகள்மூலம் விளக்குகிறார்.

"நரகமென்ற பெண்மேலே யாசை விட்டு
நாதாந்த வேதாந்த சித்தாந் தம்பார்"[192]

என்றும், ' சமயமெல்லாம் வேதாந்த சித்தாந்த முண்டு'[193] என்றும், சித்தாந்தம் மற்றும் நாதாந்தம், வேதாந்தம் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

## சுப்பிரமணியர் பாடல்களில் சித்தாந்தம்

### பதி - சிவன் - சக்தி - முருகன் - கணபதி

சிவன், சக்தி, முருகன், கணபதி இவர்களின் தோற்றத்தைப் பற்றிச் சுப்பிரமணியர் ஆதியிலே பராபரத்தில் பிறந்த சத்தம் அருவுருவாக நின்ற பரமசிவமானது; சோதியென்ற சிவனிடமிருந்து சக்தி உண்டாயிற்று; அச் சக்தியிலிருந்து எழுவகை தோற்ற வேறுபாடுகள் தோன்றின; சத்தியாலும் சிவத்தாலும் சண்முகனும் கணபதியும் தோன்றினார்கள் எனக் குறிப்பிடுகின்றார்.[194]

### சிவசக்தி

சக்தியும் சிவமும் ஒன்றாகி உள்ளம் கனிந்து பூரணமாய் நிற்பர் என்றும்,[195] சக்தியும் சிவனுமே இவ்வுலகமாகத் திகழ்கின்றனர் என்றும், நாரதர் இதனைக் கணபதிக்கும் முருகனுக்கும் உணர்த்த வேண்டி, ஞானமாகிய பழத்தைக் கணபதிக்குத் தந்தருளிய புராணக் கருத்தையும் கூறுகின்றார்.[196]

### தூல உடல்

தூல உடல் நிலைபெறச் செய்யும் வழியைப் பற்றிச் சுப்பிரமணியர், ஐந்தெழுத்தாகிய மந்திரத்தைச் சித்தத்தில் அடக்கவேண்டும். செம்மையுடன் தலை, கால்; கால் தலையால் மாற்றிச் சுத்தமுடன்ஆதார தேவதைகள் வந்து சொன்னபடி, தியானம் செய்யவேண்டும். இங்ஙனம் தினமும் தியானம் செய்தால் தூல உடல் நிலைத் திருக்கும்[197] என்று எடுத்துரைக்கின்றார்.

### யோகம்

அட்டாங்க யோகத்தினைச் செய்து சிவாயமாகிய குருவின் பாதத்தில் தெளிவாய் மனத்தை நிறுத்தல்வேண்டும் என்றும்,[198]

அட்டாங்க யோகத்தில் ஒன்றான பிராணாயாமம் செய்தால், உடல் கல்போன்று உறுதியாகும் காலலென்ற நோய் காணாதோடும்; மூச்சு உறுதியாகும்; ஓதுகின்ற மந்திரமும் சித்தியாகும் என்றும்,[199] அண்டவெளிக்குள்ளே சென்று நேயமுடன் பிராணாயாமம் செய்யவேண்டும் என்றும்,[200] பிராணாயாம யோகம் செய்தல்பற்றிச் சுப்பிரமணியர் குறிப்பிடுகின்றார்.

## மந்திரம்

மந்திரத்தைப் பற்றி ஆதியுடன் ரீங்கிலி ஓமென்று ஓதவேண்டும் என்றும், பிறகு அதனைத் தலைகாலாய் மாற்றி ஓதவேண்டும், சோதியுடன் சுழுமுனையில் மனக்கண் சார்த்திக்கொண்டு சுத்தமுடன் திருநீறு பூசவேண்டும்.[201] மேலும், ஓம், கிலி அங், அங்கிலிநங், சிங்கிலிவங், வங்கிலிசிங், வங்கிலியங், அங்கிலிமங் எனவும் ஓதவேண்டும்[202] என்றும் கூறுகின்றார்.

## தவம்

சுப்பிரமணியர் தவ நிலைபற்றி முருகன் அசுரர்களை அழிக்கவும் அறந்தழைக்கவும் தூலம், சூட்சுமம், அரூபமென்னும் உருவங் கொண்டு அசுரர்களை அழித்துத் தவநிலை கொண்டான் என்றும், தெளிவுநிலையால் தன்மைகண்டு தீர்க்கமுடன் இருந்து தவம் செய்யவேண்டும். அங்ஙனம் தவம் செய்வதே அனுக்கிரக வரமாகும் என்றும் குறிப்பிடுகின்றார்.[203]

## தீட்சை

சுப்பிரமணியர் தீட்சை பெறுவதற்கான வழியைக் குறிப்பிடு கின்றார். ஆராத தீட்சை பெறுவதற்கு நன்மையுடன் ஓங், ரீங், அங்கெனத் தியானித்து நாட்டமுடன் பதினாறுமுறை செய்தால், கணபதி தன் எதிரில் பிரகாசிப்பார்; தானம் என்ற சுழுமுனையில் தன்னைப் பார்த்து நுண்மையுடன் ஓம் நமசிவாயமென்றால் பிரமந்திர சனம் உண்டாம்[204] என்றும் தீட்சை பெறுவதால் இறைவனை அடையும் வழியைக் காட்டுகின்றார்.

## திருமந்திரம்

சைவ சமயத்தின் மிகப்பழைய நூல்களில் சிறந்து விளங்கும்

திருமந்திரத்தை எழுதிய திருமூலர் ஒரு சித்தாந்தி. அவருடைய பாடல்களில் சித்தாந்த உண்மைகள் ஆழ்ந்த விளக்கத்துடன் தரப்பெற்றுள்ளன.[205] எனத் திரு.வி.க. கூறுவது நோக்கத்தக்கது. இவர் திருமூலரைச் சித்தராகவும் சைவ சமயச் சார்புடையவராகவும் இணைத்துக் கூறியிருப்பது அவரது பொதுமையுணர்வையே காட்டும்.

திருமூலர் 5, 6, 7, 8, 9 தந்திரங்களில் மிக விரிவாக ஆராய்வது சித்தாந்தம் பற்றியே எனக் கூறலாம். சைவ சித்தாந்த சாத்திரங்கள் எனக் கூறப்படுகின்ற 14 நூல்களுக்கும் காலத்தால் மிக முன் தோன்றிய நூல் திருமந்திரமாகும். ஆதலலும், சித்தாந்தம் என்னும் சொல் வழக்கை முதலில் அறிமுகப்படுத்திய நூல் இதுவே ஆதலாலும், திருமூலர் அமைத்துக்கொண்ட பாதையைச் செம்மைப் படுத்தி விரிவு செய்தவர்களே சாத்திர நூல் ஆசிரியர்கள் என்பது விளங்கும். எனவே, இந்நூலே சைவ சித்தாந்தம்பற்றிக் குறிக்கும் முதல் நூல் எனத் துணிந்து கூறலாம்.[206] திருமந்திரத்தின் ஆசிரிய ராகிய திருமூலர் பல்லவர் காலத்தின் தொடக்கத்தில் வாழ்ந்திருந்தார் என்று கொள்ளலாம்.[207] பிற்காலத்தில் சைவ சித்தாந்த சாத்திரம் வளர்வதற்குத் திருமந்திரம் ஓர் ஊற்றுக் கண்ணாக அமைந்தது. தமிழகத்தின் வரலாற்றில் இருண்ட காலமாகக் கருதப்படுகின்ற நான்கு, ஐந்து, ஆறு ஆகிய நூற்றாண்டுகளில் சைவத்தின் வளர்ச்சியைத் திருமந்திரத்தைக் கொண்டே அறிய முடிகிறது. முதன் முறையாகப் பல்லவ மன்னன் இராசசிம்மன் கல்வெட்டில், '**சைவ சித்தாந்தம்**' தொடரைக் காண்கிறோம். அதனால், அப்பொழுதே மக்களிடையே சைவ சித்தாந்தக் கருத்துகள் பரவியிருந்தன என்று கொள்ளலாம். பிற்காலத்தில் 13 ஆம் நூற்றாண்டில் மெய்கண்டரால் வகுத்தளிக்கப்பட்ட சைவ சித்தாந்தக் கருத்துகளின் விதை பல்லவர் காலத்தில் தூவப்பட்டது.[208]

சைவத்தைப் போன்றே யோகமும் ஆரியருக்கு முற்பட்ட காலத்து மக்களிடையே தோன்றி வழங்கி வந்தது. சாம்ராஜ்யங்கள் உருவான காலம்வரை இந்தோ-ஆரிய சமயத்தில் யோகம் முக்கியமான இடத்தைப் பெறாதிருப்பதற்கு இதுவே காரணமாகும்.[209]திருமந்திரத்தில் கூறப்படும் செய்திகளைப் பொதுவாகச் சைவ சித்தாந்தம், யோகப் பயிற்சி என இருவகைப் பெரும் பிரிவாகப் பிரிக்கலாம்.[210] ஆனால், திருமூலர் குறிப்பிட்ட சைவ சித்தாந்தத்தை மட்டும் எடுத்துக் கொண்டு 14 சாத்திரங்களாக்கிய மெய்கண்ட தேவர் யோகப் பயிற்சியைப்பற்றி விரிவாகக் கூறாமல் விட்டுவிட்டார்.

பண்டைய நாளில் ஒன்றாயிருந்த கடவுள்கொள்கை பின்வந்த பக்தி இயக்கம் காரணமாகத் தோன்றிய சமயத் தொடர்பான நம்பிக்கை, வழிபாட்டுமுறை, கற்பனை கலந்த கதைகள் அனைத்தும் சித்தர்கள் கண்ட சித்தாந்தத்தை உருமாற்றம் செய்தன. சாத்திரங்கள் பதினான்கின் தோற்றம் புதிய சைவ சித்தாந்தத்திற்கு வழிகோலியது. காலப்போக்கில் சித்தர்களின் கொள்கையினின்று வேறுபட்டது; புதிய விளக்கங்கள் தரப்பட்டன.

இங்ஙனம் மெய்கண்டார் முதலிய பின்வந்த சாத்திர வல்லுனர்கள், திருமூலர் அமைத்துக்கொண்ட அடிப்படையின் மேலே சித்தாந்தமென்னும் மாளிகையை அமைத்தனர் என்பது இதனால் விளங்கும் என டாக்டர் இரா. மாணிக்கவாசகம் குறிப்பிடுகின்றார்.[211]

## திருமூலரின் காலம்

திருமூலர் சங்க காலத்திற்கும் மிக முற்பட்டவர் என கே.ஆர். சுப்பிரமணியரும்,[212] கி.பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்தவர் எனச் சிவபாதசுந்தரமும்[213] கருதுகின்றனர். அறிஞர் டி.வி. சதாசிவ பண்டாரத்தார் தம்முடைய இலக்கிய வரலாற்றில் திருமூலர் தில்லையையும் அம்பலத்தையும் மூன்று பாடல்களில் குறிப்பிடுவதாலும் தில்லை அம்பலத்திற்குப் பொன் வேய்ந்தவன் பல்லவ மன்னன் சிம்மவர்மன் ஆதலாலும் திருமூலர் கி.பி. 5ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து கி.பி. 6ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதிக்குள் வாழ்ந்திருத்தல்வேண்டும் என்று குறிப்பிடுகின்றார்.[214]

திருஞானசம்பந்தர் திருவாவடுதுறை சென்றபோது அவ்வூர்க் கோயில் கொடி மரத்தின் அருகில் புனித மணம் வீசியதென்றும் அதன்கீழ்த்தோண்டியபோது திருமந்திரப் பாடல்கள் அடங்கிய ஏடுகள் காணப்பட்டன என்றும், அதன் அருமையை அறிந்து வெளிக் கொணர்ந்தார் என்றும் ஒரு வரலாறு தொன்றுதொட்டு வழங்கி வருகிறது. இவ்வுண்மை வரலாறு கொண்டு இவரின் காலம் கி.பி. 6ஆம் நூற்றாண்டின் இடைக்காலமாகும் என மறைமலையடிகள் கருதுகின்றார்.[215] மேலும் அறிஞர் சிலர் 7, 8, 9ஆம் நூற்றாண்டுக்குரியவர் திருமூலர் எனவும் குறிப்பிடுகின்றனர்.[216]

இவ்வாறு அறிஞர் பலர் திருமூலர் காலத்தைக் கி.மு. ஆறாம் நூற்றாண்டுமுதல் ஒன்பதாம் நூற்றாண்டுவரை பல்வேறு நிலைகளில் எடுத்துரைக்கின்றனர். திருமூலர் காலம் அறுதியிட

முடியாத ஒன்றாக இருப்பினும் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியாக இருக்கலாம் எனக் கருத இடமுண்டு என டாக்டர் இரா. மாணிக்கவாசகம் முடிவாகக் கூறுகின்றார்.[217]

திருமூலருக்குமுன் தமிழ் நாட்டில் தமிழ்மொழியில் சைவ சித்தாந்த நூல் இல்லை; அவர் செய்த திருமந்திரமே சைவ சித்தாந்த முதல் நூல் என்பது தெளிவு. ஆதலின், இந்நூல் பின்வந்த அப்பர், சம்பந்தர், சுந்தரர் முதலிய சமயாசாரியர்கட்கும் அவர்களால் பரப்பப் பட்ட சைவ சமயத்திற்கும் ஆதரவான நூலாயிற்று.

மெய்கண்ட தேவரைச் சித்தாந்தத்தின் முதல் ஆசிரியராகக் கருதுவர் சிலர். இங்ஙனம் கருதுவதற்குரிய பெருமை யுடையவர் மெய்கண்டார் என்பதில் எள்ளளவேனும் ஐயமில்லை. ஆயினும், சித்தாந்தத்தை அவரே படைத்தார் என்று கருதுவது சரியன்று. மெய்கண்டாருக்கு முன்னரே திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் என்னும் இரண்டு சித்தாந்த நூல்களும் உள்ளன. மற்றும் ஞானாமிர்தம் முதலியனவும், சித்தாந்த சூறாவளி, அட்ட பிரகாணம் முதலிய வடநூல்களும் இருத்தலை நாம் அறியலாம்.[218] உண்மையில் சைவ சித்தாந்தத்தின் முதலாசிரியன் சிவபெருமானே ஆவான் என்று கூறலாம்.[219] முதன்முறையாக இறைவனையும் ஆன்மாவையும் உணர்த்திப் பதி, பசு என்னும் தத்துவத்தைக் குறிப்பால் காட்டும் இலக்கியம் திருமுருகாற்றுப்படை யாகும் என்று இரா. மாணிக்கவாசகம் உணர்த்துகின்றார்.[220] அடுத்துச் சைவ சித்தாந்தத்தோடு சமயத்தையும் தத்துவத்தையும் இணைத்துக் காட்டிய திருமந்திரமும் பிறகு மெய்கண்ட சாத்திரமும் தோன்றின.

சைவ சித்தாந்த சாத்திரம் பதினான்கனுள்ளும் மூல சாத்திரங்கள் எனக் குறிப்பிடும் பெருமை பெற்றவை திருவுந்தியாரும் சிவஞான போதமுமே யாகும். சித்தாந்த சாத்திரத்தின் முதல் நூலை எழுதிய இருவரும் இவருடைய மாணவரும் சந்தான குரவர்களில் சேர்க்கப் படவில்லை.

பதின்மூன்றாம் நூற்றாண்டில் சிதம்பரத்தின் கிழக்கெல்லையில் உள்ள கொற்றவன்குடி என்னும் ஊரில் வாழ்ந்தவரான உமாபதி சிவாசாரியார் என்பவர் தில்லை மூவாயிரவரில் ஒருவர். அவர் சைவ சித்தாந்த உண்மைகளை உணர்ந்து அவற்றுள் தோய்ந்திருந்தவர். ஆதலின், தில்லைவாழ் அந்தணர்கள் அவரைக் குலத்தினின்றும் விலக்கி ஒதுக்கி வைத்தனர் எனக் கூறுவர்.[221]

திருவுந்தியார், திருக்களிறறுப்படியார் என்னும் இரண்டு நூல் களும் மெய்கண்டாருக்கு முற்பட்டவை என்றாலும், உமாபதி சிவம் போன்ற ஆசிரியர்கள் அந்நூல்களின் பெயரைக்கூடக் குறிப்பிட வில்லை. ஆனால், பின்னால் வந்த யாரோ ஒருவர் சாத்திர நூல்களைக் குறிக்கும் வெண்பாவைப் போற்றி, அதில் இவ் விரண்டையும் சேர்த்திருக்கலாம்.[222]

மேற்கண்ட கருத்துகளிலிருந்து, சைவ சித்தாந்தக் கருத்துகள் பதினான்கு சாத்திரங்கள் தோன்றுவதற்கு முன்னரே தோன்றின என்றும், அக்கருத்துகள் சைவ சமயத்தினர் சிலரால் வெறுக்கப்பட்டன என்றும் அறியலாம்.

சைவ சித்தாந்தக் கருத்துகள் முழுமையும் உள்ளடக்கிச் சித்தாந்தத்தை முழுமைப்படுத்தியவரும் தமிழருமான மெய்கண்டார், சிவாக்கிரயோகி போன்ற ஆரியர்களால் புறக் கணிக்கப்பட்டதுடன், மெய்கண்டாரின் நூல் வடமொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்ட ஒன்றே என்ற கருத்தும் திட்டமிட்டுப் பரப்பப்பட்டுள்ளது.[223]

சம்பந்தரும் நாவுக்கரசரும் கோயில் கோயிலாகச் சென்று இறைவனைப் பாடிப் பரவியவர்கள். ஆனால், திருமூலரோ யோக மார்க்கத்தில் நின்று, இறைமையில் பொதுமையைக்கண்டு, **'காயமே கோயில்'** என்ற கொள்கையோடு அனைத்து உயிரினும் இறைமையைக் கண்டவர். திருமூலர் சித்தாந்தத்தை முன்னரே எடுத்துரைப்பினும், அவர் சித்தரான காரணத்தினால் அவரது வாழ்க்கை முதலியன மறைக்கப்பட்டிருக்கலாம் அல்லது அவரே மறைந்த வாழ்க்கையினராக இருந்திருக்கலாம் என எண்ண வேண்டியுள்ளது.

திருமூலர் வரலாறு எவ்வாறு இருப்பினும், சைவ சித்தாந்தத்தை முதன்முதலில் வெளிக் கொணர்ந்தவர் திருமூலரே ஆவார். பிறகுதான் திருமூலர் விதைத்த சைவ சித்தாந்தம் மெய்கண்டார் கண்ட பதினான்கு சாத்திரங்களாகிய மரமாக வேரூன்றியது.

## சிவன்

சிவப்பு நிறம் என்னும் பொருடைய **சிவம்** என்னும் சொல் சூரியனையே குறித்து வந்தது. மேலும், சிவன் என்னும் சொல் சேமம்

(நலம்), செம்மை ஆகிய பொருள்களைக் குறித்து நின்றது. செம்மை நிறமுடையதாதலினாலும் உலக மக்கட்கு நலம் செய்கிறதாதனாலும் சூரியனையே ஆதியில் தொழத் தொடங்கினர். பின்னர் அவ்வழி பாடே சிவ வழிபாடாயிற்று. இது டாக்டர் மா. இராசமாணிக்கனாரின் கருத்தாகும்.[224]

சிவன் உடல், மனவலிமை உடைய பெரு வீரராகவும் வான சாத்திரம், மருத்துவம் முதலிய பல கலைகளிலும் வல்லவராகவும் விளங்கினார் எனவும், கோடைக்காலத்தில் இமயமலையில் தங்குவதும் குளிர் காலத்தில் வேறு இடங்களுக்குச் செல்லும் பழக்கம் உள்ளவர் எனவும் தம் ஆற்றலாலும் அறிவாலும் மக்களின் வணக்கத் திற்குரியவரானார் எனவும் மிக விரிவாகத் தந்திர சாத்திர நூல் ஒன்று கூறுவதும்,[225] சதாசிவன் தனது வாழ்க்கை முழுவதையும் மக்கள், விலங்கு, தாவரம் முதலிய அனைத்து உயிர்களின் நலனுக்காகவும் தியாகம் செய்தவர். மனித சமுதாயத்தின் மேம்பாட்டுக்காக ஓய்வில்லாமல் உழைத்தவர். இசை, மருத்துவம், சமுதாயச் சட்ட திட்டங்கள், தரும வரன்முறைகள் முதலியவற்றை முதன்முதல் வகுத்து அறிமுகம் செய்தவர்[226] எனக் கூறுவதும் சிவனைப் பற்றிய ஆய்வுக்குப் பெரிதும் துணை நிற்பன.

## சிவனே முதல் சித்தன்

சிவனே முதல் சித்தராகவும், சித்தா கூட்டத்தின் தனிப்பெரும் தலைவராகவும், கருதப் பெறுபவர் என்பதையும், அனைத்துக் கலையறிவும் பெற்று ஆன்மிக வளர்ச்சியுற்றவராகவும் விளங்கியவர் என்பதையும் சித்தர்கள் இலக்கியங்கள் வாயிலாக உறுதி செய்தல் கூடும்.

"பொதிகையிலே எனைப் பார்க்கச் சிவனும் வந்தார்
பூரணமே தெய்வமென்று போற்றிச் செய்து
இதமாகக் கற்பமுறை யாவும் கேட்டேன்"[227]

"நீகேளு புலத்தியனே கற்பமார்க்கம்
நின்மலமாஞ் சதாசிவனார் எனக்குச் சொன்னார்"[228]

"அம்பலத்தி லாடுகின்ற ஐயர்தானும்
மகிழ்வதற்காய் எந்தனுக்குச் சொன்னா ரையா"[229]

"சொன்னாரே எந்தனுக்கு ஈசன் தானுஞ்
சோரவில்லை புலத்தியனே உனக்காய்ச்
சொன்னேன்"[230]

"மதியான குருமுனிதான் சொன்ன நேர்மை
நாரியுமை பாகனார் அருளால் சொன்னார்"[231]

"குருமுனி எனும்பேர் சிவன்தந்தார் பாரு"[232]

"ஆச்சென்று தெட்சணா மூர்த்தி தானும்
பேச்சப்பா யென்னுடனே நால்வ ருக்கும்
பேராகு மாதியிலே யுபதேசித் தார்"[233]

மேற்குறிப்பிட்ட வரிகளில் காணப்பெறும் தட்சணாமூர்த்தி, ஈசன், நந்தி, நாரியுமைபாகர் முதலியன சிவனைக் குறிப்பன என்பதும், அவரே முதல் சித்தராக விளங்கியவர் என்பதும், சித்தர்களின் அனைத்து அறிவுக்கும் அவரே மூலமாக விளங்கியவர் என்பது விளங்கும்.

எனவே, சிவன் என்னும் பெயரும் அப்பெயரை உடையவர் பற்றிய கருத்துகளும் கற்பனையாகவோ அன்றி உருவகமாகவோ பண்டுக் கூறப் பெறவில்லை என்பது விளங்கும். பனிமலைச் சிகரத்தின் மேலிருந்து கீழே உருண்டு வரும் சிறிய பனித்துண்டு கீழே வரவரப் பெரிய பனிப்பாறையாக ஆதல்போல் காலம் காரணமாகவும், மக்கள் மன இயல்பு காரணமாகவும் உண்மை மறைந்து, கற்பனை விஞ்சியதால் விபரீதம் விளைந்தது என்பதே உண்மை[234] எனத் தெளிவு பெறலாம். பழைய வடிவமும் புதிய பொருளும் கொண்ட சொற்களின் பட்டியலில் சிவம் என்ற சொல்லும் சித்தாந்தம் என்ற சொல்லும் சேர்க்கத்தக்கன. மேலும், காலப்போக்கில் சிவனை வணங்கும் குறிப்பிட்ட சமயத்தார் (நாயன்மார் முதலியோர்) பாடல்களில் சித்தர்கள் கண்ட உண்மைகள் ஆங்காங்கே விரவி வருவன கண்ட வைதிக நெறியினர் சித்தர்கள் சமயத்தையும் இன்னும் பிற சமுதாயச் சடங்கு முதலியவற்றையும் சாடியவர்கள். ஆதலின், அவர்களைத் தனியே விடுத்து உருவப் பொருளான சிவத்தோடு சித்தாந்தத்தை இணைத்துச் சைவ சித்தாந்தம் ஆக்கினர் என்று கொள்வது பொருத்தமாக உள்ளது.[235]

சைவ சித்தாந்தம் முற்காலத்துச் சித்தர்களுடனும், பிற் காலத்துச் சித்தர்களுடனும் இணைந்தே இருந்து வந்தது. எனவே, சித்தர்கள் கண்ட உண்மை முடிவே சித்தாந்தம் என்று வழங்கப்பட்டது எனத் துணிந்து கூறலாம்.

# திருமூலர் பாடல்களில் சித்தாந்தம்

சைவ சமயத்தின் மிகப் பழைய நூல்களில் ஒன்றான திருமந்திரத்தை எழுதிய திருமூலர் ஒரு சித்தராவார். அவருடைய பாடல்களில் சித்தாந்த உண்மைகள் ஆழ்ந்த விளக்கத்துடன் தரப்பெற்றுள்ளன. சித்தர்களில் மிக விரிவாகச் 'சித்தாந்தம்' பற்றிப் பாடியவர் திருமூலரே யாவர். ஆதலால், அவரது சித்தாந்தக் கருத்துகளை இவ்வியலில் காணலாம்.

சைவ சித்தாந்தர் யோகப் பயிற்சியினால் ஆணவம், மாயை, கன்மங்களாகிய தூசுகளை நீக்க இறைவனைக் காண்பவர்கள். ஆதலின், திருமூலர் மிகத் தெளிவாகச் சைவர் என்ற சொல்லுக்கும் சித்தாந்தர் என்ற சொல்லுக்கும் பொருள் விளக்கியுள்ளார்.[236]

## பதி, பசு, பாசம் வேறின்மை

சைவ சித்தாந்தம் உணர்த்துவனவாகிய பதி, பசு, பாசம் இம்மூன்றும் அனாதியானவை. பாசத்தில் கிடக்கின்ற ஆன்மாக்கள் அதனின்றும் விடுபட வேண்டின் சரியை முதலியவற்றால் ஞானம் பெறுதல்வேண்டும்.[237] பசுக்களிடம் இருக்கும் ஆணவம் முதலிய மலங்கள் நீங்குவதற்காகவே இறைவன் மாயை முதலியனவற்றைத் தந்துள்ளான்[238] என்பன போன்ற கருத்துகளால் திருமூலர் பதி, பசு, பாசம் வேறின்மை என்பதைப் புலப்பட வைக்கின்றார். மேலும்,

"பதிபசுபாசம் எனப் பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி"[239]

என்ற கருத்தை,

"நெல்லிற் குமியும் நிகழ்செம் பினிற்களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி
மலகன்மம் அன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்
அலர்சோகஞ் செய்கம லத்தாம்"[240]

எனப் பதி, பசு, பாசம் தொன்றுதொட்டு அனாதியாகவே இருக்கின்றன என்பதைத் திருமூலர் நன்கு உணர்த்துகின்றார்.

## இறைவன் ஒருவனே

திருமூலர் ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று கூறும் மூடநம்பிக்கை கொண்டவர் அல்லர். 'ஒன்றென்றிரு தெய்வம் உண் டென்றிரு' என்ற ஓரிறைக்கொள்கையை உடையவர்.

"ஒன்றே குலம் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின்"[240]

என்று நாம் யாவரும் ஓர் குலம், ஓரிறைக் கொள்கையினர் என்பதைப் புலப்பட வைக்கின்றார்.

"ஒன்றென்ற தொன்றே காண்; ஒன்றே பதிபசுவாம்
ஒன்றென்ற நீபாசத் தோடுளை காண்"[242]

என்று சிவஞானபோத கருத்தை முன்னரே நமக்கு அறிவுறுத்து கின்றார். மேலும், இறைவன் பல்வேறு உருவத்தன் ஆனாலும் ஒருவனே[243] என்னும் திருமூலரின் கருத்திற்கேற்பச் சிவஞானசித்தியார் குறிப்பிடுவது,

"சிவஞ்சித்திநாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தருள் உருத்திரன்தான் மால்அயன் ஒன்றி னொன்றாய்ப்
பவந்தரும் அருவம்நால் இங்குருவம் நால்உபய மொன்றாய்
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்ப னென்பர்"[243]

இதனால் சிவநெறி சாதி, சமயம், நிறம், மொழி, நாடு முதலிய வேறுபாடுகளின்றி மக்கள் அனைவரும் ஒரே குலம் என்னும் கருத்தினையுடையது; அவரவர்கள் வழிபடும் தெய்வங்கள் எதுவாயினும் அவை அனைத்தும் ஒரே இறைவனைக் குறிப்பதாகும் என்பதே அதன் அடிப்படைக் கொள்கையாகும்[245] என்று திருமூலரின் ஓரிறைக் கொள்கைக்குக் கு.பழனியப்பன் விளக்கம் தருகின்றார்.

## இறைவனின் திருப்பெயர்கள்

திருமூலர் இறைவனின் இயல்புபற்றி உயிர்கள் அனைத்திற்கும் பற்றுக்கோடான சிவன், சத்தி, பரநாதம் மேலான விந்து, சதாசிவம், மயேச்சுரம், பிரமம், மால்,[247] உருத்திரன் இவர்களாக விளங்குகின்றான்.[246] வேதாந்தி,[248] பராபரன், தராபரன், சிராபரன், மராமரன், மனங்கோயில்கொண்ட ஈசன்,[249] அந்திவண்ணன், அரன், சிவன், முந்திவண்ணன், முதல்வன், பரன்[250] நஞ்சுண்ட தேவர்பிரான்,[251] நந்தி, ஒப்பிலிவள்ளல், ஊழிமுதல்வன்,[252] தழல் ஒத்த மேனியன்,[253] அமராபதிநாதன்[254] ஆகிய திருப்பெயர்களையும் கொண்டுள்ளான் என்பதனைக் குறிப்பிடுகின்றார்.

"ஒருநாமம் ஓருரு மொன்றுமில் லாற்காயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமே"[255]

என்ற மணிவாசகரின் வாக்கிற்கேற்பத் திருமூலர் இறைவனுக்குப் பல பெயர்களை இட்டுத் தம் நூலில் சுட்டிக் காட்டுகின்றார்.

## பதியின் சிறப்பு

இறைவன் பிறவா நெறி தந்த பேரருளாளன், மறவா அருள் தந்த மாதவன், நந்தி, அறவாழி அந்தணன், ஆதிப்பராபரனுமாகவும் திகழ்கின்றவன்,[256] உயிருக்குயிராய் நிற்கின்றவன்,[257] இறைவன் தேவர்களுக்கும் தலைவர்களுக்கும் தலைவன், திசை பத்திலும் தங்குகின்றவன், நீரால் சூழப்பட்ட ஏழுலகத்தையும் காக்கின்றவன்,[258] பிறப்பில்லாத பிஞ்ஞகன் பேரருளாளன், இறப்பில்லாத யாவர்க்கும் ,ன்பம் அருளுகின்றவன்[259] என இறைவனின் சிறப்பியல்புகளைத் திருமூலர் குறிப்பிடுகின்றார்.

பரமாகவும் பூரணமாகவும் விளங்கும் பொருளே அனைத்திற்கும் மூலமாகவும் விளங்கும். ஆதலின் 'மூலம்' எனவும், சித்தர்கள் இறைமையைப் பாடியுள்ளனர். அவன், அவள், அது எனும் எல்லாமாகவும், அடி நடு முடி என்னும் மூன்றாகவும் அகண்டமாகவும் பல்லுயிர்களைத்திற்கும் புகலிடமாகவும் எப்பொருளாகவும் நிற்பது 'மூலம்' என்னும் இறையாகும் எனத் திருமூலர் ஞானம் விளக்கும்.[260]

சிவன் பொன்னிறத்தவன், புலித்தோலினன், இளம்பிறைசூடியவன், திருநீறு அணிந்தவன் என்பதைத் திருமூலர் எடுத்துரைக்கின்றார்.[261] இக்கருத்துடைய பாடலைச் சுந்தரரும் தம் தேவாரத்தில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

"பொன்னார் மேனியனே புலித்தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை அணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னையல்லால் இனியாரை நினைக்கேனே"[262]

திருமூலர் இறைவன் உள்ளும் புறமுமாக உறையும் இடங்களைப் பின்வருமாறு கூறுகின்றார்.

"உள்ளம் பெருங்கோயில் ஊன்உடம்பு ஆலயம்"[263]

"மனத்துறை மாகடல்"[264]

"உள்ளத்தும் உள்ளன்புறத் துள்ளன் எம்மிறை"[265]

## இறைவன் குரு

இறைவன் குருவாக வந்து தனக்குச் சித்தி தந்தருளியதைத் திருமூலர் தம் பாடல்கள்மூலம் தெளிவுபடுத்துகின்றார். ஆக்கமுடன் அருட்சுடர் போன்ற குருவைத் தானே அனுதினமும் நோக்கி நின்றால் தானே ஆசானாக மாறலாம் என்றும்,[266] சிவகுருவின் திருவடியைச்

சார்ந்து அவரை வழிபாடு செய்கின்றவர் வீடுபேறு அடையும் நன்னெறியாளர் என்றும்[267] தெளிவுபடுத்துகின்றார்.

ஆன்மாக்களின் நிலைக்கேற்ப இறைவன் ஞானகுருவாக எழுந்தருளி வந்து ஞானம் வழங்குகின்றார் என்பது சித்தாந்தத்தின் அடிப்படைத் தத்துவம். இத்தத்துவத்தை விளக்கச் சூரியகாந்தக் கல்லையும் பஞ்சையும் உவமையாகக் கொள்கின்றார் என்பதை அவர்தம் பாடல்மூலம் காணலாம்.[268] திருமூலர் இறைவன் குருவாக வந்து அருள் செய்வதைக் குறிப்பிடுவது போன்றே சிவஞானபோதம் எடுத்துரைக்கின்றது.[269] தனக்கு ஆசிரியனாகிய நந்தி, சிவன் என்று திருமூலர் கூறுகின்றார்.[270] இக்கருத்தினைத் திருவுந்தியாரும் தெளிவுபடுத்துகின்றது.[271]

நந்தி அருளால் மூலனை நாடினோம்[272] என்பதில் உள்ள நந்திவேறு "மூலன்" வேறு எனக்கொண்டு சாத்தனூரில் பசுக்களை மேய்த்த இடையனாகிய மூலனையே குறிக்கும் என்பர் சிலர். இது பொருந்தாது **நந்திமூலன்** என்னும் இரண்டும் முதற் கடவுளாகிய இறைவனையே குறிப்பதாகும். இறைவனருளாலே குரு வடிவில் எழுந்தருளிய இறைவனை நாடினார் திருமூலர் என்பதே பொருள்[273] என அறிஞர் பொருள் கொள்வர்.

திருமூலர் இறைவனின் அருள் குணத்தைப் பற்றிச் 'சார்ந்தவர்க் கின்பங் கொடுக்குந் தழல்வண்ணன்' [274] என்று குறிப்பிடுகின்றார். 'சார்ந்தாரைக் காத்தும் சலம் இலனாய்'[275] எனச் சிவஞானபோதம் மேற்குறிப்பிட்ட திருமூலரின் சித்தாந்த உண்மையைத் தெளிவு படுத்தும். 'கல்லால நிழலில் எழுந்தருளிய புண்ணியனாகிய சிவன் அருள் செய்கின்றவன்'[276] என்ற திருமந்திரப் பாடற் கருத்து, சிவஞான போதத்தில் மங்கல வாழ்த்துப் பாடலில் கையாளப்படுகிறது.[277]

## இறைவனின் தன்மை

தத்துவங்களுக்கும் அப்பாற்பட்டவன் இறைவன்.[278] விளக்கி னுக்குத் தூண்டுவோன் ஒருவன் வேண்டப்படுவதுபோல, அறிவிக்க அறியும் அறிவினையுடைய உயிருக்கு அறிவிக்கப் பேரறிவுப் பொருளான இறைவன் தேவை. [279] ஆதியும், அந்தமும் இல்லா அரும்பதி என்றும், குடங்கள் தோறும் காணப்படும் சூரியன் குடத்தை மூடின் உள்ளே அடங்காதது போன்று இறைவன் உயிரோடும், உலகப்பொருளோடும் கலந்துள்ளான் எனினும்,

அப்பொருள்களுள் அடங்குபவனும் அல்லன்.[280] காற்று, மேகம், மின்னல், வானவில், இடி இவற்றிற்கு ஆகாயம் இடம் தந்தும், தான் அவற்றில் படியாது நிற்றல்போல ஆதாரங்கள் ஆறிலும் தோன்றும் ஒளிகளுடன் கலந்தும், வேறாகி, ஒளிவடிவாக மறைந்தும் நிற்பான் இறைவன்[281] என்று இறைவனின் தன்மையை எடுத்துரைக்கின்றார்.

இங்ஙனம் திருமூலர் சைவ சித்தாந்தக் கருத்திற்கேற்பத் தம் பாடல்களில் பதி, பசு, பாசம் பற்றிய தொடர்பு, முப்பொருளும் அனாதி, பதி ஒருவனே, இறைவன் குருவாகவும் வந்து அருள் செய்பவன், குருவாகத் திகழ்பவன் நந்தி, சிவன் வேறு, குரு வேறல்லன் என்பன போன்ற கருத்துகளைத் தெளிவுபடுத்துகின்றார்.

## சத்திநிபாதம்

சத்திநிபாதம் என்பது சத்தி சிவத்தில் பதிதல். அதாவது திருவருள் வடிவான சத்தியும் சித்தனாகிய சிவனும் ஆன்மாவினிடம் விளங்கித் தோன்றுதலாகும்.[282] திருவருட்சத்தி திரோதாயியாய், மும் மலமாய்த் தன்மைகெட்டுச் சிவமாய்த் திகழும்.[283] இதுவே அருட் சக்தி எனப்படும்.

சக்தியின் வடிவங்கள் பற்றித் திருமூலர் சூரியன் சிவச்சோதியுடன் கலந்து வாக்குகளுக்கு எட்டாத ஞானமாகச் செய்கிறாள்; பராசக்தி என்றும்,[284] ஞானசக்தி - இதயம்; பராசக்தி - தலை; ஆதிசக்தி - சிகை; இச்சாசக்தி - கவசம்; கிரியாசக்தி - நேத்திரம்[285] எனச் சக்தியின் வகையினைப் பிரித்துக் காட்டுகின்றார். பூரணசக்தி இரு நூற்றிருபத்து நான்கு புவனங்களிலும் உறைவாள்[286] என்பதையும் உணர்த்துகின்றார்.

சிவசக்தியின் தன்மைபற்றிக் குறிப்பிடும்போது, அருட்சக்தி, போர்ச்சக்தி, கோபசக்தி, புருடசக்தி என்பன முறையே பார்வதி, காளி, துர்க்கை, விஷ்ணு ஆகிய தெய்வங்களுக்குரியனவாக அமையுமெனக் கிருபானந்தவாரியார்[287] விளக்கம் தருகின்றார்.

இறைவன் சக்தியுடன் சேர்ந்து தொழில்படும் தன்மையையும் திருமூலர் சுட்டிக் காட்டுகின்றார். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து செயல்களையும் செய்பவன் இறைவன் ஆவான்.[288] தோற்றுவித்துக் காத்து அருளல், இறைவனுக்கு விளையாட்டு.[289] படைத்தல், காத்தல், அழித்தல்

ஆகிய முத்தொழில்களையும் முறையே பிரமம், மாயன், சிவன் செய்கின்றனர்.[290]

சிவபெருமான் உயிர்களுக்குப் பிறத்தல்முதல் ஐந்தொழிலையும் கொடுத்து உண்மை ஞானத்தை உணர்த்திப் பரிபாகம் உறுத்துதல் சக்தியாகிய சிவத்தைச் சார்ந்து பேரின்பம் அளிக்கவே யாகும்.[291]

திருமூலர் குறிப்பிடும் இக்கருத்திற்கேற்ப உயிர்களை இடர்க் கடலில் நின்றெடுத்துச் சிறந்த அருள்புரிதல் இறைவனின் ஐந்தொழிலுக்குக் காரணம் என்று சிவப்பிரகாசம் குறிப்பிடுகின்றது.[292]

படைத்தல்முதல் அருளல் ஈறாக இறைவனின் ஐந்தொழிலையும் 68 பாடலில் திருமூலர் கூறுகின்றார்.[293]

## படைத்தல்

படைப்பு என்பது மாயையினின்றும் ஓர் உலகைத் தோற்று விப்பது ஆகும்.[294] அதாவது, கடவுளின் வெகுமதியாக உடலையும் உணர்வையும் மனத்தையும் வாழ்வுக்கேற்ற சூழலையும் அறிந்துகொள்ள வேண்டிய பொருள்களையும் இச்சைகளையும் பெறுவதையே குறிக்கும். சிவபெருமான், பிரம்மன், திருமால் இவர்களைப் படைத்துக் காத்து அழித்தலாகிய தொழில்களைச் செய்கின்றான்.[295] அணணலாகிய இறைவன் ஞானத்தை நல்கு வதோடு மேன்மையான உடம்பையும் கொடுத்தருளுகின்றான் என்பன[297] இறைவனின் படைத்தல் தொழிலகளாகும் எனத் திருமூலர் தெளிவுபடுத்துகின்றார்.

## காப்பு

சதாசிவ மூர்த்தி இருளாய் வெளியாயும் உடலாய் உயிராயும்; நின்று புத்தியிலும் பொருந்திக் காத்தருளுகின்றான்.[298] அவனே சிவ தத்துவத்திலிருந்து சீவர்களுக்கு நன்மையைச் செய்து காக்கின்றான்;[299] எங்கும் நிறைந்தவனாய் விளங்குகின்றான்[300] எனத் திருமூலர் இறைவனின் காத்தல் தொழில்பற்றி எடுத்துரைக்கின்றார்.

## மறைப்பு

மல மறைப்பினால் உலக போகத்தை நுகர்ந்துகொண்டிருக்கும் சீவன் இறைவனை உடனிருந்தும் அறிய முடியாததாகும்.[301]

ஆதியாகிய பெருமான் இருளில் மூழ்கியிருக்கும் சீவரது அண்டகோசத்தில் மறைப்பினைச் செய்து கொண்டிருப்பான்[302] உருத்திரன், மால், அயன் முதலிய மூவரும் இறைவனது தன்மையை உணரார்.[303] சிவனை நினைந்து, பிறப்பினை மறந்து, மறப்பினால் உண்டாகும் அறியாமையைப் போக்கிக் கொள்ளவேண்டும்[304] என்பன போன்ற கருத்துகள்மூலம் திருமூலர் இறைவன் அரங்கு நின்று ஒருவன் கைப்பாவையை ஆட்டுதல் போன்று மறைய நின்றுளான் என்பதனை விளக்குகின்றார்.

## அழிப்பு

சங்காரம் என்பதை இளைப்பாற்றல் என்னும் பொருளிலேயே திருமூலர் வழங்கியுள்ளார். சங்காரத்தைச் செய்பவனே மீண்டும் தோற்றுவிப்பனாதல்வேண்டும். ஆதலின், 'அந்தம் ஆதி என்று நிறுவினார் மெய்கண்ட தேவர்'[305] எனக் கோ. சுப்பிரமணிய பிள்ளை அழித்தல் தொழிலுக்கு விளக்கம் கூறுகிறார்.

முப்புரங்களைச் சிவன் அழித்தான் என்னும் புராணக் கதையை விளக்கும் வகையில் திருமூலர் மும்மலமே முப்புரம் என்கின்றார். ஆன்மா சிவத்துவம் அடைவதற்குப் பெருந்தடையாவன ஆணவம், கன்மம், மாயை இம்மூன்றையும் முப்பெருங்கோட்டையாக உருவகம் செய்து அதனை அழித்தான் எனக் கூறுகின்றார்.

"முப்புரம் செற்றவன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்"[306]

என்ற பாடலில் உண்மைப்பொருளை உணராது கதை கூறுகின்றவர் களைத் திருமூலர் சாடுகின்றார்.

இறைவனால் படைக்கப்பட்ட நாம் அவனாலேயே அழிக்கப்படுதல் நியதியே யாகும். நம் உடல் அழிக்கப்பட்டாலும் உயிர்க்கு அழி வில்லை. அவ்வுயிர் அழியாமல் இறைவன் அருளில் தோய்வுறு கின்றது என்பதைத் திருமூலர் மேற்குறிப்பிட்ட கருத்துகள் மூலம் தெளிவுபடுத்துகின்றார்.

## அருளல்

ஆசானானவன் துயிலும் மாணவனை எழுப்பச் சிறிய கோலைப் பயன்படுத்துவது போல இறைவனும் ஆணவத்தால் மதி மயங்கிக் கிடக்கும் உயிர்களைத் தட்டியெழுப்பும் சுத்த மாயை என்னும்

கருவியைக்கொண்டு அருள் செய்கின்றான்[307] என அருள்நிலை பற்றி இரா. மாணிக்கவாசகம் குறிப்பிடுகின்றார்.

திருமந்திரம் இறைவனின் அருள் தன்மையைப் பற்றி ஞானசக்தியைத் தன் மேனியாகவும், கிரியா சக்தியை அங்கங் களாகவும், இச்சாசக்தியை உயிராகவும் கொண்டு அருளுவான் எனவும்,[308] குரு உபதேசப்படி செந்நெறி சென்றால் இரண்டறக் கலத்தலானது கைக்கூடும். துரியநிலை யாகிய திருவருளை இடை விடாது உணர்ந்திருந்தால் இறைவன் உண்மை இன்பம் அளிப்பான் எனவும்,[309] நாம் வன்மையையும், சித்தியையும், மயக்கத்தையும் அண்ணலாகிய இறைவனின் அருளின்றி அறிய முடியாது[310] எனவும் கூறுகின்றது.

சிவனை அவனருளால் இடையறாது எண்ணும் மெய்யடியார் சிவனைத் தவிர வேறு எவரையும் மதியார்; அவர் வாழும் நாட்டில் தீயோர் இல்லை; பருவமழை தவறாது பெய்யும்; பொய்மை இல்லாமையால் விளைவும் குன்றாது; பஞ்சமும் இல்லை எனவும்[311] இறைவன் அருளால் திருமூலர் தம் ஆசானாகிய நந்தியின் உள்ளத்துக் குடிபுகுந்தேன்[312] என்றும் குறிப்பிடுகின்றார். சிவனை நினைத்து அகங்காரத்தைவிட்டு அன்பினால் வேள்வியைப் புரிந்தால் அருள் பெறலாம் என்றும்,[313] சிவபெருமான் அன்புடையாரைத் தன்மை யறிந்து ஆட்கொள்வான் என்றும்,[314] இறைவன் அருட்பார்வையால் இவ்வுலகைச் செழிக்கச் செய்கின்றார் என்பதையும் உணர்த்துகின்றார். மேலும், சிவன் மூவருக்கும் அருள் புரிகின்றவன்;[315] மன ஒருமைப்பட்டு வணங்கிய தேவர்களுக்கு அவன் அருள்வான்[316] என்பதையும் தம் பாடல்வழி எடுத்துரைக்கின்றார்.

இங்ஙனம் இறைவன் உயிர்களுக்கு அருள் செய்கின்றான்; தேவர்களும் அவன் அருட் பார்வையால் புகழ் பெறுகின்றனர். அவன் அருளின்றி இவ்வுலகமே செயல்படாது என்பதையும் திருமூலர் தம் பாடல்கள்மூலம் தெள்ளத் தெளிவாக விளக்கியுள்ளார்.

## திரோதான சக்தி

பசுவின் மலநீக்கம் காரணமாகப் பதியானது பாசத்திலே விருப்பமுறச் செய்தலால் அவ்வுயிரானது இருவினைகளைச் செய்து அவற்றின் பயன்களான சுவர்க்க நரகத்தை அடையும். அதன்பின் நான் என்னும் தன்முனைப்பு வந்து சேரும்படியாகத் திரோதான சத்தி அவ்வுயிரகத்துப் பொருந்தும்.[317] மாயாகாரிய வுடம்புடன் கூடி, நான்

என்று முளைந்து நிற்றல் ஆணவப் பண்பாகும். அவ்வாணவம் நீங்குதற் பொருட்டு மாயையின்கண் செலுத்தி இருவினைப் பயன்களையும் நடப்பாற்றல் ஊட்டுவது திரோதான சக்தியாகும்.[318]

"மனத்தில் எழுந்ததோர் மாயக் கண்ணாடி
நினைப்பில் அதனின் நிழலையுங் காணார்'[319]

சக்தியை உறவாகக் கொண்டவருக்குத் திரோதானசக்தியில் சரீரம் அழியாமல் இருக்கும்; பிறப்பு ஒழியும்[320] முதலிய கருத்துகளால் திருமூலர் உயிரானது, இருவினைப் பயனை அடைந்து, ஆணவம் நீங்கி முடிவில் திரோதானசக்தி அடைவதை விளக்குகின்றார்.

### இறைவனது தடத்த நிலைகள்

பளிங்கு தன் அருகிலுள்ள பொருள்களின் நிறத்தைக் காட்டினாலும் தன் இயற்கையில் மாறுபடாதிருப்பதைப் போலச் சக்தியின் வேறுபாடு களால் சக்தியிடமாகத் தோன்றும் பிரபஞ்சத்தின் வேறுபாடுகளால் இறைவன் மாறுவதில்லை.[321] சிவம், சக்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், மால், அயன் என்னும் ஒன்பது வடிவ வேறுபாடுகளுடன் ஒன்றாயுள்ள இறைவனே ஐந்தொழிலையும் செய்வான். இவ்வொன்பதனுள் சிவம், நாதம், சதாசிவம், ஈசன், அரன், அரி, அயன் என்னும் ஏழும் சிவ பேதங்கள். சக்தி, விந்து என்பவை சக்தி பேதங்களாகும்.

## திருமூலர் குறிப்பிடும் இறைவனின் ஒன்பது வடிவ வேறுபாடுகள்

### சிவம்

தென்னாடுடைய சிவனே போற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி என்று போற்றப்பெறும் சிவபெருமானின் பெருமைகளைத் திருமூலர் தம் பாடல்களில் விளக்குகிறார்.

"சிவனோடொக் குந்தெய்வந் தேடினும் இல்லை
அவனொடொப் பார்இங்கு யாவரும் இல்லை"[322]

எனச் சிவபெருமானுக்கு ஒப்பான தெய்வம் உலகில் இல்லை எனக் குறிப்பிடுகின்றார்.

இறைவனின் ஒன்பது வடிவங்களுள் சிவன், சக்தி, நாதம், விந்து ஆகிய நான்கும் அருவம். அருளோன் (சதாசிவன்) அருவுருவம்.

ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் நால்வரும் உருவம். இவையெல்லாம் எண்ணும்போது ஒன்பதும் எண்ணிலடங்கும். இவை ஒன்பதும் நிலையில் வேறுபட்டாலும் பொருளால் ஒன்றே. அவற்றுள் விந்தும், நாதமும் சிறப்புள்ளன வாகும். இக்குழுவினுக்கு முதன்மை சங்கரன்; அப்பெயரே சிறந்த பெயராகும். இக்கருத்தைத் திருமந்திரம் குறிப்பிடுகின்றது[323]

சிவபெருமானே முதன்மையான கடவுள். அவ்விறைவனின் பெருமையை அரி, அயன் இருவராலும் சொல்ல முடியாது.[324] அயன், அரி, நந்தி மூவரும் ஒருவரே; பேதம் இல்லை. திருமாலும், பிரம்மனும் சிவபெருமானுக்கு ஒப்பில்லாதவர்கள்.[325] சிவபெருமான், சதாசிவன் எனினும், சக்தியோடு சிவன் எனினும் ஒக்கும்.[326] இங்ஙனம், சிவன் மூவர்க்கும் முதல்வன் என்றும், ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ்சோதியாக விளங்குகின்றான் என்றும் திருமூலர் தம் பாடல்வழி தெளிவுபடுத்துகின்றார்.

## சிவசக்தி

உயிரும் உடலும் சேர்ந்ததுதான் வாழ்க்கை. உயிரில்லை எனில் உடல் நிலைத்திருக்காது. அதுபோல், சிவமும் சக்தியும் இல்லையெனில் வாழ்வு இல்லை. சிவன் சக்தியின் திருவிளையாடல் பற்றித் திருமூலர், உலக வாழ்க்கை யெல்லாம் சக்தி சிவத்தினோ டியைந்ததனால் வந்த ஆக்கமே என்பதை,

"ஒருவன் ஒருத்தி விளையாடல் உற்றார்
இருவர் விளையாட்டும் எல்லாம் விளைக்கும்
... ... ... ...
... ... ... ...
திருவொன்றிற் செய்கை செகமுற்று மாமே"[327]

என்றும், சக்தியின்றிச் சிவன் இல்லை. இனிச் சிவனின்றிச் சக்தி இல்லை. சிவன் சக்தியாகிய இருவரும் எல்லா உயிரிலும் கலந்து நிற்பர்[327]என்றும், சக்தி, சிவம் இரண்டையும் மனத்துள் தியானிக்க அட்டமாசித்தி உண்டாகும்[329] என்றும் குறிப்பிடுகின்றார்.

## சதாசிவம்

அறுபத்து நான்கு தத்துவங்களாக விளங்குபவன் சதாசிவன். ஆறு திருமேனிகள், மூன்று வடிவங்கள் ஆகிய இவையனைத்தும் பூண்டருள்வோனும் சதாசிவனே யாவன்.[330] மேலும், உலகில்

சக்தியின் முதலாகச் சக்தியின் வடிவாகச் சக்தியின் குணமாக உலகத்தை எடுத்தது சதாசிவமே யாகும்.[331] யோகமும் முத்தியும் புத்தியும் சித்தியும் ஆகமமும் 36 தத்துவத்திற்கு அப்பால் உயிரையும் கொடுத்தருளும் இயல்புடையவன் சதாசிவம்.[332] எவற்றினுக்கும் உயிர்க்குயிராய் பேரறிவாய் பரமான்மாவாகவும் திகழ்கின்றவன்[333] அவனே என்பதைத் தெளிவுபடுத்துகின்றார்.

இங்ஙனம், ஒன்பது சிவ வடிவ வேறுபாடுகளுக்கு இயைய அவன் ஆற்றலும் ஒன்பது வடிவங்கள் ஆகின்றன என்றும் உலகமனைத்தும் சக்தி சிவமயமாக இருக்கிறது என்றும், நம் கையைக் கொண்டு வேண்டுவனவற்றைச் செய்வதுபோல, இறைவன் தன் சக்தியைக்கொண்டு தொழிற்படுத்துகின்றான் என்றும் அறியலாம்.

## மூவகைத் திருமேனிகள்

இறைவன் மேனியை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை உருவம், அருவம், அருவுருவம் என்பன. நம் கண்களுக்குப் புலப்படுவது உருவத் திருமேனி. தெரியாமல் இருப்பது அருவ மாகும். உருவமும் அருவமும் இல்லாத உருவமாகவும் அருவமாக வும் இணைந்து இருப்பது இலிங்கமாகும்.

திருமூலரும் சிவனின் வடிவ வேறுபாடு பற்றி உரு, அரு, அருவுரு ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றார். அரன், அரி, அயன் ஆகிய தெய்வங்கள் உருவத் திருமேனியை யுடையவர்கள். சிவம், சக்தி, நாதம், விந்து, அருவம்; சிவன்முதல் மூவர் அருளோன் (சதாசிவன்) அருவுருவம்.[334]

இறைவன் உருவத் திருமேனி கொண்டு இருபத்தைந்து மகேசுவர மூர்த்தங்களாக எழுந்தருளி வந்து, அடியார்களுக்கு அருள் புரிவானென்று சிவாகம முதலிய சித்தாந்த நூல்கள் கூறுகின்றன.[335]

இறைவன் உருவங்கொண்டு உயிர்களிடத்துக் கருணை வைப்பான் என்பதைத் திருமூலர் தெளிவுபடுத்துகின்றார்.[336] இக் கருத்தமைந்த பாடலையே சாத்திர நூலாகிய சிவஞானசித்தியார் பின்வருமாறு உணர்த்துகின்றது.

“தாபர சங்கமங்கள் என்றிரண் டுருவில் நின்று
மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்”[337]

இறைவன் உருக்கொண்டு கூத்தாடினமையைப் பின்வருமாறு கூறுகின்றார்.

## சிவானந்தக் கூத்து[338]

இஃது உயிர்கட்குப் பேரின்பப் பெருவாழ்வை நல்க இறைவன் செய்தருளும் திருக்கூத்தாகும். இத்திருக்கூத்தின்போது தேவரும், சுரரும், மக்களும், சித்தரும், வித்தியாகரரும், மூவரும், ஆதித்தர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், வசுக்கள் எண்மரும்,முனிவரும், சமயத்தாரும், இயங்குதிணைப்பொருள், நிலைத் திணைப் பொருள் ஆகிய அனைத்தும் இறைவன் ஆட-ஆடும்.

## சுந்தரக் கூத்து[339]

சதாசிவத் தத்துவத்தின் உச்சியின்மேல், கண்டங்கரியளாய், அருளே திருவுருவாய் உமையம்மை கண்டுகளிக்க ஆடும் கூத்து சுந்தரக் கூத்து. சிவபெருமான் செய்தருளும் திருக்கூத்தின் திருப் பெயர்கள் **கொடுகொட்டி, பாண்டரங்கம், கோடு**, ஐவகைச் சங்காரத்துடன் **காளிக்கூத்து, முனிக்கூத்து,** இன்பக்கூத்துங் கூடிய எட்டு, ஐந்து தொழிற் கூத்து, ஆறு சமயக்கூத்து, 22 கூத்து. அவற்றுள் சிறந்த இரண்டு. தில்லையில் ஆடியது அன்பிற் கூத்து; ஆலவாய்க்காட்டில் நிகழ்ந்தது அருளியல் கூத்து. பரமாண்டத்துள் சிறந்து விளங்குகின்ற பரமாநாதம் பரமனாய் நடனமிடுவான்.

## பொற்பதிக் கூத்து[340]

சிவன் தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு, உச்சி ஆகிய ஐந்து திக்குகட்கும் ஐந்து முகங்கள்கொண்டு முறையே நடுக்கம் (அகோரம்) விளக்கம் (வாமதேவம்) ஆட்சி (தற்புருடம்) தோற்றுவித்தல் (சக்தியோசாதம்) இயக்கம் (ஈசானம்) என்பனவாய குறிகள் அருவம், உருவம், அருவுருவம் என்ற முத்திறப் பாகுபாட்டி னின்றும் பேரின்ப வடிவாக நடமாடுவதைப் **பொற்புறு நடனம்** என்பர். இக்கூத்து, மனத்தையும் புலனடங்கி நல்வழி செல்லாதவரைச் சிவன், குருவாய் எழுந்தருளி அவர் தலைமேல் திருவடி சூட்டி அடங்கியொழுகச் செய்யும் தன்மையது.

## பொற்றில்லைக் கூத்து[341]

இறைவன் ஏழு அண்டங்களையும், பஞ்ச பூதங்களிலும் கலந்து நிற்கும் ஐந்து ஆகாயங்களையும் (மண்ணில் ஆகாயம், நீரில் ஆகாயம், நெருப்பில் ஆகாயம், வாயுவில் ஆகாயம், ஆகாயத்தில் ஆகாயம்) இறையாகக் கொண்டு ஆடுவதுபோல, அவன் ஆருயிரின் அகத்து நடுநாடிக்கண் திருவருளாற்றலை அம்பலமாகக்கொண்டு திருக்கூத்தியற்றுகின்றனன். ஆதிபரன் ஆடவும் அங்கையில் கனலாடவும், ஓதும் சடையாடவும், தலையில் மதியாடவும், பாரண்டமீதாடவும் நாதமோடு ஆடினான். இதனை **நாதாந்த நடனம்** என்பர்.

## அற்புதக் கூத்து

ஐந்தெழுத்து மந்திரமே சிவத்தின் **நாடகச்சாலை** எனப்பட்டது.[342] காற்று, மேகம், மின்னல், வானவில், இடி இவற்றிற்கு ஆகாயம் இடந்தந்தும், தான் அவற்றில் படியாது நிற்றல்போல, ஆதாரங்கள் ஆறிலும் தோன்றும் ஒளிகளுடன் கலந்தும், வேறாகி, ஒளி வடிவாக மறைந்தும் நிற்பான் இறைவன்.[343] குருவின் திருவுருவையல்லால் இடையறாது நினைத்து இன்புறும் திருவுரு வேறொன்றுமின்று. கட்புலனாகாத அருவ வடிவமாவது அருமை வாய்ந்த அக்குருவே யாகும். திரிபுரை என்னும் திருவருள் திகழ்ந்து விளங்குவதும் அக்குரு வடிவேயாகும்.

சிவபெருமான் திருவருளால் அம் மெய்யுணர்ந்தோருடன் வேறறப் புணர்ந்து நின்றருளினன்.[344] இவ்விறைவன் ஐந்தெழுத்தையே தன்னுடைய வடிவமாகவும், குணமாகவும், கொண்டுள்ளான். அவன் துடிபரம் சிகரமும், திருக்கையில் வகரமும், அப்பு என்னும் திருவருள் நிலைசேர் வலக்கையில் யகரமும், அங்கியாகிய மழு வேந்திய இடத்திருக்கையில் நகரமும், வலத் திருவடியில் மகரமும் அடங்கும். எனவே, நுண்மை **'சிவாயநம'** என்னும் செந்தமிழ்த் திருவைந்தெழுத்தின் சிறப்பு மறையினைக் குறிக்கும்.[345] மாயை மாமாயை கடந்து நின்றவர்கள் காண நாயகனாகிய இறைவன் நடனம் செய்தான்.[346]

## இறைவனின் அருவத் திருமேனி

இறைவன் ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ்சோதி;

எங்கும் நீக்கமற நிறைந்தவன்; உடலுக்குள்ளிருக்கும் உயிரைப் போன்றவன் என்றெல்லாம் இறைவன் அருவ வடிவத்தைப் பற்றிக் குறிப்பிடலாம். இறைவனாகிய சிவன் ஒருவனே சோதியாய் நின்று அயன், அரி ஆகிய இருவருக்கும் அருள்புரிந்தவன்; சோதித்த ஒளியருளுகின்ற சிவபெருமானின் பேரொளியாய்த் திகழ்வன அன்பு, அறிவு, ஆற்றல் (சக்தி, சிவம், விந்து) ஆகியவையாகும். சோதித்த பேரொளி மூன்றைந்து என்பதற்குச் சக்தி, சிவம், விந்து, சதாசிவம், ஈசன், அரன், அரி, அயன் என்ற கடவுளரைக் குறிப்பிடலாம்.[347] இறைவன் சோதி வடிவினன் என்பதை வேதியன், சோதியன் என்றும்,[348] சோதியே சுடரே சூழொளி விளக்கே என்றும்[349] முறையே தேவாரம், திருவாசகம் குறிப்பிடுகின்றன. சிவனருள் அனைத்து உயிர்களுக்கெல்லாம் சுடரொளியாய்த் திகழ்வது.[350] சிவன் பெண்ணாகவும், ஆணாகவும், பேடியாகவும் இல்லாமல் சோதி வடிவாக ஒருவரும் அறிய முடியா நிலையில் நிற்பவன்.[351] புற இருளை நீக்கும் ஞாயிறாகவும், அகவிருளை நீக்கும் நந்தியம் பெருமானாகவும் விளங்குகின்றவன்.[352]

இறைவன் உயிர்களிடத்துப் பற்றுடையவராக இருப்பினும், கண்ணுக்குத் தோன்றான்.[353] துரியங்கள் மூன்றும் கடந்தொளிரும் சோதியாகத் திகழ்கின்றவன்.[354] பாலினுள் நெய் கலந்தாற் போன்றிருக்கும் கரையற்ற சோதியை உடம்பினுள் காணலாம்.[355] இவ்வாறு அருவத்தைப் பற்றித் திருமூலர் உணர்த்துகிறார்.

## அருவுருவம்

இறைவன் ஆணாகவும் பெண்ணாகவும் சிவசக்தி உருவாய் நின்ற வடிவத்தை அருவுருவம் என்று கூறலாம். சிவலிங்க அண்டமாவது ஐம்பூதங்களிலும் பரந்து விளங்குவதே.[356] சக்தி சிவன் வடிவாகிப் பலந்தரும் இலிங்கம் பராநந்தி யாகும்.[357] சக்தி, உருவம், சதாசிவம், அருவுருவம், நிலமுதல் சக்தி சிவம் ஈறாகத் தத்துவம் முப்பத்தாறாகும்.[358] சிவலிங்கத்தின் அடிப்பகுதியாகிய பீடம் ஓங்கார வடிவமாகும். அப்பீடத்தினுள் மறைந்திருக்கும் சிவலிங்கத்தின் நடுப்பகுதி கண்டம் எனப்படும். சிவலிங்கத்தினுடன் பொருந்தியிருக்கும் வட்டமான பகுதி உகாரமாகும். சிவலிங்கத்தின் மேற்பகுதி மூவகைப்படும். அவை முறையே கீழிருந்து அகாரம், விந்து, நாதம் என்பன.[359]

## இலிங்கத்தின் வகைகள்

தூல லிங்கம், சூக்கும லிங்கம், பத்திர லிங்கம், சிவ லிங்கத்தின் வகைகளாகும்.[360] சிவாலயம் கருப்பக் கிரகத்தின்மேல் கட்டப்படும் கோபுரம் தூல லிங்க உருவமாகும். கருப்பக் கிரகத்துள்ள இலிங்க வடிவம் சூக்கும லிங்கம் ஆகும். பலியிடும் இடம் பத்திர லிங்கம் என்பனவாகும். மற்றும் பூமணலிங்கம்,[361] சதாசிவ லிங்கம்,[362] பிண்டலிங்கம்,[363] அண்டலிங்கம்,[364] ஆத்துமலிங்கம்,[365] சிவ லிங்கம்[366] என்பன போன்ற இலிங்கங்களைப் பற்றித் திருமூலர் குறிப்பிடுகின்றார்.

இறைவன் அருவுருவத் திருமேனியாகிய சதாசிவ மூர்த்தியாய் நின்று அருளும் முறையினை உணர்த்துகின்றார். சதாசிவ மூர்த்தியின் திருமேனியைச் சிவலிங்க உருவில் உளங் கொண்டு போற்றுமாறு உணர்த்துகிறது. மானிட உடல் சதாசிவ உருவமான சிவலிங்கமாகும்.

மானிட யாக்கையைப் **பிண்டலிங்கம்** என்றும், அண்டத்தில் காணப்படும் உருவக்கோயில் பற்றிய கருத்துகளை **அண்டலிங்கம்** என்றும் குறிப்பிடுவர். ஆன்மாவை இலிங்கமாகக்கொண்டு விளங்குவது **ஆத்மலிங்க**மாகும். **ஞானலிங்க**மாவது உருவமாகவும் அருவமாகவும் விளங்குவது.

இங்ஙனம், திருமூலர் குறிப்பிடும் இலிங்க வடிவுகள் ஆண், பெண் இணைந்த உலக வாழ்க்கையாகிய தத்துவத்தை உணர்த்துவதோடு, பல்வேறு பொருள்களையும் உணர்த்துகின்றன என்பதை நன்கு அறியலாம்.

## இறைவன் சர்வ வியாபி

திருக்கொன்றையைச் சூடிய செழுஞ்சடையை உடையவன்; கருவாய் அங்கும் கலந்து விளங்கினான்[367] என்று இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்த தன்மையைத் திருமூலர் எடுத்துரைக்கின்றார்.

## சொரூப உதயம்

அயன், அரி, அரன் ஆகிய இம் மூவருள் ஒருவரான அரன்,

அம்மூவருள் ஒருவராகி வேறாகியும் நிற்பதுபோலச் சீவனும் சிவனும் கலப்பால் ஒன்றாக இருப்பினும், சிவன் வேறாவான் என்கிறார். பாசத்தைவிட்டுப் பதியோடு இருக்குந் துணையும் பதியாகவே இருந்து தனது பசுத்தன்மையை இழந்து நிற்கும். ஆன்மா ஆன்மாதான்; பதி பதிதான்[368] என இறைவனின் சொரூப உதயம் பற்றித் திருமூலர் கூறுகின்றார்.

## சிவபரம்

சிவமாகிய குருவின் அருளைப் பெற்றால் சிவன், சீவன் என்ற இரு நிலையற்றுச் சீவன் சிவத்துடன் கலந்து நிற்கும். இதனைக்,

"குருபரம் பெற்றவர் கூடிய பின்னை
இருவரு மின்றியென் றாகிநின் றாரே"[369]

எனத் திருமூலர் சிவபரம் பற்றித் தம் பாடலில் பாடுகின்றார்.

## தற்பரம்

எங்கும் நிறைந்த பொருளான சிவம் சிவஞானியின் சிந்தையில் தங்கும். இக்கருத்தைத் திருமூலர் கீழ்க்கண்ட பாடலில் காட்டுகின்றார்.

"எங்குஞ் சிவமா யருளா மிதயத்துத்
தங்குஞ் சிவஞானிக் கெங்குமாந் தற்பரம்
அங்காங் கெனநின்று சகமுண்ட வான்தோய்தல்
இங்கே யிறந்தெங்கு மாய்நிற்கும் ஈசனே."[370]

## பிரமம்

தானே பிரமம் என்னும் கொள்கை தனது இயல்பை மறந்து, பிறகு தனது உண்மையியல்பை உணர்ந்து இறுதியில் பிரமத்தை அடைவதாகும். சத்தியம், தவம் ஆகியவற்றால்தான் அவனாதல், புலன்களை அடக்குதல், எவ்வுயிரும் ஒன்றெனக் கருதுதல், பாசம் நீக்குதல், அந்தணர்க்கான ஒழுக்கம் கூறப்படுவது முதலியன பிரமம் என்ற நிலையில் திருமந்திரத்தில் கூறப்படுகிறது.[371]

## பரப்பிரமம்

பரப்பிரமம் தானே எல்லாவற்றையும் அறியுந் தன்மையுடையது. அதனால், பரப்பிரமம் ஆன்மாவாகாது. எண் குணங்களை

யுடையவன் இறைவனாதலால், அவனே எல்லாப் பொருளினும் பெரும்பொருளாதல் தெரியப்படுகின்றது. பெரும்பொருள் என்பதனையே உபநிடதங்கள் 'பரப்பிரமம்' என்று கூறுகின்றது.[372]

பற்றறச் செய்யும் பற்றாகிய திருவடியைப் பற்றின் சிவபெருமானுடன் இரண்டறக் கலந்து இறவா இன்பம் எய்தும் எழினிலை வாய்க்கும். அத்தகைய வல்லோர் நல்லோரால் பரப்பிரமம் என்று அழியாப் புகழுடன் அழைக்கப்படுவர் எனத் திருமூலர் பரப்பிரமம் எய்தும் நிலையைக் கூறுகின்றார்.[373]

## சிவானந்தம்

சிவமாகிய ஞானம் தெளிந்தவர்கள் சித்தியையும், முத்தியையும், சிவபரத்தையும் பெற்றுச் சிவானந்தத் தேனை முடிவில் அடைந்து சிறப்புறுவர்[374] என்று உயிர் சிவானந்த நிலை அடைவதைத் திருமூலர் உணர்த்துகின்றார்.

## பசு (உயிர்) பற்றிய சித்தாந்தம்

ஆன்மாக்கள் தானே அறியும் தன்மையுடையன அல்ல; அறிவில்லாதவையும் அல்ல; அறிவித்தால் அறியும் தன்மை யுடையன.[375] தத்துவத்துள் மூழ்கிக் கிடப்பது. தங்கத்தை, நகை என்ற நோக்கத்தோடு பார்த்தால் தங்கம் தெரிவதில்லை. தங்கம் என்ற நோக்குடன் பார்த்தால் நகை தெரிவதில்லை. அதுபோல, ஆன்மாவானது 'தான்' கருவி காரணங்களே என்று எண்ணினால் ஆன்ம தரிசனம் இல்லை. ஆன்மா, தான் வேறு என்று நோக்கும்போது கருவி காரணங்கள் மறையும்.[376]

இந்திரியம், அந்தக்கரணம், சூக்கும தேகம் முதலியன உயிரன்று; மகத்தத்துவம் பெற்ற மாயை முதலிய புருட தத்துவத்திற்கு முன்பு தத்துவங்கள் முப்பத்தாறுக்கும் முடிவில் ஆன்மா விளங்கும்.[377] உயிர்பெத்த நிலையும், முத்த நிலையும் எய்துவித்தல், உயிர்களைச் சுத்தமாக்கும் திருவிளையாட்டு என்றும், அதன் பயன்களை உணர்த்துதல் என்றும் பொருள்படும்.[378] பொறி, புலன்களுக்கு வயப்பட்ட உயிர் மயக்கத்துள் சிக்குமாயின் ஏழு நரகத்துள் வீழ்ந்து வருந்தும்[379] என ஆன்மாவின் இலக்கணம்பற்றியும், பசு, பதியாகிய இறைவனுடனும் பாசமாகிய தளையுடனும் தொடர்புடையன பற்றியும் காட்டுகின்றார்.

## உயிர், உடல் தொடர்பு

திருமூலர், உயிருக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பையும் விளக்குகின்றார். உயிர், உடல் முழுவதும் பரவியுள்ளது. உயிரும் உடலும் ஒன்றி வாழும் இறைவனின் திருவருட் பாங்கினால் ஆனது.[380] உடலானது, உயிராகிய மன்னவன் தன்னைவிட்டுப் போகின்றவரை ஐந்தவத்தையினின்று வினைகளை நுகரும்.[381]

உயிர் தூலவுடம்பினைவிட்டு நீங்கிச் செல்லுவதற்குப் பாம்பு தன் சட்டையைக் கழற்றிப் புதியதொரு தோல் போர்த்திச் செல்லுதலும், புருடன் நனவுடம்பின் நீங்கிக் கனவுடம்பிற் செல்லுதலும், யோகிகள் தம் உடம்புநீங்கி வேறொரு உடம்பில் சென்று மீளுதலும் உவமையாகும். குட ஆகாயம் குடம் உடைந்த விடத்து ஆகாயத் தோடு கூடுதல் என்றது, உயிர் சூக்கும உடம்பை விட்டுப் போதற்கு உவமையாகும் என்பதைக் குறிப்பிடுகின்றார்.[382]

இக்கருத்தையே சிவஞானபோதம் பின்வருமாறு காட்டுகின்றது.

"அரவுதன் தோலுரிவும் அக்கனவும் வேறு
பரகாயம் போய்வருமப் பண்பும் பரவிற்
குடாகாய ஆகாயக் கூத்தாட்டா மென்ப
தடாதுள்ளம் போமா றது."[383]

## பசு பதியைப் பற்றுதல்

பசுக்கள் பலகோடி; பிரமன் முதலியோரும் பசுக்களே யாவர். அப்பசுக்களைக் கட்டி நிற்கும் பாசம், ஆணவம், கன்மம், மாயை என்பன. இறையருளால் இம்மூன்றும் நீங்கின் பசுக்கள் சிவனைப் பற்றி நிற்கும் நிலை ஏற்படும்.[384]

விதையினுள்ளே முளையென்று ஒருமுதல் வெளிப்படாது ஒன்றாயடங்கி யிருத்தல்போன்று சிவஞானம் பெற்ற ஆன்மாக்களும் தாம் என்றொரு முதன்மைகெடச் சிவபரம்பொருளிடத்திலே வேறற அடங்கியிருப்பார்கள் என்று உயிர் சிவபரத்துடன் ஒன்றல்பற்றிக் காட்டுகின்றார்.[385]

## சித்தம் சிவமாதல்

இறைவன் இருக்கும் இடந்தேடி அங்கும் இங்கும் அலைந்து தேடுவதை விடுத்து, அவ்விறைவனை மனத்தில் கொண்டுவந்து

சித்தத்தைச் சிவன்பாற் செலுத்தவேண்டும். அவ்வாறு நாம் இறைவனை நம் உள்ளத்துள் செலுத்தினால் சிவமாகி வந்து சித்தத்துள் அகப்படுவான். நாம் மனக்கோயில் கொண்ட மாணிக்க மாகத் திகழலாம்.

சித்தத்தில் சிவன் கலந்துள்ளான்; இது பாலுள் நெய் கலந்து நிற்பது போலும் புரையற்ற பாலைப் பக்குவப்படுத்திடவே நெய் தோன்றுமாறு திரையற்ற சிந்தையை முறைப்படுத்த சிவமாகும்.[386] சீவர்கள்தோறும் சிவம் கலந்திருக்கும் நிலை, கடல்தோறும் கதிரவன் தோன்றுதல் போலதாகும்.[387]

சித்தம் சிவமாதலே செய்தவப் பேறாகும்.[388] சிவனும் சீவனும் வேறு என எண்ணுவார்க்குச் சிவானுபவம் சித்தியாகாது.[389] சிவனும் சீவனும் ஒன்றே யாகும். சிவத்திலிருந்து சீவனை வேறுபடுத்திப் பார்க்கக் கூடாது.

சீவனெனவும் சிவன் எனவும் வேறில்லை; சீவன் சிவனை அறியாது; அங்ஙனம் அறியுமாயின் சீவன் சிவனாகும்.[390] இதனையே திருமூலர் சிவசீவனின் அபேத அறிவு எனக் குறிப்பிடுகின்றார். சிவபரம்பொருள் பாசங்களினீங்கி அறிவுருவான ஆன்மாக்களிடத்தில் கலந்துநின்று காட்டியும் காண்பான்; ஆன்மாக்கள்தோறும் நிறைந்து நின்று அச்சீவனும் ஆவான்.[391] இவ்வாறு சிவன் சீவனைத் தானாக்கிக் கொள்கிறான். நெல்லுக்குத் தவிடும் உமியும் அநாதி யாயிருந்தும் ஒரு காலத்திலே நீங்கும் தன்மைபோல, உயிர்களுக்கு மலமாயை கன்மங்கள் தொன்மையாய் உள்ளன எனத் திருமந்திரம் உயிரைவிட்டு மாயை பிரியாமை பற்றிக் குறிப்பிடுகின்றது.[392]

மேற்குறிப்பிட்ட கருத்திற்கேற்ப உயிர்களுடன் மலம் பற்றியுள்ள தன்மையைச் சிவஞான சித்தியாரும்,[393] சிவப்பிரகாசமும்[394] எடுத்துரைக்கின்றன.

## உயிர் வீடுபேறடைதல்

உயிர் ஞானத்தால் பிறந்து இடைவிடாது எண்ணப் பெறுகின்ற ஞானம் ஒன்றானேயே முத்தி எய்தலாம்.[395] சிவத்தோடு அத்துவிதப் பாவனையில் நின்று பழகிய ஆன்மா சிவத்தோடு இரண்டறக் கலந்து பேரின்பம் அடையும்.[396] இவ்வாறு சித்தாகிய ஆன்மாவைச் சிவன் மாயையோடு சேர்த்துப் பேரின்பம் பெறச் செய்யும்.[397]

உயிர்கள் போகக்கூடிய இடங்களுக்குச் சென்று நல்வினையும், தீவினையுமாகிய இருவினைப் பயன்களை நுகரும்; புண்ணிய பாவங்களுக்கு ஏற்ப, இன்ப துன்பங்களை நுகர்ந்து மறுபிறவி எடுத்து உழலும்[398] என உயிர்கள் பிறப்பு இறப்பில் அகப்பட்டு மறுபிறப்பு எடுக்கும் என்ற சித்தாந்தக் கருத்தையும் திருமூலர் தெளிவுபடுத்துகின்றார்.

## உயிர்களின் பொது இயல்புகள்

ஆன்மா பதியை அடையப் பல்வேறு நிலைகளைக் கடக்க வேண்டியுள்ளது. ஒவ்வொரு நிலையைக் கடக்கும்போதும் ஒவ்வொருவித அனுபவத்தைப் பெறுகின்றது. இவ்வித அனுபவ நிலையை அல்லது அக்கட்டங்களைக் கடப்பதற்காக ஆன்மா எடுத்துக் கொள்ளும் முயற்சியே **அவத்தைபேதம்** எனப்படும். அவஸ்தா என்னும் வடசொல்லினின்று வந்ததே **அவத்தை** என்பது; அனுபவ நிலைகள் என்பது இதன் பொருள்.

இது கேவலம், சகலம், சுத்தம் என்று மூன்று வகைப்படும். கேவலமாவது தத்துவங்கள் ஒன்றும் கூடாமல் இருப்பது. சகலமாவது தத்துவங்களுடன் கூடிக் காரியப்படுவது. சுத்தமாவது சகலம், கேவலம், இரண்டும் தாக்காது பரசுகத்தைப் பெற்றிருப்பது. இதில் கேவலாவத்தையின் காரியமான கீழாலவத்தை -5, சகலாவத்தையின் காரியமான மத்தியாலவத்தை - 5, சுத்தாவத்தையின் காரியமான நின்மலாவத்தை - 5 ஆகியவை உள்ளன.

சிவத்தை அறிந்தவன் நின்மலனாவான். தான் மட்டும் ஒன்றையும் அறியாது கிடப்பவன் கேவலன். இவரின் வேறானவன் பேதசகலன் முறையே நின்மலன் சத்தாகிய சிவத்தையும், கேவலன் அசத்தையும், சகலன் சதசதத்தையும் பொருந்துவர்.[399] கேவல நிலையினைக் கேவல கேவலம்; கேவல சகலம், கேவல சுத்தம் என மூன்றாகவும் நின்மல கேவலமாகிய அருட்கேவலம் நான்காகவும் உள்ள அவத்தைகளைக் கூட்டி, ஈசன மல மறத்தால் ஆட் கொள்வான். மேலும், சகலகேவலம், சகலசகலம், சகலசுத்தம், சுத்த சுத்தம், சுத்தகேவலம், சுத்தசகலம் என்பன.[400]

கேவல தூரியாதீதம் ஆணவ மலம் மட்டும் மறைக்க அறிவு மடங்கிக் கிடக்கும் நிலை. கேவல தூரியம் எழுச்சிமிகு வினைகளை

நுகர எண்ணும் நிலை. கேவல சுழுத்தி துன்பம் தோன்றாத நிலை. இங்ஙனம் ஈண்டுக் கூறாத இரு நிலைகளையும் சேர்த்து ஆன்மா கேவலத்து ஐந்தவத்தை ஆகும்.[401]

மாயை கலாதிகளை எழுப்பத் துரியாதீதானவத்தையும், அராகத்தை எழுப்பத் துரியமும், புருஷ தத்துவத்தை எழுப்பச் சுழுத்தியும், ஏனையவற்றை எழுப்பக் கனவும் நனவும் பொருந்திச் சகலாவத்தை ஆயிற்று ஆன்மா.[402]

விஞ்ஞானகலரில் சிவனருள் பெற்றோர் பிரணவமாகி நின்மலாவத்தை எய்துவர்.[403] சுத்தமாயை தன்னை ஆன்மா கண்டு, எல்லாப் பொருளிடத்தும் கலந்தும் வேறாகியும் உய்வதற்கு உபாய மான பராவத்தையை எண்ணுதலே சுத்தநிலை.[404] ஆன்மாக்களை இறைவன் கேவல சகலத்துட்படுத்தி ஆட்டி வைக்க, அவை பிறவி நீங்கிச் சுத்தநிலை எய்தும்.[405]

இருவினையொப்பும், மலபரிபாகமும் சத்திநிபாதமும் பெற்றுச் சிவஞான மேனி குருமுகமாக அருளோடுகூடி ஆணவமகன்று பிறவாப் பெரு நெறியமைதல் சுத்த நிலை என்கிறார்.[406]

## உயிர்களின் அவத்தை

சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் என நான்கு நிலைகளைப் பற்றித் திருமூலர் குறிக்கின்றார். புருவ நடுவில் ஆன்மா விளங்கு வது சாக்கிரமாம். பழகிய பதினான்கு கருவிகளுடன் கழுத்தில் தங்குவது **கனா** என்பர். அழிவில்லாத புருடன் மட்டும் இதயத்தில் இருப்பது சுழுத்தியாகும். அழியாதவனாகிய ஆன்மா உந்திக் கமலத்தில் உறைவது துரியம்.[407] இத்துடன் சேர்த்து துரியாதீதம் என்னும் ஒரு நிலையையும் சித்தாந்தத்தில் குறிக்கப்படும். இந்த ஐந்தும் கீழாலவத்தை என்பர்.

தன் மாத்திரை - 5, அந்தக்கரணம் -4, வாசனை - 5, வாயு -10, புருடன் - 1 ஆகிய 35 தத்துவங்களும் நிற்கும் என்றும், சொப்பனத்தில் ஞானேந்திரியம் கன்மேந்திரியம் தவிர, மற்ற 25 தத்துவங்களும் நிற்கும் என்றும், சுழுத்தியில் வாயு, தன் மாத்திரை, புருடனுடன் 15 தத்துவங்கள் நிற்கும் என்றும், துரியத்தில் பிராணவாயு, புருடன் இரண்டும் நிற்கும் என்றும், துரியாதீதத்தில் புருடன் ஒன்றே மூலாதாரத்தில் நிற்கும் என்றும் குறிக்கப்படும்.[408]

சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி இவை மூன்றும் முறையே சீவன், பரம், சிவன், மூவர்க்கும் பொருந்திவர ஒன்பது ஆகும். 9 அவத்தை களையும் நுகர்பவர்களாக முறையே விசுவன். தைசதன். பிராஞ்ஞன்

விராட்டன், பொன் (இரண்ய) கர்ப்பன், அவ்யாகிர்தன், சிற்சொலிதன், பிரசாபத்யன், பொற்புவி சாந்தன் எனக் குறிக்கின்றார்.[409]

## மத்திய சாக்கிராவத்தை

மத்தியாலவத்தை இது சாக்கிரத்தில் சாக்கிரம்; சாக்கிரத்தில் சொப்பனம்; சாக்கிரத்தில் சுழுத்தி; சாக்கிரத்தில் துரியம்; சாக்கிரத்தில் துரியாதீதம் என ஐந்தாகும்.

சாக்கிரத்தில் சாக்கிரம் - சிவம், சக்தி, சதாக்கியம், ஈச்சுரம் முதலிய சுத்த தத்துவங்கள் ஐந்தும் தொழிற்படும்.

சாக்கிரத்தில் சொப்பனம்- சிவம், சக்தி, சதாக்கியம் என்னும் மூன்றும் தத்துவங்களும் தொழிற்படும்.

சாக்கிரத்தில் துரியம் - சிவம், சக்தி,ஆகிய இரண்டுதத்துவங்களும் தொழிற்படும்.

சாக்கிரத்தில் துரியாதீதம்- சிவதத்துவம் ஒன்றே தொழிற்படும்.

என இதனைப் பொதுவாக விளக்குவர். இவை சுத்த தத்துவங்களின் தொழிற்பாடு என்பர்.[410] ஆனால், திருமூலர் இவைமுறையே திரோதாயி, சுத்தமாயை, கன்மம், அசுத்தமாயை, கலாதியோடு தொழிற்படும் என்கின்றார்.[411]

அவத்தை பேதத்தின் மூன்றாம் வகையான சுத்தாவத்தையின் காரியமான நின்மலாவத்தை நனவின்கண் உயிர்ப்படங்கும் நிலையெய்தினார் அமலர் என்று திருமூலர் கூறுகின்றார். நின்மலாவத்தையாவது அமலசாக்கிரம், அமலசுழுத்தி, அமலதுரியம், அமலதுரியாதீதம் என்பனவாகும்.[412]ஐம்பூதங்கள் மனம், புத்தி, அகங்காரம் என்னும் எட்டும் கூடியதே சூட்சும தேகமாகும். இவ் வெட்டும் சேர்ந்து தொழில்படுவதே சாக்கிர நிலையாகும்.

சொப்பனத்தில் மனம், புத்தி, அகங்காரம் என்னும் மூன்றும் தொழில்படும்.

> **"சுழுத்தியில் புத்தியும் அகங்காரமும் தொழிற்படும்.**
> **துரியத்தில் அகங்காரம் மட்டும் தொழிற்படும்.[413]**
> **சாக்கிர சாக்கிரம் ஐம்புலனொடுக்க மாகும்.**
> **சாக்கிர சொப்பனம் நினைத்தலாகும்.**
> **சாக்கிர சுழுத்தி உறக்கமாகும்.**
> **சாக்கிர துரியம் எண்ணலாகும்.**
> **சாக்கிர துரியாதீதம் பிராணன் அடங்குதலாகும்.[414]**

சொப்பனத்தில் சாக்கிரம்போலக் காண்பது கனவில் நனவாகும். சொப்பனத்தில் சொப்பனம் கனவு கண்டு பின் மறத்தலாகும். சொப்பனத்தில் சுழுத்தி களவு காணா திருத்தலாகும். சொப்பனத்தில் துரியம் உத்தேசமாகக் காண்டல், சொப்பனத்தில் துரியாதீதம் இவ்வுத்தேசமாகக் காண்டலும் இல்லை.[415] சுழுத்தியில் சாக்கிரம் தோன்றாது. சுழுத்தியில் சொப்பனம் உயிரினத்தில் தனதுண்மை மாத்திரம் தோன்றும்.

சுழுத்தியில் சுழுத்தி சுட்டுணர்வும் சிற்றுணர்வும் அழிவை அடைதல். சுழுத்தியில் துரியம் சொறகழிவு. சுழுத்தியில் துரியாதீதம் ஆகிய பாழ்நிலை யாகும்.[416] துரியத்தில் சாக்கிரமாவது உயிருக்கு நேரும் இன்ப உறுதியினை அறியும் அறிவாகும். துரியத்தில் சொப்பனமாவது தன்னை உணரும் அறிவாகும். துரியத்தில் சுழுத்தி

யாவது அருள்வெளி யாகும். துரியத்தில் துரியமாவது சிவபூரணத்தில் ஒடுங்குவது[417] என அவத்தை பேதத்தைப்பற்றி விளக்குகின்றார்.

## மூவகை உயிர்களின் இயல்பு

விஞ்ஞானகலர், பிரணயாகலர், சகலர் என மூன்று வகை உயிர்களைப் பற்றியும் திருமூலர் எடுத்துரைக்கின்றார்.

ஆணவ மலம் மட்டும் உடையவர் விஞ்ஞானகலர் என்பவர்.[418] ஆணவம், கன்மம் என்னும் இரண்டு மலப்பிணிப்பு உடையவர்களே பிரளயாகலர் என்பவர்.[419] ஆணவம், கன்மம் மாயை என்னும் பிணிப்பு உடையவர்களே சகலர் என்பராவர்.[420]

## விஞ்ஞானகலர்

விஞ்ஞானகலர் விந்து சக்தியாற் செயற்படுபவர். சுத்த மாயா காரியமான மந்திர வடிவம் பெறுவர். அப்போது அவர் விஞ்ஞானகலர் எனப்படுவர்.[421]

## பிரளயாகலர்

பிரளயாகலர்க்கு ஆணவம், மாயை ஒடுங்கியிருந்தால் ஆணவம் வளியொடுங்க இச்சை வடிவான சுத்தமாயையே உடலாகக் கொள்ளுவர். அவர்கள் 108 உருத்திரர்களாவர்.[422]

## சகலர்

சகலராவார் சக லாவத்தையினில் நிற்போர், பிரமன், திருமால், உருத்திரன் முதலான தேவர்களும், நரர் முதல் புழு ஈறான உயிர்களும் சகலர் என்பவராவர்.[423] விஞ்ஞானகலர் எடுத்த பிறப்பிலேயும், பிரளயாகலர் சில பிறப்பிலேயும், சகலர் பல பிறப்பிலேயும் உண்மை ஞானம் பெற்றுச் சிவப்பேறு அடைதலுமாகும்[424] என மூவகை உயிர்களின் இயல்புபற்றி உணர்த்துகின்றார் திருமூலர்.

## பாசம் பற்றிய சித்தாந்தம்

பசுவினைக் கட்டிய பாசம் மூன்றுண்டு[425] என்று திருமூலர் குறிப்பிடுவதால் பாசம் ஆணவம், மாயை, கன்மம் என்று மூன்றாகும் என்பது அறியப்படுகிறது. பசுவினைக் கட்டிய பாசமனாதி என்பதாலும் பாசமும் அனாதிக் காலந்தொட்டே உள்ளது என்பது அறியக் கிடக்கின்றது. மேலும், மும்மலங்களோடு மாயேயம் திரோதாயி[426] ஆகிய இரு மலங்களும் சேர ஐந்து மலங்களையும் குறிப்பிடுகின்றார்.

பிரமனுக்கு ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாயி என்ற ஐம்மலங்களும் உரியன. திருமாலுக்கு மாயேயம் ஒழிந்த நான்கு மலங்கள் உரியன. உருத்திரனுக்கு மாயேயமும், மாயையும் ஒழிந்த மூன்றும் உரியன. மகேச்சுரனுக்கு மாயேயம், மாயை, கன்மம் என்ற மூன்றும் நீங்க ஏனையிரண்டும் உரியன. சதாசிவனுக்கு ஆணவம் மட்டும் உரியது என ஐந்து மூர்த்திகட்கும் ஐந்து மலங்களும் உரியன.[427]

## ஆணவம்

ஆணவம் என்பது யான், எனது என்னும் அகப்புறப் பற்றுகளே யாகும். சிவஞானபோதம் ஆணவத்தினை 'வல்லி'[428] எனக் குறிக்கிறது. தாயுமானவ சுவாமிகளும்,

> **"பிடித்தனையே தாபிக்கும் பேராண வத்தை**
> **அடித்துத் துரத்த வல்லார் யார்காண் பராபரனே"[429]**

எனவும்,

> **"நண்ணிய பாசத்தில் நானெனல் ஆணவம்"[430]**

எனத் திருமூலரும் ஆணவத்தினைப்பற்றிக் குறிப்பிடுகின்றார்.

உடற்கண் பற்றுக்கொள்ளின் புலன் களிக்கும்; புலன்களுக்கு அடிமைப்பட்டு நகைக்கின் ஆணவ மலம் மிகும் என்றும்,[431] சிவத்தைத் தவம் செய்யும் நெறியாளர்களுக்கு ஆணவ இருள் அழியும் எனவும்[432] திருமூலர் உணர்த்துகின்றார்.

## மாயை

*சீ*வனையும் சிவனையும் பிரிக்கின்ற மாயையை நீக்கி, இறைவனைக் காணலாம் என்று மாயை பற்றி எடுத்துரைக்கின்றார்.[433] பரவிந்து சுத்த மாயை என்றும், தனிமாயை அசுத்தமாயை என்றும், மாமாயை மூலம் பிரகிருதி என்றும்,[434] விளக்கியுள்ளார். இதனையே சைவம் உலகமுதற் காரணம், தூயமாயை, தூய்தல் மாயை, மூலப்பகுதி மாயை என்று மூன்று வகையாகக் கூறும்.[435]
விளங்குகின்ற பஞ்ச கலைகளும், பொருந்திய அகாரம் முதலா வவற்றோடு வளமிக்க உகாரம் மகாரம் விந்து, குறையற்ற நாதம், நாதாந்தம் இவற்றைக் கருதின் உள்ளே பொருந்தி அறியப்படும் மனம் [436] என்பதைச் சுத்த மாயையின் விரிவாகக் குறிப்பிடுகின்றார்.

மாயையின் மயக்கம் நீங்கின் ஆன்மா தூயதாய்ச் சிவானந்தம் பெற்று, அச்சிவானந்தம் ஆன்மா எங்கும் நிறைந்து தன்னுளடங்கி நிற்கும்.[437] பசுக்களிடம் இருக்கும் ஆணவம் முதலிய மலங்கள் நீங்கு வதற்காகவே இறைவன் மாயை முதலியனவற்றைத் தந்துள்ளான்.[438]

## மாமாயை

ஆன்மாக்களை மயக்கி மலத்துள் அழுத்தும் நிலமுதல் மாயை யீறான முப்பத்தொரு தத்துவங்களையுடைய அசுத்த மாயையைப் போலச் சுத்தவித்தைமுதல் சிவதத்துவம் ஈறான ஐந்து தத்துவங் களையுடைய சுத்தமாயையும் நீங்கும். ஆயும் அறிவோர் அறியா மாமாயை எனவும்,[439] குடிலை என்பதை மகாமாயை[440] எனவும் குறிப்பிடுகின்றார். விந்து என்பதற்கும் மாயை என்று பொருள் கொள்வர்.[441] விந்துவில் சிவம் என்றும் கலந்து நிற்கும்; விந்துவின் பேதங்களால் விளையுந்தன்மை இருபத்தைந்து தத்துவங்களைத் தோற்றுவிக்கும்; நாத தத்துவத்தின் பேதத்தால் விளையுந்தன்மை இருபத்து நான்கு தத்துவங்களைச் செய்யும்; விந்தும் நாதமும் ஆகிய அவை நான்கின் தன்மைகளைச் செய்யும்; இரண்டின் திறமாகிய வைந்தவம் முப்பத்தாறு தத்துவங்களைச் செய்யும்.[442]

## கன்மம்

கன்மம் என்பது வினையாகும். இது எஞ்சிவினை என்ற வினை, ஏறுவினை என்பதாகும். இதனை ஆகான்மியம், பிராரப்தம், சஞ்சிதம் என்பர். முற்பிறவியின் வினையானது இப்பிறவிக்கு வித்தாக அமைந்து உடலையும் உலக இன்பங்களையும் தருகின்றது.

"இக்காய நீக்கி யினியொரு காயத்திற்
புக்குப் பிறவாமற் போம்வழி நாடுமின்"[443]

வினை வயத்தாலாயது உடல் என்பதும், பல பிறவி உண்டென்பதும் இதனால் அறியப்படும். மேலும், வினை என்பது பற்றிப் பல விளக்கங் களைத் திருமூலர் கூறுகின்றார். மன வாக்குக் காயத்தால் வல்வினை உண்டாகும்.[444] தவம், அறம் இரண்டுமே வினைக்கடல் கடக்க உயர்ந்த தோணிகள் போன்றன.[445] இருவினைகளைக் கடந்து இறைவன் இருப்பிடம் அடைந்து பற்றற்ற நிலையில் இருத்தலாகும்.[446]

## ஊழ்

உயிர்களை ஒட்டிச் செய்யப்பெறும் நற் கருமங்களி னின்றும் கிடைக்கும் புண்ணியம் பசுபுண்ணியம் என்றும், இறைவனை ஒட்டிச் செய்யப்பெறும் நல்வினைகளினின்று எழும் புண்ணியம் சிவ புண்ணியம் என்றும் கூறுப்படும். அங்ஙனே தீவினையையும் கடவுளுக்கு எதிராகவும் மனிதனுக்கு எதிராகவும் செய்யப்படுவனவாக அமையும். இங்ஙனம், மனிதன் செய்யும் வினைகள் ஆகாமியம் ஆகும். அவற்றினின்றும் எழும் பாவ புண்ணியங்கள் சஞ்சியம் எனப் பெறும் வினைகளினின்றெழும் இன்ப துன்பங்கள் பிராரப்தம் எனப்படும்.[447]

திருமூலர் ஊழ்பற்றியும், அதன் செயல்கள்பற்றியும் எடுததுரைக் கின்றார். சிவவுலகத்தின் திருவடிப்பேறு எய்துமாறு எம்பெருமான் அமைத்தருளிய மெய்யுணர்வு ஊழாகும்.[448] ஒருவன், தான் முன் செய்த வினையின் வழியே புண்ணியமும் பாவமும் வரும் என்பதைப் பிராரப்தம் என்றும்,[449] உற்ற வினைத்துயர் என்றும்[450] குறிப்பிடுகின்றார்.

இங்ஙனம், உயிர்களைப் பற்றியுள்ள வினை இறைவனின் அருட் பார்வையால் அகலும். ஒளியுதயத்தால் இருள் அகன்றதுபோலச் சிவப்பிரகாரத்தால் ஆணவ கன்ம மாயா மலங்களும் அவற்றின் விளைவாகிய அறியாமையும் அகன்று தொலைந்து போயிற்று.

மலக்கலப்பால் ஆன்ம அறிவு மறைந்து ஆற்றலும் மறையும்; இறைவனை அறிய முடியாத நிலையும் வரும். அது நீங்கினால்தான் அறிவொளி யுண்டாகும்.

## மலபரிபாகம்

மலபரிபாகம் என்பது மலம் தன் சக்தி தேய்தற்குரிய துணைக் காரணங்களெல்லாவற்றோடும் கூடுதலாம். ஆணவ மலத்தின் சக்தி ஆன்ம அறிவை மயக்க இயலாது. வலிகுன்றி நிற்கும் நிலையாகும்.[451] இதனையே திருமூலர், சிவன் மலபரிபாகத்தின்பொருட்டு மலங்களையும் தத்துவங்களையும் கருவிகளையும் படைத்து உதவினன் என்று கூறுகின்றார்.[452]

## தத்துவங்கள்

பொதுவாகத் தத்துவம் 96. சைவ சித்தாந்தம் ஒப்புக்கொள்வது 36 தத்துவங்களை மட்டுமே என்பதை,

**"ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொதுஎன்பர்**
**ஆகின்ற வாறா றருஞ்சைவர் தத்துவம்"**[453]

எனத் திருமந்திரம் விளக்குகின்றது. 36 தத்துவங்களையும் மூன்றாகப் பிரித்து ஆன்ம தத்துவம் 24, வித்தியா தத்துவம் 7, சிவதத்துவம் 5 எனப் பிரித்துக் காட்டுகின்றது.[454]

பிரகிருதிமுதல் பிருதிவிவரை உள்ள 24 தத்துவங்களும் ஆன்ம தத்துவம் எனக் குறிக்கின்றார். காலம்முதல் மாயைவரையுள்ள 7 தத்துவங்களும் வித்தியா தத்துவம் எனவும், நாதம்முதல் சுத்த வித்தியா தத்துவம்வரை சிவ தத்துவம் எனவும், ஆன்ம அசுத்த மாயை உடையன. வித்தியா தத்துவம் சுத்த சுத்தமாகும்; சிவ தத்துவம் சுத்தமாகும். இவை மூன்றும் உயிர்களுக்குக் கருவியாகப் பொருந்தும்.[455] தத்துவங்கள் விரியின் 4,00,48,500 ஆகும். அவற்றை அடக்கிக் கூறின் 96 ஆகும். மீண்டும் சுருங்கக் கூறின் 25 ஆகும்.[456] தத்துவங்களைப் பற்றித் திருமூலர்,

| | | |
|---|---|---|
| **சைவர்க்கு** | - | **36 தத்துவங்கள்** |
| **வேதாந்திக்கு** | - | **28 தத்துவங்கள்** |
| **வைணவர்க்கு** | - | **24 தத்துவங்கள்** |
| **மாயாவாதிக்கு** | - | **25 தத்துவங்கள்**[457] |

எனப் பிரித்துக் கூறுகின்றார். தத்துவங்கள் 36 ஐயும், ஒரு பாடலில் தெளிவுபடுத்துகின்றார்.[458] மூன்று அத்துவாக்களின் தத்துவங் களையும், சிவ தத்துவம், ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம் ஆகியவை தொகுத்துக் கூறுகின்றன.[459]

## தத்துவ மசி

தத்துவம் அசி என்பன சீவ உபாதிகளைவிட்ட நிலையே தொம்பத மாகும். (நீ) இறைவனது அறிவின் முடிவு தற்பதமாகும். (அது) ஆன்மாவும் இறைவனும் ஒன்றுபடும் நிலை அசிபதம் (ஆகிறாய்) ஆகும்.

பிறப்பு இறப்புகட்கு உட்பட்டுத் தோன்றிவரும் உயிர் தொம்பதம் ஆகும். தொம்பதம் என்பதும் துவம் என்பதும் ஒன்றே. துவம் என்பது நீ என்னும் பொருளைத் தரும். தத்பதம் என்பது அது என்னும் சுட்டுப்பொருளைத் தந்து சிவனைக் குறிக்கும். அசிபதம் என்பது ஆகின்றாய் என்னும் பொருள் தரும். எனவே, துவம் தத் அசி என்னும் முப்பதத்திற்கு நீ அது ஆகின்றாய் என்னும் பொருள் உள்ளது தெரிகின்றது.[460]

தத்துவமசி வாக்கியம் என்ற தலைப்பினுள்ளும் இதனைக் கூறுகின்றார்.

"சிவதுரியத்துத் தொம்பதஞ் சிவனார்
தாவு பரதுரி யத்தினில் தற்பதம்
மேவு சிவதுரி யத்துசி மெய்ப்பத
மோயி விருந்தத் துவமசி உண்மையே"[461]

எனவும்,

"தவமுறு தத்துவ மசிவே தாந்த
சிவமா மதுஞ்சித் தாந்த வேதாந்த மாமே"[462]

எனவும் தத்துவமசிபற்றிக் குறிப்பிடுகின்றார்.

## சிவ தத்துவம்

சிவம், சக்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை எனச் சுத்த மாயையில் தோன்றும் தத்துவங்கள் (ஐந்து). இவை ஐந்தும் ஐந்தொழில் செய்தற்கண் இறைவனுக்கு மடமாதல் பற்றிச் 'சிவதத்துவம்' என்றும் சொல்லப்படுகின்றன.[463]

இதனைத் திருமூலர் 2150 ஆம் பாடலில் எடுத்துரைக்கின்றார். ஆருயிரும், பேருயிருமாகிய ஆவியும் சிவனும் தத்துமாகும். சிவத்துடன் ஆருயிர் ஒன்றியிருப்பது சிவசாயுச்சியமாகும்.[464] சாக்கிர முதலிய ஐந்தவத்தைகளினும் சுத்த தத்துவங்களாகிற சிவ தத்துவம் ஐந்தும் நான்கும் மூன்றும் இரண்டும் ஒன்றுமாக இருந்து இயங்கும்.[465]

## வித்தியா தத்துவங்கள்

காலம் நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்பன. அசுத்த மாயையை இறைவன் நேரே தொழிற்படுத்தலாவது, 'அனந்தர்' என்னும் வித்தியேசுரர் வாயிலாகக் காரியப்படுத்துவான். அதனால், இந்த ஏழும் 'வித்தியா தத்துவம்' எனப் பெயர் பெற்றன.[466]

வித்தியா தத்துவத்தைத் திருமூலர் வித்தை, கலை, காலம், நியதி, மகாமாயை, சுத்த மாயை என வரிசைப்படுத்துகின்றார்.[467]

இன்பத்துள் பொருந்திய இறைவனும், கருவில் உடம்பைத் தந்த கொலைச்செயலால், ஆண் பெண் கூட்டுறவால் முப்பத்தொரு, தத்துவங்களைச் சேர்ந்து, இருவரது மயக்கநிலையில் ஒரு கருவாகிய முட்டையைத் தந்தருளினான். இவற்றை ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம் எனவும் கூறுவர்.[468]

## ஆன்ம தத்துவம்

இடவகை சொல்லின் இருபத்தஞ்சானை[469] எனத் திருமூலர் ஆன்ம தத்துவம் 25 என்று சுட்டுகின்றார். அதாவது சேனை காலாள், வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தம் ஆகிய ஐந்தும், குதிரைகளாக மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்தும் உடையவன் புருடன் என்றும், உள்ளுறு நால்வர் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கினையும் குறிப்பிடுகின்றார்.

## வேதாந்த தத்துவம்

திருமூலர் ஆன்மிகத்துறையில் வேதாந்த தத்துவத்தைப் பொதுவாகக் காட்டுகின்றார். மேலும், வேதாந்தம் 28 தத்துவங் களைக் கொண்டது என்றும், 'தான் ஆன வேதாந்தம்'[470] என்று நான் அது ஆனேன் என்று வேதாந்தத்திற்கு விளக்கம் தருகின்றார்.

வேதாந்த தத்துவத்தின் விரிவை, ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு, புருட தத்துவம் ஒன்று, மெய்ப்புருடனாகிய பரம் ஒன்று, வியோமம் ஒன்று, பரம் ஒன்று ஆக இருபத்தெட்டும் வேதாந்த தத்துவமாகும்[471] என்று உணர்த்துகின்றார்.

## பஞ்சேந்திரியங்கள்

தொக்கு, சிங்குவை, சட்சு, ஆக்கிராணம், சோத்திரம் இவை தமிழில் முறையே மெய், வாய், கண், மூக்கு, செவி என வகுக்கப்பட்டு ஐம்பொறிகள் என வழங்கப்படும். திருமூலர் பஞ்சேந்திரிங்களை அடக்கும் முறையையும், அவற்றை அடக்குவதால் ஏற்படும் நன்மைகள்பற்றியும் கூறுகின்றார். இந்திரியங்களை யடக்கச் சிவன் திருவருள் வலையை விரித்தான் என்றும்,[472] பொறிகளும் புலன்களும் அவற்றின் தொழிலும் இயல்பும் ஐயைந்தாயினும் எல்லாம் ஒரு கூட்டமே.[473] திருவைந்தெழுத்தில் பொறி அடங்கின் உலகம் அனைத்தும் தம் வசமாம்; அருந்தவமாம்; பெரிய பெருமானுடைய திருவடிப் பேறுமாம்.[474]

சித்தர் பாடல்களில் புலன்களைக் குறிக்கப் புலன், பொறி, கரணம், இந்திரியம் போன்ற சொற்கள் அமைகின்றன. ஐம்பொறிகளில் முதல் நிலையில் அமைவது (மெய்) தொட்டுணரும் அறிவான ஊறு அல்லது ஸ்பரிசம். சித்தர் கருத்துப்படி உடம்பு இறைவனை வணங்கும் கருவியாக அமைதல்வேண்டும்.[475]

## பஞ்ச பூதங்கள்

மண்ணும், அதில் பொருந்திப் பரவியுள்ள நீரும், அந்நீர் தோன்றக் காரணமான பொன்போலும் தீயும், அதன் காரணமாகப் புகழப்படும் காற்றும், அது உலவுவதற்கிடமாகிய ஆகாயமும், மனம், புத்தி, அகங்காரங்களும் ஆகிய இவற்றை ஆராயின், ஒன்றின் ஒன்றாக ஒடுங்கிய பூத சுத்தியாகும்.[476] திருமூலர் நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம் ஆகியவற்றின் நிறத்தைச் சுட்டிக் காட்டுகின்றார்.[477] இறைவன் பிரணவத்தால் உடம்பை யாக்கிப் பசு பாசம் நீங்கிடப் பிருதிவி முதலிய பூதங்களைப் படைத்தருளினான்[478] என்றும் கூறுகின்றார்.

## உடலின் ஐம்பூத நிலை

வலிய பாதம் நிலமாகும்; கால்களுக்குமேல் உந்திவரையில் நீராம்; உந்திமுதல் மார்புவரை நெருப்பாகும்; மார்புமுதல் தோள் வரை காற்றாகும்; கழுத்தும் அதன்மேற் பகுதியும் ஆகாயமாகும்.[479]

## உடம்பின் வகை

பூவாகிய கருப்பையினுள் மொட்டாகிய கரு வந்து குறி பொருந்த அப்பூ விரியும். விரிந்தபின் சுமையாயுள்ள குடும்ப விளக்குப்போலும் கருத்தோன்றிப் பிறந்திடும். அக்கரு நீரிடை நிற்கும் நீர்க்குமிழியின் நிழல்போன்று நிற்கும். இதுவே பூதம் ஐந்தும் பொறி பத்தும் ஆகிய பதினைந்து கருவிகளாகிய பருவுடல்.[480] சாறு பிழியப்பட்ட கனிபோலச் சத்துக் கெட்டது யாக்கையாகும்.[481]

மூவகை உடம்பாகிய நுண்ணுடல், காரண உடல், பருவுடல் என்பன உடம்பின் வகையாகும். மேலும், ஆகும் உடம்பு, தூல உடம்பு, போகும் உடம்பு, சூக்கும உடம்பு, காரண உடம்பு எனவும் விரிக்கின்றார்.[482] இருள்தேகம், மருள்தேகம், சுத்த தேகம், பிரணவ தேகம் எனவும் உடம்பின் வகை பிரிக்கப்பட்டுகிறது.

தூலம் சூக்குமமாகிய இருவகை உடலில் சூக்கும உடம்பு எட்டன் கூட்டமாய்ப் புரியட்ட சரீரமாகும்.[483] சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், புத்தி, மனம், அகங்காரம் ஆகியவை இருவகை உடம்பின் எட்டன் கூட்டமாகும்.

கேவல கேவலமானது அதீதத்திற்கும் அப்பாற்பட்டதாகும். கேவல சகலத்திற்குச் சுத்தமாயை நிலைக்களமாகும். இந்நிலை விஞ்ஞானகலரது நிலையாகும். அவரது உடல் இறைவன் விளங்கும் தவ உடம்பு ஆகும்.[484]

## உடம்பின் பயன்

உடம்பெடுத்த பயன் உடம்பினுள் உடையானைக் கண்டு வழிபடுதல்.[485] இறைவன் உடலுக்கு அநாதியே காவலாக இருந்து காப்பவன்.[486] சிவன் திருமுன்பு பத்தி கொண்டால் கல்போன்ற அசையாத உள்ளம் சிறந்த ஒளிவிடும். உடலைத் தாங்கி அழியாது உலவும் என்பதைத் திருமூலர் சிவத்துள் திளைக்கும் உடல்பற்றிக் குறிப்பிடுகின்றார்.[487]

ஞானத்திற் சரியை யுடையார்க்குச் சிவ உடல் தம்முடலாம். ஞானத்திற் கிரியையுடையார்க்கு உளவாம் உடல் சிவனருளாம். இவர்கள் இருவருக்கும் மேலாக விசுத்தியில் நிறகும் ஞானயோகிக்கு விந்துவும் நாதமுமே உடலாகும். ஞான வரம்பாகிய மோனததில் நிற்பார்க்கு மூப்பாகும் கெட்ட முத்தியே உடலாம்.[488]

இங்ஙனம், திருமூலர் உடம்பினுள் உறுபொருள் கண்டு, ஊனுடம்பை ஆலயமாகக் கொள்வதைப் பற்றியும், உடம்பை வளர்க்கும்முறை அறிந்து, மனம் கோயில்கொண்ட மாணிக்கமாகத் திகழ்வதை எடுத்துரைக்கின்றார்.

## யாக்கை நிலையாமை

சித்தர்கள் உடம்பின் பயனைக் கூறி, அதனைக் காக்கும் வழியையும் கூறியவர்கள் உடலின் நிலையாமையையும் எடுத்துக் கூறுகின்றனர். சித்தர்களில் முன்னோராகிய திருமூலரும் யாக்கை நிலையாமைபற்றி, ஒருவன் இறந்துவிட்டால் ஊரிலுள்ளவர் களெல்லாம் கூடி ஒலித்து அழுது, பெயரை நீக்கிப் பிணம் என்று பெயரிட்டுச் சுடுகாட்டிற்குக் கொண்டு சென்று எரித்துவிட்டு நீரில் மூழ்குவார்கள். அவர்கள் உடலின் நிலையாமையை உணரா தவர்கள் என்றும்.[489] மேலும், உடலின் இடப்பக்கமே இறை நொந்தது என்று கூறுவார்கள். பிறகு, படுத்தவர்கள் இறந்துவிடு வார்கள்[490] என்றும் கூறுகின்றார்.

இங்ஙனம், நிலையற்ற உடலையும் நிலைபெறச் செய்து சாகாக் கலையினைக் கற்றவர்கள் சித்தர்கள் என்பதனைத் திருமூலரின் பாடல்வழி அறியலாம்.

## பஞ்சாக்கரம்

சிவயசிவ என்னும் தமிழ் மண்டலம் ஐந்தினும் பரவி நிற்கும் அறிவு, அருள், அடிமை, இன்பு, அன்பு என்னும் ஐந்தினையும் சித்தாந்த சைவராகிய சித்தர்கள் உலகம் எங்கணும் வலியச் சென்று செவ்வி வாய்ந்தார்க்கு அறிவுறுத்துவர். முக்தி பஞ்சாக்கரம் எனவும், காரை பஞ்சாக்கரம் எனவும் ஸ்ரீபஞ்சாக்கரம் எனவும் வழங்குகிறது. உயிர் பாசத்தை நீக்கிப் பதியை நாடுதல் என்பது இப்பஞ்சாக்கரத்தின் பொருள். 'ய' என்னும் உயிர் பாசத்தை நீக்கி, 'வ' என்னும் அருளோடும், 'சி' என்னும் சிவத்தோடும் கூடி நிற்றல். இதனை இருதலைக்கொள்ளி எனக் குழூஉக்குறியாகக் குறிக்கும் பழக்கம் உண்டு என்று குறிப்பிடுகின்றார் டாக்டர் இரா. மாணிக்கவாசகம்.[491]

பஞ்சாக்கரத்தைத் தூல பஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், அதிசூக்கும பஞ்சாக்கரம் என்று மூன்று வகையாகக் குறிக்கின்றார். தூல பஞ்சாக்கரம் **நமசிவாய** என்பது. இதுவே மூல மந்திரமாகும். சூக்கும பஞ்சாக்கரமாவது **சிவாயநம** என்பது. உடம்பைப் பொன் னாக்குவது. அதி சூக்கும பஞ்சாக்கரமாவது **சிவாயசிவ** என்பது யோகம் சித்திக்கும் மந்திரமிது.[492]

## நமசிவாய

'**நம**' என்பதில் நமசிவாய என்னும் இவ்வைந்தெழுத்தினுள் 'ம'கர அடையாளத்தால் உலகம் படைக்கப்பட்டது. '**ய**'கர அடையாளத்தால் உடலுடன் உயிரினை இணைத்தது. '**ந**'கர அடை யாளத்தால் விரிந்த உலகத்தை இயைந்தியக்கிக் காக்கும்; '**சி**'கர, '**வ**'கர அடையாளங்களால் எல்லாமாய் அமைந்த **சிவம்** விளங்கும் என ஒவ்வொரு எழுத்திற்கும் விளக்கம் தருகின்றார்.[493]

சிவ - பதி; ய - பசு; நம - பாசம் எனக் குறித்து, முப்பொருள் உண்மையையும் உணர்த்தும் எனவும் கொள்ளலாம்.[494]

## பிரணவத்தின் தோற்றம்

வாய் (புருவ நடு), மிடறு, நெஞ்சு, உந்தி (மேல் வயிறு), இலிங்கம் (கொப்பூழ்) மேலாகிய மூலம் ஆகிய நிலைக்களமும் இடமாக அகரம் தோன்றும். மூலாதாரத்தில் தோன்றி, மேலே சென்று சகஸ்ராரத்தில் மொத்துண்டு அட்சர வடிவாய் வெளிப்படும். இவ்வோசையே ஐந்தெழுத்தாகும்.[495]

மூல எழுத்தாகிய பிரணவம், விண்ணெழுத்து -வ; நீர் எழுத்து - ம; நிலவெழுத்து-ந; நெருப்பெழுத்து - சி; (உயிர்) காற்றெழுத்து -ய; எனத் திருமூலர் ஐந்தெழுத்திற்கு விளக்கம் தருகின்றார்.[496] இவற்றில் ஐந்தெழுத்துகளுக்கும் மூலம் பிரணவமாகிய ஓம் என்பது.

| | | |
|---|---|---|
| **சிகாரம்** | - | **வலக்கை** |
| **வகாரம்** | - | **இடக்கை** |
| **யகாரம்** | - | **அணைத்த கை** |
| **நகாரம்** | - | **மழு உடைய கை** |
| **மகாரம்** | - | **ஊன்றிய திருவடி**[497] |

என ஐந்தெழுத்துகளும் இறைவனின் உடலாக உள்ளன என்று கூறுகின்றார்.

## ஓம் என்னும் பிரணவம்

ஓம் என்னும் பிரணவத்துள் இருந்தே பூதங்கள், சராசரங்கள், விஞ்ஞானகலர் ஆதிஉயிர் மூன்று, சிவ, பா, சிவ ஆகிய முத்தூரி யங்கள் அனைத்தும் தோன்றின. [498] ஓம் மொழியின் இனமாகிய அகர உகர மகர வருக்கம் எனப்படும். இவை இன்ப நிலை இறைவனு மாகும்.[499]

அகாரத்தை முதலாகக் கொண்டு ஐம்பத்தொன்றாகி உகாரம் முதற்கொண்டு ஓங்கி உதித்து, மகர இறுதியில் அழிந்து, பிறகு அதிலிருந்து விடுபட்ட நகர முதலே நந்தியின் பெயராகும்.[500]

நகராதி ஐந்தெழுத்து நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்குதல் ஆகிய ஐம்பாட்டினையும் நிகழ்த்துவிக்கும். திரோதாயி என்று சொல்லப்படும் நடப்பாற்றல் அந்நலவாதிகளைத் தாண்டித் தொழிற்படுத்தும் முதல்வியாகும். அதுவே அவ்வெழுத்து களுக்கும் ஆதியாய் நிற்கும். ஆவி அம்முடியினை எய்தி அகநிலைச் செயலாற்றலாகிய துரியமே தம் உடம்பாக நிற்கும்; நிற்கவே நமாதிக்குச் சமமாகச் சிவ முதலாய்த் தோன்றும்; தோன்றவே சிவாய சிவ என எண்ணுவதே சிறப்பாகும்.[501]

சிவாயநமவெனச் சித்தம் அடக்கித் தம் பாவங்கள் ஒழிய இறைவனுக்கு அடிமையாகி சிவாயசிவ என்று உள்ளத்தில் நினைத்துத் தியானித்தால் ஆனந்த வெள்ளத்தில் மூழ்கலாம்.[502]

இங்ஙனம் தூல, சூக்கும, அதிசூக்கும பஞ்சாக்கரங்களைப் பற்றித் திருமூலர் குறிப்பிடுகின்றார்.

## பிறப்பு

திருமூலர் பிறப்பு இறப்புப் பற்றியும் கூறுகின்றார். அவரும் மற்றச் சித்தர்களைப் போன்று இறந்தவர்கள் மீண்டும் பிறப்பது இல்லை என்ற கொள்கை யுடையவர். தன்மை யறிந்து தலைவனாகிய இறைவனை யறிந்தால் பிறவி நீங்கும். பிறந்ததன்பின் சிவபெருமானை அன்புடன் வணங்குதல்வேண்டும. அங்ஙனம் செய்யவில்லையெனில் ஆன்மாக்கள் அழியும்.[503]

பொன்னான இரும்பு மீண்டும் இரும்பாகாதவாறுபோல, குருவருள் பெற்ற உயிர் மீண்டும் பிறவாது[504] என்று உணர்த்து கின்றார். மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை ஆகியவற்றைப் பற்றியும் எடுத்துரைக்கின்றார்.[505]

பிறப்பு இறப்புகளிலிருந்து உயிர்கள் விடுபட வேண்டுமெனில் இறைவனை வணங்கி, அவன் அருளைப் பெற்றுச் சாகா வரத்தைப் பெறவேண்டும் என்பதைப் பெற வைக்கின்றார்.

## சைவ சமய நெறிபற்றிய சித்தாந்தம்

### முத்தி

சிவபெருமான் பெறுவதற்கு அரியவர். இடைவிடாத வழிபாட்டினாலும் சாதனைகளாலுமே அவரைப் பெறவியலும். அவரை அடைந்த பின், ஆன்மாவிற்கு நித்தியானந்தப் பெருவாழ்வைத் தவிர வேறில்லை. இந்த ஆனந்த நிலையை முத்தி, வீடு, மோட்சம் என்ற பெயர்களால் வழங்குவர் சித்தாந்திகள். பசு, பாசத்தில் அழுந்தி நிற்கும் நிலை 'முத்தி' என்று சுப்பு ரெட்டியார் எடுத்துரைக்கின்றார்.[506]

திருமூலர் முத்தியின் வகைகளைக் குறிப்பிடும்போது சீவமுத்தி, பரமுத்தி, சிவமுத்தி என்று வகைப்படுத்துவார். சீவமுத்தி அதீத நிலையாகும். பரமுத்தி திருவருட் செயலின் நிலையாகும்.சிவமுத்தி ஆனந்தமாகிய இன்ப வடிவமாகும். சீவமுத்தி சிவமுத்தி யடைவதே தத்துவம் அசி என்னும் பொருளாகும். அதுவே ஸோஹம் (அவனே நான்) என்னும் நெறியாகும்.[507] மேலான நந்தியின் திருவடியை அடைந்தால் முத்திநிலை கைவரப்படும்.[508] மோனத்தில் சிவமாம் உருவம் மறைந்திடும். இதுவே மோன முத்திரை. முடித்த முடிவாகிய வீடுபேறும் இதுவே யாகும்.[509]

சைவ நெறியில் பேதம் இல்லை; ஒத்து உணரின் முத்தி அடையலாம். சிவத்தோடு இரண்டறக் கலக்கும் முத்திநிலையே சிவநெறி யாகும். மலத்தை எரித்து, இருளை யறுத்து, பசுத்துவத்தையும் பாசத்தையும் வாட்டி, வீடுபுக உபதேசிப்பவனால் பரம திருவடியை அடையலாம்.[510] இறைவனருளால் திருவருள் சித்திக்கும்; பேரின்பமுண்டாகும்.[511] ஆதலால், சிற்றின்பத்தை ஒழித்துப் பேரின்பத்தை அடைய முயல்வாயாக என்று திருமூலர் சைவ சமய நெறிக்கு வழிகாட்டுகிறார். திருமூலர் சைவத்தைச் சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சைவம் எனப் பிரிக்கிறார்.[512]

## உட்சமயம்[513]

அகச் சமயங்கள் சித்தாந்த சைவத்தோடு ஒப்ப ஏகன், அநேகன், இருள், கருமம், மாயைப்பிரண்டு ஆக இவை ஆறனையும் ஒத்துக் கொள்பவர்கள். சித்தாந்த சைவப் பேருண்மையை உணர்த்தின் ஏற்றுக் கொள்ளவல்லர்கள். சிவபெருமானே யாவருக்கும் முதற் கடவுள் ஆவார்; சிவனைப் பரஞானத்தில் பார்த்தால் சிவநெறியாகிய சைவமாகும்; சன்மார்க்க நெறியே சைவ நெறியாகும்; சிவன், பசு பாச ஞானங்களால் அறியப்படாமல் பரஞானம் ஒன்றானே அறிய நிற்பவன் என்பதையும் உணர்வார்கள்.

சிவமும் சக்தியும் உபகாரப்படும் உண்மைச் சிவத்தோடு கூடி உற்பத்திக்கு உபகாரியாயும், முடிவில் எல்லாவற்றையும் ஒடுக்கிக் கொள்பவராயும் உடனுறைவர்.

சிவம் எல்லாமாயும் விளங்குகிறது; சக்தி சிவத்தோடு அபேத மாய் உற்பத்திக்குக் காரணமாயும், சங்காரத்திற்கு உதவியா யிருக்கிறது. உடலின் ஒளிமயமான வடிவாய சிவம் பதிந்து பேரின்பம் நல்கும்.

## சுத்த சைவம்[514]

நிலைத்த பொருளான இறைவனையும் சடப்பொருளான பாசத்தையும், சார்ந்த வண்ணம் பெற்று நிற்கும் இயல்பான அறிவு இல்லாத பசுவையும் - ஆகிய இம்மூன்று அறிவுபெற்று இறைவன் (சித்து) உயிர் (அசித்து) என்ற வேற்றுமை நீங்கிச் சுத்தம், அசுத்தமாகிய இருவினை ஒப்புநிலையில் மலபரிபாகம் செய்த நிலையில் எப்பொழுதும் நிற்பவர்கள் சுத்த சைவர் எனப்படுவர் எனத் தெரிவிக்கின்றார். சைவ சித்தாந்தமாகிய பதினான்கு சாத்திர நூல்கள் கூறும் பதி, பசு, பாச உண்மைகளையும் இருவினையொப்பு, மலபரிபாகம் ஆகியவற்றையும் திருமந்திரம் முன்னரே கூறிவிட்டது என்பதை அறியலாம். யோகத்தினால் மலங்கள் நீக்கப்பட்டு இறைவனைக் காண்பவர்கள் சைவ சித்தாந்தர். இதனை,

"சொற்பத மேவித் துரிசற்று மேலான
தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே"[515]

எனத் திருமூலர் சைவ சித்தாந்தர் என்ற சொல்லுக்குப் பொருள் கூறுகின்றார்.

## அசுத்த சைவம்

அசுத்த சைவமானது திருவேடப் பொலிவோடு, சரியை கிரியை என்னும் இரண்டில் மட்டும் நிற்பார் நிலையாகும். சத்தும் அசத்தும் சதசத்தும் தான் கண்டிருக்கின்ற ஞானநிலையிலும் வேறுபட்டதாய்ச் சுத்த சைவத்திற்கு வாயிலாக இருப்பதால், இதனை அசுத்த சைவம் என்று குறிப்பிடுகின்றார். இதில், திருமூலர் உருவ வழிபாட்டுப் பக்தி முறையைக் கூறுகின்றார். காதிற் கடுக்கனும், பூணூலும் அணிந்து அத்துவாக்களைச் சோதித்து உபதேசப் பரம்பரையில் நின்றவர்கள் அசுத்த சைவருள் ஒரு சாரார்கள் என்று எடுத்துரைக்கின்றார்.

## மார்க்க சைவம்[517]

திருநீறு உருத்திராக்க தாரணம் சரியையாதி நெறிகள் முதலியன சைவ மார்க்கங்களினின்று பழகி, ஞானம் பெறுவது மார்க்க சைவமாகும். வேத முடிவான கருத்து சித்தாந்தமே என்று உணர்ந்தவன் ஞானி; வேதாந்த முடிவாகிய சித்தாந்த உண்மை ஒன்றேயாக முடிந்தது. பதி போகநிலையிலிருந்து திருவருள் காட்டிய வழியே நின்று உணர்ந்து, அனுபவத்தில் அழுந்தி ஆனந்த நுகர்ச்சியோடு துவாதசாந்தத்தில் நுகரப்படுவதே **சிவபோகம்** என்பதாகும்.

ஆன்மாவாகிய தன்மையும், பரமசிவத்தையும், சதாசிவமாகிய அரசரையும், முப்பொருள்களையும் முத்திநிலை இவற்றையும் சுத்த சைவர்களால் தடை நீங்கும் உபாயங்களாக எண்ணத்தகும்.

## கடுஞ்சுத்த சைவம்[518]

மல மாயை கன்மங்களின் நீங்கிய சிவபோதக நிலை கடுஞ்சுத்த சைவமாகும். துன்பங்களோடு கூடிய பாசமும், பசுத் தன்மையுங் கெட, அடித்துத் தொலைக்கும் சிவஞானம் பெற்றவரே சுத்த சைவ ராவார். சிவமே உலக வடிவம், சிவ வடிவம் என இறைவன் எல்லாமாக இருக்கின்றான். சிவமும், தானுமாகிய இவற்றை ஒருசேர முற்றும் உணரும் குணத்தோர் அனைத்தும் ஒருசேரப் பெறும் சித்தி பெற்றவராவர்.

## சரியை[519]

உயிருக்கு உயிராக இறைவன் ஒன்றாயிருத்தலை உணர்தல்

சிறந்த ஞான பூசை யாகும். உயிர்க்கு ஒளி தருகின்ற பொருளாக இறைவனைக் காணுதல் பெரிய யோகப் பூசை யாகும். வெளியே மூர்த்தியினிடத்துப் பிராணப் பிரதிட்டையாகின்ற ஆவாகனம் செய்தல் புறப்பூசையாகும். அடுத்துச் சரியைக்கண் நிற்போர்கள் பக்தர்கள்; அன்போடு சிவ வேடந்தாங்கித் தொண்டு செய்வோர் கிரியையில் நிற்போர்; தூய இயமம், நியமம் முதலான அட்டாங்க யோகங்களைச் சாதிப்பார் சுத்த யோகியர்; சிவஞானம் பெற்றவர்கள் சித்தர்கள் எனப்படுவர்.

உண்மை ஞானம் பெற்றவர்கள் அவனேதானே ஆனவர்கள்; சமாதிக்கண் சித்தியடைந்தோர் நேர்ந்த அட்டாங்க யோகம் உடையவர்கள்; ஆராய்ந்த கிரியையோர் சிவபூசை தவறாமல் செய்பவர்கள்; சித்தி பெற்றோர் சரியையுடையோராவர். இவர்களே பூமியிலிருந்து ஞானபூமியில் சஞ்சரிப்பவராவர்.

கிரியை யோகங்கள் உருவ வழிபாடாகிய சாகார பூசையாகும்; ஞானபூசை நிராகார பூசை; நேயப் பொருளோடு ஒன்றி உரியனவாம் பூசையே உயர்ந்த பூசையாகும். சரியையாதி சமய மார்க்கங்களைச் சிவபெருமான் குருமூர்த்தியாக எழுந்தருளி மக்கள் ஈடேற அருளினன் என்பன பற்றித் திருமூலர் எடுத்துரைக்கின்றார்.

## கிரியை[520]

இறைவனுக்கு மலர், சந்தனம் முதலியன கொண்டு நோன்பு நோற்பதோடு கொல்லாமையாகிய நோன்பினையும் நோற்றல் வேண்டும். மாந்தர் செய்யும் இறைப்பணியே சிவப்பணி யாகும். இச்சிவப்பணியே நோன்பாளராகிய கிரியையினர் செய்யும் சிவபக்தித் திருப்பணியாகும். இறைவன் 'பூசை' செய்யும் கிரியை உடைய வருக்கு உடம்புள் ஒளியாய்க் காட்சி வழங்குவர். மலர்களால் பூசை செய்தால் ஆன்மாவைத் தொடர்ந்து வரும்வினை சாராது.

## அகக்கிரியை

சாதகரின் சூரிய சந்திரர்களாகிய கண் மலர்களே இறைவனை ஏத்துவதற்குரிய மலர்களாகும். ஆங்கே வெளிப்படும் கண்ணீரே அபிடேகத்துக்குரிய மஞ்சள் நீராகும். இங்ஙனமே நீரால் அபிடேகித்து, மலரால் அருச்சித்து, இடைவிடாது எண்ணியும் பேசியும் இருத்தலே சிறந்த வழிபாடாகும்.[521]

"உரைத்தவன் நாமம் உணர வல்லார்க்குப்
புரைத் தெங்கும் போகான் புரிசடை யோனே"[522]

எனச் சிவலிங்க கிரியைபற்றிக் கூறுகின்றார். மேலும், சிவலிங்கப் பூசையையே திருமூலர் அகப் பூசையாகக் குறிப்பிடுகின்றார்.

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே"[523]

படமாடக் கோயிலில் குடிகொண்டுள்ள இறைவனுக்கு ஒன்று கொடுத்தால், அது நடமாடும் கோயிலாக இருக்கும் ஏழைகளைச் சென்று சேராது. ஆனால், நடமாடும் கோயில் நம்பர் களுக்கு ஒன்று கொடுத்தால் அது இறைவனைச் சென்றடையும் [524] என்பதையும் மகேசுவர பூசையாகக் கூறுகின்றார்.

## சதாசிவலிங்கப் பூசை

ஈசான முகத்தைச் சிரசின் நடுவில் நியமிக்கத்தக்கது. தற்புருடத்தை முகத்தில் நியமிக்கத்தக்கது. காணுகின்ற அகோர முகத்தை நெஞ்சத்தில் நியமிக்கவேண்டும். மாட்சியைப் பொருந்திய வாமதேவ முகத்தை நாபித் தானத்திலும், சத்தியோசாதத்தை நல்ல பாதங்களிலும் நியமிக்கத் தக்கன வாகும். அஃதாவது, இம் முறையிலே சிரசுமுதல் பாதம்வரை மனித உடலில் சதாசிவம் இருப்பதாகப் பாவித்து நியமித்தல் பூசையிலுள்ள முறையாகும்.[525]

## சமாதிக் கிரியை

ஞானியின் தேகத்தைச் சுட்டெரிக்கின் உள்ள தீங்குகள், சமாதி செய்பவிப்பார் எய்தும் பயன் ஆகியவற்றையும், சமாதிக்குரிய குகையின் அளவும் முறையும், சமாதி அமைப்பதற்கு உரிய இடங்கள், குழியில் இடத்தகும் பொருள்கள், சமாதிக் குகையின் உள்ளே செய்யப்படும் கிரியை, நீராட்டும்முறை உணர்த்துதலால் பீடத்தின் மீது வைக்கத் தகுவன இவை எனத் திருமூலர் சமாதிக் கிரியையும் எடுத்துரைக்கின்றார்.[526]

## தவம்

அடியவர்கள் இறைவனோடு திருவருளோடு கூடித் தவம் செய்வதே தவமாகும். வாடித் தவம் செய்தல் தவமாகாது.[527]

முத்தியைப் பயக்கும் நன்மைதீமைகளைக் கடிந்த நிலையாகிய சிவத் தன்மையைக் கொடுப்பதே தவமாகும்.[528]

உண்மையும் திருவடி யுணர்வும் மேற்கொள்ளுதலால் மெய்த் தவப் பயன்கள் நிலைக்கும். [529] தவத்தின் பயனால் மாதவம் செய்பவர்கள் பிறப்பினை நீக்கிப் பெருமை பெறுவார்கள்.[530] சிவனின் திருவடியின்கண் ஒடுங்குவார் நன்மையே செய்வர்.[531] இறைவன் சிவன் திருவருள் பெற்றவருக்கல்லால் மாதவத்தின் இயல்பு தெரியாது.[532] சிவக்கோலமாகிய தவக்கோல மிக்கவரே அக் கோலத்தைத் தாங்கும் தகுதியினராவர்.[533]

இறைவனை நினைந்து உடல் முழுதும் திருநீறு பூசி, வேணிகள் முடித்துக் கட்டிச் சிவநெறியாகிய வேடத்தில் நிற்பவர்களே மெய்யான வேடம் தரித்தவர்களாவர். தன் உடல் பொற்பதி. இறைவன் இருக்கும் இடம் தன் உடலாகும். அவர் கொள்ளும் சிவக்கோலமே மெய்யான தவக்கோலமாகும்.[534]

## யோகம்

மனத்தை ஒருமைப்படுத்தி இறைவனுடைய திருவுருவத் தியானத்தில் ஈடுபடச் செய்து, எல்லாம் மறந்த சமாதி நிலையை அடைவதே யோகத்தின் இலட்சியமாகும்.

யோகம் என்னும் சொல் யுஜ் என்னும் வடசொல்லினின்று வந்ததாகும். அச்சொல்லுக்குச் சேர்தல் அல்லது இணைதல் என்பது பொருளாகும்.[535] சிவன் சிவனோடு கலத்தற்கு அல்லது ஆன்மா இறையோடு கலத்தற்கு எடுத்துக் கொள்ளும் முயற்சியே யோகம் எனப்படும்.[536]

திருமூலர் யோகாந்தக் கொள்கையைப்பற்றி, இயம நியமங்களை மேற்கொண்டவர்கள் பின் அவற்றைக் கடந்து சமாதி நிலையை அடைவர். உயிரானது சிவத்தன்மை பெற்றதும் பற்றற்ற நிலையையும் அடையும் என்று குறிப்பிடுகிறார்.[537] உறங்காதே யுறங்கி யிருந்து உணர்வு மடங்கிக் கண்டவர்களே சிவலோகத் தையும் சிவயோகத்தையும் கண்டவர்கள்; அவர்களே யோகியர் ஆவர் என யோகியர் பற்றிக் கூறுகின்றார்.[538] திருமூலர் மூன்றாம் தந்திரத்தில் 77 பாடல்களில் அவ் யோக நிலையைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்.[539] அடுத்து அட்டாங்கயோகம் பேறு என்னும் பகுதியில் 8 பாடல்களில் தனியாகவும் குறிக்கின்றார். எனவே, 85 பாடல்கள் இவ் யோக நிலைபற்றி வருகின்றன.

திருமந்திரம், பதஞ்சலியின் யோக சூத்திரத்திலிருந்து தழுவி எழுதப்பட்டது என்னும் கருத்திற்கு உறுதுணையாய் நிற்பது அட்டாங்கயோகம் என்னும் பகுதியே யாகும். இவ்வெட்டு அங்கங் களையும் முறையே தியானித்துச் செய்யும் சாதனையே யோகம் எனப்படும். இம்முறை சிவயோகத்தின்பாற்படும் என்று ச. தண்டபாணி தேசிகர் தெரிவிக்கின்றார்.[540] யோகப் பயிற்சி பற்றித் திருமூலர், மூலாதாரத்தில் மூண்டெழுந்த மூர்த்தியைச் சுழுமுனை உச்சியில் தியானித்திருப்பார்க்கு இறப்பு இல்லை[541] என உறுதி படுத்துவார்.

இறைவன் மனித உடம்பிலேயே உயிருக்குள் உயிராக மறைந்து நிற்கின்றார் என்னும் உண்மையை உணர்ந்து, அப்பெருமானைக் கண்டு தரிசித்த மாமுனிவர்களும் திருமூலரும், தாயுமானவரும் உள்ளத்தினுள்ளே ஒளித்து நிற்கும் இறைவனைத் தரிசிப்பதே சித்தி என்று கண்டார்கள்.[542]

திருமூலர் யோகப் பயிற்சியைப்பற்றிக் குறிப்பிடும்போது, சீவர்கள் சுழுமுனை மார்க்கமாக மேல்நோக்கிப் புருவ நடுவில் சென்று பொருந்தியிருக்கவேண்டும் என்றும்,[543] மூலாதாரத்திலிருந்து உற்பத்தியான நாதமானது சாதகனுக்குப் பின் மூளையில் பொருந்திச் சிரசின் இடப்பக்கம் சென்று, பின்னர்ச் சிரசு முழுதும் ஒளி மயமாகப் பரவும் என்றும்,[544] அகக்கலன் நான்கையும், அமிழ்தக்கலை பதினாறையும், உயிர்ப்பினையும் திருவருள் துணையால் அடக்க வல்லார் திருவடி யுணர்வில் கருத்தூன்றி நிற்பர் என்றும் குறிப்பிடுகின்றார்.[545]

யோகத்தை எட்டு அங்கங்களாகக்கொண்டு திருமூலர் அட்டாங்கயோகம் எனப் பிரிக்கின்றார். இம்முறையைப் பண்டைத் தமிழ் மக்களும் அறிந்திருந்தனர். இனி, இவ்வெட்டு அங்கங்களையும் ஆராய்வோம். இயமம், நியமம், கணக்கற்ற ஆதனம், நலமிக்க பிராணாயாமம், பிரத்தியாகாரம், வெற்றிமிக்க தாரணை, தியானம், சமாதி ஆகியவை பிறவா நெறியைப் பயக்கும் எனத் திருமூலர் வகைப்படுத்துகின்றார்.

கட்டடம் கட்ட அடித்தளம் வலிமையானதாக இருக்க வேண்டுதல் போல, முத்தி அடைய இயம நியமங்கள் மிக முக்கியமானவை என அ. ஜகதீசன் எடுத்துரைக்கின்றார்.[546]

## இயமம்[547]

இயமமாவது தீயனவற்றைச் சிந்தியாது சிந்தையைக் கட்டுப் படுத்தலாகும். ஒருயிரையும் கொல்லாதவனும், பொய் கூறாதவனும், திருடாதவனும், எண்ணத்தக்க குணங்களை உடையவனும், நல்லவனும் அடக்கமுடையவனும், நடுவுநிற்றலை உடையவனும், எல்லார்க்கும் பகிர்ந்து மீதியைப் பின்பு தான் உண்பவனும், குற்றமற்றவனும், கள்காயம் என்ற இத்தீய குணமில்லா தவனும் ஆகிய இவ்விலக்கணமுடையவனே இயமத்தானாவான்.

## நியமம்

விதிமுறைகளை வழுவா தொழுகுதல்முதல் பரத்துவத்தில் இடைவிடாதொழுகும் விருப்பம் நியமம். அம்மையப்பனை அறிகின்றவனே நியமத்தனாவான். தூய்மை, அருள், சுருங்கிய உணவு, பொறை, செம்மையுடைமை, வாய்மை, உறுதியுடைமை, காமமின்மை, களவின்மை, கொலையின்மை ஆகியவற்றை நியமராக உடையவர் நியமத்தார். தவம் செபம், சந்தோடம், ஆத்திகம், தானம், சிறுவிரதம், சிந்தாந்தக் கேள்வி, வேள்வி, சிவபூசை, ஒளி பொருந்திய சிவஞானமென்ற பத்தாகிய கரணங்களைப் பலகாலும் இயற்றின் நியமத்தான் ஆவான்.

## ஆதனம்[549]

ஆதனமாவது உடல், உள்ளம் இவற்றாலுண்டாகும் செயல் களையும், எண்ணங்களையும் தடுத்து நிலைபேறளிப்பதாகும். இவை பத்திரம், கோமுகம், பங்கயம், கேசரி, சொத்திரம், வீரம், சுகாதனம், சுவத்திகம் என்பன வாகும். திருமூலர், இவற்றில் நான்கற்கு மட்டும் இலக்கணம் வகுக்கின்றார்.

## பதுமாசனம்[550]

வலத்தொடையின்மேல் இடப்பாதத்தையும், இடத்தொடையின் மேல் வலப் பாதத்தையும் உள்ளங்களில் மலர நன்றாக இழுத்துப் பொருத்தி, அதன்மேல் இரு கைகளையும் மலர்த்தி வைப்பது பதுமாசன மாகும்.

## பத்திராசனம்[551]

குற்றமற்ற வலக்காலை விளங்கும்படி மேல் வைத்து, முழந்தாளின்மேல் கைகளை நீட்டித் தளர்ந்த உடலைச் செவ்வை யாக இருத்தி, நன்மையைப் பெறுவது பத்திராசன மாகும்.

## குக்குடாசனம்[552]

பாதங்களிரண்டையும் மாற்றித் தொடையின்மேல் ஏறுமாறு செய்தமைத்து, உடம்பின் பளுவை முழங்கை தாங்குமாறு அமைத்து, அசைவின்றி யிருத்தல் குக்குடாசனமாகும்.

## சிம்மாசனம்[553]

பாத நுனிகளைப் பூமியிலூன்றி, முழந்தாளின்மேல் பாதத்தை வைத்து அவற்றின்மேல் கைகளைநீட்டி விருப்புடன் மேல்நோக்கி அழகு பொருந்தக் குற்றமற்ற கண்கள் மூக்கு நுனியை நோக்குமாறு வைத்திருப்பது புகழமைந்த சிம்மாசனம் என்று கூறப்படும்.

## பிராணாயாமம்

ஆசனம் பயிற்சியானபின் அவ்வாசனத்தில் அமர்ந்துகொண்டு பயில வேண்டுவது பிராணாயாமம் ஆகும். பிராணன் + யாமம் எனப் பிரிக்கப்படும். பிராணனைக் கட்டுப்படுத்துதல் என்பது இதன் பொருளாகும். பிராணாயாமத்தை முறைப்படி செய்யாதொழியின் இதய நோய் முதலியன உண்டாகி இடர்ப்படுதல் மட்டுமன்றி ஆயுட்குறைவும் உண்டாகும். பிராண வாயு மனத்தோடும் அசை வின்றி அடங்கி இருந்தால் பிறப்பு இல்லை; இறப்பு இல்லை. ஆதலால், பிராணனை இடகலை பிங்கலையாகிய இருவழிகளிலும் மாறிமாறி நடக்கச் செய்து, அதன் நடப்பில் வரும் பயனை அடையலாம்.[554]

16 மாத்திரையளவு இடகலையில் மூச்சை மெல்ல உள்ளுக்கிழுத்தல் பூரகமாகும். அறுபத்து நான்கு மாத்திரை காலம் உள்ளேயே தடுத்து வைத்தல் கும்பகமாகும். முப்பத்திரண்டு மாத்திரை வெளிப்படுத்தலாகிய அது ரேசகமாகும்; ஆதலால், இட கலையால் இழுத்துப் பிங்கலையால் விடுதல் வஞ்சனை யாகும்.[555]

காற்றை இழுத்து வசப்படுத்தி அடக்கினால், உடல் பளிங்கைப் போல மாசு மறுவின்றித் தூயதாய், அது முதுமை யடையினும் இளமை உண்டாகும். இது நன்கு தெளிய குருவின் திருவருளையும் பெற்றுவிட்டால் காற்றைக் காட்டிலும் விரும்பிய மென்மையடையலாம்.[556]

தலை, கால், இதயம் முதலிய இடங்களிற் சென்று பரவும்படி பூரகஞ் செய்து, பாண்மையோடமைந்த ரேசகத்தால் உள்ளே பதியச் செய்து மயங்கி உந்திக் கமலத்தில் கும்பகஞ் செய்து பின் சிறிது சிறிதாக ரேசகம் செய்ய, விடமுண்ட கண்டராகிய சிவபெருமானுடைய அருளைப் பெறலாம்[557] எனப் பிராணாயாமத்தின் இன்றியமையாமையைத் திருமூலர் குறிப்பிடுகின்றார்.

## பிரத்தியாகாரம்

இது பிராணனைத் திருப்புதலாகும். பிராணனை நிறுத்துதலே பிரத்தியாகாரமாகும். நாசிக்குக் கீழ்ப் பன்னிரண்டு அங்குலம் தூரத்திலுள்ள இதயத்து மனத்தை நிறுத்தி, பிரத்தியாகாரத்தைச் செய்தால் அட்டமாசித்திகளும், இராசயோகமும் கைக்கூடும். எடுத்த உடலுக்கு என்றும் அழிவில்லை. சிவலோகம் சென்று சிவனைச் சேவிப்பர் எனப் பிரத்தியாகாரத்தின் பயனைக் கூறுகின்றார்.[558]

## தாரணை

பொறைநிலை அல்லது ஒடுங்கிய நிலை எனப் பொருள்படும்; நாபி, கண்டம், இதயம், நெற்றி, கபாலம் இவற்றுள் ஒன்றில் எப்பொழுதும் சிந்தை வைத்தலாகும்.[559]

மூலாதாரத்தை அடைத்துப் பிராணவாயுவினால் அங்கிருக்கின்ற குண்டலினியை எழுப்பி நடுவழியாகிய சுழுமுனையால் தாரணை செய்து, நீரோடுகின்ற மடைவாசலிற் காத்திருக்கின்ற கொக்கைப் போல வணங்கி இருப்பவர்கள் ஊழிக்காலம்வரை அழியாமல் இருக்கலாம்.[560]

புலன்களால் அளிக்கப்பட்ட உடலை ஐம்பூதங்களில் ஒடுக்கி, அவ்வைம்பூதங்களையும் சித்தம் முதலானவற்றில் சென்று ஒடுங்க, ஆராயப்பெற்ற அம் மனம் முதலிய அகக்கருவிகள் நான்கும் சுத்தம் முதலான தன் மாத்திரை ஐந்தில் ஒடுங்க, ஆன்மா தனித்துத் தற்பரம்பொருளாகிய சிவத்தோடு ஒன்றியிருப்பதே தாரணையாகும்[561] எனத் தாரணையை விளக்கிக் கூறுகின்றார்.

## தியானம்

தியானமாவது ஒன்றையே உண்ணுதலாகும். வேறொன்றிலும் சென்று பற்றாது, பற்றற்றான் பற்றினையே பற்றி நிற்குமாயின் அது தியானமாகும். அத்தியானம் சகுனம், நிர்க்குணம் என இரண்டு வகைப்படும்.

## சகுனம்

சகுனமாவது இருதய கமத்திலாவது, புருவ நடுவிலாவது, துவாத காந்தத்திலாவது தனக்கு விருப்பமான தேவதையின் மூர்த்தியினைக் குருவினால் உபதேசிக்கப்பட்ட இலட்சணத்தோடு அந்நிய பாவமாகவேனும், அரந்நிய பாவமாகவேனும் தியானித்தல், விராட்டு விசுவயோகத் தியானித்தல், இரணிய கர்ப்ப வடிவமாகத் தியானித்தல், ஆறாதாரங்களில் வாயுவோடு மனத்தைச் செலுத்தி அவ்வாதாரங்களுக்குரிய மூர்த்திகளைத் தியானித்தல் என்று பல வகையிற் குறிக்கப்படும்.

## நிர்க்குணம்

நிர்க்குணம் தியானமே சத்தியமும் பரப்பிரம்மமும் சகல சம்சாரத் திற்கும் மருந்தும், விருபாட்சரும், யோகீசுவரருமாகிய மகேசுரனை அவரே நான் என்று ஆதரவோடு தியானித்தலும், அசலமும் நித்தியமும், ஆதியந்தமில்லாததும் ஆகாயமில்லாததும், பரிசிக்கப் படாததும், பார்க்கப்படாததும், சுவை மணமில்லாததும், பிரமாணங் கலாளறியப்படாததும், உவமிக்கப்படாததும் ஆகிய பிரம்மத்தினை (அதுவே) நானென்று தியானித்தலும் ஆகும்.

பூதம் ஐந்து, புலன் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, மாயை ஒன்று, சீவன் ஒன்று ஆகப் பதினாறு தத்துவங்களும் புத்தியில் ஒடுங்குவது தியானம் என்பர்.[562]

இவ்வொடுக்கநிலை அனுபவங்களில் ஒன்றே நாதங்களைக் கேட்பது. மணி, கடல், யானை, குழல், வண்டு, தும்பி, வளை, பேரிகை, யாழ், மேகம் எனப் பத்துவித நாதங்களைக் கேட்க இயல் வதோடு அன்றி, அவற்றைப் பார்க்கவும் கூடும் எனத் திருமூலர் கூறுவது பெருத்த வியப்புக்குரியதொன்றாக உள்ளது. இந்நாதங் களைக் கடந்த நிலையே நாதாந்த நிலையாக உள்ளது.[563]

## சமாதி

சமாதியாவது உயிரும் இறையும் இரண்டற ஒன்றிச் சங்கற்ப விகற்பங்கள் அற்று இருக்கும் நிலையாகும். சமாதி என்பது இயம முதலான எட்டு உறுப்புக்களிலும் சித்தி பெறுதலாகும். இந்த யோக உறுப்புகளிலும் நிலை பெற்றோர்க்கு இவை சித்திக்கும். மூச்சைக் கட்டுப்படுத்தும் பிராணாயாமமே இவ்யோக நிலையில் உயிர்நாடியாக விளங்குவது. இயல்பாகப் பன்னிரண்டங்குலம் சென்று நான்கு அங்குலம் வெளிப்போந்து எட்டங்குலம் தங்கும். இப்பன்னிரண்டையும் தேக்கினால் எட்டுச் சித்தியும் கூடும் எனவும், இதனைப் பன்னிரண்டு ஆண்டு பயிலவேண்டும் எனவும் கூறினார்.[564]

ஏழாண்டுப் பயிற்சியினால் பெருங்காற்றிலும் விரைவாக அளவிலாதத் தொலைவு நடத்தல் கூடும். எட்டாண்டுப் பயிற்சியினால் நரை திரைகள் தோன்றா. ஒன்பதாண்டுப் பயிற்சியினால் தூமாயை உடம்பாகும்.[565] பத்தாண்டுப் பயிற்சியினால் உருத்திரனாவான். பதினோராண்டுப் பயிற்சியினால் எண்வகைப் பேறும் (சித்தி) கிட்டும். பன்னிரண்டாண்டுப் பயிற்சியினால் மேலேழ் கீழேழ் புவி சென்று வியாபித்தல் கூடும்.[566]

இனி, யோகத்தினால் பெறலாகும் எட்டுச் சித்திகளாவன: அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பனவாகும்.

அணிமா[567] - பஞ்சியினும் மெல்லியதாக ஆதல்; ஓர் ஆண்டில் கைக் கூடுவது.

மகிமா[568] - ஓராண்டில் உள்ளங்கையில் உள்ள பொருள் போலக் கலந்திடும். பருமையான பொருளாதல்.

கரிமா[569] - கூடுவிட்டுக் கூடு பாய்தல். ஓர் ஆண்டில் கைக்கூடும்.

லகிமா[570] - நடக்கின்ற ஐந்து ஆண்டுகளுக்குள் மிக்க மென்மையாகியசித்திக்கும். (லகிமாவினால் எல்லாவற்றிற்கும் மேலாக ஒளிப் பொருளாகிய சிவ பரம்பொருளைத் தரிசிக்கும்.)

பிராப்தி[571] - விரும்பின எய்துதல். ஓர் ஆண்டில் கைக்கூடும்.

பிரகாமியம்[572]-எங்கும் கூட்டமான விளக்கொளியாய்த் தரிசித்திருப்பவர்களுக்கு மேலான பரசிவவொளியும் அதனாற் கிடைக்கும் வீடும் மிக எளிதாகும்.

ஈசத்துவம்[573]-ஓராண்டு யோகம் செய்யின் பழமையான ஈசத்துவம் எய்தலாம். ஈசத்துவம் அடைந்த யோகி படைக்கவும், காக்கவும், அழிக்கவும் வல்லவனாவான்; தானே சிவமாய்த் தண்ணளி யோடிருப்பான்.

## வசித்துவம்[574]

உடல் பொன்வண்ணமாக, புலன்கள் வலியொடுங்கிப் போக, நன்மை விளைதற்காக நல்ல கொடிபோலும் சக்தியைக் காண்பான். அழகிய உண்மைப் பொருளானது கைக்கூடிய பின், நினைத்த இடம் செல்லத்தக்கப் பேரருள் ஆற்றல் தானே வந்து பொருந்தும்.

அட்டாங்க யோகத்தை அடுத்துக் கேசரியோகம், பரியங்கயோகம், சந்திரயோகம் என்ற மூன்று பகுதிகளைக் குறிக்கிறார்.

## கேசரியோகம்

கேசரி என்பது காயம் என்றும், சிங்கம் என்றும் பொருள் பெறும். கேசரி யோகமாவது சிங்கத்தைப் போன்று மேல்நோக்கிப் பார்வை செலுத்தியிருப்பதாகும். இவ் யோகத்தால் சீவன் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் ஆற்றலைப் பெறுவதால் இது கேசரியோகம் எனப் பெறுகிறது என்றும் கூறுலாம்.[575]

உடல் கட்டவும் தளர்ந்து கீழே தொங்கி விழாதவண்ணம் அண்ணாக்கில் கட்டி அடுப்பாகிய குதத்தை அணைகோலி, புட்ட மாகிய பின்பக்கத்தை அணையில் மேற்பூட்டி, உடலாகிய மேற் பையைக் கால்களைப் பின்னி மடக்கி, நேராக நிமிர்ந்திருக்க இறப்பில்லை என்பார்.[576] நாவை மடக்கி நிலவமுதம் பருகுவதைப் பாடல்களில் கூறுகின்றார். பிறகு பொதுவாக யோகத்தைப் பற்றியும் கூறுகின்றார்.[577]

நன்மை எழும்புகின்ற நாதத்தினிடமாக, நல்ல தீபத்தை வைத்தால், ஆன்மாவாகிய தன்னிடம் எழுகின்ற கோயிலில் இறைவன் குடியிருப்பான்[578] என்று கேசரியோகத்தின் பயனைத் திருமூலர் குறிக்கின்றார்.

## பரியங்கயோகம்

முழந்தாள் இரண்டின்மேலும் கைகளை நீட்டிப் படுத்துக்கொண்டு போகித்த லாகும். பரியங்கம் - கட்டில். கட்டில்மேல் இருந்து போகித்தலையே போகமாகச் செய்யும் உபாயம் இதுவாகும். அதாவது கட்டிலில் பெண்ணோடு கூடியிருந்து செய்யும் யோகமே பரியங்க யோகமாகும்.

யோக நிலையில் குண்டலினி சக்தியோடு கூடுகின்ற தன் தத்துவம் ஒவ்வோரங்கங்களிலும் விந்து பரவுகின்ற போகத்திலே, அவ்விந்து சிதறாவண்ணம் கலந்து, தம்மிலே தங்கும்படியாகச் செய்ய அவ்யோகி சிவமாவான். இங்ஙனம் நாதமாகிய சிவமும், விந்துவாகிய சத்தியும் கூடிய நிலையை யோகக் காட்சியில் காண்டலே பரியங்க யோகமாகும். இதுவே நாத விந்துக் கலப்பு என்று கூறுவார் திருமூலர்.[579] இப்பரியங்க யோகத்தைப் பற்றிச் சுமார் 20 பாடல்களில் திருமூலர் விரித்துரைக்கின்றார். இதனை அடுத்துவரும் அமுரி தாரணை என்ற பகுதியைப் பரியங்க யோகத்தோடு பெரிதும் இணைத்துக் கூறியுள்ளார். மதி மண்டலத்து விளங்கும் சிவசக்தி களோடு ஆன்மாவாகிய தன்மையும் கலக்கப் பழகுவார் நெடுங்காலம் வாழலாம்[580] என்கின்றார்.

## சந்திரயோகம்

சந்திரயோகம் என்பது சந்திரனை உடம்பில் விளங்கச் செய்யும் என்றபடி புறத்தே சந்திரன், சூரியன், அக்கினி முதலிய ஒளிப் பொருள்கள் இருப்பன போன்று அகத்தேயும் உண்டு.

திங்களுக்குரிய கலைகள் பதினாறு. ஞாயிற்றுக்குரிய கலைகள் பன்னிரண்டு. தீயினுக்குரிய கலைகள் பத்து. இவற்றை அகமுகப் பயிற்சியில் தெளிந்து நடுநாடியின் வழியாக மேல்நோக்கிச் செலுத்தினால் இதன்பயனாக உடம்பு எழிலுடன் விளங்கும்.[581]

மூலாதாரத்தில் புருடனோடு பொருந்திய சூரிய சந்திர ஒளிகள் சுழுமுனை வழியாகப் பின்னி, மேலே சென்று, நட்சத்திரங்கள்போல் விளங்கும்.[582] நான்காம் தந்திரத்தில் காணப்படும் நவகுண்டம் என்னும் பகுதியும் யோகம் பற்றியதே என உணரலாம். குண்டம் என்பது யாகம் செய்தற்குரிய இடம். மூலாதாரத் தீயினால் செய்யும் ஆதார யோகமே யாகம் எனச் சித்தர்கள் குறிப்பிடுவர். இதனை 1005, 1200 ஆம் பாடல்களால் தெளிவாக அறியலாம். இங்ஙனம், திருமூலர்

அட்டாங்க யோகம், அட்டமா சித்தி, கேசரியோகம், பரியங்கயோகம், சந்திரயோகம் ஆகியவைபற்றி விரிவாகக் கூறி யோகத் தத்துவத்தை விளக்குகின்றார்.

## ஞானம்[583]

ஞானம் அறிவதால் ஒருவனுடைய அறிவு பூர்த்தியாகிவிடுகிறது. அதை அறிவதுதான் ஞானம் எனப்படும். ஞானத்தில் சிறந்த அறநெறி ஒரு நாட்டிலும் இல்லை. ஞானத்தில் சரியை முத்தியை விரும்புதல், ஞானத்திற் கிரியை முத்தியை விரும்புதல், ஞானத்தில் யோகம் நாதாந்தமாகிய பிரமாத்திரத்தில் சோதி தரிசனமாதல், ஞானத்தில் ஞானம் பற்றறுதல் என ஞானத்தின் நான்கு நிலைகளைக் குறிப்பிடுகின்றார். ஞானிக்கு உடனாய குணமாக ஞானத்தில் சரியை, ஞானத்தின் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என்ற நான்காகும்.

சிவயோகம் பாவனையாவது, இயல்பான சித்தாகிய சிவத்தோடு மறையினின்று நீங்கிய சித்தாகிய உயிர் ஒன்றிச் சிவமே யான் என்று இருக்கும். ஞானிகள் சிவபிரானது திருவடி ஞானம் பெற்ற சிவ ஞானச் செல்வர்களாவர். ஞானத்தால் சிவயோகம் பெறுவர்; நேயமும் பெறுவர். ஞானத்தைப் பெற்றுத் தெளிந்துணர்ந்தோர்க்கு எல்லா இன்பங்களையும் தரும். ஞான சமயம் முதலியன முறையே ஆன்ம தரிசனம், சிவ தரிசனம், சிவபோகம், சிவயோகம் என்பன.

சிவனருளால் தேவரும், தெய்வத்தோடு ஒப்பார். அவர் வினையைச் சேராது சிவனருளால் சிவவுலக வாழ்வு சேர்வது உறுதி யாகும். சிவவொளியின்கண் தன் ஒளி அடங்கி ஆவியும் தன் ஒளியைக் கண்டு இன்புறும். அதனால், தான் அவன் என்ற பாவனை ஒழிந்து சிவோகம் அடையலாம்.

## நான்கு மார்க்கம்

சரியை, கிரியை, யோகம், ஞானம் இவற்றால் பெறுகின்ற நான்கு மார்க்கங்களைப் பற்றியும் ஆராய்கின்றார்.

சரியை - தாச மார்க்கம் -அறிமுகமில்லா அடிமையாய்த் தொண்டு செய்தல்.

கிரியை - தற்புத்திர மார்க்கம் (உறவுடன் தொண்டு செய்தல்)

யோகம் - சகமார்க்கம் (உரிமையுடன் பழகிப் பெறுவது)
ஞானம் - சன்மார்க்கம்-(வேற்றுமை இன்றிக் கலத்தல்)

## சன்மார்க்கம்[584]

மார்க்கமாகிய சன்மார்க்கத்தின் நிற்கும் சன்மார்க்கிகள் இறைவனை அணுகிக் கலத்தல் சன்மார்க்கமே யாகும். ஆன்மா பாசத்தினின்று பிரிந்து பதியோடு சேர்ந்து சிவயோக நிலைபெற்று சமாதி கூடியிருத்தலே சன்மார்க்கமாகும். பாவம், ஆன்மம், மாயாமலம், பாச ஞானம், பேதாபேதம், ஆன்மாவாகிய தன்மையும் கண்டவர்களே சன்மார்க்கத்தோர். அவனே தானே ஆகிய அந்நெறியில் ஏகனாகி இறைப்பணியில் நிற்றல் சன்மார்க்க மாகும். இறைவனைத் தரிசித்தல் முதலாயின செய்து குருபத்தி செய்வார்க்கு முக்திப் பயனைத் தரும் சன்மார்க்கம் தானே கிட்டும். சன்மார்க்கமாகிய ஞானநெறி குரு வழியாகப் பெறத் தக்கது. சிவயோகத்தில் நிலைத்த சித்தம் உடையராய், எமனை வென்ற இறைவனது திருவுள்ளக் குறிப்பை உணர்ந்தவர்கள் பற்றும் நெறியாகும். சன்மார்க்கமாகிய நன்னெறி, தாடலையாக அடங்கியிருக்கும் நெறியாகும்.

சன்மார்க்கமாக அமைந்த நெறிகள் தீயநெறிகளை அகற்றிவிடும். நன்மார்க்கத்தால் நல்லொழுக்கம் கிட்டும். அச் சன்மார்க்கத்தைக் காட்டிய தேவியும் சத்தியே யாவாள். மக்கட்கு மிகக் கூரிய புலனுடைமை நுண்ணறி வாகும். அவ்வறிவிற்குப் பின்னிருந்து நுண்ணறிவை யியக்கும் அறிவு இறைவனை யறியும் இறைவன் அருளிய ஞானமாகும். அத்தடமே உயிர்கள் செல்லும் நெறியாகும். சிவகதி சேர்வார்க்குரிய நெறி சன்மார்க்கமே யாகும் எனச் சன்மார்க்கத் திற்கு விளக்கம் தருகின்றார் திருமூலர்.

## சகமார்க்கம்[585]

இது தோழமை நெறியாகும். இறைவனால் தோழனாக ஏற்றுக் கொள்ளப் பெற்று, என்றும் அவனை நீங்காது, ஒழுகும் யோக நெறியாகும். சகமார்க்கமே சன்மார்க்கமாவது. போக சமாதியை விரும்புகின்றவர் சித்தர்களே ஆவார். யோகிக்கு இம்மை யின்பமும் மறுமை யின்பமும் சித்திக்கும்.

## சற்புத்திர மார்க்கம்[586]

இது நன்மக்கள் நெறி. நன்மக்கள் எங்ஙனம் இருமுது குரவர் பணிவழி நிற்பார்களோ அங்ஙனம் சிவப்பணி வழி நிற்பார் சற் புத்திர ராவர். சகமார்க்கத்தினை நிலை நாட்டுவது சற்புத்திர மார்க்கமாகும். அஃதாவது, சகமார்க்கத்தின் முன்நிலை எனலாம். பூசித்தல், வாசித்தல், போற்றல், செபித்தல், நற்றவம் புரிதல், அழுக்காறின்மை, வாய்மை முதலியன செய்தற் சற்புத்திர மார்க்க நிலையாகும். சிவோகம் ஒத்தவன் ஏழுலகங்களிலும் ஒத்து ஒருசேர விளங்கியவ னாவன்.

## தாசமார்க்கம்[587]

அடிமைபோல இறைவனைவிட்டு அகலாது அவன் குறிப்பின்வழி ஒழுகும் நெறியாகும். ஆலயங்களில் விளக்கிடுதல், பூக்கொய்தல், மெழுகுதல், துதித்தல், மணியடித்தல், திருமஞ்சனங் கொண்டு வருதல் முதலிய தொண்டு செய்வது ஆகும். உள்ளமுருகி வணங்கிச் செய்வார்கட்கே இறைவன் வெளிப்பட்டு அருளுவன்.

## நான்கு பேறு

சாலோகம் என்பது இறையுலகில் இருக்கும்பேறு. சாமீபம் என்பது அவனருகில் இருக்கும் பேறு. சாரூபம் என்பது அதனை யொத்த நிலையைப் பெறும்பேறு; சாயுச்சியம் என்பது அவனின் கலக்கும் பேறு.[588]

## சாலோகம்[589]

சரியையாகிய தாச மார்க்கத்திலே நின்றார் அடையும் பேறு சாலோகமாகும். சமயம், விசேடம், நிர்வாணம், சமயாபிடேகம் முதலிய நான்கு தீட்சைகளும் பெற்றவர்கள் உள்ளத்தைக் கோயிலாகக் கொள்வர்.

## சாமீபம்[590]

உயிரைச் சாலோபம், பாசம், அருளாய் உபகாரப்படுத்துவது சாமீபம் என்பர். பாசம் வருத்தும்நிலை கடந்த நிலையே சாமீபம் என்பதாகும்.

## சாரூபம்[591]

யோகமாகிய சகமார்க்கத்தினின்று எய்தும் முத்தி இறைவனைப் போன்று உருவம் பெறுதலாம். குருவைச் சார்ந்து உயிர் சிவமாதல் எனப்படும்.

## சாயுச்சியம்[592]

சாயுச்சியமே சைவம். அது சிவத்தோடு கூடியிருத்தலும், இரண்டறக் கலத்தலும், இன்பமே யாதலும் என்று உணரப்படும். ஆனந்தசக்தி - சிவமாய்ச் சிவானந்தத்து அழுந்துதலாகும். மூவாயிரம் ஆண்டிருந்து கைலை சேர்ந்தார் எனப்படுவதால் இவர் மீண்டும் இமயமலை சென்றார் என்பதைக் காட்டிலும் சாயுச்சிய நிலை பெற்றார் என்பது பொருத்தமாக இருக்கும்[593] என்று இரா. மாணிக்கவாசகம் கூறுகின்றார்.

திருமூலரின் கருத்துகளைக் கூர்ந்து ஆராயின் கீழ்க்காணும் உண்மைகள் விளங்கும். மேற்காட்டிய சரியை முதலிய நான்கும், தாசமார்க்கம் முதலிய நான்கும், சாலோகம் முதலிய நான்கும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையன. தாச மார்க்கம் முதலியன நான்கும் இறைவனை அடையும் நான்கு மார்க்கம் ஆகும். இவை மார்க்க சைவம் எனப்படும்.

இங்ஙனம், மார்க்க சைவத்தின் இயல்பை விளக்கிவிட்டு, அடுத்த நிலையாகச் சித்தாந்தத்தின் முக்கிய சத்திநிபாதம் என்பதைக் குறிக்கின்றார்.

## சத்திநிபாதம்

இறைவனின் அருள் மிகுதி பெறுதல், சக்தியின் அருள் வீழ்ச்சி என்பது பொருள். இதனை நான்கு நிலைகள் உடையனவாகக் கூறு கின்றார். மந்ததரம், மந்தம், தீவிரம், அதிதீவிரம் என்பன ஆகும்.

அசி (ஆகின்றாய்) பதம் சேராவிடத்துத் தத் (அது) பதமும் தொம் (நீ) பதமும் தனியாகவே நிற்கும். அசிபதம் சேரும்போதுதான் சத்திநிபாதம் கைக்கூடும். அத்திருவருள் வீழ்ச்சியால் சிவபேத மில்லாமல் இறைவன் கலந்து நிற்பான்.[594]

## மந்ததரம்[595]

அதிக தாமதம், அருட்சக்தியானவன் அஞ்ஞானமுள்ள ஜீவனைக் கூடி அறியாமை நீக்கித் தெளிவுண்டாக்கித் தன்னிடத்தில் பேரன்ட கொள்ளும்படி செய்து அவனிடத்துச் சிவமணங் கமழச் செய்தல். அமுத சாகரம் இறைவனின் திருவடி ஞானத்தை உணர்கின்றவர் களுக்குக் கிடைக்கும். இத்தெளிவுடையாருக்கே சிவஞானமானது உள்ளத்தே நின்று ஒளிவிடும். உயிரின் மல இருளைப்போக்கி, அவ்வுயிரினுக்குப் பல பிறவிகளையும் கொடுத்துச் செலுத்திக் கிரியா சத்தியானவள், திருவருள் நீங்காதபடி உடனிருந்து அருள்புரிவாள்.

## மந்தம்[596]

தாமதம், மெழுகாவது வெயிலில் உருகுவது போல்வது. ஆருயிர்கள் தன்னிடம் விருப்பம் கொள்ளும்படி செய்பவளும், மலப்பிணிப்பால் மாயையின்கண் மயங்கிக் கிடந்த மயக்கினை நீக்கியவளும் வினையை அறுத்துத் திருவடி இன்பத்தை விளைத்தவளும், நன்மைகள் பலவற்றையும் காட்டித் திருவருள் வண்ணமாகிய சிவஞானத்தினைப் பதித்தருளியவளும் அத்திரு வருள் சக்தியே யாகும். மந்த சத்திநிபாதமுடையார் சிவமே பரம்பொருளெனக் கொண்டு பத்தி செய்யவேண்டும். சிவமே பரம்பொருள் என்றுணர்தலால் நற்பேறு எய்தலாம். திருவருட் சக்தியின் வீழ்ச்சி பெற்றவர்களானால் வீட்டின்பம் கிட்டும். தன்னிடம் நிலைபெற்றுத் தரிசித்தார்க்கு அறியாமையாகிய இருள்நீக்கி நின்றான்.

## தீவிரம்[597]

உறைப்பு, நெய்யானது சூட்டில் இளகுவதுபோல்வது நெஞ்சகத் திருக்கும் எல்லா வினைப்பயன்களையும் திருவருட் சக்தியானவள் நீக்குவாள். நீக்கம் பெற்றதும் சிவம் கண்முன்னே தோன்றும். சக்தியே தம்மையே பூசிக்கும் அடியார்களுடைய பிறப்பை அறுத்துச் சரியை முதலான பெருந்தவத்தை அளிப்பான்.

## தீவிரதரம்[598]

அதிதீவிரம், தைலதாரையானது சிறிதும் இடையறாது ஒழுகுதல் போல்வது. இருவினையொப்பு உண்டாகும். காலத்தில் திருவருட் சக்தியானவள் குரு வடிவாக வந்து, மயக்கக் குணங்களை நீக்கித் திருவடி ஞானத்தை அளிப்பாள். பசுவைப் பிடித்துப் பாசத்தன்மை ஒழிய தன்னை இழந்து, 'சிவன் அவன்' என்னும் நிலைபெறும்.

இங்ஙனம் மேலான நிலையைத் தரவே இறைவன் உயிரில் மறைந்து உள்ளான் என நான்கையும் பற்றிக் குறிக்கின்றார் திருமூலர். இதன்மூலமாக உயிர்கள் அருள்பெறுவதைக் கூறுகின்றார்.

## தீட்சை இலக்கணம்

தீட்சை என்றால் குருவழி பெறும் ஒளி. தீட்சை (தீக்ஷா) என்பது ஒரு வடமொழிச் சொல். தீ என்றால் தருதல். க்ஷா என்றால் நீக்குதல் என்பது பொருள்; அதாவது மெய்ஞ்ஞானத்தைக் கொடுத்து அஞ்ஞானத்தை நீக்குதலாகும். சமயம், விசேடம், நிருவாணம் எனத் தீட்சை மூன்று வகைப்படும்.[599]

## சமய தீட்சை

ஆத்ம சுத்தி செய்தல். அதன் பயன் தன் சுதந்தரம் கெடுதல்.

## விசேட தீட்சை

சிவனின் மந்திரங்களைச் சக்தி செய்வதாகும்.

## நிருவாண தீட்சை

கலைகளைச் சுத்தி செய்தல், இறைவனின் திருவருட் சத்தி நிலை பெற்ற ஞானநெறி அபிடேகமாகும்.[600] மேலும், திருமூலர் குரு ஸ்பரிச தீட்சை, யோக தீட்சை, ஞான தீட்சை ஆகியவற்றைப் பற்றி எடுத்துரைக்கின்றார்.

## குரு ஸ்பரிச தீட்சை

மாணவனின் தலையைக் குரு தொட, உலகமனைத்தும் மும்மலங்களும் அகன்று சிவகதி சேரும்.[601]

## யோக தீட்சை

யோகத்தின்மூலம் தீட்சை பெறுதல்பற்றித் திருமூலர்,

**"யோகச் சமயமே யோகம் பலவுன்னல்**
**யோக விசேடமே அட்டாங்க யோகமாம்**
**யோகநிர்வாணமே யுற்ற பரோதயம்**
**யோக அபிடேகமே ஒண்சித்தி யுற்றலே"[602]**

எனக் கூறுகின்றார்.

## ஞான தீட்சை

தீக்குணமுடையார் கால், தலை என்பதன் பொருளறிய மாட்டார். கால் என்பது இறைவனது அருளாகிய சக்தி என்பர் (அறிந்தோர்). அவ்வருளாகிய காரணத்தின் பகுதியினால் ஆன்மாவில் பொருந்தும் ஞானமே பண்புடைய தலையெனப் பெறும். இறைவனது சக்தி யாகிய திருவடி அத்தகைய ஞானத்தை உயிர்க்குக் காட்டியருள அவ்வான்மா வீடுபேற்றிற் குரியதாகும்.[603] சித்தர்களுடைய தீட்சை முறையிலே முதலாவது தீட்சையே மனம் என்ற இடத்தைக் காண்பது தான். மனம் எங்கே இருக்கிறது? இந்தச் சரீரத்திலே. அதனுடைய ஆணிவேர் எங்கே இருக்கிறது?[604] அதைக் கொல்லவேண்டும். இதுதான் இரகசிய தீட்சை. இதுவே ஞானதீட்சையினுடைய அடி யாகும் என்று மீ.ப. சோமு கூறுகின்றார்.

இங்ஙனம் தீட்சை பெறுவதால் இறைவன் என்றும் உயிரை விட்டுப் பிரிய மாட்டான் என்பதைத் திருமூலர் தெளிவுபடுத்து கின்றார்.

## ஆன்ம தரிசனம்

ஆன்மா தன்மையுணரும்போது தனு கரணங்களைத் தன்னில் வேறாகச் சடமாக உணரும். தனு கரணங்களே தான் என்று எண்ணுகிறபோது தனு கரணங்களே உணரப்படுவனவாகத் தன்னை யறியாததாகும்.[605]

## சிவதரிசனம்

ஆன்மா என்றும் சிவன் என்றும் பிரித்துணரக் கூடிய நிலையில் அவ்விரு பொருளும் வேறாய் நிற்றல் இல்லை. ஆன்மாவில் உணர்வினுள்ளே உயிர்க்குயிராகிய சிவனும் வெளிப்பட்டுத் தோன்றுவான். அம்முதல்வனைச் சிந்தித்தற் கருவியாகிய சிந்தை தெளிவு பெறும்படி சிவஞானத்தால் தெளிந்துணர வல்லார்க்கு அவர்தம் சிந்தையினுள்ளேயே சிவபெருமான் வீற்றிருந்தருள் கின்றான்.[606] சிவன் எழுந்தருளி வந்து அருள்தேன் வழங்கும் பரநனவு நிலையைக் கடந்தால் நின்மலம் தீர பரநிலை கைக்கூடும்.[607] ஆன்மா இறைவனின் திருவருளைப் பெறுவதைப் பற்றிச் சிவதரிசனம் என்னும் பெயரில் திருமூலர் குறிப்பிடுகின்றார்.

## சிவகுரு தரிசனம்

குருவினது அருளால் அல்லது துணையினால் பசுவானது தனது இயல்பையும் பதியினது இயல்பையும் அறிந்து, தன்னைச் சேர்ந்துள்ள அல்லது தான் சேர்ந்துள்ள பாசத்தை நீக்கிப் பதியின்பாதம் அடையும். இத்திருவடி நிலையே சிவமாக்கும்.[608]

இறைவனே குருவாக வந்து பசுவிடமிருந்து, பாச நிலையைக் காட்டி, அதனை நீக்கி யருள் புரிந்தான் என்பதாகும். குருவருளினால் பதி, பசு, பாசம் ஆகியவற்றின் இயல்பினை அறிந்துகொள்ளுதல் கூடும். அதனால் சித்தம் முழுமையையும் சிவமாம் நிலைபெறுவ தற்குத் தகுதியாகும். எனவே, குருவே சிவம் எனக் கொள்வதில் தவறில்லை என்னும் அரிய கருத்தை இப்பகுதியில் குறிக்கின்றார்.

"மூவாய் பசுபாச மாற்றியே முத்திப்பால்
யாவையும் நல்குங் குருபரன் அன்புற்றே"[609]

என இறைவன் உயிரையும், பாசமாகிய மும்மலங்களையும் மாற்றிக் குருபரனாக வந்து அருள் தருவான் என்று கூறுகின்றார்.

## சிவசொரூப தரிசனம்

உருவம், அருவம், அருவுருவம் என்று கொள்ளப்படும் பொதுநிலைத் திருவுருவங்கள் மூன்றும் கடந்து இன்ன தன்மைத்தென எவராலும் சொல்லவொண்ணாத இயற்கை உண்மை அறிவு இன்ப வடிவவினனாக என்றும் விளங்குபவன் சிவன். இதுவே செந்தமிழ்த் திருமறைபோதம் சிவன்றன் சிறந்த திருவுருவ மேன்மையாகும்.[610]

தனிமுதற் பெரும்பொருள் சிவன். அவன் இயற்கை உண்மை அறிவு இன்ப வடிவினன். சித்தமெனப்படும் இறப்பின்கண் நில்லாத சிவப்பேரின்பப் பேரொளி. திருவருட் செயலறலாகிய துரியம் சுத்தப்பிரமத்துரியம் எனப்படும். அத்துரியத்துள் செலுத்திய மற்றோர் செயலறல் உய்த்த துரியமாகும். அத்துரியத்துள் மிக்கப் பெரோளி யாக இருப்பவனும் அவனே. இத்துரியம் அருளோன் செயலறல் எனப்படும்[611] என இறைவன் சொரூப வடிவால் வந்து அருள் தந்தமை யைக் குறிப்பிடுகிறார்.

## சிவயோக நெறி

பூமியில் பிறந்து மக்கள் நெறியாகிய சரியை கிரியை யோகங் களினின்று பழகி எல்லாவற்றிலும் சிறந்ததான சிவயோகத்தில் தலைப்படும் விந்து சித்தியின் சிவயோகி தலைப்படும் முன்பு வச்சிர காயமாகிய அழியா உடலை அடையும்.[612] ஆன்மா சென்று கூடுத லாகிய யோகத்தின் வாயிலாகச் சிவமாகிய ஒளியோடு கலந்திருப்பதே யாகும்.[613]

## தவயோகம்

சிவயோக வாயிலாகச் சிவஞானம் பொருந்தி நிலை பேறுற்ற விளங்குபவர் தவயோகிகள்; அவர்கள் புவலோகத்தாற் போற்றப் பெறும் புண்ணியராவர்.[614]

## சிவபோகம்

ஆருயிர் நுகர்வாம் பேரின்பம். அதுவே சிவபோகமாகும். இந்நிலையில் பொன்னம்பலத்தில் ஆடும் திருக்கூத்தனைப் பேணித் தொழப் பெரும்பேறு கிடைக்கும்.[615] யோகி, மாதரைப் புணர்ந்தாலும் விந்து நழுவாது; போகமும் உண்டாகும். ஆனால், அப்போகம் சிவ போகமாயிருக்கும்.[616] உயிர்களின் நல்வினையும், தீவினைகளும் நீக்கிச் சிவன் தஞ்சம் அடைந்தோர்க்குச் சிவபோகம் தருவான்.[617]

## அணைந்தோர் தன்மை

இறைவனோடு இரண்டறக் கலக்கும் நிலையே அணைந்த நிலையாகும். அவ்வாறு தெள்ளத் தெளிந்தவர் சீவன் சிவலிங்கமாகக் கொண்டவர்களாவர். அந்நிலையை அடைந்தவர்களின் தன்மை யைப் பற்றித் திருமூலர் எடுத்துரைக்கின்றார்.

நந்தியாகிய இறைவனை ஞானத்தினால் அன்புகொண்டு தம் உள்ளத்தினால் பதித்தவர்களுக்கு மலமில்லை; மாசில்லை; மானாபிமானங்களு மில்லை; தன்னை அடையும் குணங்கள் இல்லை; நலமில்லை[618] என்று கூறுகிறார்.

அன்னையும் அத்தனும் யானும் மூவருமாய் உடனிருந்து அன்னையையும் அத்தனையையும் தான் புறந்ததாகக் கூறு கின்றார்.[619] பிறப்பு இறப்புகட்கு உட்படும் ஆருயிர் சிவனை மறந்த உயிர். அவ்வுயிர் சிவனை நினைப்பதற்கும் பிறவாமையிற் நினைப்பதற்குமாக நமன்முன் செல்லும்.[620] சிவபெருமானை வணங்கினால், முன்வந்த துன்பம் ஒழிந்து, சிவம் தானாக வந்து கூடும்[621] என்பனவற்றைத் திருமூலர் அணைந்தோர் தன்மைகளாகக் கூறுகின்றார்.

## பாசஞானம்

ஞான அனுபவம் முதிர்ந்த ஆன்மாக்களே திருவருளாகிய பாலைச் சொரிந்து, உலகத்தைச் செழிக்கச் செய்வர்; ஏனையோர் எவ்வளவு படித்திருந்தாலும் வறட்டுப் பசுக்களே யாவர் என்பதாகும்.[622]

## சிவஞானம்

புவனங்களில் போகங்களைத் துய்க்கும் உயிர்களைச் சிவத்தோடு சேர்த்துச் சிவத்தை நுகரும் அறிவாற்றலை அறிந்தா லல்லது உயிர்கள் உலகப் பற்றைவிட்டு உய்யமாட்டா என்றும்,[623] பொறிகளை அறிவென்னும் அங்குசத்தால் அடக்கி, ஞானவிளக்கை ஏற்றி, அறிவினுள் புகுந்து, தடையான உடலை மயக்க உணர்வுற நோக்கினால், வீடெய்தல் எளிதாகும் என்றும்[624] சிவஞானம் எய்தல் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

## சிவானந்தம்

தவமாகிய பராவத்தைப் பழகியதால் சத்திநிபாதமும் சிவ கருணையும் சேரச் சிவானந்தத்தில் திளைக்க முடியும். உள்ளம் உருகிச் சிவமாகிய சமாதியில் சேர்வதே சிவானந்த மாகும்.[625]

"அளியும் அருளந் தெருளுங் கடந்து
தெளிய அருளே சிவானந்த மாமே"[626]

என்று அனைத்தையும் கடந்த அருள்நிலையே சிவானந்தமாகும்.

பேரின்பத்தை நுகர்ந்துவிட்டுச் சிவனடிப் பேறாகிய பரமானந்த சித்தியை விளைவிக்கும் சிவானந்தத் தேனாகும்[627] எனச் சிவானந்தத்தை அடைதல் பற்றித் திருமூலர் கூறுகின்றார்.

# நந்திதேவர் பாடல்களில் சித்தாந்தம்

இவர் சிவனுக்கு மாணவராக இருந்தவர் என்றும் சந்தானக் குரவர்களாகிய சனகர், சனந்தனர், சனதனர், சனற்குமாரர் முதலியோருக்கு முதற் குருவாக விளங்கினார் என்றும் அபிதானகோசம்[628] என்னும் நூல் கூறுகின்றது. நந்தி என்ற பெயர் சிவனுக்கு இருக்கும் 66 பெயர்களில் ஒன்று என்பதைச் சூடாமணி நிகண்டு[629] என்னும் நூலினால் அறியலாம்.

"நந்தி அருளாலே நாதனாம் பேர்பெற்றோம்
நந்தி அருளாலே மூலனை நாடினோம்
நந்தி அருளாவ தென்செய்யும் நாட்டினில்
நந்தி வழிகாட்ட நானிருந் தேனே"[630]

எனத் திருமந்திரத்தில் வரும் குறிப்புக்கொண்டு நோக்கினால் திருமூலரது குருவின் பெயர் நந்தி என்பது விளங்குகின்றது.

"தலைமிசை வானவர் தாழ்சடை நந்தி"[631]

"நாடும் உறவுங் கலந்தெங்கள் நந்தியைத்
தேடுவன் தேடிச் சிவபெரு மான்என்று"[632]

என்று திருமந்திரத்தில் வரும் குறிப்புகளை ஆராயின், உறுதியாக நந்தி எனக் குறிப்பது சிவனையே என்பது புலனாகும். நந்திதேவர் என்னும் பெயருடைய சித்தர் திருமூலர், கொங்கணர் முதலியோர் பாடும் நந்தியினும் வேறானவராக இருக்கலாம். நந்திதேவர் சாத்திர நூல்களின் காலத்திற்கு முற்பட்ட சித்தா என்பது இவர் சிவனுக்கு மாணவராக இருந்தவர் என்பதாலும் சந்தானக்குரவர்களுக்குக் குருவாகவும் இருந்தவர் என்பதாலும் அறியலாம்.

பெரிய ஞானக்கோவையில் நந்தீஸ்வரர் எழுதிய பன்னிரண்டு பாடல்கள் காணப்படுகின்றன. முதல் ஆறு பாடல்களும் விக்னேசுவரன், முருகன், சிவன், சக்தி, விஷ்ணு இறைவர்களுக்குரிய பூசைமுறைகளையும், 7 ஆம் பாடல் கிரேசக பூசையையும், 8 ஆம்

பாடல் பூரக பூசையையும், 9 ஆம் பாடல் கும்பகப் பூசையையும், 10 ஆம் பாடல் சூரிய பூசையையும், சந்திர பூசையை 11 ஆம் பாடலும், சனிப் பூசையை 12 ஆம் பாடலும் விளங்குவனவாக அமைந்துள்ளன.

நந்திதேவர் இறைவனின் உயர்ந்த நிலைபற்றியோ, இறைவனை யோக நிலையில் அடையும் வழிபற்றியோ கூறவில்லை. இவருடைய பன்னிரண்டு பாடல்களும் மந்திர உச்சாடனம் செய்து இறைவனைப் பூசை செய்கின்ற முறையைக் குறிக்கின்றன. இவை இறைவனை அடைவதற்கான வழிகளுள் சரியை, கிரியை ஆகியவற்றை விளக்கும்.

## விக்கினர் பூசை

விக்கினர்க்குப் பழம், தேங்காய், அவல், வடைகளோடு மன மடங்கி, மலர்களை இட்டுப் பூசை செய்தால், அவரின் அருள்கிட்டும் என்று கூறுகின்றார்.

## சதாசிவ பூசை

**நமசிவாய கிம்** என்னும் மந்திரத்தைப் பூரணத்தில் இருத்திக் கொண்டே தூப நைவேத்தியத்தோடு சதாசிவத்தைப் பூசை செய்தால் கேட்டதைத் தருவார்.

## சக்தி பூசை

மனத்தைச் சக்தியின்பாற் இருத்தி மலர்கள், பால், பழங்கள் இவற்றால் பூசித்தால் தேவியின் திருவருள் கிட்டும்.

## திருமால் பூசை

திருமாலுக்கு வாசனைத் திரவியங்கள், மலர்களைக்கொண்டு இசையோடு விஷ்ணு பூசை செய்தால் கேட்டதெல்லாம் தருவார்.

## சண்முக பூசை

மந்திரத்தைச் சொல்லி மலர், வாசனைப் பொருள்களை வைத்து அனாகத்தில் சண்முகனுக்குப் பூசை செய்து வரங்கள் கேட்கும் வழியினையும் கூறுகின்றார்.

### பூரகத்தில் பூசை

இப்பூசையில் இரேசகத்தை வசியமாக்கும் பூசையினை விளக்குகின்றார். முறையாகப் பூரகத்தைப் பூசித்தால் வளமாக விஷ்ணு நல்வரங்களைத் தந்தருளுவார்.

### கும்ப பூசை

கும்பத்தை மனத்தால் வேண்டிப் பூசை செய்தால் வேண்டிய வரங்களைக் கொடுப்பார்.

### சூரிய பூசை

சூரிய பூசை செய்தால் எண்வகையான நலன்களையும் பெற்று வாழலாம்.

### சந்திர பூசை

சந்திர பூசை செய்யும்போது பால், பழம், பாயசம் வைத்துத் தூப தீப நைவேத்தியம் செய்து சந்திரனைத் தோத்திரித்தால் வேண்டிய வரம் தருவார்.

### சனி பூசை

சனி பகவானை மனத்தில் நினைத்துத் தோத்தரித்துத் தூப நைவேத்தியத்தோடு வேண்டினால் வேண்டிய வரங்கள் பெறலாம்[633] எனக் கிரியைகளாகிய பூசை பற்றி நந்திதேவர் சித்தாந்தக் கருத்திற்கேற்பக் கூறுகின்றார். இவருடைய பாடல்கள் புறக்கிரியை யாகிய பூசையைப் பற்றிக் குறிப்பிடினும், சித்தர்களின் அகப்பூசையை விளக்குவனவாகவே உள்ளன.

## பாம்பாட்டிச் சித்தர் பாடல்களில் சித்தாந்தம்

பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள் பதி உண்மை, பாசம், நால்வகை நெறி ஆகிய சித்தாந்தக் கருத்துகளைப்பற்றி எடுத்துரைக்கின்றன.

### பதி உண்மை

பாம்பாட்டிச் சித்தர் கடவுள் கொள்கையுடையவர் என்பது அவர் பாடல்களிலிருந்து அறியலாம். அப்பாடல்கள் கடவுள் ஒருவனே என்றும், அவன் பல்வேறு உருவத்தன் என்றும் உணர்த்துகின்றன.

## மெய்ப்பொருள்

மெய்ப்பொருளின் குறிகண்டு விருப்பை அடையவேண்டும் என்றும், பராபரமாகிய இறைவனைச் சேரவேண்டும் என்றும்[634] பாம்பாட்டிச் சித்தர் உணர்த்துகின்றார்.

## ஆதிதேவன் (இறை)

அண்டங்களையும் பிண்டங்களையும் தந்தவன் ஆதிதேவனாகிய இறைவன்.[635] அவன் அருவாயும், உருவாயும் அந்தியாயும் அந்தமாயும் ஒளியாயும் ஆகமமாயும் திருவாயும் குருவாயும் சீவனாயும் இருக்கின்றவன்[636] என்பதையும் கூறுகின்றார்.

## பரம்பொருள்

நாம் இவ்வுலகத்தில் பிறப்பினைக் கடந்துவிடவேண்டும். அவ்வாறு கடந்தால் தற்பரம் கடந்துவிடலாம் என்பதைக் குறிப்பிடுகின்றார்.[637]

## குரு வடிவம்

இறைவன் குருவாகவும் விளங்குகின்றான் என்பதைப் பாம்பாட்டிச் சித்தர் இறைவன் குருவென்னும் ஆசானின் உரு வெடுத்துக் குறியான ஞானத் துப்பாக்கியாக்கி, அருளென்னும் அருளையே உண்டையாக்கி, ஆனந்தமாகவே அதைக் கடந்து, மருளென்னும் மாதர் மனநெறியைத் தொட்டு வாங்காமல், எரிந்திட நெட்டையிட்டுப் பருவளைக்குள்ளேயே பட்டதென்றே பற்றானைப் பற்றி நிற்கவேண்டும்[638] என்று கூறுகின்றார்.

## ஈசன் - சிவன்

ஈசனாகிய சிவன் எள்ளில் எண்ணெய் போன்று உயிர் எங்கும் நிறைந்து காணப்படுகின்றான்.[639] காலனுக்குக் காலனாக விளங்குகின்றான்.[640] அண்டமெல்லாம் நிறைந்திடும் அற்புதச் சித்தன், காயமில்லாது ஓங்கி வளர்ந்த சித்தன், கண்ணுள் ஒளியா யினன் என்று சிவனைச் சித்தனாகக் கூறுகின்றார் பாம்பாட்டிச் சித்தர்.[641]

சிவன், திருமால், பார்வதி ஆகிய கடவுள்பற்றிப் பாம்பாட்டிச் சித்தர், குற்றமற்ற சிவனுக்குக் குண்டலமாகவும், திருமாலுக்குக்

குடையுமாகவும், கற்றைக் குழல் பார்வதிக்குக் கங்கணமாகவும் பாம்பு திகழ்கின்றது என்று கூறுகின்றார்.[642] மேலும்,
மாயனுக்குப் படுக்கைக்கு வண்ணப் பாயாகவும், சங்கரனுக்கு ஆபரணமாகவும் விளங்குகின்றான் என்று கூறுகின்றார்.[643]

## விந்து

பாம்பாட்டிச் சித்தர் இறைவனின் உருவ வேறுபாடாகிய விந்துபற்றி,

"மூலத் தலத்திலே நின்று கருத்தை
முற்றுஞ் சுழுமுனை தன்னில் ஊடே
மேலத் தவத்திலே விந்து வட்டம்
வேலை வழியிலே மேவி வாழும்
பாலத் திருத்தாயக் கருணை யதனால்
பரகதி ஞான சொரூப மாகி
ஆலச் சயனத்து மாலுடன் நின்றே
ஆனந்தஞ் சேர்ந்தோம் என்று ஆடுபாம்பே!"[644]

என்று கூறுகின்றார். இங்ஙனம் பாம்பாட்டிச் சித்தர் இறைவனின் சிறப்பியல்புகளையும், உருவ வேறுபாடுகளையும் சித்தாந்தக் கருத்துக்கேற்ப எடுத்துரைக்கின்றார்.

## பாசம் - மலம்

பொதுவாக ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மூன்றையும் மும்மலம் என்று கூறுவர். நம் உடலிலுள்ள மலம் என்றும் நீங்குவதில்லை என்பதைப் பாம்பாட்டிச் சித்தர்,

"நாறுமீனைப் பலதரம் நல்ல தண்ணீரால்
நாளுங் கழுவினும் அதன் நாற்றம் போமோ?
கூறும் உடல் பலநதியாடிக் கொண்டதால்
கொண்ட மலம் நீங்காதென்று ஆடுபாம்பே!"[645]

என்று மும்மலத்தின் இயல்பைக் கூறுகின்றார்.

## மலபந்தம்

மும்மலங்களும் இறைவனுடனும், உயிர்களுடனும் தொடர்புடையனவாகும் என்பதையும் கூறுகின்றார். மனம் என்னும் புரவியை

நெறிப்படுத்தி மலபந்த வுலகங் கடந்து, சிறப்புமிக்க குருபாதத்தின் நிலையை நாட்டித் தவம் செய்து ஐந்து பூலோகத்தையும் கடந்தால் சந்திர மண்டலமும் கடந்ததாகும்[646] என்று மலபந்தம் பற்றி எடுத்துரைக்கின்றார்.

## ஆணவம்

கோபம் என்னும் மத யானைகொண்ட மதத்தைக் கூர்மையான புத்தியாகிய அங்குசத்தால் கொன்றுவிடவேண்டும்[647] என்று ஆணவ மலத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

## கன்மவினை

பாம்பாட்டிச் சித்தர் நல்வினை, தீவினையாகிய செயல்கள்பற்றி,

**"காய்த்தமரம் அதுமிக்க கல்லடி படும்**
**கன்மவினை கொண்ட காயம் தண்டனை பெறும்"[648]**

என்று உணர்த்துகின்றார்.

## மனம்

மனத்தைப் போன்று வேகமாகச் செல்லக் கூடியது எதுவும் இல்லை. அதனைக் கட்டுப்படுத்தி நன்னெறிப்படுத்தவேண்டும் என்று கூறுகின்றார். இதனையே,

**"மனமென்னும் குதிரையை வாகனமாக்கி**
**மதியென்னும் கடிவாளம் வாயினில் பூட்டிச்**
**சினமென்னும் சீனியின் மேற்சீராய் ஏறித்**
**தெளிவிடம் சாரிவிட்டு ஆடுபாம்பே!"[649]**

என்று உணர்த்துகின்றார்.

## 64 தத்துவம்

பாம்பாட்டிச் சித்தர் அறுபத்துநான்கு கலையாவும் அறிந்த தாகவும் அதற்கு மேலும் ஒரு கலையை அறிந்ததாகவும் குறிப்பிடுகின்றார்.[650]

## பிறப்பு, இறப்பு அறுத்தல்

நாம் பிறப்பிறப்பு அற்றுவிட்டால் மேலான நிலையை அடையலாம். இதனாலேயே,

"மாசுள்ள பிறவியை மறந்திருப்போம்
மனமொத்த வெளியிலே விட்டே ஆட்டுவோம்
மாசுப்புலன்களை இரைகொ டுப்போம்
பிறப்பு இறப்பு அற்றோம் என்று ஆடுபாம்பே!"[651]

என்று எடுத்துரைக்கின்றார். மேலும், ஞானத்தின் நிலையைப் பற்றி, அந்தரம் சென்று வேர்பிடுங்கி அருள் என்னும் ஞானத்தால் உண்டை சேர்த்து இந்த மருந்தினைத் தின்றால் இனிப் பிறப்பு இல்லை என்று வலியுறுத்துகின்றார்.[652]

## மந்திரம் கூறும் சக்கரம்

பாம்பாட்டிச் சித்தர் மந்திரம் கூறும் சக்கரத்தைப் பற்றி, எட்டுத் திக்குச் சக்கரங்களாகக் கீறி, அக்கோண நிலைகளில் அக்கரம் சேர்த்துத் திட்டமுடன் மந்திரத்தைச் செபித்து நின்று சித்தம் தடுமாறாமல் இருக்கவேண்டும் என்று கூறுகின்றார்.[653]

திருமூலரும் மந்திரம் கூறும் முறையினையும், சக்கரங்கள் பற்றியும் கூறுகின்றார் என்பதைத் திருமந்திரம் மூலம் அறிந்துகொள்ளலாம்.

## யோகம்

பாம்பாட்டிச் சித்தர் யோக நிலையைப்பற்றித் தசநாடி, தசவாயு, சுத்த தாது ஆகியவற்றைச் சார்ந்த மரக் கப்பல் அது தத்தி விழும். இசைவான கப்பலினை ஏக வெள்ளத்தில் எந்நாளும் ஓட்டவேண்டும்[654] என்று குறிப்பிடுகின்றார். மேலும், தசநாடிகளுள் ஒன்றான சுழுமுனையைப் பாலிற் சுவைபோலும் எங்கும் பாய்ந்த ஒளியைப் போன்று பற்றுப் பொன் பற்ற வைத்த பான்மைபோலும், காலிற் சுழுமுனை நின்று கண்டுகொண்டு களித்து நின்று இருக்கவேண்டும்[655] என்று உணர்த்துகின்றார்.

அடுத்து, அட்டாங்க யோகத்தில் ஒன்றான இயமம் பற்றி எடுத்துரைக்கின்றார். இயமம் என்பது தீயவற்றை நீக்குதல் என்று பொருள். கொல்லாமை, களவிலனாதல், காமம் இல்லாதிருத்தல் என்பன இயமத்தின் பகுதிகளாகும். இதனையே,

"கள்ளங்கொலை காமமாதி கண்டித்த வெல்லாம்
கட்டறுத்து விட்டு ஞானக் கண்ணைத் திறந்து
தெள்ளிதான வெட்ட வெளிசிற் சொரூபத்தைத்
தேர்ந்து பார்த்துச் சிந்தை தெளிந்து ஆடுபாம்பே!"[656]

என்று பாடுகின்றார்.

## வாசியோகம்

யோக நிலையின் ஒன்றான வாசியோகம் பற்றி, மணிவட்ட வாசியை வாரி உண்போம்[657] என்று குறிப்பிடுகின்றார். இங்ஙனம் யோகத்தின் பல்வேறு பிரிவுகளையும், யோகப் பயிற்சியினையும் பற்றிப் பாம்பாட்டிச் சித்தர் தெள்ளிதின் எடுத்துரைக்கின்றார்.

அட்டமாசித்திகளுள் ஒன்றான கரிமாபற்றி,

"கூடுவிட்டுக் கூடுபாயும் கொள்கையுடைய
குருவின் வல்லபம் எவர்கூற வல்லவர்?"[658]

என்று கூறுகின்றார். அதாவது யோகப் பயிற்சியினால் பெறும் பயன்களுள் ஒன்றான கரிமாபற்றிக் கூறுகின்றார்.

நான்கு பதம் சரியை, கிரியை, யோகம், ஞானம் இவற்றால் பெறுகின்ற சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்ற பேறுகளுள் மூன்று பேற்றினைப்பற்றிக் கூறுகின்றார்.

## சாலோபம்

சரியையால் சாலோபம் அடையலாம் என்பர். அந்தச் சாலோப நிலைபற்றி,

"களிமண்ணால் ஒருகப்பல் சேர்த்தே
கனமான பாய்மரங் காண நாட்டி
அளிபுலந் தன்னையே சுக்கானாக்கி
அறிவென்னும் ஆதாரச் சீனிதூக்கி

வெளியென்னும் வட்டத்தே யுள்ளடக்கி
வேதாந்தக் கடலினை வெல்ல வோட்டித்
தெளிவுறு ஞானியார் ஓட்டுங் கப்பல்
சீர்பாதஞ் சேர்த்து என்று ஆடுபாம்பே!"[659]

என்று குறிப்பிடுகின்றார்.

## சாமீபம்

- பாசம் வருத்தும் நிலை கடந்த நிலையே சாமீபம். பாம்பாட்டிச் சித்தர் அச்சாரூபமாகிய அந்நிலையே, வீறுபெருங் கடவுளை எங்களுடனே விளையாடச் செய்தல்[660] என்று எடுத்துரைக்கின்றார்.

## சாரூபம்

அட்டாங்கயோகப் பயிற்சியால் அமைந்த யோக நெறியால் அமைவது. அந்நிலையினை, நாதனுடன் சமமாக நாங்களும் வாழ்வோம்[661] என்று பாடுகின்றார்.

## சிவகுரு தரிசனம்

சிவனைக் குருவாகத் தரிசனம் செய்யும் நிலையைப் பற்றிக் காற்று உடல் பொருள் ஆவி தந்தமாகவே தானம் வாங்கி நின்ற எங்கள் சற்குருவைப் போற்றி, மனம் வாக்கு, காயம் மூன்றும் பொருந்த நின்ற நிலையைப்பற்றியும், உண்மையான மதந்தான் இன்னதென்று விளம்பும் மெய்க்குருவின் பாதம். போற்றவேண்டும் என்றும், வேதப்பொருள் இன்னதென்றும் வேதம் கடந்த மெய்ப்பொருளைக் கண்டு மனம் மேனி விரும்பிப் போதப்பொருள் இன்னதென்றும் போதனை செய்பவர் பூரண சற்குருதான் என்றும்[662] பாடுகின்றார்.

## சற்குரு தரிசனம்

மேலும் தூக்கி நற்பாதங்களைக் கடந்ததாகவும், சுத்த வெளிக் குள்ளே கூத்தனைக் கண்டதாகவும் தாக்கிய சிரசின்மேல் வைத்த பாதம் சற்குருவின் பாதம் என்றும்[663] குறிப்பிடுகின்றார்.

இங்ஙனம், இறைவன் சிவகுருவாகவும், சற்குருவாகவும் திகழ்கின்றான் என்பதைப் பாம்பாட்டிச் சித்தர் கூறுகின்றார்.

## தொகுப்புரை

இவ்வியலில் சித்தாந்த சாத்திரங்களுக்கு முன்தோன்றிய சித்தர்களின் சித்தாந்தக் கருத்துகள் ஆராயப்பட்டுள்ளன.

இறைவன் ஒன்றானவன்; பூரணமானவன்; சக்திக்குப் பல

பொருள் இருப்பினும் வாலை என்பதே சித்தர் பொருள்; குரங்காய் அலையும் மனத்தை அடக்கிச் செந்நெறிப்படுத்தினால் காயசித்தியும் யோக சித்தியும் கிட்டும். இம்மனத்துள் இறைவனைத் தெளிந்து ஒருமுகப்படுத்த ஞானம் பெறலாம் என்று அகத்தியர் தம் கொள்கை களாகக் கூறியுள்ளார்.

சதாசிவமே தெய்வம்; பிற தெய்வங்கள் மாயை; உயிர் அழிவில்லாதது; ஆணவம் தொன்றுதொட்டு தொடர்வது; இவை அனைத்தும் அனாதிகள்; இறைவனுடன் ஆன்மா ஒன்றுதலே முக்தி; வினைப்பயனே விதிப்பயன் என்றும் கூறும் அகப்பேய்ச் சித்தர், முத்தியாவது அரூபமுத்தி, சொரூப முத்தி எனும் கொள்கையை உறுதியாகக் கொண்டு பிற சித்தர்களினின்று மாறுபடுகிறார்.

சிவமே தெய்வம்; தத்தம் தீவினைகளினாலே துன்பம் வரும்; உடல் நிலையற்றது; மெய்ஞ்ஞான வழியில் இறைவனை அடைவதே முத்தியாகும் என்று கடுவெளிச்சித்தர் தம் சிந்தனைகளாக எடுத்துரைத்துள்ளார்.

இச்சாசக்தி, கிரியா சக்தி, ஞானசக்தி ஆகிய மூன்று சக்தி நெறிகளும் இறை சக்தியையே குறிக்கும்; இறைவன் உருவ வழிபாடு உடையவன்; அவ்வுருவ வேறுபாடுகளுள் திருமால் வடிவம் ஒன்று. திருமாலின் தொழில் உயிர்களைப் படைத்தலாகும். பரப்பிரம மாகவும், சச்சிதானந்தமாகவும் இறைவன் விளங்குகிறான். இறைவனுடன் சீவன் கலத்தலே பரமான்மாவாகும். யோக சித்தர் என்போர் அறுபத்து நான்கு யோக நெறிகளையும் செய்வோராவர். சாரூப நிலையை அடைந்தோர் கடவுள் நிலையை அடைந்தோராவர்.

ஞானம்பெறப் பத்துவகை தீட்சை பெறுதல்வேண்டும் எனும் கொள்கைகளை உடையவராகக் காகபுசுண்டர் திகழ்கிறார்.

இறைவனை ஆன்மா சிக்கெனப் பற்றிக் கலத்தல் சாயுச்சிய நிலையாகும். மனமானது துன்பங்களை நீக்கி அறிவுடன் திகழ வேண்டும்; யோக சித்திகளை அடைந்தோர் சித்தராவர் என்று குதம்பைச் சித்தர் தம் கருத்துகளாகக் கூறிச் செல்கிறார்.

இறைவனைக் காணத் தடையாக இருப்பது பாசியெனும் தளையே யாகும். இத்தளையை நீக்க இறைவன் வெளிப்படுவான். பொய்யான உடலை மெய்யெனக் கருதிக் காக்க இறைவன் அவ் வுடலுள் குடி புகுவான் என்று அழுகணிச் சித்தர் இறைவனை அடையும் வழியைத் தெளிவாக எடுத்துரைத்துள்ளார்.

இறைவன் பராபரமானவன்; சிவனும் சக்தியுமானவன்; உருவமாகவும் அருவமாகவும், சூனியமாகவும், சூக்குமமாகவும் உள்ளவன் என்று இறைநிலையைப் பற்றிக் கூறும் இடைக்காட்டுச் சித்தர், துன்பங்களுக்குக் காரணம் மும்மலங்கள் என்றும், ஆன்மாவே பிரமம்; வெட்டவெளியாகிய பிரமமே சூனியம்; உடல் ஸ்தூல, சூக்கும காரணமாக விளங்குவதே; மந்திரம் மகிமையானது என்றும் கூறுகிறார். சித்தர் அனைவரும் எண்வகை யோகங்களைக் குறித்துச் சொல்ல, இவர் யோகங்களை ஐவகையாகக் கூறுகிறார். பரம தீட்சை பெற்றுச் சாரூப நிலையே அடைந்து முடிவில் வாய்க்கப் பெறுவது மெய்ஞ்ஞானம் என்று இடைக்காட்டுச் சித்தர் இறைவனை அடையும் நெறிகளாகக் கூறுகிறார்.

கணபதி, திருமால், உருத்திரன், சதாசிவன் ஆகிய கடவுளரைக் காப்புச் செய்யுளில் குறித்துள்ளது இவர் இறைவனைப் பல்வேறு உருவங்களில் வழிபட்டமையை அறிகிறோம். விநாயகர், சரஸ்வதி, சிவபெருமான், சுப்பிரமணியர், விஷ்ணு, நந்தீஸ்வரர் ஆகியோரைக் கடவுளர் வரிசையில் நிறுத்தி இறைவனைப் பல்வேறு உருவங்களில் வழிபடுகிறார். முத்தொழில்களையும் செய்பவளே சக்தியாவாள். உடல் மெய்யானது; எல்லாமாய் இருப்பது ஐந்தெழுத்தே. வீட்டின்பம்பெற, யோக நெறியில் நின்று, மனத்தில் ஐந்தெழுத்தை இருத்த பரகதி கிட்டும் என்று கொங்கணர் முத்திபெறும் நிலையைக் கூறுகிறார்.

சிவனின் உருவத் தோற்றம்; உலகமே சக்தி வடிவம்; இறைவன் உருவ வேறுபாட்டுடன் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளவன்; யோகத்தால் சச்சிதானந்த ஒளி உண்டாகும்; மும்மலங்கள், ஐம்பூதங்கள், ஐவகை உடம்பு, யோகம் அதன்வழி உண்டாகும் ஞானம், பிறப்பிறப்பு அற்ற நிலை, கணபதி முருகன் தோற்றம், சிவசக்தியின் மாண்பு, ஐந்தெழுத்து மந்திரத்தின் பெருமை, அட்டாங்க யோகத்தின் சிறப்பு, கணபதியின் அருள்பெற வழிவகை முதலியவற்றைத் தம் பாடல்வழி சுப்பிரமணியர் உணர்த்துகிறார்.

கி.பி. 5 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய திருமூலரே சித்தாந்த சாத்திரங்களுக்கு வித்திட்டவர். இறைவன் பல பெயர்களையும் வடிவ வேறுபாடுகளைக் கொண்டிருப்பினும் ஒன்றானவன்; சக்தியோடு தொழில்படுபவன்; ஐந்தொழில்களை உடையவன்; பதி, பசு, பாசம் ஆகிய இம்மூன்றும் அனாதி; இறைவன் மூவகைத் திருமேனிகளையும் மூவகை மேலான நிலைகளையும்

பெற்றவர்; உயிர் இறைவனைப் பற்றியது; சிவனும் சீவனும் ஒன்றே; பிறப்பிறப்பில் உழன்று உயிர் முடிவில் வீடுபேறு அடையும்; உயிர்களுக்குப் பொதுவான இயல்புகள்; அவத்தைகள், மூவகை உயிர்கள்; பசுவினைப் பற்றியிருப்பது பாசம்; யான் என்பது ஆணவம்; சிவனிடமிருந்து சீவனைப் பிரிப்பது மாயை; மனம், வாக்கு, காயத்தை உண்டாக்குவன கன்மம்; இறைவன் அமைத்தருள்வது ஊழ்; சிவத் தத்துவம், ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம் ஆகிய தத்துவங்கள்; பிரணவத் தோற்றம், பிரணவத்துள் ஐம்பூதங்கள், உடல்கள், பஞ்சேந்திரியங்கள் அடங்குதல்; அவற்றின் பயன்கள்; இறைவனை அறிந்த உயிர் மீண்டும் பிறவா நிலை; உயிர் சிவனோடு இரண்டறக் கலக்கும் முத்திநிலை; உட்சமயம், சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சைவம் ஆகிய சைவ சமயங்களுக்கு அடிப்படையாக விளங்குவது சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு வழிகள், இவற்றோடு தொடர்புடைய தாசமார்க்கம் முதலியன; இயமம் முதலிய எட்டு அங்கங்கள், எண்வகைச் சித்திகள், பல்வகை யோகங்கள், காய சித்திகள் முதலிய யோக தத்துவங்கள்; அஞ்ஞானத்தைப் போக்கி மெய்ஞ்ஞானத்தை வளர்க்க உதவும் குருவருளாகிய தீட்சை; தன்னைத்தானே உணர்வது ஆன்ம தரிசனம், சிவனை உணாவது சிவ தரிசனம், சிவனைக் குருவாகக் காண்பது சிவகுரு தரிசனம்; எல்லாம் கடந்த நிலை சிவசொரூப தரிசனம்; சிவயோகமாவது யோகத்தின்மூலம் சிவ ஒளியைப் பெறுவது; தவயோகமாவது சிவஞானத்தைப் பெறுவது; சிவபோக மாவது உயிர் இறைவனின்மூலம் பேரின்பம் அடைவது; சிவ ஞானமாவது பொறிகளை அடக்கிப் பெறும் இன்பம்; சிவானந்த மாவது அனைத்தும் கடந்த அருள்நிலை முதலிய பல்வேறு சித்தாந்தக் கருத்துகளைத் திருமூலர் ஆன்மிக உலகிற்கு எடுத்தோதியுள்ளார்.

புறப்பூசை, அகப்பூசை பற்றி நந்திதேவர் தெளிவாக எடுத்துரைத்துள்ளார்.இறைவனை மெய்ப்பொருளாகவும், பரம் பொருளாகவும், குருவாகவும், விந்துவாகவும் பாம்பாட்டிச்சித்தர் காணுகின்றார். பாசம் நீங்காதது, உடல் கன்மவினை கொண்டது. தத்துவங்கள் அறுபத்து நான்கு, மேலான நிலையை அடையப் பிறப்பிறப்பு அறுத்தல் வேண்டும். அட்டமா சித்தியையும், நான்கு பதங்களையும் அடையச் சிவன் நிலையில் வாழலாம் எனப் பாம்பாட்டிச் சித்தர் தம் கொள்கை களாகக் கூறியுள்ளார்

*****

## குறிப்புகள்

1. சாமி சிதம்பரனார், **அகத்தியர் வரலாறு**, ப.2.
2. S.S. Bharathi, **AGASTHIYAR AND TAMIL LITERATURE ARTICLE, P.2.**
3. Ra. Raghava Iyengar, **TAMIL VARALARU, P. 216.**
4. **சித்தர் பெரிய ஞானக்கோவை-முதற் பாகம்,** பா.4, ப. 294.
5. மேற்படி, பா. 5, ப. 294; 6. மேற்படி, பா. 12, ப. 300;
7. மேற்படி, பா. 1, ப. 297. 8. மேற்படி, பா. 10, ப. 303;
9. மேற்படி, பா. 7, ப. 299; 10. மேற்படி, பா. 2, ப. 303.
11. மேற்படி, பா. 2, ப. 301; 12. மேற்படி, பா. 2, பக்.301-302;
13. மேற்படி, பா. 4, ப. 296. 14. மேற்படி, பா. 1, ப. 301;
15. மேற்படி, பா. 1. ப. 295; 16. மேற்படி, பா. 7, ப. 299.
17. மேற்படி, பா. 2, ப.298; 18. மேற்படி, பா. 4, ப. 302;
19. மேற்படி, பா. 1, ப. 298. 20. மேற்படி, பா. 5, ப. 296;
21. மேற்படி, பா. 5, ப. 294; 22. மேற்படி, பா. 4, ப. 296.
23. மேற்படி, பா. 7, ப. 302; 24. மேற்படி, பா. 11, ப. 303;
25. மேற்படி, பா. 12, ப. 303. 26. மேற்படி, பா. 28,ப. 218;
27. மேற்படி, பா. 29, ப. 218; 28. மேற்படி, பா. 30, ப. 218.
29. மேற்படி, பா. 74, ப. 223; 30. மேற்படி, பா. 36, ப. 219;
31. மேற்படி, பா. 43, ப. 219. 32. மேற்படி, பா. 6, ப. 215;
33. மேற்படி, பா. 4, ப. 215; 34. மேற்படி, பா.5, ப. 215.
35. இரா. இராமானுஜாசாரி, **சைவ சித்தாந்தம்,** ப. 97.
36. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்,** பா.26, ப. 217.
37. மேற்படி, பா. 85, ப. 224; 38. மேற்படி, பா. 5, 217;
39. மேற்படி, பா.25, ப. 217. 40. மேற்படி, பா.87,ப. 224;
41. மேற்படி, பா.20, ப. 217; 42. மேற்படி, பா.12, ப. 236.
43. மேற்படி, பா.2, ப. 234; 44. மேற்படி, பா.24, ப. 237;
45. மேற்படி, பா.8, ப. 235. 46. மேற்படி, பா.10, ப. 235,
47. மேற்படி, பா.15, ப. 236; 48. மேற்படி, பா.(காப்பு), ப. 200.
49. மேற்படி, பா.6, ப. 210; 50. மேற்படி, பா.33, ப. 204;
51. மேற்படி, பா.34, ப. 204. 52. மேற்படி, பா.39, ப. 205;
53. மேற்படி, பா.1, ப. 200; 54. மேற்படி, பா.12, ப. 202.
55. மேற்படி, பா.11, ப. 201; 56. மேற்படி, பா.51, ப.206;
57. மேற்படி, பா.40, ப. 205. 58. மேற்படி, பா.129, ப.213;

59. மேற்படி, பா.67, ப.207; 60. மேற்படி, பா.53, ப. 206.
61. மேற்படி, பா.54, ப. 206; 62. மேற்படி, பா. 76, ப. 202;
63. மேற்படி, பா. 68, ப. 207. 64. மேற்படி, பா.71, ப. 207;
65. மேற்படி, பா.47, ப. 205; 66. மேற்படி, பா.49, ப. 206.
67. மேற்படி, பா.44, ப. 205; 68. மேற்படி, பா.127, ப. 213;
69. மேற்படி, பா.9, ப.210. 70. மேற்படி, பா.116, ப.212;
71. மேற்படி, பா.78, ப.208; 72. மேற்படி, பா. 115, ப. 212.
73. மேற்படி, பா.23. ப.202; 74. மேற்படி, பா.58, ப.206;
75. மேற்படி, பா.78, ப. 208. 76. மேற்படி, பா.113, ப.211;
77. மேற்படி, பா.81, ப.208; 78. மேற்படி, பா.83, ப. 208.
79. மேற்படி, பா.27, ப.203; 80. மேற்படி, பா.31,ப.203;
81. மேற்படி, பா.94, ப. 210. 82. மேற்படி, பா.2, ப. 200;
83. மேற்படி, பா. 120,ப.212; 84. மேற்படி, பா.85,ப.209.
85. மேற்படி, பா.3, ப. 200; 86. மேற்படி, பா.28, ப. 203;
87. மேற்படி, பா.40, ப. 205. 88. மேற்படி, பா.35, ப. 204;
89. மேற்படி, பா.31, ப. 204; 90. மேற்படி, பா.75, ப. 208.
91. மேற்படி, பா.123, ப.212; 92. மேற்படி, பா.29, ப. 203;
93. மேற்படி, பா.61, ப. 207. 94. மேற்படி, பா.77, ப. 208;
95. மேற்படி, பா.20, ப. 202; 96. மேற்படி, பா.12, ப. 202.
97. மேற்படி, பா.8, ப. 306; 98. மேற்படி, பா.5, ப. 306;
99. மேற்படி, பா.13, ப. 307. 100. மேற்படி, பா.3, ப. 305;
101. மேற்படி, பா.12, ப.307; 102. மேற்படி, பா.12, ப. 306.
103. மேற்படி, பா.7,ப.306; 104. மேற்படி, பா.26, ப.232;
105. மேற்படி, பா.34, ப. 233. 106. மேற்படி, பா.25, ப.232;
107. மேற்படி, பா.3,ப.229; 108. மேற்படி, பா.13, ப. 231.
109. மேற்படி, பா.10, ப.230;
110. **சித்தர் பெரிய ஞானக்கோவை-இரண்டாம் பாகம்,** பா. 15, ப, 62.
111. மேற்படி, பா.8, ப.61; 112. மேற்படி, பா.5, ப. 60;
113. மேற்படி, பா.9, ப. 61. 114. மேற்படி, பா.5, ப. 67;
115. மேற்படி, பா.46,ப.62; 116. மேற்படி, பா.9, ப. 45.
117. மேற்படி, பா.1, ப. 43; 118. மேற்படி, பா.6, ப. 60;
119. மேற்படி, பா.9, ப. 65. 120. மேற்படி, பா.57, ப. 55;
121. மேற்படி, பா.14, ப.74; 122. மேற்படி, பா.15, ப. 74.
123. மேற்படி, பா.18, ப. 47;
124. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி,** ப 248.

125. **சித்தர் பெரிய ஞானக்கோவை - இரண்டாம் பாகம்,** பா.63, ப. 56.
126. மேற்படி, பா.17, ப. 46; 127. மேற்படி, பா.31, ப. 66;
128. மேற்படி, பா.36, ப. 50.
129. வ. ஆ. தேவசேனாபதி, **சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள்,** ப. 126.
130. **சித்தர் பெரிய ஞானக்கோவை-இரண்டாம் பாகம்,** பா.2, ப. 66.
131. மேற்படி, பா.31, ப. 228; 132. மேற்படி, பா.32, ப. 228;
133. மேற்படி, பா.2, ப. 225. 134. மேற்படி, பா.22, ப. 227;
135. மேற்படி, பா.20, ப. 227; 136. மேற்படி, பா.9, ப. 226.
137. மேற்படி, பா.24, ப. 227; 138. மேற்படி, பா.13, ப. 226;
139. மேற்படி, பா.11, ப. 226. 140. மேற்படி, பா.21, ப. 227;
141. மேற்படி, முதற் பாகம், பா.1, ப.239;
142. மேற்படி, பா.2,ப.239; 143. மேற்படி, பா.3, ப. 239;
144. மேற்படி, பா.4,பக்.239-240. 145. மேற்படி, பா.5,ப.240;
146. மேற்படி, பா.6, ப. 240; 147. மேற்படி, பா.7, ப. 240.
148. மேற்படி, பா.8, ப. 246; 149. மேற்படி, பா.53, ப. 246;
150. மேற்படி, பா.107, ப. 251. 151. மேற்படி, பா.65, ப.246;
152. மேற்படி, பா.66, ப. 246; 153. மேற்படி, பா.111, ப.251.
154. மேற்படி, பா.104,ப.251; 155. மேற்படி, பா.32, ப. 243;
156. மேற்படி, பா.33, ப. 245. 157. மேற்படி, பா.34, ப. 243;
158. மேற்படி, பா.35, ப. 243; 159. மேற்படி, பா.36, ப. 243.
160. மேற்படி, பா.38, ப. 248; 161. மேற்படி, பா.24, ப. 242;
162. மேற்படி, பா.12, ப. 241. 163. மேற்படி, பா. 15, ப. 241;
164. மேற்படி, பா.28, ப. 242; 165. மேற்படி, பா.30, ப. 242.
166. மேற்படி, பா.32, ப. 248;
167. **சித்தர் பெரிய ஞானக்கோவை-இரண்டாம் பாகம்,** பா.36, ப. 8.
168. மேற்படி, பா.1, ப. 22; 169. மேற்படி, பா.81, ப.18.
170. வ. ஆ. தேவசேனாபதி, **சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள்,** ப.80.
171. **சித்தர் பெரிய ஞானக்கோவை- இரண்டாம் பாகம்,** பா.78, ப. 38.
172. மேற்படி, பா.7, ப. 2; 173. மேற்படி, பா.9, ப. 3;
174. மேற்படி, பா.41, ப. 9; 175. மேற்படி, பா.38, ப. 19.
176. மேற்படி, பா.7, ப. 2; 177. மேற்படி, பா.76, ப. 38;
178. மேற்படி, பா.3, ப. 1. 179. மேற்படி, பா.8, ப.2-3;
180. மேற்படி, பா.75, பக்.37-38; 181. மேற்படி, பா.15,ப.25.

182. மேற்படி, பா.75, ப.16; 183. மேற்படி, பா.70,ப.15;
184. மேற்படி, பா.10, ப. 3. 185. மேற்படி, பா.20, ப.5;
186. மேற்படி, பா.21, ப. 5; 187. மேற்படி, பா.19, ப. 5.
188. மேற்படி, பா.6, ப. 6; 189. மேற்படி, பா.43, ப. 31;
190. மேற்படி, பா.2, ப. 1. 191. மேற்படி, பா.73, ப.16;
192. மேற்படி, பா.97,ப. 21; 193. மேற்படி, பா.24, ப. 6.
194. **சித்தர் பெரிய ஞானக்கோவை-முதற் பாகம்**, ப.1, ப. 311.
195. மேற்படி, பா.2, ப,312, 196. மேற்படி, பா.3,6,பக்,312-313;
197. மேற்படி, பா.9,ப.315. 198. மேற்படி, பா.31,ப.318;
199. மேற்படி, பா.4, ப.317; 200. மேற்படி, பா.5, ப. 317.
201. மேற்படி, பா.1, ப.316; 202. மேற்படி, பா.20, ப.316;
203. மேற்படி, பா.9,7, ப. 313. 204. மேற்படி, பா.6,7,ப.315.
205. தி. தயானந்தன் பிரான்சிஸ், **தமிழ்ச் சைவம்**, ப. 8.
206. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி**, ப. 276.
207. **Dr. M. Rajamanickam, DEVELOPMENT OF SAIVISM IN SOUTH INDIA - UNDER THEPALLAVAS OF KANCHI AND IMPERIAL CHOLAS (A.D.300-1300)P.34.**
208. டி.பி. சித்தலிங்கம், **சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும்**, ப. 17.
209. (மேற்கோள்), மேற்படி, ப. 11.
210. லே.க. இராமநாதன் செட்டியார், **வேது திருமந்திர மாநாட்டு மலர்**, ப. 516.
211. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி**,ப. 287.
212. T.R. Subramaniam, **THE ORIGIN OF SAIVISM AND IT'S HISTORY IN TAMIL LAND, P. 61**
213. S.Sivapada Sundaram, **THE SAIVA SCHOOL OF HINDUISM - INTRODUCTION, P.17.**
214. டி.வி. சதாசிவ பண்டாரத்தார், **தமிழ் இலக்கிய வரலாறு**, ப. 83.
215. மறைமலைவடிகள், **மாணிக்கவாசகர் காலமும் வரலாறும்**, ப. 300.
216. (a) Farquhar. Dr. D.N. & Griswold. Dr. H.D., **THE RELIGIOUS QUEST OF INDIA,P.197**
(b) Neelakanta Sastri, K.A., **THE OUTLINE CULTURE AND HISTORY OF THE TAMILS, P.117**
(c) Theodore A. Sundararaj, **THUS SPAKE BASAVE, P. 10**
(d) Winternitz, Dr. M., **AHISTORY OF INDIAN LITERATURE, VOL.-I, P. 588**

217. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி**, ப. 89.
218. ந. சுப்பு ரெட்டியார், **சைவ சமய விளக்கு**, ப. 17.
219. மேற்படி, ப. 14,
220. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி**, ப. 271.
221. கே.கே. பிள்ளை, **தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும்**, ப. 355.
222. டி.பி. சித்தலிங்கம், **சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும்**, ப. 88.
223. தெய்வநாயகம், **விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் - ஓர் ஒப்பாய்வு**, ப. 148.
224. மா. இராசமாணிக்கனார், **பத்துப்பாட்டு ஆராய்ச்சி**, ப. 581.
225. Bose, D.N. & Haldar, Hiralar., **TANTRAS: THEIR PHILOSOPHY & OCCULT SECRETS, P. 32.**
Similar reference is found in the following books.
(1) Guru Dutt, K. **HINDU CULTURE, P. 121.**
(2) Maraimalai Adikal, **ANCIENT AND MODERN TAMIL POETS, P. 40.**
(3) C. Sivarama murthy, **NATARAJA IN ART, THOUGHT AND LITERATURE, P. 86.**
226. Shri. Anandamurthy, **THANTSA AND SADHARA IN NEO HUMANIST, P.86.**
227. அகத்தியர், **கற்ப மூப்பு**, குறு. 100, பா. 42.
228. அகத்தியர், **தீட்சாவிதி** 200',50.
229. அகத்தியர், **தர்க்க சாஸ்திரம்:** 300:2.
230. அகத்தியர், **வகாரச் சூத்திரம், 100:57.**
231. யாகோபு, **வைத்திய வாத சாத்திரம்,** 400:37.
232. அகத்தியர், **சௌமிய சாகரம்** 1200:77.
233. அகத்தியர், **தத்துவம்,300:13**
234. இராமலிங்க அடிகள், **உபதேசப் பகுதி**, ப. 131 (மகா உபதேசம்),
235. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி**, ப. 272.
236. **திரு.**1396; 237. மேற்படி, 2368; 238. மேற்படி, 2369;
239. மேற்படி, 159.
240. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்**, ப. 79.
241. **திரு.** 2066.

242. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** ப. 65.
243. **திரு.** 1810; 244. **சிவஞான சித்தியார் சுபக்கம்,** செ. 164.
245. சி. பழனியப்பன், **ஒன்றே குலம் ஒருவனே தேவன்,** ப. 93.
246. **திரு.** 2247; 247. மேற்படி, 1674;
248. மேற்படி, 1730; 249. மேற்படி, 1731;
250. மேற்படி, 46; 251. மேற்படி, 41;
252. மேற்படி, 36; 253. மேற்படி, 37;
254. மேற்படி, 28;255. **திருவாசகம், திருத்தெள்ளேணம்,** 1;
256. **திரு.** 1772; 257. மேற்படி, 1780;
258. மேற்படி, பொதுப்பாயிரம், 32; 259. மேற்படி, 25;
260. **சித்தர்பெரிய ஞானக்கோவை-முதற் பாகம்,** பா.2, ப. 308.
261. **திரு.** 258; 262. **தேவாரம், சுந்தரர்,** 7:24:1.
263. **திரு.** 1792; 265. மேற்படி, 1506.
266. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்,** பா.6, ப.309; 267. **திரு.** 1662.
268. மேற்படி, உபதேசம், 161;269. **சிவஞானபோதம், நூற்பா**-8;
270. **திரு.** 1581. 271. **திருவுந்தியார்,** செ. 1;
272. **திரு.** 103;
273. செந்துறை முத்து, **தாயுமானாரும் திருமூலரும்,** ப. 16;
274. **திரு.** 2075.
275. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** ப. 325.
276. **திரு.** 2049; 277. **சிவஞானபோதம், மங்கல வாழ்த்து**-1;
278. **திரு.**2232; 279. மேற்படி, 2182;
280. மேற்படி, 2002; 281. மேற்படி, 2719;
282. மேற்படி, 1892; 283. மேற்படி, 2341;
284. மேற்படி, 1944; 285. மேற்படி, 1714;
286. **திரு.**1117.
287. **திருக்கோயில் (மலர்),** கிருபானந்த வாரியார், **இறைவழிபாடு (கட்டுரை),** பிப்.-1967, ப.260
288. **திரு.**2377; 289. மேற்படி, 2022;
290. மேற்படி, 59; 291. மேற்படி, 2024;
292. **சிவப்பிரகாசம்,** செ. 18; 293. **திரு.**368-435.
294. இர. இராமானுஜாசாரி, **சைவ சித்தாந்தம்,** பக். 29-30;

295. **திரு.** 376; 296. மேற்படி,373.
297. மேற்படி, 406; 298. மேற்படி, 398;
299. மேற்படி, 402; 300. மேற்படி, 406.
301. மேற்படி, 417; 302. மேற்படி, 421;
303. மேற்படி, 419; 304. மேற்படி, 424.
305. கா. சுப்பிரமணிய பிள்ளை, **9 ஆம் திருமந்திர மாநாட்டு மலர்,** ப. 35;
306. **திரு.** 329;
307. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி,** ப. 287.
308. **திரு.** 2293; 309. மேற்படி, 2430;
310. மேற்படி, 1554; 311. மேற்படி, 1831;
312. மேற்படி, 1769; 313. மேற்படி, 347;
314. மேற்படி, 334; 315. மேற்படி, 335;
316. மேற்படி, 338; 317. மேற்படி, 2381;
318. மேற்படி, 2383; 319. மேற்படி, 1653;
320. மேற்படி, 1654.
321. வ. ஆ. தேவசேனாபதி, **சைவ சித்தாந்த அடிப்படைகள்,** ப. 79.
322. **திரு. கடவுள் வாழ்த்து,** 4; 323. மேற்படி, 54;
324. மேற்படி, 52; 325. மேற்படி, 55;
326. மேற்படி, 60; 327. மேற்படி, 383;
328. மேற்படி, 460; 329. மேற்படி, 320;
330. மேற்படி, 1704; 331. மேற்படி, 1684;
332. மேற்படி, 1685; 333. மேற்படி, 1728;
334. மேற்படி, 54.
335. பாலகவி திரு.வே., இராமநாத செட்டியார் (கட்டுரை), **5 ஆவது திருமந்திர மாநாட்டு மலர்,** ப. 30.
336. **திரு.** 1717;337. **சிவஞான சித்தியார் சுபக்கம்,** செ.118;
338. **திரு.**2681, 2678, 2674, 2677, 2654, 2685;
339. **திரு.** 2686-2688;
340. மேற்படி, 2693-2702; 341. மேற்படி, 2703-2715;
342. மேற்படி, 2729; 343. மேற்படி, 2719;
344. மேற்படி, 2749; 345. மேற்படி, 2752;
346. மேற்படி, 2720; 347. மேற்படி, 58;
348. **தேவாரம்,** 4:11:1;349. **திருவாசகம், அருட்பத்து,** பா.1.

350. **திரு.** 1589; 351. மேற்படி, 1835;
352. மேற்படி, 1959; 353. மேற்படி, 1602;
354. மேற்படி, 2609 355. மேற்படி, 178;
356. மேற்படி, 1742; 357. மேற்படி, 1745;
358. மேற்படி, 1707; 359. மேற்படி, 1689;
360. மேற்படி, 1690-1691; 361. மேற்படி, 1700-1702
362. மேற்படி, 1696; 363. மேற்படி, 1683;
364. மேற்படி, 1723-1724; 365. மேற்படி, 1733-1734;
366. மேற்படி, 1725; 367. மேற்படி, 3000;
368. மேற்படி,2997; 369. மேற்படி, 2795;
370. மேற்படி, 1872; 371. மேற்படி, 78;
372. ந. சுப்பு ரெட்டியார், **சைவ சமய விளக்கு,** ப. 129.
373. **திரு.** 2409; 374. மேற்படி, 1562;
375. மேற்படி, 2290; 376. மேற்படி, 2250;
377. மேற்படி, 2045; 378. மேற்படி, 2217;
379. மேற்படி, 2159; 380. மேற்படி, 2040-2041.
381. மேற்படி, 2125; 382. மேற்படி, 2132
383. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** ப. 91.
384. **திரு.** 2367; 385. மேற்படி, 2192;
386. மேற்படி, 178; 387. மேற்படி, 2089;
388. மேற்படி, 1617; 389. மேற்படி, 1969;
390. மேற்படி, 1979; 391. மேற்படி, 1981;
392. மேற்படி, 2192;393. **சிவஞான சித்தியார் சுபக்கம்,** செ. 176;
394. **சிவப்பிரகாசம்,** செ. 25; 395. **திரு.** 2122;
396. மேற்படி, 2095; 397. மேற்படி, 2186;
398. மேற்படி, 2093-2094; 399. மேற்படி, 2187;
400. மேற்படி, 2210; 401. மேற்படி, 2123;
402. மேற்படி, 2129; 403. மேற்படி, 2194;
404. மேற்படி, 2255; 405. மேற்படி, 2197;
406. மேற்படி, 2223; 407. மேற்படி, 2103;
408. டி. சந்திரசேகரன், **சித்தாந்த விளக்கம்,** ப. 20.
409. **திரு.** 2497
410. டி. சந்திரசேகரன், **சித்தாந்த விளக்கம்,** ப. 21;
411. **திரு.** 2128, 2129; 412. மேற்படி, 2147-2148;
413. மேற்படி, 2161; 414. மேற்படி, 2162;

415. மேற்படி, 2163;
416. மேற்படி, 2164;
417. மேற்படி, 2165;
418. மேற்படி, 2202;
419. மேற்படி, 2192;
420. மேற்படி, 2191;
421. மேற்படி, 2203;
422. மேற்படி, 2204;
423. மேற்படி, 2191;
424. மேற்படி, 482;
425. மேற்படி, 2406;
426. மேற்படி, 1661;
427. மேற்படி, 2143;
428. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்,** ப. 79.
429. தாயுமான அடிகள், **திருப்பாடல் - பராபரக்கண்ணி,** பா. 366;
430. **திரு**.2004;
431. மேற்படி, 1762;
432. மேற்படி, 1751;
433. மேற்படி, 1782;
434. மேற்படி, 1782;
435. **சிவஞான சித்தியார் சுபக்கம்,** செ. 38;
436. **திரு**. 1889;
437. மேற்படி, 2236;
438. மேற்படி, 2369;
439. மேற்படி, 1781;
440. மேற்படி, 1774;
441. மேற்படி, 1894;
442. மேற்படி, 1887;
443. மேற்படி,2068;
444. மேற்படி, 256;
445. மேற்படி, 115;
446. மேற்படி, 1620;
447. தி. தயானந்தன் பிரான்சிஸ், **தமிழ்ச் சைவம்,** ப. 38.
448. **திரு**. 2807;
449. மேற்படி, 2804;
450. மேற்படி, 2046;
451. வ. ஆ. தேவசேனாபதி, **சைவ சித்தாந்த அடிப்படைகள்,** ப. 124;
452. **திரு**.2171;
453. மேற்படி, 2139;
454. மேற்படி, 2267;
455. மேற்படி, 2228;
456. மேற்படி, 2138;
457. மேற்படி, 2139;
458. மேற்படி, 2105;
459. மேற்படி, 2228;
460. மேற்படி, 2398;
461. மேற்படி, 2526;
462. மேற்படி, 2528.
463. சி. அருணைவடிவேல் முதலியார், **சித்தாந்தத் தெளிவியல்,** ப. 166.
464. **திரு**.2357;
465. மேற்படி, 2104.
466. சி. அருணைவடிவேல் முதலியார், **சித்தாந்தத் தெளிவியல்,** ப. 167.

467. **திரு.** 2150;
468. மேற்படி, 449;
469. மேற்படி, 2108;
470. மேற்படி, 2331;
471. மேற்படி, 2133;
472. மேற்படி, 1993;
473. மேற்படி, 1987;
474. மேற்படி, 1997.
475. பி. ஜெயா (கட்டுரை), 7 **ஆவது ஆய்வுக்கோவை - தொகுதி-1,** ப. 221.
476. **திரு.**2112;
477. மேற்படி, 2106;
478. மேற்படி, 458;
479. மேற்படி, 1936;
480. மேற்படி, 456;
481. மேற்படி, 718;
482. மேற்படி, 2083;
483. மேற்படி, 2084;
484. மேற்படி, 2211;
485. மேற்படி, 1608;
486. மேற்படி, 2087;
487. மேற்படி, 2102;
488. மேற்படி, 2096;
489. மேற்படி, 189;
490. மேற்படி, 192.
491. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி,** ப. 303.
492. **திரு.**2651,2659, 2662.
493. மேற்படி, 945.
494. (மேற்கோள்) இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி,** ப. 302.
495. **திரு.**2652;
496. மேற்படி, 949;
497. மேற்படி, 2751;
498. மேற்படி, 2628;
499. மேற்படி, 2629;
500. மேற்படி, 2650;
501. மேற்படி, 2664;
502. மேற்படி, 2669;
503. மேற்படி, 2240;
504. மேற்படி, 2047;
505. மேற்படி, 2013.
506. ந. சுப்பு ரெட்டியார், **ஆன்மிகமும் அறிவியலும்,** ப. 335.
507. **திரு.**2437;
508. மேற்படி, 1855;
509. மேற்படி, 1858;
510. மேற்படி, 2028;
511. மேற்படி, 2043;
512. மேற்படி, 1394;
513. மேற்படி, 1532-1547;
514. மேற்படி, 1395;
515. மேற்படி, 1396.
516. மேற்படி, 1398-1401;
517. மேற்படி, 1402-1411;
518. மேற்படி, 1412-1416;
519. மேற்படி, 1417-1423;
520. மேற்படி, 1424-1429;
521. மேற்படி, 1795;
522. மேற்படி, 1743;
523. மேற்படி, 1792;
524. மேற்படி, 1821;
525. மேற்படி, 1712;
526. மேற்படி, 1873-1882;
527. மேற்படி, 1609;

528. மேற்படி, 482; 529. மேற்படி, 1631;
530. மேற்படி, 1600; 531. மேற்படி, 1598;
532. மேற்படி, 1599; 533. மேற்படி, 1594;
534. மேற்படி, 1648;
535. (மேற்கோள்), இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி**, ப. 244.
536. Somasundaram Pillai, J.M., **SIVA NATARAJA**, P. 57;
537. **திரு**. 2335; 538. மேற்படி, 173;
539. பாடல்கள்: இயமம் -2; நியமம்-3; ஆசனம்-6; பிராணாயாமம்-13; பிரத்தியாகாரம்-9; தாரணை-10; தியானம்-20; சமாதி-14; மொத்தப் பாடல்கள்-77.
540. ச. தண்டபாணி தேசிகர், **திருமந்திர மாநாட்டு மலர்**, ப. 18.
541. **திரு**. 331;
542. செந்துறை முத்து, **தாயுமானவரும் திருமூலரும்**, ப. 60.
543. **திரு**. 323;
544. மேற்படி, 324; 545. மேற்படி, 693.
546. அ. ஜகதீசன் (கட்டுரை), **கடுவெளிச் சித்தர் யோகத்தை அணுகும் முறை, 12 ஆம்ஆய்வுக்கோவை, தொகுதி**-3, ப. 323.
547. **திரு**. 535, 536; 548. மேற்படி, 537-539;
549. மேற்படி, 545; 550. மேற்படி, 541;
551. மேற்படி, 542; 552. மேற்படி, 543;
553. மேற்படி, 544; 554. மேற்படி, 549;
555. மேற்படி, 550; 556. மேற்படி, 551;
557. மேற்படி, 554; 558. மேற்படி,560-564.
559. செந்துறை முத்து, **தாயுமானவரும் திருமூலரும்**, ப. 69.
560. **திரு**. 571.
561. மேற்படி, 577; 562. மேற்படி, 578;
563. மேற்படி, 586; 564. மேற்படி, 625;
565. மேற்படி, 627; 566. மேற்படி, 628;
567. மேற்படி, 653; 568. மேற்படி, 656;
569. மேற்படி, 662; 570. மேற்படி, 654;
571. மேற்படி, 659; 572. மேற்படி, 663;
573. மேற்படி, 666; 574. மேற்படி, 669;
575. ஜி. வரதராசன், **திருமந்திர நெறி**, ப. 71.

576. **திரு**. 799;
577. மேற்படி, 801;
578. மேற்படி, 804;
579. மேற்படி, 808;
580. மேற்படி, 821;
581. மேற்படி, 832;
582. மேற்படி, 883;
583. மேற்படி, 1440-1449;
584. மேற்படி, 1450-1460;
585. மேற்படி, 1461-1467;
586. மேற்படி, 1468-1474;
587. மேற்படி, 1475-1480;
588. மேற்படி, 1481;
589. மேற்படி, 1481-1482;
590. மேற்படி, 1483;
591. மேற்படி, 1484-1485;
592. மேற்படி, 1486-1487;
593. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி**, ப. 72.
594. **திரு**. 2400;
595. மேற்படி, 1488-1491;
596. மேற்படி, 1492-1496;
597. மேற்படி, 1497-1500;
598. மேற்படி, 1501-1502;
599. பழநியப்பன், **ஒன்றே குலம் ஒருவனே தேவன்**, ப. 121.
600. **திரு**. 1450;
601. மேற்படி, 2016;
602. மேற்படி, 1439;
603. மேற்படி, 2386;
604. மீ.ப. சோமு, **11 ஆம் திருமந்திர மாநாட்டு மலர்**, ப. 60.
605. **திரு**. 2250;
606. மேற்படி, 2800;
607. மேற்படி, 2271,
608. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி**, ப. 283.
609. **திரு**. 1552;
610. மேற்படி, 2812;
611. மேற்படி, 2817;
612. மேற்படி, 1867;
613. மேற்படி, 166;
614. மேற்படி, 1868;
615. மேற்படி, 175;
616. மேற்படி, 1923;
617. மேற்படி, 521;
618. மேற்படி, 2917;
619. மேற்படி, 2925;
620. மேற்படி, 2933;
621. மேற்படி, 1977;
622. மேற்படி, 1978;
623. மேற்படி, 2277;
624. மேற்படி, 2249;
625. மேற்படி, 312;
626. மேற்படி, 2286;
627. மேற்படி, 321;
628. **அபிதானகோசம்**, ப. 269.
629. **சூடாமணி நிகண்டு - தெய்வப் பெயர்த் தொகுதி**, பாடல்-8
630. **திரு**.130;
631. மேற்படி, 1841;
632. மேற்படி, 1626.
633. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்**, பா.1-12, ப. 323-325.

634. மேற்படி, பா. 122, ப. 198; 635. மேற்படி, பா.5 ப. 182;
636. மேற்படி, பா. 7, ப. 18; 637 மேற்படி, பா. 80, ப. 191;
638. மேற்படி, பா. 121, ப. 197; 639. மேற்படி, 4, ப. 181;
640. மேற்படி, பா.89, ப.132; 641. மேற்படி, பா. 103, ப. 194;
642. மேற்படி, பா.22, ப.184; 643. மேற்படி, பா.23, ப. 184;
644. மேற்படி, பா. 119, ப. 197; 645. மேற்படி, பா. 65, ப.189;
646. மேற்படி,பா.120, ப.197; 647. மேற்படி, பா.76, ப. 191;
648. மேற்படி, பா. 66, ப. 189; 649. மேற்படி, பா.78,ப.191;
650. மேற்படி, பா.33, ப. 185; 651. மேற்படி,பா.125,ப.198;
652. மேற்படி, பா.113, ப.195; 653. மேற்படி, பா.37,ப.186;
654. மேற்படி,பா.69,ப.190; 655. மேற்படி, பா.96, ப.193;
656. மேற்படி, பா.72, ப. 190; 657. மேற்படி,பா.129,ப.199;
658. மேற்படி, பா.16,ப.183; 659. மேற்படி, பா.114,ப.196;
660. மேற்படி,பா.34, ப.185; 661. மேற்படி, பா.32,ப.185;
662. மேற்படி, பா.10-12,ப.182; 663. மேற்படி, பா.82, ப.192.

******

# 4.சாத்திர நூல்களுக்குப் பின் தோன்றிய சித்தர்களின் சித்தாந்தம்

மெய்கண்ட தேவர் சைவ சித்தாந்தத்தைச் செம்மைப்படுத்தி அமைத்த பின்னரும் சித்தர்கள் தோன்றிச் சைவ சித்தாந்தத்தை வளர்த்தார்கள். அவர்களுள் இராமதேவர், சிவவாக்கியர், பட்டினத்தார், பத்திரகிரியார் முதலியோர் அடங்குவர். அவர்களின் சித்தாந்தக் கருத்துகளை இவ்வியல் ஆராய்கின்றது.

## இராமதேவர் பாடல்களில் சித்தாந்தம்

இராமதேவர் பூஜா விதிகளைப் பத்துப் பாடல்களில் குறிப்பிடுகின்றார். அந்தப் பாடல்கள் சித்தர் ஞானக்கோவையில், **'இராமதேவர் பூஜாவிதி'** என்ற பெயரில் காணப்படுகின்றன.

## இராமதேவர் பூஜா விதி

அகத்திலே ஆதியான மணி விளக்கானதும் பூரணமானதும், ஒளிவீசும் சோதி மயமானதுமாகிய மனோன்மணியைக் கண்டு வணங்கவேண்டும் எனவும், வேதாந்தத்திலே விளக்கப்படுகின்ற புறப்பூசைகளினாலே வீண் போகவேண்டாம்[1] என்றும் அடி, முடி, நடுவாகிய ஆறு ஆதாரத்திற்குள்ளே முதலாதாரமாகிய மூன்றெழுத்தை உச்சரிக்கும் முறையினைப் பற்றியும்[2] இராமதேவர் குறிப்பிடுகின்றார்.

மேலும், மாந்திரீகம் செய்யும் முறையையும் அப்பொழுது உச்சரிக்கும் மந்திரங்களையும் கூறுகின்றார். சித்தாகிய மூன்றெழுத்தை நினைத்து யுங்கிலியும் சவ்வுமாக லட்சமுறை செபிக்க சித்தி முற்றிடும்; தன் எதிரியாகிய பேய்கட்கு வித்தான

கேட்டினை உண்டாக்கும் எனவும்[3] கூறுகின்றார். பலிகொடுத்துப் பூசை செய்து கிருபையுள்ள எழுத்தை உச்சரித்துச் செய்யும் மாந்திரீகத்தைப் பற்றியும் இயம்புகின்றார்.[4]

### சக்தி பூசை

இராமதேவர் பரஞ்சோதி நாயகி என்று குண்டலினி சக்தியை அழைக்கின்றார். மேலும், ஆனந்தவல்லி என்றும் குறிப்பிடு கின்றார்.[5] இப்பெயர் கொண்டு ஆராயின் இவர் சக்தி வழிபாடுடையவர் என்பதை அறியலாம்.

இங்ஙனம் இவருடைய பாடல்களில் சரியை, கிரியை, யோகம் என்கின்ற பூசை நெறிகள் இடம்பெறுவதைக் காணலாம்.

## சிவவாக்கியர் பாடல்களில் சித்தாந்தம்

சிவவாக்கியர், சித்தாந்த சைவராவார். இவருடைய பாடல்களில் சைவ சித்தாந்தக் கருத்துகள் விரவியுள்ளன. டி.எஸ். கந்தசாமி முதலியார் கலைக்களஞ்சியத்தில் இவர் சித்தாந்த சைவர் என்பதைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார். "**சிவமே பரம்பொருள்** என்பர். கடவுள் உயிரின் வேறாக உளது என்பர். எனினும், கடவுளன்றி உயிரில்லை என்பர். உலகு, உயிர், கடவுள் எனப் பொருள்கள் மூன்றென்பர். சாயுச்சியம் குறிக்கோள் என்றும், அதை ஞானத்தால் அடையலாம் என்றும் கூறுவர். கடவுள் ஆன்மாவின் உள்ளத்தில் ஞானமயமாக நிலவுகிறார். அவரை அத்தன்மையரென அனுபூதியாற் காணலே ஞானம் என்பர். '**திருவுமாய்ச் சிவனுமாய்த் தெரிந்துளோர்கள் சிந்தையால் மருவிலே எழுந்து வீசும் வாசனைய தாகுவன்**' எனத் தெளிந்த ஞான நிட்டை யுடையோர் திருவுள்ளத்தில் மலரின் மணம்போல் தோன்றுவான் இறைவன். இக்கொள்கை உற்றவாக்கியினுறு பொருள் நறுமலர் எழுதரு நாற்றம்போல், பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்' என்னும் திருவாசகத்தோடு ஒத்திருக்கிறது. இறைவனே குருபரனாக வந்து தன்னைத் தெளிவிப்பான் என்கிறார். எனவே, இவரைச் சித்தாந்த சைவர் என்று கொள்ளவும் இடம் உண்டு."[6]

இவரைப் பட்டினத்தடிகள் தம் பாடலில் மணிவாசகருக்குப் பின் பாராட்டுதலால் அவரும் கி.பி. 10 ஆம் நூற்றாண்டுக்குரியவராவார்.[7]

இறைவனும் உயிர்களும் பாசமும் அனாதியானவை எனக் குறிக்கின்றார்.[8] மேலும், இறைவன் ஒன்றானவன் என்பதை நாதம் ஒன்று, நான்முகனும் திருமாலும் ஒருவரே என்பதை ஓரிறைக் கொள்கைமூலம் விளக்குகின்றார்.[9]

இறைவனை நாடி அவனைத் தன்னுள்ளத்தடக்கி நவின்று போற்றினால் தற்பரமாகிய இறைவன் தன்னுள் கலந்துவிடுவான்.[10] நீரிலே முளைத்தெழுந்த தாமரையின் ஓரிலை நீரினுடன் கூடி நின்றும், நீரில்லாது இருத்தல்போல் இவ்வுலகத்தில் தோன்றி எங்கும் நிறைந்திருக்கும் இறைவன் உலகினோடு கூடிப் பற்றில்லாது இருக்கின்றான் என இறைவனின் தன்மையைப் புலப்படுத்து கின்றார்.[11] இறைவன் தாயாகவும் தந்தையாகவும் குருவாகவும் இருந்தருள் செய்யும் புண்ணியனாவான். குருவாக இருந்து தன்னைத் திருத்திய சற்குருநாதன் என்பதை எடுத்துரைக்கின்றார்.[12]

மேலும், இறைவன் அண்டமாகவும் அகண்டமாகவும் ஆதிமூல மாகவும் கண்டமாகவும் கருத்தாகவும் காவியங்களாகவும் தாமரை யினுள்ளே புணர்கின்ற புண்ணியருமாகவும் திகழ்கிறான்.[13] உள்ளினும் புறத்தினும் உலகில் அனைத்து இடங்களிலும் பரந்து எள்ளில் எண்ணெய்போல் நின்று இயங்குகின்றான்.[14]

இங்ஙனம் இவ்வுலகில் இறைவன் அனைத்துமாக இருந்து, ஆட்டி வைத்து ஆட வைக்கின்றான். அவனன்றி ஓர் அணுவும் அசையாது; அவன் அசைந்தால் இவ்வுலகமே அசையும் என இறைவனின் தன்மைகளைச் சிவவாக்கியர் சித்தாந்தக் கருத்திற்கேற்பத் தம் பாடல்களில் காட்டுகின்றார்.

## கடவுள்

கடவுள் என்பதற்கு எல்லாவற்றையும் கடந்து நின்றவன் என்பது பொருள். அவ்வாறு கடந்து நின்றவனைத் தம்முள் நிறுத்து கின்றவனே சித்தனாவான். சிவவாக்கியார், இறைவன் எல்லா வற்றையும் கடந்து நின்றவன் என்பதை,

> "அரியும் அல்ல அயனும் அல்ல அப்புறத்தில் அப்புறம்
> கருமை செம்மை வெண்மையைக் கடந்து நின்ற காரணம்
> பெரியதல்ல சிறியதல்ல பற்றுமின்கள் பற்றுமின்கள்
> துரியமும் கடந்து நின்ற தூரதூர தூரமே"[15]

எனப் புலப்படுத்துகின்றார். இறைவன் எவராலும் அறிய முடியாத ஆதி சித்தநாதன் ஆவான்.[16] அவ்விறைவனிடம் உலகிலுள்ள அனைத்துப் பொருள்களும் தோன்றி ஒடுங்கும்.[17] என ஆதியும் அந்தமுமில்லா அருட்பெருஞ்சோதியைப் பற்றி எடுத்தியம்புகின்றார்.

## சிவன்

ஆன்மாவிடம் இயல்பாக அமைந்துள்ள ஆணவம், மாயை, கன்மம் ஆகியவற்றைப் போக்கி உயிருக்கு என்றும் சிறந்த துணையாக இருப்பது சிவம் என்னும் செம்பொருளாம். சிவனுக்கு வழங்கும் சிறப்புப் பெயர் சங்கரன்; சுகத்தைச் செய்பவன் (சம்-கரன்) என்பது பொருளாகும்.[18] மேலும், சிவன் என்ற சொல் சேமம், நலம், செம்மை ஆகிய பொருள்களைக் குறித்து நிற்கின்றது.[19] செவ்வை (செம்மை)யை ஒத்து, சிவன் விளங்குகின்றான் என்பதைச் சிவவாக்கியர் பாடல் கொண்டு அறியலாம்.[20]

சிவபெருமானின் தொன்மையைப் பற்றிச் சிவவாக்கியர்,

"உம்பர் வானகத்தினும் உலகபாரம் ஏழினும்
நம்பர் நாடு தன்னிலும் நாவலென்ற தீவினும்
செம்பொன் மாடம் மல்குதில்லை அம்பலத்துள் ஆடுவான்
எம்பிரான் அலாது தெய்வம் இல்லை இல்லை இல்லையே"[21]

என்று கூறுகின்றார்.

உருத்திரனின் சிறப்புப் பற்றியும் அவன் ஆடல்பற்றியும் சிவவாக்கியர்,

"நாலிரண்டு மண்டலத்துள் நாதநின்றது எவ்விடம்
காலிரண்டு மூலநாடி கண்ட தங்கு உருத்திரன்
சேரிரண்டு கண்கலந்து திசைகள் எட்டுமூடியே
மேலிரண்டு தான்கலந்து வீசி ஆடி நின்றதே"[22]

என எடுத்துரைக்கின்றார். மேலும், ஆலம் உண்ட கண்டன்,[23] செம்மையன்; அவன் திருமாலும் நான்முகனும் தேடியும் காண முடியாதவன்;[24] முன்பு முப்புரம் எரித்தவன்[25] எனச் சிவபெருமானின் உருவத்தையும் செயலையும் விளக்குகின்றார்.

## சக்தி சிவன்

'ஒருவனே' ஆகிய இறைவன், தானும் தன் சக்தியும் என இரு தன்மைப்பட்டு நிற்கும் இயல்பினன். ஆதலின், 'சக்தி' என்னும்

கூற்றால் அளவிலாப் பொருள்களில் நிறைந்த அளவிலாச் செயல்களைச் செய்வான்' என்பதே சிவமாகும்.[26] ஆதலின், இறைவன் சக்தியாகவும் சிவமாகவும் இருந்து விளங்குகின்றான் என்பதை அறியலாம்.

இறைவன் சக்தியாகவும் சிவமாகவும் நிற்கும் தன்மையைப் பற்றிச் சிவவாக்கியர் சித்தாந்தக் கருத்திற்கேற்ப விளங்குகின்றார்.[27] மேலும், இறைவனின் வடிவ வேறுபாடாகிய விந்து, நாதம், சிவன், திருமால், நான்முகன் பற்றியும் எடுத்துரைக்கின்றார்.

"வெளியுருக்கி அஞ்செழுத்து விந்துநாத சத்தமும்
தளியுருக்கி நெய்கலந்து சகலசக்தி ஆனதும்
வெளியிலும் அவ்வினையிலும் இருவரை அறிந்துபின்
வெளிகடந்த தன்மையால் தெளிந்ததே சிவாயமே"[28]

இறைவன் விந்தாகவும் நாதமாகவும் விளங்கும் சிறப்பை இப்பாடல் குறிப்பிடுகிறது.

திருமாலும் சிவனும் வேவ்வேறான கடவுளர் அல்லர். இருவரும் ஒருவரே ஆவர்.[29] இவர்களை அறிந்துணர்ந்துகொண்டால் தாயாக வும் தந்தையாகவும் வந்து காத்தருள்வார்கள்.[30] ஆலம் உண்ட கண்டனாகிய சிவபெருமான், திருமாலாகவும் நான்முகனாகவும் சிறந்து விளங்குகின்றான்[31] என இறைவனின் உருவ வேறுபாட்டைச் சிவவாக்கியர் விளக்குகின்றார்.

இங்ஙனம் இறைவன் ஒருவனாக இருப்பினும், பல்வேறு வடிவங் களைக்கொண்டு உயிர்களைக் காத்தருள்கின்றான். இவற்றைச் சித்தாந்த சாத்திரம் சிவபேதம் சக்திபேதம் எனக் குறிப்பிடுகின்றது.

## மூவகைத் திருமேனி

இறைவன் உருவம், அருவம், அருவுருவம் என்னும் மூன்று வடிவங்களைக் கொண்டு விளங்குகின்றான். இறைவன் நாம் செய்யும் பாவங்களைப் போக்க உருவத் திருமேனியை எடுக்கின்றான். இறைவனின் திருவுருவச் சிறப்பினைச் சிவவாக்கியர் மண்டை ஏந்திய கையையுடையவன்;[32] தாமரையின் மத்தியில் உதித் தெழுந்த சோதி,[33] மூவெழுத்து மூவராய் முளைத்தெழுந்த சோதி;[34] வள்ளலாகி நின்ற சோதி[35] ஊனமற்ற சோதி[36] எனக் கண்ணுக்குப் புலப்படுகின்ற உருவத்தைப்பற்றிக் குறிப்பிடுகின்றார். மேலும் அருவுருவமாகிய இலிங்க வடிவத்தைப்பற்றி.

"விண்பரந்த மூல அஞ்செழுத்துளே முளைத்ததே
அங்கலிங்க பீடமாய் அமர்ந்ததே சிவாயமே"[37]

எனச் சிவசக்தியின் உண்மை நிலையை விளக்குகின்றார்.

## பரப்பிரமம்

பரப்பிரமம் என்பது தானே எல்லாவற்றையும் அறியும் தன்மையுடையது. அதாவது, இறைவன் எங்கும் எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருக்கின்றான் என்பதை அறியலாம். இறைவன் பெரும்பாலான பொருள்களில் நிறைந்திருப்பான் என்பதை உபநிடதங்கள் 'பரப்பிரமம்' எனக் கூறுகின்றன என்று டாக்டர் சுப்பு ரெட்டியார் கூறுகின்றார்.[38]

சிவவாக்கியர் பரப்பிரமம் ஆகும் நிலைபற்றிக் குறிக்கின்றார். இறைவனை அடைவதற்குரிய ஒழுக்க நெறிகளாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய இவற்றில் ஒழுகினால் பரப்பிரமம் ஆகலாம் என்பதைச் சித்தாந்தக் கருத்திற்கேற்ப எடுத்தியம்புகின்றார்.[39] ஒருவன் யோக நிலையில் மூச்சைக் கட்டுப்படுத்தினால் இவ்வுலகமே பரப்பிரமமாகும் என யோக நெறியாலும் சித்தர்கள் பரப்பிரம நிலையை அடைந்திருக்கின்றனர் என்பதைத் தெரிவிக்கின்றார்.[40]

உலகம் தோன்றுவதும் அழிவதும் கழிவதும் புகுவதும் ஆகிய செயல்களும் தேவர்களும் திசைகளும் இவ்வுலகிலுள்ள அனைத்தும் இறைவனாகிய பரத்துள் அடங்குவன[41] என்றும், இறைவனுக்குரிய மந்திரத்தை உச்சரிப்பதன்மூலம் தற்பரமாகிய இறைவனை அடையலாம் என்றும் தம் பாடல்மூலம் விளக்கம் தருகின்றார்.[42]

இங்ஙனம் சிவவாக்கியர் இறைவனின் உண்மைநிலைபற்றியும், இறைவன் ஒன்றானவன் என்றும், இறைவனின் தொழில், பல்வேறு வடிவங்கள், மூவகைத் திருமேனி, பரப்பிரமம் ஆகியவற்றைப் பற்றியும் சித்தாந்தக் கருத்திற்கேற்ப எடுத்துரைக்கின்றார்.

## உயிர்

உயிர் தன்னைச் சார்கின்றதை ஒத்து நிற்கும் தன்மையுடையது. இறைவனைச் சாரும்போது அவனைப் போன்றும், தளைகளைச் சார்ந்து நிற்கும்போது அவையே போன்றும் அவை விளங்கும். இறைவனோடும் தளைகளோடும் ஒட்டுநிலையில் உள்ள உயிர்கள்

தளைகளோடுள்ள ஒட்டுதலை நீக்கி இறைவனில் அழுந்துதல் அவற்றிற்குக் கிட்டும் பெரும்பேறாக அமையும்.[43] பசு என்பது கட்டுண்டது எனப் பொருள்படும். அநாதிக் காலந்தொட்டுப் பாசத்தினாலே பிணிக்கப்பட்டுத் தன்னறிவும் தன்னிச்சையும் இல்லாததாய் விளங்குவது ஆன்மாவாகும்.

சைவ சித்தாந்தம் உயிர்களின் அவத்தைகளைச் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என ஐந்துவகை நிலைகளாகப் பிரிக்கின்றது. சிவவாக்கியர் உலக உயிர்களைப் பற்றியும், அவை பெறுகின்ற நிலைகள்பற்றியும் தம் பாடல்களில் குறிப்பிடுகின்றார்.

"சுழுத்தியும் கடந்துபோய் சொப்பனத்திலும் அப்புறம்
அழுத்திஓர் எழுத்துளே அமைப்பது உண்மை ஐயனே"[44]

என உயிர்களின் அவத்தைகளாகிய சுழுத்தி, சொப்பனம் ஆகியவற்றைப் பற்றியும், சுழுத்தியாகிய நித்திரைபற்றி, ஓதி வைத்த நூல்களும், உணர்ந்து கற்ற கல்வியும், மனைவி, மக்கள், உறவினர்களும் மறக்க வந்த நித்திரை[45] எனவும் அவத்தை நிலைகளைப் பற்றி எடுத்துரைக்கின்றார். உயிர் பற்றற்றுத் தானே மூலாதாரத்தில் சென்றடங்கி ஆணவம், மாயை, கன்மம் எதையும் அறியாமல் இருப்பதே துரியாதீதம் எனச் சிவவாக்கியர் கூறுகின்றார்.[46]

சைவ சித்தாந்தம் ஸ்தூலம், சூக்ஷமம், காரணம் என உடலின் வகையினை மூன்றாகப் பிரிக்கின்றது. தமிழில் பருவுடல், நுண்ணுடல், காரண உடல் என வழங்குவர். உடம்பு உயிரிலிருந்து வேறுபட்டது எனச் சைவ சித்தாந்தம் விளக்கம் தருகிறது. உடம்பே அறிவுடையதாகிய உயிர் எனில், உடம்பு பிணமாய்விட்ட பொழுது அதில் அறிவு காணப்படாததற்குக் காரணம் என்னவெனில் பிணமான உடம்பில் பூதங்களுள் ஒன்றாகிய காற்று போய்விடுதலால், அறிவு இல்லையாம் என்று விடை கூறினால், உறக்கத்தில் காற்று இருக்கவும் அறிவு நிகழவில்லை. ஆகவே, பருவுடம்பு உயிரன்று என அருணந்தி சிவாசாரியார் விளக்கம் கூறுகின்றார்.[47] சிவவாக்கியர் மேற்கூறிய கருத்திற்கேற்ப உடம்பு, உயிர் இரண்டும் வேறு வேறானவை என்பதை உடம்பு, உயிர் எடுத்தபோது உருவம் இல்லை என்றும், உயிருக்கு இறப்பு இல்லை என்றும்,[48] உடம்பின் இயல்புபற்றி விளக்குகின்றார்.

இங்ஙனம் உயிர்க்கொள்கையைப் பற்றிச் சிவவாக்கியர் உயிர்களின் அவத்தை உயிர் உடம்பின் இயல்பு ஆகியவற்றைச் சித்தாந்தக் கருத்திற்கேற்பக் கூறுவதை அறியலாம்.

## பாசம்

பாசம் எல்லா உலகங்களிலும் உள்ள உயிரினை அடக்கி ஆளும் வலிமை உடையது என்பது சித்தாந்தம். சிவவாக்கியர் மும்மலங் களைக் கட்டி வைத்த வாசல் மூன்று என்று குறிப்பிடுகின்றார்.[49]

## மாயை

மாயை என்பது ஓர்அருவப்பொருள். அதாவது, கண்ணுக்குப் புலப்படும் உருவம் இல்லாத பொருள் இறைவனது அருட் சத்தியினால் மாயை யென்னும் அருவப் பொருளிலிருந்து உலகம் என்னும் பொருள் தோன்றியது[50] என்பதே மாயை எனப்படும்.

மாயை, ஆணவ கன்மங்களோடு கலப்புற்ற பகுதியும், கலவாது தனித்து நிற்கும் பகுதியும் என இரு பகுதியாய் நிற்கும். கலப்புற்ற பகுதி '**அசுத்த மாயை**' என்றும், கலவாத பகுதி '**சுத்த மாயை**' என்றும் சொல்லப்படும்.[51] சிவவாக்கியர் மக்கள், பெண்டிர் இவர்களையும் மாயை என்றும்,[52] மாயை நீங்கினால் இறைவன் மனத்தில் தங்குவான் என்றும்,[53] ஐந்தெழுத்து மந்திரத்தை நினைத்துச் சொன்னால் பாவமாகிய மாயை பறந்தோடும் என்றும்[54] எடுத்துரைக்கின்றார். மேலும்,

"நான்ற வாசலைத் திறந்து நாடிநோக்க வல்லிரேல்
தோன்றுமாயை விட்டொழிந்து சோதிவந்து தோன்றுமே"[55]

என யோகத்தின் பயனாய் மாயை நீங்கிச் சோதியாகிய இறைவன் வந்து தோன்றுவான் என்பதை எடுத்துரைக்கின்றார்.

## கன்மம்

கன்ம வினையை விடவும் பெருவலிமையுடையது எதுவு மில்லை; அவ்வினை தம் ஊக்கத்தையும் தோற்கடித்துவிடும் தன்மை யுடையது என்பதைச் சிவஞான சித்தியார் கூறுவதை ஒப்புநோக்க வேண்டும்.

"பேறி ழவின்பமோடு பிணிமூப்பு சாக்கா டென்னும்
ஆறுமுன் கருவுட் பட்டதவ் விதியனு பவத்தால்
ஏறிடும் முன்பு செய்த கன்ம மிங்கிவற்றிற் கேது
தேறுநீ இனிச்செய் கன்ம மேலுடற் சேருமன்றே"[56]

சிவவாக்கியர், இறைவனைச் சித்தத்தில் தெளிந்தவனிடம் முன் செய்வினைப் பயனால் வரும் தீமைகள் கதிரவனைக் கண்ட இருள்போன்று விலகிவிடும் எனத் தெளிவுபடுத்துகின்றார்.[57]

## இருவினை

இறைவனைக் கண்டு வணங்கி மூலமாகிய வேரிலேகலந் தொடுங்கினால் பழ வினையாகிய சஞ்சிதம் பறந்தோடிவிடும்.[58] பிறப்பிற்கும் இறப்பிற்கும் காரணமாய் உள்ள இருவினைகளை அறுக்கும் வல்லமை பெற்றால் முடிவாகிய வீட்டின்பத்தைப் பெற்றிருக்கலாம்[59] என்றும் எடுத்துரைக்கின்றார்.

சிவவாக்கியர் பிறவாமைக்குரிய வழியைப் பின்வரும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

"அருக்கனோடு சோமனும் அதுக்கும் அப்புறத்திலே
நெருக்கி ஏறுதாரகை நெருங்கி நின்ற நேர்மையை
உருக்கிஓர் எழுத்துளே ஒப்பிலாத வெளியிலே
இருக்கவல்ல பேரலோ இனிப்பிறப்பது இல்லையே"[60]

"கறந்தபால் முலைப்புகா கடைந்த வெண்ணெய் மோர்புகா
உடைந்துபோன சங்கின் ஓசை உயிர்களும் உடற்புகா
விரிந்தபூ உதிர்ந்த காயும் மீண்டுபோய் மரம்புகா
இறந்தவர் பிறப்பதில்லை இல்லை இல்லை இல்லையே"[61]

என சிவவாக்கியர் இறந்தவர் பிறப்பதில்லை என்பதை மேற்கூறிய வாறு வாதிடுகின்றார்.

## பஞ்சபூதங்கள்

நம் உடலில் பஞ்சபூதங்களும் அடங்கும் என்பதுபற்றிப் பின்வருமாறு டாக்டர் இரா. மாணிக்கவாசகம் விளக்கம் கூறுவர்.

"பஞ்ச பூதங்களில் முதலாவதாகத் தலையானதாக விளங்குவது ஆகாயமே. இதிலிருந்தே மற்றப் பூதங்கள் தோன்றும். மண் தத்துவம் கால் ஆகும். எனவே, பஞ்ச பூதங்களினால் ஆன இவ்வுடலின் இயல்பறிந்து உய்தல் என்னும் பொருட்படத் தலையும் காலும் அறிதல் என்றும் கூறலாம்."[62]

உயிர் உடல் பூதங்களில் அடங்கும் என்பதைச் சிவவாக்கியர் கருத்தரிப்பதற்கு முன்பாக உடல் நெருப்பிலும், உருத்தரிப்பதற்கு முன்பாக உயிர்ப்பு நீரிலும், அருள் தரிப்பதற்கு முன்பாக ஆசை காற்றிலுமாக நிற்கும் என்கிறார். மேலும், இறைவன் வானாகவும் மண்ணாகவும் காற்றாகவும்[63] நெருப்பாகவும் நீராகவும் திகழ் கின்றான்[64] என்பதையும் கூறுகின்றார். மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளையும் அடக்கி ஒருமித்து இருந்தால் இறைவனை அடையலாம் எனச் சிவவாக்கியர் சுட்டிக் காட்டுகின்றார்.[65]

மனிதர் இறைவனை எங்கும் தேடி அலைந்துகொண்டிருக் கின்றனர். அவ்வாறு அலைவதால் இறைவனை அடைய முடியாது. அவனைத் தம்முள்கொண்டு வருகின்ற சித்தி பெறவேண்டும். தன் உடலையே அவன் குடிகொள்ளும் கோயிலாக்கவேண்டும். அவ்வாறு இருந்தவர்களே சித்தர்கள் ஆவர் என்பதை,

"பிரானுமாய் பிரானுமாய் பேருலகு தானுமாய்
பிரானிலே முளைத்தெழுந்த பித்தர் காணும் உம்முடல்"[66]

எனவும், "**உட்கலந்த சோதி**"எனவும்[67] வரும் சிவவாக்கியர் பாடல்களால் அறியலாம்.

தன்னுள் இருக்கும் மலத்தை நீக்கி ஆசையை அறுத்தால் நாதமாகிய ஓசையில் தெளிந்து காணலாம்.[68] ஆதியான தற்பரத்தைச் சேர்ந்தால் மும்மலங்களும் விலகி ஓடிவிடும்[69] என்பனவற்றைச் சிவவாக்கியர் ஆன்மாவை விட்டுப் பாசம் நீங்குதல் பற்றி எடுத்துரைக்கின்றார்.

## அத்துவாக்கள்

இறைவனின் திருமேனி அத்துவாக்களாலும் பஞ்ச மந்திரங் களாலும் ஆனது என்று கூறுவதும் மரபாகும். மந்திரம், பதம், வன்னம், பொருள், உலகம் ஆகியவை இறைவனின் இரத்தம், முடி, தோல், ரோமம், எழுவகைத் தாதுப்பொருள், அவயவம் போன்ற வற்றில் அடங்கும் என்றும், பஞ்ச மந்திரங்களாகிய ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் இவை தலை, முகம், இருதயம், குஹ்யம் (மறைவிடம்), திருவடி ஆகியவை அடங்கும் என்பதனை டாக்டர் வ.ஆ. தேவசேனாபதி கூறுகின்றார்.[70]

## பிரணவம்

அகாரமும் உகாரமும் மகாரமும் விந்துவும் நாதமும் ஆகிய ஐந்தும் பிரியாது ஒன்றாக அமையும். இவற்றைத் தொகுத்து நோக்கினால், '**ஓம்**' என்று ஆகும்.[71] இதுவே பிரணவமாகும் எனச் சிவஞானபோதம் விளக்கம் கூறும். சிவவாக்கியர் பிரணவ மந்திரத் தைப் பற்றி அகாரம், உகாரம், மகாரம், சிகாரம் பற்றியும், பிரணவ மாகிய ஐந்தெழுத்தை நெஞ்சில் வைத்து அவ்வெழுத்தை அறிந்து பின் அவ்வெழுத்துகள் அவ்வின் வண்ணம் **சிவாயம்** என ஆகும்.[72] ஐந்தெழுத்தைத் தியானிக்கும் வல்லமை பெற்றால் அந்த ஐந்தெழுத்தும் நம்முள் சிவாயமாக ஒளிவிடும்[73] என்று குறிப்பிடுகின்றார்.

ஐந்தெழுத்தின் அண்டமும் அகண்டமும் அயன், அரி, அரன் ஆகிய மூவரும் அகாரமும் மகாரமும் மற்றும் உலகிலுள்ள அனைத்துப் பொருள்களும் அடங்கும் எனச் சிவவாக்கியர் கணிக்கின்றார்.[74]

## மந்திரங்கள்

ஐந்து மந்திரங்களும் இறைவனின் உருவத்தில் அடங்கும் என்பதனையும் சிவவாக்கியர் விளக்குகின்றார்.[75] மேலும், அகாரம் என்ற அக்கரத்துள் அவ்வு வந்து தோன்றுதல், உகாரம் என்ற அக்கரத்தில் உவ்வு வந்து தோன்றுதல் என்பனவற்றை மந்திர வகையுள் அடக்கியும்,[76] மெய்யான் சதுர மெய்யுள்ளே விளங்குகின்ற ஞானதீபமாய் உச்சரிக்கும் மந்திரம் **ஓம் நமசிவாயமே** ஆகும்.[77] அந்த மந்திரத்தை ஓதுகின்றவர்க்கு மரணம் இல்லை.[78] ஈசனும் வந்து தன்னிடம் பேசுவான்[79] என மந்திரங்கள் பற்றியும், அம்மந்திரங்களை ஓதினால் உண்டாகும் பயன்கள் பற்றியும் எடுத்துரைக்கின்றார்.

வட்டங்களிட்டு அதில் சிவாயமாகிய மந்திரங்கள் இடுதல் பற்றிச் சிவவாக்கியர் மூலவட்டம், கோல வட்டம், ஞாலவட்டம், ஏலவட்டம் ஆகிய வட்டங்களில் இருப்பது '**சிவாயம்**' எனக் காட்டுகின்றார்.[80]

**நமசிவாய** என்பதில் '**நம**' என்பது முதல்வன் உயிரைப் பிறப்புகளுள் செலுத்தி நிற்கும் ஊன நடனத்தைக் குறிக்கும். '**சிவா**' என்பது அவன் அதனைப் பிறவிக்கடலில் இருந்து எடுத்து, வீட்டுநெறிக்கண் உய்க்கும் ஞான நடனத்தைக் குறிக்கும். '**ய**' இவ்விரு நிலைகளுக்கும் இடைப்பட்டுப் பிறப்புநெறி நோக்காது ஞானநெறியில் நோக்குள்ளதாய் நிற்கும் பக்குவ ஆன்மாவைக் குறிக்கும்.[81] நமசிவாய மந்திரத்தைப் பற்றிச் சிவவாக்கியர்,

"நமசிவாய அஞ்செழுத்தும் நல்குமேல் நிலைகளும்
நமசிவாய அஞ்சில் அஞ்சும் புராணமான மாயையும்
நமசிவாய அஞ்செழுத்து நம்முளே இருக்கவே
நமசிவாய உண்மையை நன்கு உரைசெய் நாதனே"[82]

என விளக்குகின்றார்.

கையைக் குவித்து வணங்குவதற்கும் தலையைத் தாழ்த்தி வணங்கு வதற்கும் உரியவர் சிவபிரானே; வாயார வாழ்த்துவதற்கும் இறைவன் அளித்த உரம் **ஓம் நமசிவாயமே** ஆகும்.[83] **ஓம் நமசிவாயம்** என்ற மந்திரத்தை உணர்ந்து, பிறகு தெளிவுபெற்றதும் அது நம்முள் கலந்து நிற்கும்[84] என அதன் பெருமையையும் அதனை ஓதுவதால் உண்டாகும் நன்மைகளையும் சிவவாக்கியர் எடுத்துரைக்கின்றார்.

## வீடுபேறு

சிவவாக்கியர் இறைவனுக்கும் பூசை செய்தால் ஆதியும் அந்தமும் கடந்த அரிய வீடுபேறு அடையலாம் என்று கூறுகின்றார்.[85]

"தீப உச்சி முனியிலே தீவாகரத்தின் சுழியிலே
கோபமாறு கூவியே கொதித்து நின்ற தீயிலே
தாபமான மூலையில் சமைந்து நின்ற சூக்ஷமும்
சாபமான மோட்சமும் தடிந்துநின்று இலங்குமே"[86]

என எடுத்துரைக்கின்றார். மேலும் சிவவாக்கியர் ஏகமுத்தி, மூன்றுமுத்தி, நான்கு முத்தி[87] என முத்தியினை வகைப்படுத்து கின்றார்.

இறைவனாகிய மூலத்தை நினைத்தால் முத்தி சித்தியாகும்.[88] பிறப்பதும் இறப்பதும், பிறந்து இருப்பதும், மறப்பதும் நினைப்பதும் மறந்ததை நினைத்துத் தெளிவு பெறுதலும், துறப்பதும் தொடுப்பதும் உண்பதும் வீட்டின்பத்தில் அடங்கும்.[89] உயிர்கள் வீட்டின்பத்தைக் கண்டுகொண்ட பின்பு வெட்டவெளி தெரியும்[90] என்ற கருத்துகளைச் சிவவாக்கியர் முத்தியின்பமாக விளக்குகின்றார்.

இறைவனை அடைவதற்கு நான்கு நெறிகளைக் கொண்டு நான்கு மார்க்கத்தால் சைவக் குரவர் நால்வர் நான்கு பதத்தினை அடைந்திருக்கின்றனர்.

| | | | |
|---|---|---|---|
| **சரியை** | - | தாச மார்க்கம்: | திருநாவுக்கரசர் - சாலோகம் |
| **கிரியை** | - | புத்திரமார்க்கம் : | திருஞானசம்பந்தர் - சாமீபம் |
| **யோகம்** | - | சகமார்க்கம்: | சுந்தரர்- சாரூபம் |
| **ஞானம்** | - | சன்மார்க்கம்: | மாணிக்கவாசகர் - சாயுச்சியம் |

என டாக்டர் இரா. மாணிக்கவாசகம் அட்டவணைப்படுத்துகின்றார்.[91]

சிவவாக்கியர் நான்கு பதத்தினை அடையும்முறை பற்றிப் பின்வருமாறு வரிசைப்படுத்துகின்றார்.

"தெளிந்தநற் சரியை தன்னில் சென்று சாலோகம் பெறும்
தெளிந்தநற் கிரியை பூசை சேரலாம் சாமீபமே
தெளிந்தநல்ல யோகம் தன்னில் சேரலாகும் சாரூபம்
தெளிந்த ஞானம் நான்கிலும் சேரலாம் சாயுச்யமே"[92]

எனச் சைவ சித்தாந்தக் கருத்திற்கேற்ப நான்கு பதத்தினையும் எடுத்துரைக்கின்றார்.

## சரியை

இறைவனைக் கும்பிடுதல், இடமாகவும் வலமாகவும் சுற்றி வந்து வணங்குதல்,[93] **ஓம் நமசிவாய** என்ற ஆறெழுத்து மந்திரத்தை ஓதுதல்,[94] போன்றவற்றைச் சரியையின் செயல்களாகச் சிவவாக்கியர் கூறுகின்றார்.

## கிரியை

இறைவனுக்கு நறுமலரிடுதல், நறும்புகை ஊட்டுதல், திருமஞ்சனமிடுதல், அமுது படைத்தல்,[95] வேள்வி செய்தல்[96] பற்றிச் சிவவாக்கியர் கிரியையாகிய செயல்களாக எடுத்துரைக்கின்றார்.

## யோகம்

சிவவாக்கியர் யோகநிலையைப்பற்றியும் குறிப்பிடுகின்றார்.

"நெஞ்சிலே இருந்திருந்து நெருங்கி ஓடும் வாயுவை
அன்பினால் இருந்துநீர் அருகிருந்த வல்லீரேல்
அன்பர் கோயில் காணலாம் அகலும் எண்திசைக்குளே
தும்பி ஓடி ஓடியே சொல்லடா சுவாமியே"[97] எனவும்,

"தில்லையை வணங்கிநின்ற தெண்டனிட்ட வாயுவே
எல்லையைக் கடந்துநின்ற ஏகபோக மாய்கையே
எல்லையைக் கடந்துநின்ற சொர்க்க லோகவெளியிலே
வெள்ளையும் சிவப்புமாகி மெய்கலந்து நின்றதே"[98]

என ஒருவன் யோகத்தில் பெறும் நிலையினை எடுத்துரைக் கின்றார்.

"முச்சதுர மூலமாகி மூன்றதான பேதமாய்
அச்சதுரம் உம்முளே அடங்கவாசி யோகமாம்"[99]

என **வாசியோகம்** செய்யும் முறைபற்றிக் கூறுகின்றார்.

சோதி மண்டலத்தில் புகுந்த பின்பு, இறைவனும் யோகியும் மெய் கலக்கும் அளவில் தான் என்ற நிலையும் அனைத்தும் அற்ற இறைவன் அங்கிருப்பான்[100] என்று யோகத்தினால் பெறும் பயனைச் சிவவாக்கியர் கூறுகின்றார்.

யோகம் எட்டு அங்கங்களைக் கொண்டது. 1. இயமம், 2. நியமம், 3. ஆசனம், 4.பிரணாயாமம், 5. பிரத்யாகாரம், 6. தாரணை, 7. தியானம், 8. சமாதி என்பன. இவ்வெட்டு யோகங்களையும் சிவவாக்கியர் தம் பாடலில் குறிப்பிடுகின்றார்.[101]

இங்ஙனம் யோகத்தின் சிறப்புகளையும், அதன் அங்கங்களையும் யோகத்தினால் பெறும் பயன்களையும், யோகப் பயிற்சியினையும் பற்றிச் சிவவாக்கியர், முற்காலச் சித்தராகிய முதன்மைச் சித்தர் திருமூலர் கருத்துக்கேற்ப விளக்கம் கூறுகின்றார்.

## ஞானம்

ஞானத்தினால் வீடுபேறு அடைய முடியும் என்பது சித்தாந்தம். ஞானமானது ஞானகுருவின் உபதேசத்தைக் கேட்டலும், பின் அதனைச் சிந்தித்தலும், பின் உபதேசப் பொருளைத் தெளிதலும், தெளிந்தவண்ணம் நிட்டையில் அழுந்துதலுமாகும்.[102] சிவவாக்கியர், ஞானம் அடைந்தால் இறைவன் தன்னுள் வந்து குடி புகுவான் என்பதை,

“என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்தது இல்லையே
என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்து கொண்டபின்
என்னிலே இருந்த ஒன்றை யாவர் காண வல்லரோ
என்னிலே இருந்திருந்து யான்உணர்ந்து கொண்டேனே”[103]

என்று உரைக்கின்றார். மேலும், அனைத்துமாகவும், அகண்டமாகவும், அனாதியாகவும் நின்ற இறைவன் எனக்குள் புகுந்து ஞான நிலையைத் தந்தருளினான்.[104] அங்ஙனம் நல்ல வாசலைத் திறந்து ஞான வாசலில் சென்று பேரின்பமாகிய எல்லை வாசலைக் கண்டவர்கள் இனி இவ்வுலகில் பிறப்பதில்லை.[105] ஞானமாகி நின்றதோர் நாதனாகிய இறைவனை அறிந்தபின் ஞானம் அல்லது இல்லை[106] என்று சிவவாக்கியர் ஞானநிலை எய்தும் வழியைக் குறிப்பிடுகின்றார்.

## தீட்சை

குரு ஆன்மாக்களை ஆட்கொண்டருள எழுவகைத் தீட்சைகள் கொடுத்தருள்வர். (தீ- ஞானத்தைக் கொடுப்பது, க்ஷா - பாசத்தை அறுப்பது)[107 அ] அவை நயனம், பரிசம், மானசம், வாசகம், சாத்திரம், யோகம், ஔத்தரி என்பன.

தீட்சை செய்யும் முறையைப் பின்வருமாறு சிவப்பிரகாசம் எடுத்துரைக்கின்றது.

"மூவகையா குயிர்வகுக்க மலத்தார் கன்ம
மூலமலத் தார்மூன்று முடையா ரன்றே
தீவகமா மெனவுருவாய் வந்து நாதன்
திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால்
பாவனையான் மிகுநூலால் யோகப் பண்பால்
பரவிவரு மவுத்திரியாற் பாச நாசம்
மேவவரு ளுதவுமவுத் திரியிரண்டு திறனும்
வியன்கிரியை ஞானமென விளம்பு மாறே"[108]

அதாவது, இறைவன் குருவாக வந்து உயிர்களை ஆட்கொண்டு தீட்சைபெறச் செய்தமை பற்றியும், அதன் வகைகளையும் தெளிவு படுத்துகிறது. சிவவாக்கியர் அஞ்ஞானத்தைப் போக்கி, மெய்ஞ் ஞானத்தைத் தருதலாகிய தீட்சையை,

"சூக்ஷமான கொம்பிலே சுழிமுனைச் சுடரிலே
வீச்சமான வீயிலே விபுலை தங்கும் வாயிலே
கூச்சமான கொம்பிலே குடியிருந்த கோவிலே
தீக்ஷையான தீவிலே சிறந்ததே சிவாயமே"[109]

எனக் கூறுகின்றார்.

இங்ஙனம் ஆன்மாவினை இயல்பாகவே பற்றுவது மலமாகிய நோய். அம்மலமாகிய நோயைப் போக்க மருத்துவராக என்றும் இறைவன் உள்ளார். அம்மல நோயைப் போக்க முடிவில் ஆன்மா இறைவனாகிய குருவிடம் தீட்சை பெறுதல்வேண்டும் என்பதையும் தீட்சை முறையினால் அறிய வைக்கின்றார் சிவவாக்கியர்.

# பட்டினத்தார் பாடல்களில் சித்தாந்தம்

பட்டினத்தடிகள் அருட்பனுவல்கள் பதினோராந் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன. பதினோராந் திருமுறையை வகுத்தவர் நம்பியாண்டார் நம்பிகள். அவர் காலம் **அபயகுலசேகர சோழன்** காலம். அவன் கி.பி. 985 இல் அரசாண்டமையால் அதற்கு முற்பட்டே அடிகள் வாழ்ந்தார் என்பது தெளிவு. சேந்தனாரென்னும் திரு விசைப்பாத் தலைவர் அடிகளின் கணக்கரென்பது கேள்விப் படுதலின், ஒன்பதாவது திருமுறையாகிய திருவிசைப்பாக் கால மாகிய கி.பி. 9 ஆம் நூற்றாண்டே அடிகள் நிலவுலகில் திகழ்ந்த கால மென்று கோடல் தவறாகாது[110] எனக் கா. சுப்பிரமணிய பிள்ளை குறிப்பிடுகின்றார்.

இறைவன் உயிர்கள் உய்தற்பொருட்டு, அணுசதாசிவர், அனந்தர், சீகண்டர் முதலியோர் வாயிலாகச் சைவ சித்தாந்தங் கூறும் சிவாகமத்தை யருளினார். இதனை,

"கைவல நெல்லியங் கனியது போலச்
சைவ சித்தாந்தத் தெய்வ ஆகமத்தை
வரன் முறை பகர்ந்த திருமலர் வாயா"[111]

எனப் பட்டினத்தார் கூறுகின்றார்.

பதி, பசு, பாசம் என்னும் சித்தாந்தக் கொள்கையின் அடிப்படைப் பொருள்பற்றிய விளக்கத்தைப் பட்டினத்தார் பாடல் விளக்குகின்றது.[112]

## பதி (இறைவன்)

பட்டினத்தடிகள் **'பதி, பசு, பாசம்'** என மூன்று பொருள்களின் இயல்புபற்றி,

"முதலாய் நடுவாய் முப்பொருளாய் மூன்றுலகாய்
இதமாகி நின்ற இயல் அறியேன் பூரணமே"[113]

என எடுத்துரைக்கின்றார்.

பதி உண்மையைப்பற்றிப் பட்டினத்தடிகள், வாக்கும் மனமும் கடந்தவன், காண்பதற்கு அரியவன், நுட்பமான பொருள்களிலும் நுட்பமானவன், சொல்லுக்கு அடங்காதவன், சொல்லிறந்து நின்றவன், கல்லுள் இருந்த கனல், ஒளிபோல் நின்றவன் எனக் குறிப்பிடுகிறார்.[114]

சைவ சித்தாந்தம் பதி உண்மையைக் குறிப்பிடுவது போன்றே இறைவனின் உண்மைத் தன்மையை எடுத்துரைக்கின்றார். மேலும், இறைவனின் இயல்பைச் சித்தி கைவரப் பெற்றவர்களின் உள்ளத்தில் பரஞ்சோதியாய்த் திகழ்பவன்; அடியும் முடியும் இல்லாதவன்; தோற்றமும் முடிவும் இல்லாதவன்; யாராலும் அறிய முடியாமல் அகண்டமாய் நின்றவன் என்பதை உணர்த்துகின்றார்.[115] இறைவனின் உண்மை நிலையை விளக்கிய பட்டினத்தார், இறைவன் ஒன்றானவன் என்பதையும், தெய்வம் உண்டென்பதையும் உணர்த்துகின்றார்.[116]

" ஊனாய் உடல் உயிராய் உள்நிறைந்த கண்ணொளியாய்த்
தேனாய் ருசியான திறம் அறியேன் பூரணமே!"[117]

என்றும்,

" பாசம் உடலாய்ப் பசுஅதுவும் தான் உயிராய்
நேசமுடன் நீபொருளாய் நின்றனையே பூரணமே"[118]

என்றும், இறைவன் உடலாகவும் அவ்வுடலில் உயிராகவும் கண்ணொளியாகவும் பாசமாகவும் அப்பாசத்தைப் பற்றி நின்ற உயிராகவும் திகழ்கின்றான் என்பதையும் குறிப்பிடுகின்றார்.

கடவுள் தாயாகவும் தந்தையாகவும் குருவாகவும் வந்து தாங்கும் இயல்புடையவன்.[119] அவன் இறைவன் ஓரிடத்தில்தான் இருக்கின்றான் என்பதில்லை. அங்கிங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்தபூர்த்தியாய்த் திகழ்பவன்; எங்கும் என்றும் எவ்வுயிருமாகவும் இருப்பவன் என்றும் பட்டினத்தடிகள் கூறுகின்றார்.[120]

## இறைவன் உயிரில் கலத்தல்

உலகத்தில் உள்ள அனைத்து உயிர்களிலும் இறைவன் கலந்துள்ளான். அந்த உயிர்களுக்குத் தீமை செய்வது இறைவனுக்குத் தீமை செய்வதைப் போன்றதாகும். பொங்கு பல சமயமெனும் ஆறுகளெல்லாம் புகுந்து கலந்திட நிறைவாகப் பொங்கி ஓங்குகின்ற கங்குகரை காணாத கடலாக இருப்பவன் இறைவன்.

"உடனாகவே இருந்து உணர அறியானோடு
கடல்நீரும் ஆறும்போல் கலந்தனையே"[121]

என்றும்,

"என்னை அறியாமல் எனக்குள்ளே நீஇருக்க
உன்னை அறியாமல் உடல் இழந்தேன் பூரணமே"[122]

என்றும்,

"பாலின்கண் நெய் இருந்தாற் போலப் பரஞ்சோதி
ஆலிங்கனம் செய்து அறவிழுங்கிக் கொண்டாண்டி"[123]

என்றும் இறைவன் உயிருடன் கலந்தமையை உணர்த்துகின்றார். இங்ஙனம், இறைவன் உடலில் உயிராகவும் கடல்நீரில் ஆறு போன்றும் பாலின்படு நெய் போன்றும் இருக்கின்றான் என்பதைப் பட்டினத்தார் பாடல்களிலிருந்து உணரலாம்.

## இறைவன் தோற்றம்

உலகத்தில் ஒவ்வொரு செயலுக்கும் மூன்று காரணங்கள் உள்ளன என்பதைக் கண்கூடாக அறியலாம். மட்கலங்களுக்கு முதற் காரணம் மண்; துணைக் காரணம் திரிகை முதலியன; நிமித்த காரணம் குயவன். அதுபோலச் சட உலகமுண்டாதற்கு மாயை முதற் காரணம். இறைவனது ஆற்றல் துணைக் காரணம். இறைவன் நிமித்த காரணம் எனச் சிவஞான சித்தியார் குறிப்பிடுகிறது.[124]

இக்கருத்து அமைய இறைவனின் தோற்றம்பற்றிப் பட்டினத்தார்,

"எழுவகைத் தோற்றத்து இருந்து விளையாடினதைப்
பழுதறதே பாராமல் பயன்இழந்தேன் பூரணமே"[125]

எனப் புலப்படுத்துகின்றார்.

## இறைவனின் ஐந்தொழில்

இறைவன் தோற்றம், ஒடுக்கம், காப்பு, மறைப்பு, அருள் என்னும் ஐந்தொழில்களைக்கொண்டு செயல்படுகின்றான்.

"அத்திமுதல் எறும்பீ றானவுயிர் அத்தனைக்கும்
சித்தமகிழ்ந் தளிக்கும் தேசிகா"[126]

என்னும் அடிகள் மூலம் இறைவனின் படைத்தல் தொழிலைப் பட்டினத்தடிகள் சித்தாந்தக் கருத்திற்கேற்ப எடுத்துரைக்கின்றார்.

தனக்கு வரும் நன்மையும் தீமையும் நான்முகன் எழுதுவதால் வருவன என்றும்,[127] பிரமா வெழுத்தைத் துடைத்து சிரஞ்சீவியாய் வாழ வைப்பவனும் இறைவனே யாவன்[128] என்றும் குறிப்பிடுகின்றார்.

படிகம் தன்னுடைய பிரகாசத்தையும், பஞ்சவன்னங்களினுடைய விளக்கத்தையும், இவ்விரண்டையும் கூட்டிக் காரியப்படுத்தப்பட்ட ஆதித்தப் பிரகாசத்தைப் போலக் கருத்தாவினுடைய திருவருளும் காரியப்படுதலாம்.[129] பட்டினத்தடிகள், இறைவன் உயிர்களுக்கு அருள்காட்டி ஆட்கொண்டமையைத் தம் பாடல்களில் குறிப்பிடுகின்றார்.

"பாசவினையைப் படப்பார்த்த பார்வையுடன்
நேசத்தைக் காட்டி நில்என்று சொன்னாண்டி!
சின்மய நல்நோக்கால் சிற்சொரூபம் காட்டிஎனைத்
தன்மயமாய் ஆக்கியே தான்அவனாய் நின்றாண்டி!"[130]

சிவஞான சித்தியார் அருள் தன்மையைப் பற்றிக் கூறும்போது, அவனது உருவம் அருள். அவனது குணங்களும் அருள்; அவனுடைய திருக்கரம், திருவடி முதலிய அனைத்து அங்கங்களும் அருளே. அவனைப் பற்றிய அன்பு அனைத்துமே உயிர்களுக்கு நன்மை செய்வதற்கே யாகும் எனக் குறிப்பிடுகிறது.[131]

இறைவனின் செயல்களைப் பற்றிப் பட்டினத்தடிகள் உடுப்பவன், உண்பவன், காத்துப் பிறகு அழிப்பவன், கேள்விசெய்பவன், கதியடங்கக் கொடுப்பவன், ஏற்பவன், ஏற்றுவிடாமல் தடுப்பவன் எல்லாம் இறைவனே என்று கூறுகின்றார்.[132]

இங்ஙனம், இறைவன் ஐந்தொழில்களையும் செயல்படுத்தி உயிர்களை உய்ய வைக்கின்றான். அவன் அசைந்தால்தான் இந்த உலகமே அசையும் என்பதைப் பட்டினத்தடிகள் தம் பாடல்கள் மூலம் எடுத்துரைக்கின்றார்.

# இறைவனின் தடத்த நிலைகள்

## சிவன்

மனிதன் காட்டுவது அன்பாகவும், கடவுள் காட்டுவது அருளாக வும் ஆகிறது; இதுவே சிவம் ஆகும். சிவம் என்ற கருத்து, மேலான ஒரு செம்மையைப் பேரின்ப நிலையைச் சுட்டுவது. இதுவே சைவ சமயக் குறிக்கோளாகக் கொண்ட சிவத்தன்மையும் சிவப் பொருளுமாகும்.[133]

இறைவன் உருவின்றி யிருப்பினும் தம்மடியார் விரும்பும் உருவங்களை எடுத்துக் கொள்கிறார். உயிர்களின் விருப்பத்திற் கேற்ப உலகை இயக்க வேண்டி, அவர் பலவுருவங்களையும் எடுக்கின்றார். இறைவன் உருவமற்றிருப்பினும் அறிவுள்ளவருக்கு அறிவாகவும், உருவமாகவும் காணப்படுவான் என்பதைத் திருவருட்பயன் உணர்த்துகின்றது.[134] பட்டினத்தடிகள் சிவபெருமானின் உருவச் சிறப்பை எடுத்துரைக்கின்றார். சிவபெருமானைச் செம் பொன்னம்பலவனை,முதல்வனைத் தில்லையுள் முனைத்தெழுந்த சோதியை, அம்பலத்தரசனை ஆனந்தக் கூத்தனை,[135] சிவபத

வீடருள்பவனை, முத்தி நாதனை, மூவர் முதல்வனை, அண்ட ரண்டமும் அனைத்துள புவனமும் கண்ட அண்ணலைக் கச்சியிற் கடவுளை ஏக நாதனை[136] என்றெல்லாம் புகழ்ந்துரைக்கின்றார். சிவபெருமானின் திருப்பெயர்களாகப் பட்டினத்தடிகள்,

"அத்தனை முப்பத்து முக்கோடி தேவர்க் கதிபதியை
நித்தனை அம்மை சிவகாம சுந்தரி நேசனை எம்
கத்தனை பொன்னம்பலத் தாடும்ஐயனைக் காணக்
கண்கள்
எத்தனை கோடியுகமோ தவஞ்செய் திருக்கின்றனவே"[137]

என வரிசைப்படுத்துகின்றார்.

பட்டினத்தடிகள், இறைவனாகிய உருத்திரனை இதயத்தில் உண்மையுடன் பாராமல் கருத்தழிந்து நானும் கலங்கினேன் என்று கூறுகின்றார்.[138] இங்ஙனம் இறைவன் நல்லவர் களுக்கும் தீயவர் களுக்கும் வரம் அளிக்கும் வரமாகத் திகழ்கின்றவர். உருத்திரக் கடவுள் அச்சத்தை உடையவராக இருப்பினும், அடியவர்களால் கவரப் பட்டு இதயத்தில் நினைத்துப் போற்றும் இறைவனாகக் கருதப்பட்டார் என்பதை அறியலாம்.

## இறைவனின் வடிவ வேறுபாடு

கதிரவன் தன் நிலையில் நிற்கும்பொழுது கதிரவன் என்றும், உலகில் பரவி நிற்கும் நிலையில் கதிர் என்றும் சொல்லப்படுதல்போல, இறைவனும் தம் நிலையில் நிற்கும்போது, '**சிவம்**' என்றும், உலகத்தோடு தொடர்புகொள்ளும்பொழுது '**சக்தி**' என்றும் சொல்லப்படுகின்றது என்பது தெளிவாகும்.[139]

தாயும் தந்தையும் இல்லை எனில் நாம் இவ்வுலகத்தில் பிறக்க முடியாது. சக்தியில்லையேல் சிவம் இல்லை; சிவம் இல்லையேல் சக்தியில்லை என்பது முற்றிலும் உண்மை என்பதை இறைவனின் சிவசக்தியின் உருவம் நமக்கு உணர்த்துகின்றது.

சிவசக்தியின் வடிவங்களைப்பற்றிப் பின்வரும் பாடல் குறிப்பிடுகிறது.

"சத்தியாய் விந்து சக்தி யாய்மனோன் மனித னாகி
யொத்தறு மகேசையாகி யுமைதிரு வாணியாகி
வைத்தறுஞ் சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி யொருத்தியாகு
மெத்திற நின்றா னீச னத்திற மவளு நிற்பள்.[140]

அருள் வட்டம் என்பன சக்தித் தன்மையன. இவற்றோடு சக்தி வேறுபாடுகள் எழும் ஒரே சிவசக்தியின் திருமேனிகளே யாகும் என்பதை அறியலாம். இதனையே பட்டினத்தார் இறைவன் சக்தியும் சிவமுமாக இரண்டாகிப் பின் முடிவில் ஒன்றாய்த் திகழ்வதைக் குறிப்பிடுகின்றார்.[141]

## சக்தியின் உருவம்

இறைவனின் அறிதல், விரும்புதல், செய்தல் என்னும் செயல்கள் பற்றி, ஞானசக்தி, இச்சாசக்தி, கிரியாசக்தி எனப் பெரும்பான்மையாக மூன்றாகவும் சிறுபான்மையாக எண்ணிறந்ததாகவும் சொல்லப்படும். இச்சக்திகளைக்கொண்டே இறைவன் தனது தொழில்கள் அனைத்தையும் செய்கின்றான்.

பசு, பாசங்களைப் பற்றாது தன்னிலையில் பொதுவாக 'அருள்' என்னும் நிலையில் நிற்கும்பொழுது அச்சத்தி, 'பராசக்தி' எனப்படும்.[142] அதாவது எங்கும் பரந்து நீக்கமற நின்றவள், மேலா னவள் என்று பொருள்படும்.

பட்டினத்தடிகள் சக்தியை, மூலத்து உதித்தெழுந்த முக்கோணச் சக்கரத்துள் வாலைதனைப் போற்றாமல் மதி மறந்தேன் என்று குறிப்பிடுகின்றார்.[143] அடிகள் சக்தியை வாலை என்னும் பெயரிட்டு அழைக்கின்றார். மற்றச் சித்தர்களும் சக்தி பூசையை வாலைபூசை என்றே கூறுகின்றனர்.

## நாதவிந்து

"நாதவிந்து தன்னை நயமுடனே பாராமல்
போதம் மயங்கிப் பொறிஅழிந்தேன் பூரணமே"[144]

## சதாசிவம்

"நெற்றி விழியுடைய நிர்மல சதாசிவத்தைப்
புத்தியுடன் பாராமல் பொறி அழிந்தேன் பூரணமே"[145]

## மகேசுவரன்

"விசுத்தி மகேசுவரனை விழிதிறந்து பாராமல்
பசித்துருகி நெஞ்சம் பதறினேன் பூரணமே"[146]

## திருமால்

"நாவிக் கமல நடுநெடுமால் காணாமல்
ஆவிகெட்டு யானும் அறிவழிந்தேன் பூரணமே"[147]

## பிரமன்

"உந்திக் கமலத்து உதித்து நின்ற பிருமாவைச்
சந்தித்துக் காணாமல் தட்டழிந்தேன் பூரணமே"[148]

என்ற பாடலின் மூலம் பட்டினத்தடிகள் சித்தாந்தக் கருத்திற்கேற்பச் சிவம், சக்தி, நாதம், விந்து, சதாசிவம், மகேசுவரன், உருத்திரன், மால், அயன் என்னும் இறைவனின் ஒன்பது வடிவ வேறுபாடுகளை உணர்த்துகின்றார். பட்டினத்தடிகள் பரமானந்தத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது,

"சுரப்பற்று வல்வினை சுற்றமும் அற்றுத் தொழில்களற்று
கரப்பற்று மங்கையர் கையிணைக் கற்றுக் கவலையற்று
வரப்பற்று நாதனை வாயார வாழ்த்தி மனமடங்கப்
பரப்பற்றி ருப்பதன்றோ? பரமா! பரமானந்தமே"[149]

என்கிறார்.

## இறைவனின் திருமேனி

இறைவனின் திருமேனியைக் கண்ணுக்குப் புலப்படுத்துவது உருவம். கண்ணுக்குப் புலப்படாதது அருவம். கண்ணுக்குத் தெரிவதால் உருவமாயும் குறிப்பிடத்தக்க எந்த உருவமும் இல்லாது அருவமாய் இருப்பது சிவலிங்க வடிவமாகும். இறைவன் நம் பாவங்களைப் போக்கவும் நன்மை செய்யவும் சிவபெருமான் உருவத்தை எடுக்கின்றார்.[150]

பட்டினத்தடிகள் இறைவனின் உருவங்களைப்பற்றிக் கூறும்பொழுது உருவம்,அருவம், அருவுருவம் ஆகிய மூன்றையும் குறிப்பிடுகின்றார்.[151]

இங்ஙனம் இறைவன் உருவமாகிய குருவாகவும், ஒளியாகிய கதிர், மதி, இருள், நெருப்பு ஆகிய அருவமாகவும் திகழ்கின்றான் என்பதை மேற்கண்ட கருத்துகளால் உணரலாம்.

## இலிங்கம் (அருவுருவம்)

உயிர் வாழ்க்கை ஆண், பெண் என இருவரின் இணைப்பால் தோன்றுவது என்பதைக் காட்டுவதற்கே இலிங்க வடிவம் அமைந்துள்ளது என்று சித்தியார் குறிப்பிடுகின்றது.[152]

மேற்கூறிய சித்தாந்தக் கருத்திற்கேற்பப் பட்டினத்தடிகள் இறைவனின் அருவுருவச் சிறப்பினைப் பின்வருமாறு எடுத்துரைக்கின்றார்.

**"கருவாய் உருவாய்க் கலந்த உலகமெலாம் நீயாய்**
**அருவாகி நின்றது அறிகிலேன் பூரணமே"[153]**

இங்ஙனம், சித்தர்கள் உருவ வழிபாட்டை வெறுத்தாலும், இறைவன் கொள்கின்ற உருவச் சிறப்பினைப் பற்றித் தெளிவாக எடுத்துரைக் கின்றனர். அதனால், அவர்கள் இறைக்கொள்கை உடையவர்கள் என்பதையும், சித்தாந்தக் கருத்திற்கேற்ப இறைவனின் இயல்புகளையும் தம் பாடல்களில் எடுத்துரைக்கின்றனர் என்பதையும் உணரலாம்.

## பசு (உயிர்)

ஆன்மாவின் இயல்புபற்றிச் சைவ சித்தாந்தக் கருத்திற்கேற்பப் பிறந்தன இறக்கும்; இறந்தன பிறக்கும்; தோன்றின மறையும்; மறைந்தன தோன்றும் எனப் பிறப்பு இறப்பின் தன்மையை எடுத்துரைக்கின்றார்.[154]

இங்ஙனம் உயிர் பிறப்பு இறப்புகளில் அகப்பட்டுத் துன்புற்றுக் கடவுளருளால் ஆணவத்தினின்றும் விடுபட்டு உண்மையியல்பை உணர்கிறது. பிறகு, உயிர் சிவத்தை எங்கும் காண்கிறது. அன்பே சிவம் என்ற இன்பத்தில் திளைக்கிறது என்று பட்டினத்தடிகள் உயிர் விடுதலைப் பெறுதல் பற்றி எடுத்துரைக்கின்றார்.

## பாசம்

ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மூன்றும் உயிர்களைப் பந்தித்ததால் பாசம் என்று கூறப்படும். ஆணவம் என்பது உயிர்களை அறியாமையில் அழுத்தி நிற்பது; மாயை என்பது தனுகரணபுவன போகங்களாய் அமைவது. கன்மம் என்பது உயிர்களின் நல்வினை தீவினை என்பதாகும்.

பட்டினத்தடிகள் மலங்களைப் பற்றிக் குறிப்பிடும்போது அறியாமையாகிய மலத்தால் அறிவு கெட்டதாகவும், தன்னைப் பிரியாத வினைப்பயனால் தான் பித்துப் பிடித்ததாகவும் கூறுகின்றார்.[155]

## ஆணவம்

பட்டினத்தடிகள் சற்குருவைப் போற்றாமல் அகத்திலிருக்கும் ஆணவத்தால் அறிவிழந்ததாகவும்,[156] தன் உடலினுள் இறைவன் குடிகொண்டதைக் காணாமல், 'நான்' என்ற ஆணவம் கொண்டு நலம் இழந்ததாகவும்,[157] கண்ணப்பனின் எச்சில் தின்றவனைப் போற்றாமல் ஆணவத்தினால் அமுங்கி மெழுகுபோல் உருகியதாகவும் குறிப்பிடுகின்றார்.[158]

## மாயை

மாயை தோன்றுவதற்கு முதற் காரணமாகவும், சடப்பொருள் எவற்றிற்கும் மூலமாய் யாவுந் தோன்றுவதற்கு இடமாகவும் விளங்குவதாகும் என்று சிவஞான சித்தியார் குறிப்பிடுகிறது.[159] பட்டினத்தடிகள் தான் வாழ்வில் அலைந்து திரிந்து பிறகுதான் சித்தியையும் முக்தியையும் பெற்றிருக்கின்றார். தான் மாயை என்னும் வனத்தில் அலைந்ததாகவும், தாமாய் உலகனைத்தும் மனச் சஞ்சலம் அடைந்ததாகவும், மாயை பற்றியும்,[160] குடிலையாகிச் சுத்தமாயை அழிந்ததாகவும் கூறுகின்றார்.[161]

"பெண்டு பிள்ளை தந்தை தாய் பிறவியுடன் சுற்றம் இவை
உண்டென்று நம்பி உடல் அழிந்தேன் பூரணமே!
மாதர் பிரபஞ்ச மயக்கத்திலே விழுந்து
போதம் மயங்கிப் பொறி அழிந்தேன் பூரணமே!
மண் பெண் பொன்னாசை மயக்கத்திலே விழுந்து
கண்கெட்ட மாடதுபோல கலங்கினேன் பூரணமே"[162]

என்று தம் பாடலில் பிரபஞ்ச மயக்கத்தைப் பற்றி எடுத்துரைக்கின்றார். பட்டினத்தடிகள் தன்னிடம் உள்ள மாயை பற்றி,

"காமக் குரோதம் கடக்கேனே என்குதே!
நாமே அரசென்று நாள்தோறும் எண்ணுதே!
அச்சம் ஆங்காரம் அடங்கேனே என்குதே!
கைச்சும் இன்னும் மானக்கழலேனே என்குதே!"[163]

எனத் தெளிவுபட உரைக்கின்றார். மேலும், பட்டினத்தடிகள் தாம் பாசத்திலிருந்து விடுபட்டுப் பூதங்களையும் பொறிகளையும் ஐம்புலன்களையும் பேதைமையாகிய குணங்களையும், யான் என்ற ஆணவத்தையும் நீங்கி இறைவனைப் பற்றியதாக உணர்த்துகின்றார்.[164]

## பட்டினத்தடிகள் குறிப்பிடும் மூன்று வினைகள்

### சஞ்சிதம்

ஊன் உடம்பு எடுத்தற்குப் பின்செய்த தீவினைகள் காரணம் இல்லை; பிறப்பதற்குமுன் செய்த தீவினையே காரணம் என்றும்,[165] முன்னை வினையெல்லாம் முழுதும் அறுத்ததாகவும்,[166] சஞ்சிதமாகிய வினையிலிருந்து தன்னை மாற்றிவிடுமாறும் தம் பாடல்களில் பட்டினத்தடிகள் கூறுகின்றார்.[167]

### ஊழ்வினை

ஒருவர்பாற் றொடர்ந்து நடைபெறும் வினையே பழக்கமென்றும், அப்பழக்கமே அவரைப் பிற்பிறவிகளில் முனைந்து நின்று தனக்கிசையச் செலுத்துங்கால் ஊழ்வினை யாமென்றுஞ் சொல்லப்படும்.[168]

"மேலைக்கு வித்து மாகி விளைந்தவை யுணவுமாகி
ஞாலத்து வருமா போல நாஞ்செய்யும் வினைகளெல்லாம்
மேலத்தான் பலமாச் செய்யு மிதமாகித் தங்கட் கெல்லாம்
மூலத்ததாகி யென்றும் வந்திடும் முறைமை யோடே"[169]

என இம்மை மறுமையில் இருவினைகளும் தொடர்ந்து வரும் என்பதை அறியலாம். பட்டினத்தடிகள் தன்னைத் தொடர்ந்து வருவன இருவினைகளே என்பதைப் பின்வரும் பாடல்மூலம் குறிப்பிடுகின்றார்.

"அத்தமும் வாழ்வும் அகத்து மட்டே! விழியம் பொழுந
மெத்திய மாதரும் வீதிமட்டே! விம்மிவிம்மி இரு
கைத்தலம் மேல்வைத்து அழும்மைந்தரும் சடுகாடு மட்டே
பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே!"[170]

வீடுவரை உறவும், வீதிவரை மனைவியும், காடுவரை பிள்ளையும், இறுதியில் தன்னைத் தொடர்ந்து வருவன தாம் செய்த பாவம் புண்ணியங்களே யாகும் என்பதைத் தெளிவாகச் சுட்டுவதை இங்கு [அறி]யலாம்.

## நான்கு கரணங்கள்

பட்டினத்தார் நான்கு கரணங்களைப்பற்றிக் குறிப்பிடும்போது, தனுவாகிய நான்கும் தானாய் மயங்கியதாகவும்,[171] மனம், புத்தி, சித்தம், மகிழ்அறிவு, ஆங்காரமாய் நினைவாகிய தலமான நிலையைத் தான் அறியாததாகவும் எடுத்துரைக்கின்றார்.[172] மேலும் முத்தர் மனம் மோனத்தில் இருக்குமென்றும்,[173] இறைவனை மனம் நினைக்க வேண்டுமென்றும்[174] குறிப்பிடுகின்றார்.

இங்ஙனம் நான்கு கரணங்களைப் பற்றியும், அவற்றின் இயல்புகள் பற்றியும் சைவ சித்தாந்தக் கருத்துகளுக்கேற்பப் பட்டினத்தடிகள் கூறுகின்றார்.

## பஞ்சபூதங்களும் உடலும்

பஞ்சபூதங்கள், ஐந்து கடவுளர், ஐந்து பொறிகள், ஐந்து மந்திரங்கள் ஆகியவற்றை ஒன்றுபடுத்திப் பின்வருமாறு சித்தர் மெய்ப்பொருள் எடுத்துரைக்கின்றது.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| **பிருதிவி** | - | பிரம்மா | - | சரீரம் | - | நகாரம் |
| **அப்பு** | - | விஷ்ணு | - | வாய் | - | மகாரம் |
| **அக்கினி** | - | உருத்திரன் | - | கண் | - | சிகாரம் |
| **வாயு** | - | மகேசுவரன் | - | மூக்கு | - | வகாரம் |
| **ஆகாயம்** | - | சதாசிவம் | - | செவி | - | யகாரம்[175] |

பட்டினத்தடிகளும் ஐந்து பூதங்களிலும் இறைவன் கலந்துள்ளான் என்றும் கூறுகின்றார்.[176]

## உடம்பு

எல்லையில் அடங்காது பிரம்மாண்டமாயிருக்கும் பிரகிருதியின் அணு போன்ற ஒரு சிறுபகுதியே நமது உடல். பிரம்மாண்டத்தின் பெருமை முழுவதும் சிறுபிண்டமாகிய நம் உடலில் உள்ளது. நமது உடலையும், அதனுள் ஒளிர்பவனையும் உள்ளபடி தெரிந்து கொண்டால் அகிலாண்டகோடி பிரம்மாண்டத்தைத் தெரிந்து கொள்ள முடியும்.[177]

இறைவனுக்குப் பல ஆலயங்கள் இருப்பினும், நம் ஊனுடம்பாகிய ஆலயமே அவன் இருப்பதற்கு ஏற்ற இடமாகும். உடம்பு என்பது பஞ்ச பூதங்களால் ஆனது. உயிரை நீக்கிவிட்டு உடம்பை மட்டும் கருதும்போது அது உயிரில்லாத பொருளாகிறது.

பட்டினத்தடிகள் உடம்புபற்றிக் குறிப்பிடும்போது, அலமலங் கள்வர்; ஐவர் கலகமிட்டு அலைக்கும் கானகம்; சலமலப்பேழை; இருவினைப் பெட்டகம்; வாத பித்தம் கோழை குடிபுகுஞ் சீறூர் என்றும்,[178] ஐம்புலப் பறவை அடையும் பஞ்ச ரதம்,[179] இருவினை விலங்கோடும் இயங்கும் புற்கலன், நடுவன் வந்து அழைத்திட நடுங்கும் யாக்கை,[180] பிணமாய்க் கிடக்கும் பிண்டம்; பிணமேல் ஊரில் கிடக்க வொட்டா உபாதி[181] என்று சுட்டுகின்றார்.

பட்டினத்தடிகள் உடம்பின் வகைகளில் அன்னமயகோசம், மனோமயகோசம் ஆகியவற்றைப் பின்வரும் பாடல்களின் வாயிலாகச் சுட்டுகின்றார்.

"தோல் எறும்பு மாங்கிஷமும் தொல் அன்னத்தால் வளரும்
மேல் எலும்பும் சுத்தமென்று வீறாப்பாய் மாண்டேனே"[182]

"வாக்கிறந்து நின்ற மனோகோச ரம்தனிலே
தாக்கறவே நின்றதிலே தலைசெய்தாய்; நெஞ்சமே!"[183]

## பிறப்பு இறப்பு

இருவினையினால் உயிர்கள் பிறப்பு, இறப்பு என்னும் போக்குவரவில் இன்ப துன்பத்தில் உழல்கின்றன. உயிர்கள் தாம் செய்யும் பாவ புண்ணியங்களுக்கேற்பப் பிறப்பு இறப்பு என்ற சக்கரத்தில் சுழல்கிறது. அடியவர்கள் இறைவனிடம் அவ்வுலகத்தில் பிறக்கக் கூடாது என்றும், அவ்வாறு பிறந்தால் இறைவனை மறக்கக் கூடாது என்றும் வரம் வேண்டுவார்கள்.

பட்டினத்தடிகள் உயிர்களின் பிறப்பு இறப்புப் பற்றிக் குறிப்பிடும்போது ஓயாத பிறப்பினால் ஒழிந்ததாகவும்,[184] இப்பிறப்பு பாழ்படுத்தி இருந்தபடியே இருக்கக் கூறுதற்கரிய இறைவன் இருக்கும் இடத்தைத்தான் நெஞ்சம் சேர்ந்ததாகவும்[185] எடுத்துரைக்கின்றார்.

## தொண்ணூற்றாறு தத்துவங்கள்

"கருவிகள் தொண்ணூற்றாறில் கலந்து வினையாடினதை
இருவிழியால் பாராமல் ஈடழிந்தேன் பூரணமே!"[186]

எனப் பட்டினத்தடிகள் இறைவன் 96 தத்துவங்களிலும் கலந்து வினை செய்கின்றான் என்பதைத் தம் பாடல்மூலம் விளக்குகின்றார்.

## பன்னிரண்டு கலைகள்

இறைவன் பன்னிரண்டு கலைகளில் இருந்து கூத்து ஆடுகின்றான்[187] எனப் பட்டினத்தடிகள் பிரணவக் கலைகளாகச் சுட்டிக் காட்டுகின்றார்.

## திருவைந்தெழுத்து

**சிவாயநம** எனத் திருவைந்தெழுத்தை ஓதி நினைத்தால் ஆணவ இருள் நீங்கும். இறைவனின் திருவருளானது உயிரைப் பொருந்தி, எல்லாவற்றையும் கடந்து தூய நிலையை எய்வித்துச் சிவமாகிய பேரின்பத்தில் சேர்க்கும்[188] என்று உண்மை விளக்கம் கூறுகிறது.

**சிவாயநம** என்று சிந்தித்திருப்போர்க்கு அபாயம் வாராது என நம் முன்னோர்கள் ஓதியுணர்ந்து நெஞ்சில் வைத்து வந்தனர். இறைவனின் திருப்பெயரை உரைக்க வேண்டுமென்றால் நல்ல திருவெழுத்து ஐந்துண்டு[189] எனப் பட்டினத்தடிகள் பாடல் விளக்கம் கூறுகின்றது.

சிவன் ஐந்து மந்திரங்களைத் திருமேனியாக உடையவன். அவை பீஜம், பிந்து, நாதம், சக்தி, சாந்தி எனக் கூறுவர் சிலர். சிவனுக்குரிய ஐந்தெழுத்தே இவ்வைந்து மந்திரங்கள் என்பாரும் உளர். சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகங்களே இவ்வைந்து மந்திரங்கள் என்பது சிலர் கூற்று[190] என வடமொழி நூல்களில் சைவ சித்தாந்தம் மந்திரம் பற்றி விளக்கம் தருகிறது. மந்திரங்களைக் கணிக்கும் முறை மூன்று. அவை மானதம், மந்தம், உரை என்பனவாகும்.[191]

பட்டினத்தடிகள் இறைவன் அஞ்செழுத்தாகவும், எட்டெழுத்தாகவும், ஐம்பத்தொன்றாகிய அட்சரமாகவும், பிஞ்செழுத்தாகவும் நின்றவன் என்றும்,[192] நகாரம், மகாரம், சிகாரம், வகாரம், யகாரம்[193] எனச் சிவ மந்திரங்களைப் பற்றியும் தெளிவாகக் குறிப்பிடுகின்றார்.

## முத்தி

முத்தி என்னும் சொல்லுக்கு விடுதலை என்று பொருள். உலகப்பற்று நீக்கமே பேரின்பம் அல்லது வீடுபேற்றுக்குக் காரணம் ஆகும். பிறவி உள்ளவரை பற்று ஒழியாது. பிறவிக்குக் காரணம் உலகப்பற்று. அதனால், சிறிது சிறிதாக உலகப் பற்றை அறுத்துச் சிவபிரானிடத்து அன்புகொள்ளக் கொள்ளப் பிறவி நீங்கி, என்றும் அழியாத பேரின்பம் சித்திக்கும்.

"சித்தெல்லாம் வல்லேன் என்று உந்தீபற
முக்தியைப் பெற்றேன் அம்முக்தி யினால்ஞான
சித்தியை உற்றேன் என்று உந்தீபற"[194]

என்று இராமலிங்க அடிகள் தாம் முக்தி பெற்றதை எடுத்துரைக்கின்றார்.

உலக இன்பமும் வீட்டின்பமும் என ஆன்மாக்கள் அடையும் பயன் இரண்டாகும். உலக இன்பம் 'போகம்' என்றும் சொல்லப்படும். வீட்டின்பமே உயிர்கள் அடையும் முடிந்த பயன் என்பது தெளிவு[195] என அருணைவடிவேல் முதலியார் விளக்கம் கூறுகின்றார்.

பட்டினத்தடிகள் முக்தி யின்பமாகிய பேரின்ப வெள்ளத்தில் நிலையாக முடிவில் நின்றதையும்[196] பொன்னம்பலத்து இறைவனை ஐந்தெழுத்தால் துதித்துப் பிறவா முத்தி சித்திக்கப் பெற்றதையும்[197] பற்றிப் பட்டினத்தடிகள் சித்தாந்தக் கருத்திற்கேறபக் குறிப்பிடுகின்றார்.

## நால்வகை மார்க்கம்

தாச மார்க்கம், புத்திர மார்க்கம், சக மார்க்கம், சன் மார்க்கம் ஆகிய நான்கும் இறைவனை அடையும் மார்க்கங்களாகும். இனி, நான்கு நெறிகளைப் பற்றியும், பட்டினத்தடிகள் அந்நெறிகளுக்கு ஒப்ப, தம் பாடல்களில் குறிப்பிடும் செய்திகளையும் காண்போம்.

"சரியை கிரியை யோகம் ஞானம் பாராமல்
பரிதிகண்ட மதியம்போல் பயன் அழிந்தேன் பூரணமே"[198]

என நால்வகை மார்க்கம்பற்றிப் பட்டினத்தடிகள் கூறுகின்றார்.

## சரியை

இறைவனுக்கு மனம், மொழி, மெய் ஆகியவற்றால் தொண்டு செய்து தன்னையே அர்ப்பணித்திட வேண்டும். உடல், உள்ளத்தால் நடைபெறும் செயல்கள் முழுவதும் இறைவனுக்காகவே இருத்தல்வேண்டும். இதுவே தாச மார்க்கமாகும் பட்டினத்தடிகள் தாம் திருநீறிட்டு, இறைவனை இருகை கொண்டு வணங்காமலும், ஐந்தெழுத்தால் ஓதாமலும் கருத்திழந்தேன் என மனம், மெய், மொழி ஆகியவற்றால் செய்யும் சரியைப்பற்றி எடுத்துரைக்கின்றார்.[199]

## கிரியை

பட்டினத்தடிகள் இறைவனுக்குச் செய்யும் கிரியைப் பற்றிப் பின்வருமாறு கூறுகின்றார். இறைவனின் திருப்பொன்னடிக்குத் தூய மலர் பறித்துத் தொழுது வணங்குதல்[200] எண்ணற்ற பிறவி எடுத்துச் சிவபூசை செய்தல்,[201] திருமஞ்சனம் ஆட்டி, மலர் பறித்துப் பூசை செய்தல்[202] என்பனவாகும்.

## யோகம்

யோகம் என்பது சக மார்க்கமாகும். அடியவன் தன்னைக் கடவுளின் பிரியா நண்பனாகக் கருதுகிறான். அவன் புலன்களை அடக்கி, மனத்தை ஒருமுகப்படுத்தி மிகவுயர்ந்த தியானத்தில் ஈடுபட்டுக் கடவுளை வணங்கி வேண்டுவது யோகமாகும். இம்மார்க்கத்தின் பயனாகச் சாரூபத்தை அடையலாம். சாரூபமாவது தெய்வீகத் தன்மையை அடைதலாகும்.

தூங்காமல் தூங்கிச் சுகம் பெற்றவர்கள் சித்தர்கள். அவர்களின் வழித் தோன்றலாகிய பட்டினத்தடிகள் இயமம், நியமம், ஆதனம், தாரணை, பிரணாயாமம், பிரத்தியாகாரம், தியானம், சமாதி என்பனவாகிய அட்டாங்க யோகத்தையும், மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், ஆனாகதம், விசுத்தி, ஆக்கினை ஆகிய ஆதாரங்களையும் யோகத்தின் வழிநின்று குறிப்பிடுகின்றார்.[203]

மேலும் நியமமாகிய யோகம், வாசியோகம் ஆகியன பற்றியும்,[204] யோகத்தில் இடகலை, பிங்கலையின் இயல்பறிதல்பற்றியும்[205] பட்டினத்தடிகள் தம் பாடல்களில் சுட்டிக் காட்டுகின்றார்.

அடியவர்கள் இறைவனது திருவடிகளை அணைதலாகிய ஆனந்த விளக்கமே **சிவபோகம்** எனப்படும்.

"அஞ்சக் கரமெனுங் கோடாலி கொண்டிருந்த ஐம்புலனும்
வஞ்சப் புலக்கட்டை வேர்அறவெட்டி வளங்கள் செய்து
விஞ்சத் திருத்திச் சதாசிவம் என்கின்ற வித்தையிட்டுப்
புஞ்சக் களைபறித்தேன் வளர்த்தேன் சிவபோகத்தையே!"[206]

எனப் பட்டினத்தடிகள் தன்னிடம் சிவஞானபோகம் வளர்ந்தமை பற்றிக் கூறுகின்றார்.

### ஞானம்

ஞானமே முக்தியடைய நேரான வழியாகும். ஏனைய மார்க்கங்களெல்லாம் இதற்குத் துணையாய் அமைவனவாகும். ஞானமாகிய வாளினை உள்ளத்தைத் துணையாகக்கொண்டு நிற்காவிடின், தக்கன் செய்த வேள்வியே போல நம் செயல் தீய பயன் விளைத்தல் கூடும்[207] எனத் திருக்களிற்றுப்படியார் குறிப்பிடுகின்றது.

கெட்டபின்பு ஞானி என்பார்கள். அதுபோன்று பட்டினத்தடிகள் தான் கெட்டழிந்த பிறகு தனக்கு இனிமையாகிய ஞானத்தை இறைவன் தந்தருளினான்[208] என்றும், பூரண மாலையைப் புத்தியுடன் ஓதினவர்களுக்கு இவ்வுலகில் ஞானம் தழைத்து வளரும்[209] என்றும் கூறுகின்றார்.

"மேலாம் பதங்கள் எல்லாம் விட்டுவிட்டு ஆராய்ந்து
நாலாம் பதத்தில் நடந்தனையே; நெஞ்சமே"[210]

எனப் பட்டினத்தடிகள் சைவ சித்தாந்த நெறிக்கேற்ப மேற்குறிப்பிட்ட நான்கு பதங்களைத் தாம் கடந்ததாகக் கூறுகின்றார்.

மேலும், மதுரைச் சொக்கநாத பெருமானின் சீர்பாதங்களைப் போற்றினால் **சிவலோகம்** அடையலாம்;[211] முன்பு தினையளவு, எள்ளளவாகிலும் தவம் செய்தால் சத்தியமாகப் **பரலோகம்** சித்திக்கும்[212] என்பன போன்ற கருத்துகளைப் பட்டினத்தடிகள் இறைவனை அடைவதால் உண்டாகும் பேரின்பமாக விளக்குகின்றார்.

# பத்திரகிரியார் பாடல்களில் சித்தாந்தம்

### மூவகைக் காட்சி

பத்திரகிரியார் இறைவனைக் காணுகின்ற காட்சியைத் தத்துவ தரிசனம், ஆன்ம தரிசனம், சிவ தரிசனம் என்று மூவகையாகப் பிரிக்கின்றார். தன்முன் வினை கெட்டொழிய மூன்றுவகைக் காட்சியினால் இறைவன் வெளிப்பட்டுக் காண்பது எக்காலமோ? என்று வருந்துகின்றார்.[213]

## இறை

பத்திரகிரியார் இறைவனின் பெருமைகளையும், சிறப்புப் பெயர்களையும் தம் பாடல்களில் குறிப்பிடுகின்றார். இறைவன் தித்திக்கும் தெள்ளமிர்தமாகவும் விளங்குகின்றான்.[214] உடலாகவும் உடலின் உயிராகவும், எவ்வுயிருமாகவும் விளங்குகின்றான் என்றும்,[215] இறைவனை **ஆரியன்** என்றும் கூறுகின்றார்.[216] பத்திரகிரியால் குறிப்பிடப்படும் ஆரியர் என்பதற்கு ஆசிரியன், குரு, பூசிக்கத்தக்கவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

## திரோதாயி சக்தி

ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று குற்றங்களையும் தொழிற்படுத்திப் பாகம் வருவிப்பது சிவசக்தி யாகும். இச்சக்தியின் அருளைப் பெறுவது எக்காலம்? என்று பத்திரிகிரியார்,

"நட்ட நடுவில் நின்று நல்திரோ தாயி அருள்
கிட்டவழி காட்டிக் கிருபை செய்வ தெக்காலம்?"[217]

என வினவுகின்றார். இதிலிருந்து இவர் மும்மலங்களிலிருந்து விடுபட்டுச் சிவசக்தியாகிய **திரோதாயி** அருள்பெற விழைகின்றார் என்பதை அறியலாம். பத்திரகிரியார் இறைவனின் வடிவ வேறுபாடு களாகிய சிவம், உருத்திரன், சதாசிவம், மகேச்சுரன் ஆகிய கடவுளர்களைப் பற்றியும் குறிப்பிடுகின்றார்.

## சிவம்

பத்திரகிரியார் சிவபெருமான் சிறப்பியல்புகளைப் பற்றிச் சிவன் தேவருக்காக நஞ்சினை அருந்தியவன்; தில்லை அம்பலத்தில் ஆடியவன்;[218] திருமால் பன்றி வடிவெடுத்துக் காண முடியாத திருவடி யினையுடையவன்;[219] உடலில் ஒளித்த சிவம்[220] என்றும் எடுத்துரைக்கின்றார்.

## இறைவன் அருளல்

இறைவன் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களையும் செய்தருளுகின்றான். இதில் இறைவனின் அருளல்நிலை அருளாகிய சூரியனின் ஒளி சூழ்ந்து, ஆன்மாவாகிய பஞ்சைச் சுடுவது போன்றதாகும். இதனையே,

"சூரிய காந்தி ஒளி சூழ்ந்து பஞ்சைச் சுட்டது போல்
ஆரியன் தோற்றத்து அருள் பெறுவது எக்காலம்?"[227]

என்று பத்திரகிரியார் குறிப்பிடுகின்றார்.

**பாசம்**

ஆணவம், மாயை, கன்மம் ஆகிய பாசத்தைப் பற்றியும் பத்திரகிரியார் எடுத்துரைக்கின்றார். ஆசை வலையாகிய பாசத்தில் தாம் அகப்பட்டு அழியாமல் இருக்கவேண்டும்[228] என்றும், மும்மலங்களாகிய பாசம் தன்னுள் கலந்திருக்கின்றன[229] என்றும் பாசத்தைச் சுட்டிக் காட்டுகின்றார்.

## மும்மலமுள்ள காயம்

தம் உடலில் மும்மலங்களும் அனாதிதொட்டு இருக்கின்றன என்பதைப் பத்திரகிரியார்,

"மும்மலமும் சேர்ந்து முளைத்தெழுந்த காயம் இதை
நிர்மலமாய்க் கண்டு வினைநீக்கி இருப்பது எக்காலம்?"[230]

என்றும்,

"செம்பில் களிம்புபோல் சிவத்தை விழுங்குமிக
வெம்பிநின்ற மும்மலத்தை வேறுசெய்வது எக்காலம்?"[231]

என்றும் மும்மலங்களின் இயல்புபற்றிக் குறிப்பிடுகின்றார்.

## ஆணவம்

பத்திரகிரியார் ஆணவமாகிய மலத்தை ஆங்காரம் என்றும், அந்த ஆங்காரத்தைத் தன்னுள் அடக்கிக் கொள்ளவேண்டும் என்றும்,[232] எடுத்துரைக்கின்றார். மேலும் ஆணவத்தைப் பற்றி,

"நான்என்று அறிந்தவனை நான்அறியாக் காலம் எல்லாம்
தான்என்று நீஇருந்ததனை அறிவது எக்காலம்?[233]

என்றும்,

"தான்என்ற ஆணவமும் தத்துவமும் கெட்டொழிந்தே
ஏன்என்ற பேச்சும் இலாது இலங்குவதும் எக்காலம்?"[234]

என்றும்,

"ஐயாறும் ஆறும் அகன்று வெறுவெளியில்
மைஇருளில் நின்ற மனம்மாள்வது இனி எக்காலம்?"[235]

என்றும் குறிப்பிடுகின்றார். இங்கு மைஇருள் என்பதை ஆணவ மலமாகச் சுட்டுகின்றார் என்பதை அறியலாம்.

**மாயை**

இவ்வுலகில் மண், பொன், பெண் ஆகிய ஆசைகளெல்லாம் நிலையற்றன. இவை **பிரமை** எனப்படும். இதனையே,

**"பெண்ணினல்லார் ஆசைப் பிரமையினை விட்டொழிந்து**
**கண்ணிரண்டும் மூடிக் கலந்திருப்பது எக்காலம்?"[236]**

என்றும்,

"நீரில் குமிழிபோல் நிலையற்ற வாழ்வை விட்டுன்
பேரில் கருணை வெள்ளம் பெருக்கெடுப்பது எக்காலம்?"[237]

என்றும் பத்திரகிரியார் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

## கன்மம் (இருவினை)

இருவினையாகிய செயல்களினால் உயிர்கள் பிறப்பு, இறப்பு என்னும் போக்குவரவில் இன்ப துன்பத்தில் சுழல்கின்றன. பத்திரகிரியார் இருவினையாகிய கன்மத்தின் செயல்களைப்பற்றிப் பின்வருமாறு கூறுகின்றார்.

"இருமைதனில் பாதகனாய் இருவினைக் கீடாய்எடுத்த
பொம்மைதனைப் போட்டு உன்னைப் போற்றி நிற்பது
எக்காலம்?"[238]

மேலும், முன்னை வினையாகிய சஞ்சிதம் பற்றியும்,[239] பிராரப்தமாகிய தொடர்வினைகளைப் பற்றியும்[240] எடுத்துரைக்கின்றார்.

**மனம்**

தன் மனத்தின் இயல்பைப்பற்றிக் கூறும்போது, **கள்ள மனம்** என்றும்,[241] மனம் பல இடங்களில் பாய்ந்து செல்லும் இயல்புடையது என்றும்,[242] ஆணவ மலத்தில் நின்ற மனம் என்றும்[243] குறிப்பிடுகின்றார்.

**மந்திரம்**

சித்தர்கள் மந்திரம், தந்திரம், யந்திரம் ஆகிய மூன்று நெறிகளைக் கொண்டிருந்தனர்.[244] **யந்திரம்** என்பது வரைகின்ற சக்கரம். ஆனால்,

இவை இரண்டும் (சக்கரம், யந்திரம்) தோற்றத்தில் ஒன்றேயாயினும் வேறுவேறு காரணங்களுக்குப் பயன்படுத்தப்படுவன. இவ்வெந்திரத்தால் எழுதப்படும் எழுத்துகளே **மந்திரம்** எனப்படும். பத்திரகிரியார் மந்திரங்களாகிய எழுத்தைக் குறிப்பிடும்போது, **சிவ சூத்திரம்** என்றும் எடுத்துரைக்கின்றார்.[245] சிவ சூத்திரம் என்பது **நமசிவாய** என்பதாகும்.

## ஓம் ஐந்தெழுத்து

ஓம் என்பது சிவ மந்திரமாகும். இதனைப் பத்திரகிரியார், **'ஓம்'** என்று சொன்னதுவும் உற்றறிவது எக்காலம் என்று கூறுகின்றார்.[246] மேலும், நமசிவாய, சிவாயநம என்று உச்சரிக்கும் சிறு மந்திரத்தைப் பற்றிப் பத்திரகிரியார்,

"அடர்ந்த மனக்காட்டை அஞ்செழுத்தாம் வாளாலே
தொடர்ந்து தொடர்ந்து வெட்டிச் சுடுவதுஇனி
எக்காலம்?"[247]

என்றும்,

"வவ்வெழுத்தும் அவ்வெழுத்தும் வாளாகும்
சிவ்வெழுத்தும்
யவ்வெழுத்தின் உள்ளே அடங்கி நிற்பது எக்காலம்?"[248]

என்றும் எடுத்துரைக்கின்றார்.

## முத்தி

இறைவனுடன் தனக்கு என்றும் உள்ள தொடர்பை இடையீடின்றி உணர்ந்து நிற்றலே இரண்டறக் கலத்தலாகும். இந்நிலையே முத்தி அல்லது வீடுபேறு ஆகும்[249] என்று தேவசேனாபதி கூறுகின்றார்.

பத்திரகிரியார் தாம் நின்ற நிலையிலிருந்து மாறாமல் நினைவில் ஒன்றும் சாராமல் சென்ற நிலையையும்,[250] இறைவனும் ஆன்மாவும் இரண்டறக் கலந்து நிற்றலையும் முத்திநிலை[251] என்று உணர்த்துகின்றார்.

இங்ஙனம் இறைவனும் உயிரும் இரண்டறக் கலந்து அத்துவிதமாய் இருப்பவர்களைச் ***சீவன் முத்தர்*** என்று கூறலாம். இதனைத்தான் பத்திரகிரியார் **முத்திநிலை** என்று குறிப்பிடுகின்றார்.

## தவம்

இல்லறத்தைத் துறந்து துறவறத்துடன் காட்டிற்குச் சென்று மனத்தை இறைவன்பால் வைத்துச் செய்வதே தவம் என்று கூறலாம். ஆனால், பத்திரகிரியார் பேய்போலத் திரிந்தும், பிணம்போலக் கிடந்தும், பெண்ணைத் தாய்போல நினைத்தும் இருப்பதையும்,[252] தான் என்ற நிலை மறந்ததையும்[253] தவம் என்று பாடுகின்றார்.

## யோகம்

யோக நிலை பற்றிப் பத்திரகிரியார் நீங்காத சிவயோக நித்திரை கொண்டிருத்தல்,[254] வாசிதனில் ஏறிவருதல்,[255] பாற்பசுவாகிய உயிரைப் பூட்டிப் பதியில் வைத்துச் சீராட்டிக் காற்பசுவாகிய பிராண வாயுவை ஓட்டி அதில் கட்டி வைத்தல்[256] என்றும், எட்டு அங்கங்களைக் கொண்டதாகிய அட்டாங்க யோகத்திற்குக் கிட்டாத பொருளாய் இருப்பவன் இறைவன் என்றும்,[257] அட்டாங்க யோகத்தைப் பற்றியும் குறிப்பிடுகின்றார்.

இங்ஙனம் பத்திரகிரியார் சிவயோக நித்திரை பற்றியும், யோகம் செய்யும் முறை பற்றியும் தெளிவுபட எடுத்துரைக்கின்றார் என்பதை அறியலாம்.

## நிட்டை

ஆன்மா இறைவனுடன் இரண்டறக் கலந்து இன்பத்தில் திளைக்கும் நிலையே நிட்டையாகும். இதனையே பத்திரகிரியார்,

> "வேதாந்த வேதம் எல்லாம் விட்டொழிந்தே நிட்டையிலே
> ஏகாந்தமாக இருப்பதினி எக்காலம்?"[258]

என்று ஆன்மா இறைவனுடன் இரண்டறக் கலந்து இன்பம் அடைதல் பற்றி உணர்த்துகின்றார்.

## ஞானம்

ஞானத்தினால் வீடுபேறு அடையமுடியும் என்பது, அஞ்ஞானத்தினால் கட்டு ஏற்படுவதினால் மெய்ஞ்ஞானத்திலேதான் அது நீங்கும்.[259]

நான்கு வேதங்களும் புராணங்களும் புனித ஆகமங்களும், ஞானமே முக்திக்கு வழி என்று உறுதி கூறுகின்றன. பத்திரகிரியார்

ஞானநிலை பற்றி அஞ்ஞானத்தைவிட்டு, அருளைத் தருகின்ற ஞானத்து எல்லையைத் தொட்டு, மெய்ஞ்ஞான வீடு பெறுதல் பற்றியும்,[260] ஓரின்பத்தைக் காட்டும் உயர்ந்த ஞானமாகிய வீதியில் சென்று பேரின்ப வீடுகண்டு ஞானத்தைப் பெறுதல் பற்றியும்,[261] மேலான பதமாகிய சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்பனவற்றுள் நாலாம் பதமாகிய சாயுச்சிய நிலையைத் தேடி அதனைப் பெறுதல்[262] பற்றியும் குறிப்பிடுகின்றார்.

முடிவான நிலையாகிய **சிவானந்தம்** பெறுதல்பற்றிப் பத்திரகிரியார்,

“தெள்ளத் தெளிய தெளிந்த சிவானந்தத்தேன்
பொழிய பொழிய மனம் பூண்டிருப்பது எக்காலம்?”[263]

என்று சிவனால் பெறுகின்ற பேரானந்த நிலையை உணர்த்துகின்றார்.

இங்ஙனம் இராமதேவர், சிவவாக்கியர், பட்டினத்தார், பத்திரகிரியார் ஆகிய சித்தர்கள் சாத்திர நூல்களுக்குப் பின்தோன்றியவர்களாயினும், அவர்கள் பாடல்களில் சித்தாந்தக் கருத்துகள் விரவி இருப்பதைத் தெள்ளிதின் அறிய முடிகிறது.

## தொகுப்புரை

இவ்வியல் சாத்திர நூல்களுக்குப் பின் தோன்றிய சித்தர்களின் சித்தாந்தம் பற்றிய கருத்துகள் ஆராயப்பட்டுள்ளன.

இராமதேவர் இறைவனை அடையும் நெறியாகிய சரியை, கிரியை, சக்தி, பூசை, பலி கொடுத்துப் பூசை செய்தல்பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

சிவவாக்கியரால் இறைவன் எவராலும் அறிய முடியாதவன்; செவ்வை ஒத்து நின்றவன்; சிவன் தொன்மையானவன்; சக்தி, சிவம், விந்து, நாதம் என்ற பல்வேறு உருவத்தனனாயினும் ஒன்றானவன். உருவம் - அருவம் - பரப்பிரம்மமாகவும் உள்ளான். அவனை அடைய நால்வகை நெறிகளைச் - (சரியை, கிரியை, யோகம், ஞானம்) செய்ய வேண்டும் என்றும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

உயிர்களின் அவத்தைகள் கனவு, துரியாதீதம், மனைவி, மக்கள், உறவினர் ஆகியோர் நிலையாமையாகிய கனவுநிலை, உயிர் மும்மலங்களை அறியாதிருப்பதே துரியாதீதம்; உடல் உயிர் வேறு; உயிருக்கு இறப்பில்லை என உயிர்க்கொள்கையாகக் குறிப்பிடப் பட்டுள்ளது.

மும்மலங்களை (ஆணவம், மாயை, கன்மம்) கட்டி வைப்பதே பாசம்; மக்கள், பெண்டிர் மாயை; பிறப்பிறப்புகளுக்குக் காரணம்

இருவினை (கன்மம்); இறந்தவர் மீண்டும் பிறப்பதில்லை; உடலில் ஐம்பூதங்களும், ஐந்தெழுத்தில் உலகமும் கடவுளரும் அடங்கும். ஓம் என்னும் மந்திரத்தை ஓத இறப்பு நீங்கும் என்பன உணர்த்தப் பட்டன.

இறைவனைப் பூசை செய்தால் வீடுபேறு அடையலாம். அலகிடுதல், மெழுகுதல், தீபமேற்றுதல் சரியை; மலரிடுதல், திருமஞ்சனமாட்டுதல் கிரியை; இறைவனுடன் ஒன்றுதல் யோகம்; இறைவன் தன்னுள் குடிபுகுவது ஞானம்; ஞானத்தில் நின்றால் பிறப்பில்லை. உயிர் இறைவனிடம் அறிவுபெறுவதே தீட்சை என்பன சிவவாக்கியர் வழி அறிவுறுத்தப்பட்டுள்ளன.

பட்டினத்தடிகள் இறைவன் முப்பொருள்களாக (பதி, பசு, பாசம்) விளங்குகிறான்; ஒன்றாகவும் உடலில் உயிர், கடல் நீரில் ஆறு, பாலின்படு நெய் போன்றும் உள்ளான்; தோற்றுவித்தல், காத்தல், அருளல் ஆகிய தொழில்களைச் செய்பவன்; சக்தியும் சிவமுமாகி இருப்பினும் முடிவில் ஒன்றானவன்; சக்திக்கு **வாலை** என்று பெயர். ஒன்பது உருவ வேறுபாடுகள் உள்ளவன்; குருவாகிய உருவம் - அருவம் - அருவுருவாகிய இலிங்கமாகவும் திகழ்பவன் என்று இறைக்கொள்கை தொகுக்கப்பட்டுள்ளது.

இறந்த உயிர் மீண்டும் பிறக்கும்; பாசம் என்பது உயிரைவிட்டுப் பிரியாதது; மண், பெண், பொன் மாயை; முன்னை வினைகள் (கன்மம்) தொடர்ந்து வருவன; மனம், சித்தம், புத்தி, அகங்காரம் நான்கு கரணங்களும் தானாக மயங்கும்; உடல், மனம் இவற்றாலானது உடம்பு; தொண்ணூற்றாறு தத்துவங்களிலும், பன்னிரண்டு கலைகளிலும் சிறந்து விளங்கும் இறைவன் உள்ளான்; ஐந்தெழுத்துள் இறைப்பெயர் அடங்கும் என்பது உணர்த்தப்பட்டுள்ளது.

பேரின்ப வெள்ளத்தில் நிற்றலே முத்தி; உடலால் செய்யும் பூசை சரியை; செயலாகிய பூசை கிரியை; தூங்காமல் தூங்குதல் யோகம்; இறைவனது திருவடி அணைதலே சிவபோகம்; முடிவில் கிடைப்பது ஞானம்; சாயுச்சிய நிலையே நான்காம் பதம்; தவத்தால் கிட்டுவது **பரலோகம்** என்பன பட்டினத்தடிகள் வாயிலாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

இறைவனைக் காணுகின்ற காட்சி மூவகைக் காட்சியாகும். இறைவன் சித்தாந்தத்து உட்பொருள்; ஆசிரியன்; திரோதாயி சக்தி;

பல்வேறு உருவத்தன்; உயிரில் கலந்துள்ளவன்; அருளல் தொழிலினன் எனப் பத்திரகிரியார் வழி குறிப்பிடப்பட்டுள்ளது.

பாசம் அநாதி; உடலில் மும்மலங்களும் கலந்துள்ளன; மை இருளே ஆணவம்; நிலையற்ற வாழ்க்கை மாயை; முன்னை வினை - தொடர்வினைகள் கன்மம்; மனம் அலையும் தன்மையது; நமசிவாயவாவது சிவமந்திரம்; சீவன் சிவனிடம் முத்தி பெறுவதே சீவன் முத்தி; தான் என்ற நிலை மறப்பது தவம்; ஆன்மா இறைவனுடன் கலத்தலே நிட்டை; மெய்ஞ்ஞானமாவது ஞானத்தின் எல்லையைத் தொடுவது; சிவானந்தமாவது நான்காம் பதத்தை அடைந்து சிவனால் பெறுகின்ற பேரானந்தமாகும் என்பன விளக்கப்பட்டுள்ளன.

*****

# குறிப்புகள்

1. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்,** பா.1, ப. 326.
2. மேற்படி, பா.2, ப. 326; 3. மேற்படி, பா.4, ப. 326;
4. மேற்படி, பா.6, ப. 327;
5. மேற்படி, பா.2, 3, ப. 326;6. **கலைக்களஞ்சியம், தொகுதி-4,** ப. 710.
7. மு. கோவிந்தசாமி, **இலக்கியத் தோற்றம்,** ப. 171.
8. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்,** பா.73, ப. 128;
9. மேற்படி, பா.309,ப.156;10. மேற்படி, பா.400, ப. 156;
11. மேற்படி, பா. 307, ப.165; 12. மேற்படி, பா. 314, ப. 156;
13. மேற்படி, பா.60, ப. 126; 14. மேற்படி, பா.289, ப.153;
15. மேற்படி, பா.9, ப. 120; 16. மேற்படி, பா. 237, ப. 147;
17. மேற்படி, பா. 245, ப. 152;
18. ச. கங்காதரன், **சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கைகள்,** ப. 50.
19. மா. இராசமாணிக்கனார், **பத்துப்பாட்டு ஆராய்ச்சி,** ப. 50.
20. **சித்தர் பாடல்கள் - முதற் பாகம்,** பா.93, ப. 131;
21. மேற்படி, பா. 302, ப. 155; 22. மேற்படி, பா. 140, ப. 136;
23. மேற்படி, பா. 405, ப. 167;
24. **சித்தர் பெரிய ஞானக்கோவை- முதற் பாகம்,** பா. 443, ப. 171;
25. மேற்படி, பா. 444, ப. 171;
26. சி. அருணைவடிவேல் முதலியார், **முப்பொருள் இயல்பு,** ப. 83.
27. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்,** பா. 391, ப. 165.
28. மேற்படி, பா. 370, பக். 162-163;
29. மேற்படி, பா.53, ப.125; 30. மேற்படி, பா.386,ப.164;
31. மேற்படி, பா.299, ப.154; 32. மேற்படி, பா.494,ப.177.
33. மேற்படி, பா. 250, ப.149; 34. மேற்படி, பா. 367, ப. 162;
35. மேற்படி, பா.397,ப.166 36. மேற்படி, பா. 81, ப. 129;
37. மேற்படி, பா.70, ப. 127.
38. ந. சுப்பு ரெட்டியார், **சைவ சமய விளக்கு,** ப. 129.
39. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்,** பா. 150, ப. 137.
40. மேற்படி, பா. 212, ப. 145; 41. மேற்படி, பா.382, ப. 168;
42. மேற்படி, பா. 92, ப. 130.

43. தி. தயானந்தன் பிரான்சிஸ், **தமிழ்ச சைவம**, ப. 35,
44. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்**,பா. 447, ப. 171.
45. மேற்படி, பா. 147, ப. 137; 46. மேற்படி, பா. 941, ப, 171.
47. சி. அருணைவடிவேல் முதலியார், **சித்தாந்தத் தெளிவியல்**, ப. 124.
48. **சித்தர் பெரிய ஞானக்கோவை- முதற் பாகம்**, பா.87, ப. 130.
49. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்**, பா.426, ப.169.
50. ம. பெரியசாமிப் பிள்ளை, **சித்தாந்த பொன்மொழிகள்**, ப. 7-8.
51. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்**, ப. 81.
52. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்**, பா.79, ப.129.
53. மேற்படி, பா. 37, ப. 123
54. மேற்படி, பா.1 (காப்பு), ப. 118.
55. மேற்படி, பா.66, ப. 127;
56. **சிவஞான சித்தியார் சுபக்கம்**, செ.122.
57. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்**, பா.442, ப. 171;
58. மேற்படி, பா. 491, ப. 176; 59. மேற்படி, பா. 153, ப. 138;
60. மேற்படி, பா. 192, ப. 142;
61. மேற்படி, பா. 46, பக். 124-125.
62. இரா. மாணிக்கவாசகம், **நம் நாட்டுச் சித்தர்கள்**, ப.275.
63. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்**, பா. 165, ப. 139.
64. மேற்படி, பா. 442, ப. 170; 65. மேற்படி, பா. 424, ப. 169;
66. மேற்படி, பா. 414, ப. 168; 67. மேற்படி, பா. 2, ப. 119;
68. மேற்படி, பா. 412, ப.167; 69. மேற்படி, பா. 407, ப. 167;
70. வ.ஆ. தேவசேனாபதி, **சைவ சித்தாந்த அடிப்படைகள்**, பக். 76-77.
71. சி. அருணைவடிவேல் முதலியார், **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்**, ப. 144.
72. **சித்தர் பெரிய ஞானக்கோவை - முதற் பாகம்**, பா.203, ப. 144.
73. மேற்படி, பா. 213, ப. 145; 74. மேற்படி, பா. 2, ப. 118;
75. மேற்படி, பா. 486, ப. 176; 76. மேற்படி, பா. 58, ப. 126;
77. மேற்படி, பா. 392, ப. 165; 78. மேற்படி, பா. 364, ப. 162;
79. மேற்படி, பா.137, ப. 136; 80. மேற்படி, பா. 469, ப. 174;

